# ஸ்ரீபாகவதம்.

தசமஸ்கந்தம் பூர்வபாகம்.

## தமிழ் வசனம்



இஃது

ஸ்ரீ. அ. வீ. நரஸிம்ஹாசாரியரால்

ஸம்ஸ்க்ருத ஸ்ரீபாகவதத்திற்கிணங்க

மொழிபெயர்க்கப்பெற்று

சென்னை

ஆர். வெங்கடேஶ்வர் அண்டு கம்பெனியாரவர்களால்

ஆநந்த அச்சுக்கூடத்தில் அச்சிட்டு

வெளியிடப்பட்டது.



R. 2-8

## தசமஸ்கந்த பூர்வபாகப

# பொருளடக்கம்.

அத்யாயம். பக்கம்.

அத். பக்கம்.

# தசமஸ்கந்த பூர்வபாகத்திலுள்ள

# படங்களின் விவரம்.



ஸ்ரீக்ருஷ்ணாய நம:

# ஸ்ரீபாகவதம்.

## தசமஸ்கந்தம்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:—சந்த்ரஸூர்யர்களின் வம்சங்களுடைய விஸ்தாரத்தையும் அவ்விரண்டு வம்சங்களில் பிறந்த ராஜாக்களின் அற்புத சரித்ரத்தையும் மொழிந்தீர். முனிஶ்ரேஷ்டரே! மிகுதியும் தர்மசீலனான யதுவின் வம்சத்தையும் பரக்கச்சொன்னீர். அந்த யதுவின்வம்சத்தில் தன்னுடைய அம்சமாகிய பலராமனுடன் அவதரித்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய வீர்யங்கள் அமைந்த சரித்ரங்களை எங்களுக்குச் சொல்வீராக. ஸமஸ்த பூதங்களையும் பாதுகாப்பவனும் ஸர்வாந்தராத்மாவுமாகிய பகவான் யதுவின் வம்சத்தில் அவதரித்து எந்தெந்த வீரச்செயல்களை நடத்தினானோ, அவற்றையெல்லாம் எங்களுக்கு ஸவிஸ்தாரமாகச் சொல்லவேண்டும். 'சொன்னதெல்லாம் விஷ்ணுவின் வீர்யங்களேயல்லவா! மீளவும் அவற்றையே ஏன் கேட்கிறாய்?' என்னில் சொல்லுகிறேன். உத்தமஶ்லோகனான பகவானுடைய[1] குணானுவாதமாகிற அம்ருதத்தைக் கேட்பதற்குப் பசுஹிம்ஸை செய்யும் பாவியைத் தவிர மற்றெவன் தான் வெறுப்புறுவான்? சப்தாதி விஷயங்களில் விருப்பமாகிற தாஹமற்றவர்கள் இந்த அம்ருதத்தைப் புகழ்வார்கள். இது

1. குணானுவாதம்-குணங்களைத் தொடர்ந்து சொல்லுவது

ஸம்ஸாரமாகிற நோய்க்கு அருமருந்தாயிருக்கும். மற்றும், இது செவிக்கும் மனத்திற்கும் இனிதாயிருக்கும். என் பாட்டன்மார்களான பாண்டவர்கள் இந்த ஸ்ரீக்ருஷ்ணனையே ஓடமாகக்கொண்டு, தேவதைகளையும் ஜயிக்க வல்லவர்களான பீஷ்மர் முதலிய மஹாவீரர்களாகிற திமிங்கிலங்கள் சூழ்ந்திருக்கையால் வருந்தியும் தாண்ட முடியாத கௌரவர்களின் ஸைன்யமாகிற ஸமுத்ரத்தைக் குளப்படிபோலாக்கித் தாண்டினார்கள். மற்றும், இந்த ஸ்ரீக்ருஷ்ணன் தன்னைச் சரணமடைந்த என் தாயான உத்தரையின் வயிற்றில் புகுந்து சக்ராயுதத்தை ஏந்திக்கொண்டு அஸ்வத்தாமாவின அஸ்த்ரத்தினால் தஹிக்கப்பட்டதும் கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் ஸந்தான பீஜமுமாகிய இந்த என் சரீரத்தைக் காத்தான். இங்ஙனம் மஹோபகாரகனான அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய குணானுவாதத்தினின்று [1] க்ருதஜ்ஞனாகிய நான் எப்படி மீளுவேன்? அறிஞரே! ஆகையால் ஸமஸ்த ப்ராணிகளுக்கும் உள்ளே புகுந்து அந்தர்யாமியாயிருந்து ரக்ஷணத்தையும் வெளியில் காலவுருபத்தினால் ஸம்ஹாரத்தையும் நடத்துகின்றவனும் தன ஸங்கல்பத்தினால் மனுஷ்யனாய் அவதரித்தவனுமாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய வீரச்செயல்களைச் சொல்வீராக. ஸங்கர்ஷணனுடைய அவதாரமான பலராமனை ரோஹிணியின் புதல்வனென்றும் அவனையே தேவகியின புதல்வனென்றும் மொழிந்தீர். தேஹாந்தரமில்லாமல் ஒரே தேஹத்தில் ரோஹிணி தேவகி ஆகிய இருவர்களின் கர்ப்பத்திலும் ஸம்பந்தம் அந்தப்பலராமனுக்கு எப்படி உண்டாயிற்று? ஷாட்குண்யபூர்ணனும் போக மோக்ஷங்களைக் கொடுப்பவனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் தன்

1. க்ருதஜ்ஞன்-செய்த நன்றியை அறிந்தவன்.

தந்தையாகிய வஸுதேவனுடைய க்ருஹத்தினின்று எதற்காகக் கோகுலம் போனான்? பக்தர்களைப் பாது காக்குந் தன்மையுள்ள அந்தப் பகவான் பந்துக்களான யாதவர்களுடன் எங்கு வாஸஞ் செய்தான்? கோகுலத் திலும் மதுரையிலும் அவன் வஸிக்கும்பொழுது என் னென்ன செய்தான்? தன் தாய்க்கு நேரே உடன்பிறந்த வனும் வதிக்கத்தகாதவனுமாகிய கம்ஸனை ஏன் கொன் றான்? மானிட உருவம் பூண்டு வ்ருஷ்ணிகளுடனும் யாதவர்களுடனும் த்வாரகையில் எத்தனை வர்ஷங்கள் வஸித்திருந்தான்? அந்த ஸ்ரீக்ருஷ்ணனுக்கு எத்தனை பத்னிகள் இருந்தார்கள்? ஸ்ரீக்ருஷ்ண வ்ருத்தாந்தங் களில் உமக்குத் தெரியாதது எதுவுமே இல்லை. நீர் எல்லாமறிந்தவர். ஆகையால் கேட்கவேண்டுமென்னும் பேராவலுடைய எனக்கு நான் கேட்ட விஷயங்களையும் நான் கேளாத விஷயங்கள் எவ்வெவை உண்டோ அவற்றையும் சொல்லவேண்டும். நான் ப்ராயோப வேசத்தில் இழிந்து தண்ணீரையுங் கூடப்பருகாதிருப் பினும், உம்முடைய முகமாகிற தாமரைமலரினின்று பெருகிவருகின்ற பகவானுடைய கதையாகிய அம்ரு தத்தைப் பருகிக்கொண்டிருக்கிறேனாகையால் மிகவும் பொறுக்க முடியாத இந்தப் பசியுங்கூட என்னை வருத்தவில்லை.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—சௌனகரே! ஸாதுவா கிய பரீக்ஷித்து மன்னவன் இங்ஙனம் வினவினதைக் கேட்டு மஹானுபாவரும் பாகவதஶ்ரேஷ்டருமாகிய ஸ்ரீ சுகமுனிவர் அம்மன்னவனைப்புகழ்ந்து கலிகாலத்தினால் விளையும் பாபங்களையெல்லாம் போக்கவல்ல ஸ்ரீக்ருஷ்ண சரித்ரத்தை ஸவிஸ்தாரமாகச் சொல்லத்தொடங்கினார்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ராஜரிஷிகளில் சிறந்த பரீக்ஷித்து மன்னவனே! உன் புத்தி நன்கு விவேகமுற்றி

ருக்கின்றது. ஏனென்றால், உனக்கு வாஸுதேவனுடைய கதையையே கேட்கவேண்டுமென்று நிலைநின்ற புத்தி உண்டாயிருக்கின்றதல்லவா! வாஸுதேவனுடைய கதையைப்பற்றி வினவுதலுங்கூட அவ்வாஸுதேவனுடைய ஸ்ரீபாததீர்த்தமாகிய கங்காஜலம்போலச் சொல்லுகிறவன் வினவுகிறவன் கேட்கிறவர்கள் ஆகிய மூவரையும் புனிதஞ்செய்யும். நேரே அவனுடைய கதையைக் கேட்கிறவர்களைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? மன்னவனே! மதித்துக் கர்வமுற்ற மன்னவர்களென்னும் வேஷம் பூண்ட அஸுரர்களின் ஸைன்யங்களுடைய பற்பலவாயிரங் கூட்டங்களாகிற பெரும்பாரத்தினால் பிடிக்கப்பட்ட பூமிதேவி ப்ரஹ்மதேவனைச் சரணமடைந்தாள். அவள் பசுவின் உருவந் தரித்து வருந்திக் கண்ணுங் கண்ணீருமாய்க் காண்போர்க்கு மன இரக்கம் உண்டாகும்படி அழுதுகொண்டு ப்ரஹ்மாவின் அருகாமையில் நின்று ஸ்தோத்ரஞ் செய்து அவனுக்குத் தன் துக்கத்தை நன்றாக விண்ணப்பஞ் செய்தாள். ப்ரஹ்மதேவனும் அந்த வ்யஸனத்தை அறிந்து தேவக்கூட்டங்களோடும் அந்தப் பூமியோடும் ருத்ரனோடும் கூட க்ஷீரஸமுத்ரத்தின் கரைக்குச் சென்றான். அவ்விடத்தில் சென்று ஜகத்திற்கெல்லாம் ப்ரபுவும் பரமபுருஷனுமாகிய ஸ்ரீமஹாவிஷ்ணுவைப் புருஷஸூக்தத்தினால் ஸ்தோத்ரஞ் செய்து மனவூக்கத்துடன் த்யானித்தான். அப்பொழுது அந்த ப்ரஹ்மதேவனுக்கு ஆகாயத்தில் ஓர் அசரீரவாக்கு செவிப்பட்டது. அவன் அதைக் கேட்டுத் தேவதைகளை நோக்கித் 'தேவதைகளே! த்யானத்தில் என் செவிக்குப்பட்ட பரமபுருஷனுடைய வார்த்தையைச் சொல்லுகிறேன்; கேளுங்கள். அதைக் கேட்டவுடன் சீக்ரத்தில் அப்படியே நடத்தவேண்டும். கால

தாமதஞ் செய்யலாகாது. முன்னமே பகவானுக்கும் பூமியின் வருத்தம் தெரியுமாம். ஈஸ்வரர்களான நமக்கும் ஈஸ்வரனாகிய அந்தப் பகவான் தன் காலசக்தியினால் பூமியின் பாரத்தைப் போக்குவதற்குப் பூமியில் அவதரிக்கப் போகிறான். அதற்குள்ளாக நீங்கள் உங்களுடைய அம்சங்களால் யாதவர்களிடத்தில் பிறப்பீர்களாக. ஷாட்குண்யபூர்ணனாகிய பரமபுருஷன் தானே நேரில் வஸுதேவக்ருஹத்தில் அவதரிக்கப்போகிறான். அவனுடைய சுஸ்ரூஷைக்காகத் தெய்வமடந்தையர்கள் தங்களுடைய அம்சங்களால் பூமியில் பிறப்பார்களாக. ரிஷிகளும் அந்தப் பகவானுடைய கட்டளையின்படி பால் முதலியவற்றைக் கொடுத்து அவனைக் களிக்கச்செய்யும் பொருட்டுப் பூமியில் பசுக்களாய்ப் பிறக்கவேண்டும். அந்த வாஸுதேவனுடைய அம்சமும் ஆயிரம் முகங்களுடையவனும் புண்யபாபகர்மங்களுக்கு உட்படாத நித்யஸூரிகளில் தலைவனுமாகிய ஆதிசேஷனும் அந்தப் பகவானுக்கு ப்ரியஞ் செய்யும்பொருட்டு முன்தோன்றலாய் அவதரிக்கப்போகிறான். மற்றும், ஜகத்திலுள்ள சேதன வர்க்கங்களை யெல்லாம் மதிமயங்கச்செய்வதும் மேன்மைக்கிடமுமாகிய அவ்விஷ்ணுவின் மாயையும் நியாமகனாகிய அந்தப் பகவானால் நியமிக்கப்பட்டு அவனுடைய ப்ரயோஜனத்திற்காக அம்சத்தினால் பிறக்கப் போகின்றது' என்று மொழிந்தான். ப்ரஜாபதிகளான தக்ஷாதிகளுக்கும் ப்ரபுவாகிய ப்ரஹ்மதேவன் பகவானுடைய கட்டளையைத் தேவதைகளுக்குத் தெரிவித்துப் பூமியையும் இனிய உரைகளால் ஆஸ்வாஸப்படுத்திச் சிறப்புடைய தன் லோகத்திற்குச் சென்றான். முன்பு யாதவர்களுக்கு ப்ரபுவாகிய சூரஸேன மன்னவன். மதுரையில் வஸித்துக்கொண்டு மாதுரதேசங்களையும் சூரஸேன தேசங்களையும் அனுபவித்து வந்தான். ஆகை

யால் அந்த மதுராபுரி யதுவம்சத்துராஜாக்கள் அனைவர்க்கும் ப்ரதான பட்டணமாயிருந்தது. அந்தப்பட்டணத்தில் என்றும் பகவானுடைய ஸந்நிதானம் மாறுதிருக்கும். ஒருகால் சூரனுடைய பிள்ளையாகிய வஸுதேவன் அந்தப்பட்டணத்தில் விவாஹம் நடக்கப்பெற்றுத் தேவகியென்கிற தன் பார்யையுடன் தன் க்ருஹத்திற்குப் போகும்பொருட்டு ரதத்தின்மேல் ஏறிக்கொண்டான். அப்பால் உக்ரஸேனனுடைய பிள்ளையாகிய கம்ஸன் தனது உடன்தோன்றலான தேவகிக்கு ப்ரியஞ்செய்ய விரும்பி ஸ்வர்ணமயமான பல்லாயிரம் தேர்களால் சூழப்பட்டு வஸுதேவன் ஏறிக்கொண்டிருந்த தேர்க்குதிரைகளின் கடிவாளங்களைப் பிடித்துக்கொண்டு தானே ஓட்டத் தொடங்கினான். அப்பொழுது உக்ரஸேனனுடைய ப்ராதாவான தேவகன் பெண்ணிடத்தில் ப்ரீதியுடையவனுகையால் பொற்சங்கிலிகளால் அலங்காரஞ் செய்யப்பெற்ற பதினாயிரம் யானைகளையும் அத்தகைய பதினாயிரங் குதிரைகளையும் பதினெண்ணாயிரந்தேர்களையும் நன்கு அலங்கரித்துக்கொண்டிருப்பவர்களும் [1] ஸுகுமாரைகளுமான இருநூறு தாஸிகளையும் அத்தனை வாஹனங்களையும் பெண்ணுக்குப் பரிசிலாகக் கொடுத்தான். மணப்பெண்ணும் மணவாளனுமாகப் புறப்படும்பொழுது மங்களத்திற்காகச் சங்கவாத்யங்களும் ம்ருதங்கவாத்யங்களும் துந்துபிவாத்யங்களும் ஒரேஸமயத்தில் முழங்கின. இங்ஙனம் புறப்பட்டுக் குதிரைகளின் கயிறுகளைப் பிடித்துத் தானே ரதத்தை ஓட்டுகிற கம்ஸனுக்கு வழியில் 'அட! கம்ஸா! மூடனே! நீ இப்பொழுது எவளை அழைத்துக்கொண்டு போ

1. ஸுகுமாரைகள்-மேன்மைக்கிடமான அங்கமுடையவர்கள்; அல்லது-இயற்கையில் கொடுமையின்றி நன்மையமைந்தவர்கள்.

கின்றனையோ, அப்படிப்பட்ட உன்னுடன் தோன்றலாகிய இந்தத் தேவகியின் எட்டாவது கர்ப்பம் உன்னை வதிக்கப்போகின்றது' என்று ஓர் அசரீர வாக்கு செவிப்பட்டது. போஜர்களின் குலத்தை நிந்தைக்கிடமாகும்படி செய்கிறவனும் மூர்க்கனும் பாபிஷ்டனுமாகிய அக் கம்ஸன் கையுங் கத்தியுமாய்த் தன்னுடன்பிறந்தவளை வதிக்க முயன்று அவள் தலைமயிரைப் பிடித்துக்கொண்டான். நிந்தைக்கிடமான கார்யத்தைச் செய்ய முயன்றவனும் கொடியனும் வெட்கமற்றவனுமாகிய அந்தக கம்ஸனை மிகுந்த மதியுடைய வஸுதேவன் நல்வார்த்தைகளால் ஸமாதானப்படுத்த முயன்று இங்ஙனம் மொழிந்தான்.

வஸுதேவன் சொல்லுகிறான்:—நீ, சூரர்களால் புகழத்தகுந்த குணமுடையவன்; போஜ வம்சத்தரசர்களுக்குப் புகழை விளைப்பவன். இப்படிப்பட்ட நீ ஸ்த்ரீயும் உடன் பிறந்தவளுமாகிய இவளை விவாஹம் நடந்து க்ருஹப்ரவேசமாகும் ஸமயத்தில்வதிக்க முயல்கின்றனையே; இது உனக்குத் தகுமா? வீரனே! ப்ராணிகளுக்குத் தேஹத்தோடு கூடவே ம்ருத்யுவும் உண்டாகின்றது. ஆனால் அது காலத்தைமாத்ரமே எதிர்பார்க்கின்றது. ஆகையால் இப்பொழுதாவது நூறு வர்ஷங்கள் சென்ற பின்னாவது ப்ராணிகளுக்கு மரணம் நேருவது நிச்சயமே. அதைத் தடுக்கமுடியாது. 'நூறு வர்ஷங்கள் சென்ற பின்பு கிழத்தனத்தினால் சிதிலமான சரீரத்திற்கு மரணம் நேருவது இஷ்டமே. இப்பொழுது மிகவும் மங்களமான இச்சரீரம் போகுமாயின் மீளவும் இப்படிப்பட்ட சரீரம் கிடைப்பதரிது. ஆகையால் இந்த மரணத்தை நான் தடுக்கவேண்டியது அவஸ்யமே' என்று நீ சங்கிக்க வேண்டாம். இத்தேஹம் மரணமடையத் தொடங்குமாயின், அதிலுள்ள ஜீவன் தான் முன்பு

செய்த கர்மத்திற்கு உட்பட்டு அதற்குப் பலனாக ஏற்பட்ட வேறொரு சரீரத்தைப் பெற்றே முன் சரீரத்தைத் துறக்கின்றான். இந்தச் சரீரம் போன பின்பு வேறொரு சரீரம் நேருவதில் ஸந்தேஹமில்லை. ஆனால் அவனவன் செய்த புண்ய பாப கர்மங்களுக்குத் தகுந்தபடி நல்லதும் கெட்டதுமாயிருக்கும். நீ இப்பொழுது இத்தகைய பாபகர்மத்தைச் செய்வாயாயின் உனக்கு ஜன்மாந்தரத்தில் ஹீனசரீரம் நேருமே யன்றி நல்ல சரீரம் நேராது. ஆகையால் இப்பொழுது நீ உனக்கு உண்டாயிருக்கின்ற மரணபயத்தைத் துறந்து உன்னுடன் பிறந்தவளுடைய ப்ராணன்களைப் பாதுகாக்கையாகிற புண்யகர்மத்தைச் செய்வாயாயின், ஜன்மாந்தரத்தில் இதைக்காட்டிலும் மங்களமான சரீரத்தைப் பெறுவாய். அட்டையென்னும் நீர்ப்பூச்சி தானிருக்குமிடத்தை விட்டு மற்றோரிடம் போக முயற்சி கொள்ளுமாயின் ஒரு பாதத்தினால் இருப்பிடத்தைப் பிடித்துக்கொண்டு மற்றொரு பாதத்தினால் மற்றோரிடத்தைத் தாவிப் பிடிக்கின்றது. இங்ஙனமே ஜீவனும் மரணமடைகிற சரீரத்தைத் துறக்கும்பொழுது நன்கர்மத்திற்கு உரியதான மற்றொரு சரீரத்தைப்பெறுகின்றான். மற்றும், நடக்கும் புருஷன் ஒருகாலால் பூமியில் நின்றுகொண்டு மற்றொருகாலைத் தூக்கிவைப்பதுபோல ஜீவிக்கும் புருஷன் சாயைபோல மரணம் தொடரப்பெற்றே ஜீவித்துக்கொண்டிருக்கின்றான் கண்ணால் கண்டதையும் காதால் கேட்டதையும் பெற விரும்பி அதை மனத்தினால் சிந்தித்துக்கொண்டு ஆசையினால் புத்தியில் ஆவலுண்டாகப்பெற்ற ஜீவன் ஸ்வப்னத்தில் படுத்திருக்குஞ் சரீரத்தைப்போன்ற சரீரத்தையாவது அதைக்காட்டிலும் விலக்ஷணமான சரீரத்தையாவது காண்கின்றான்; அப்பால் சரீரத்தைப்பற்றின நினைவும் தொலையப்பெறுகின்

ருன். ஆகையால் அந்தச் சரீரத்தின் வியோகத்தைப் பற்றின பயத்தையும் அடைகிறதில்லை. இங்ஙனமே இஹ லோக ஸுகத்தையும் பரலோக ஸுகத்தையும் மனத்தினால் சிந்தித்துக்கொண்டிருக்கும் புருஷன் தன் கர்மத்திற்குத் தகுந்தபடி ஈச்வரனால் படைக்கப்பட்ட ஏதோ ஒரு சரீரத்தைப் பெறுகிறான்; முன் சரீரத்தைப்பற்றின நினைவும் மறப்பெறுகிறான். ப்ராணிகளின் மனம் கர்ம வாஸனையால் தூண்டப்பட்டு ஸங்கல்பவிகல்பங்களுக்கிடமாகி ஸத்த்வாதிகுண ஸ்வரூபமான ப்ரக்ருதியின் பரிணாமங்களாகிய சப்தாதி விஷயங்களில் எதைதை நினைக்கின்றதோ, அதைப்பற்றின விருப்பம் மாறப்பெறாமல் அதனோடுகூடவே பிறக்கிறார்கள். இதுவே ஜீவாத்மாக்களுக்கு ஸம்ஸாரமென்பது. ஒரேவிதமாயிருக்கின்ற இந்த ஸூர்யன் முதலிய தேஜஸ்ஸு ஜலத்திலும் பூமியின் பரிணாமங்களான கண்ணாடி முதலியவைகளிலும் ப்ரதிபலித்துக் காற்று வேகத்தினாலும் அந்த ஜலம் கண்ணாடி முதலியவற்றின சிறுமை பெருமை முதலியவைகளாலும் பலவாறாகத் தோற்றுகின்றது. அங்ஙனமே இந்த ஜீவன் இயற்கையில் தேவமனுஷ்யாதி ஆகாரங்களற்றவனாயினும் தன்னுடைய கர்மங்களுக்குத் தகுந்தபடி ப்ரக்ருதியின் பரிணாமங்களான பூதஸூக்ஷ்மங்களால் ஏற்பட்டவைகளும் ஸத்த்வாதிகுண ஸ்வரூபங்களுமான சரீரங்களில் சப்தாதிவிஷயங்களை அனுபவிக்கவேண்டுமென்னும் விருப்பத்துடன் புகுந்து 'நான் தேவன், நான் மனுஷ்யன்' என்று பலவாறு ப்ரமிக்கின்றான். வஸ்துவின் உண்மை இதுவாகையால் இதை அறிந்த புருஷன் தன க்ஷேமத்தை விரும்பி ஒருவனுக்கும் த்ரோஹஞ் செய்யலாகாது. இப்படி இருப்பானாயின், அவனுக்கு எதினின்றும் பயம் உண்டாகாது. த்ரோஹஞ் செய்பவனுக்குப் பிறனிடத்தினின்று பயம் உண்டாகும். ஒருகால் இவ்வுலகத்தில்

பயம் நேராது போயினும், அவனுக்குப் பரலோகபயம் தீராது. இவள் உனக்குப் பின்பிறந்தவள்; ஒன்றும் அறியாதவள்; மன இரக்கத்திற்கிடமா யிருப்பவள்; உனக்குப் பெண்போன்றவள்; மங்கள ஸ்வபாவமுடைய வள். தீனர்களிடத்தில் மன இரக்கமுடையவனே! நீ இவளை வதிக்கலாகாது.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அந்தக் கம்ஸன் இங்ஙனம் நல்வார்த்தைகளாலும் இஹபரலோக பயங்களை அறிவிக்கிற பேதவாக்யங்களாலும் வதத்தினின்று மீளும்படி தூண்டப்பெற்றும் கொடியனாகையாலும் அஸுரஸ்வபாவனாகையாலும் அதினின்று மீளவில்லை. அந்தக் கம்ஸன் அவளைக் கொன்றே தீரவேண்டுமென்று பிடிவாத முற்றிருப்பதை அறிந்து வஸுதேவன் ஆலோசித்து அக்காலத்திற் குரியதான இவ்வுபாயத்தை நிச்சயித்தான். 'நேர்ந்திருக்கின்ற ம்ருத்யுவைப் புத்தியுள்ள புருஷன் தன் புத்திபலமுள்ள வரையில் உபாயத்தை ஆலோசித்துப் பரிஹரித்துக்கொள்ள வேண்டும். அப்படி யத்னம் செய்தும் அது மீளாது போமாயின் அதற்குமேல் அது அவனுடைய அபராதமன்று. ஆகையால் இவளுக்குப் பிறக்கும் பிள்ளைகளைக் கொடுக்கிறேனென்று ப்ரதிஜ்ஞை செய்து மன இரக்கத்திற்கிடமாயிருக்கின்ற இவளை இந்த மரணத்தினின்று விடுவிக்கிறேன். எனக்குப் பிள்ளைகள் பிறந்து அவர்களுக்கு ம்ருத்யுவாகிய இக்கம்ஸனும் மரணமடையாதிருப்பானாயின் பிள்ளைகளைக் கொடுத்துவிடுகிறேன். ஒருகால் எனக்குப் பிள்ளை பிறவாமற்போயினும், பிள்ளை பிறப்பதற்கு முன்னமே இவன் மரணமடைவானாயினும் நான் இப்பொழுது ப்ரதிஜ்ஞை செய்வதில் பாதகமில்லை. ஒருகால் எனக்குப் பிறக்கும் பிள்ளையே இக்

கம்ஸனுக்கு ம்ருத்யுவாகக் கூடுமல்லவா? தெய்வத்தின் கதி நம்மால் அறியமுடியாது. நேர்ந்த மரணமும் நிவர்த்திக்கும் (மார்க்கண்டேயனுக்கு நேர்ந்த மரணம் நீங்கிற்றல்லவா?) வரதானத்தினால் நிவர்த்தித்த ம்ருத்யுவும் ஒருகால் மீண்டுவரும். (ஹிரண்யகசிபு ராவணன் முதலியவர்க்கு அங்ஙனம் நடந்ததல்லவா?) ஒருகால் விபரீதமாக நேர்ந்தாலும் நான் செய்யும் ப்ரதிஜ்ஞைக்குத் தோஷமில்லை. என் பிள்ளைக்கு நேரும் மரணம் என் ப்ரதிஜ்ஞையினால் உண்டாகிறதன்றே. அது அவனுடைய கர்மாதீனமல்லவா? வனத்தில் மரங்களில் தீபற்றி எரியும்பொழுது ஸமீபத்திலுள்ள மரத்தில் பற்றாதிருப்பதும் உண்டு; தூரத்திலுள்ள மரத்தில் அண்டிப் பற்றியெரிவதும் உண்டு. அதற்குக் காரணம் அத்ருஷ்டமேயொழிய மற்றொன்றும் அன்று. அங்ஙனமே ஜீவாத்மாக்களுக்குத் தேஹஸம்பந்தம் உண்டாவதற்கும், உண்டாயிருக்கிற தேஹ ஸம்பந்தம் நிவர்த்திப்பதற்கும் அத்ருஷ்டமே காரணமன்றி மற்றொன்றும் நிரூபிக்க முடியாது. அவரவர் கர்மத்தின்படி நடக்கிறதாகையால் நான் ப்ரதிஜ்ஞை செய்வதில் தோஷமில்லை' என்று தன் புத்திக்கு எட்டினவரையில் ஆலோசித்து நிச்சயித்துக்கொண்டு பாபகார்யத்தைச் செய்ய முயன்றிருக்கிற அந்தக் கம்ஸனை வெகுமதித்துத் தான் நினைத்திருப்பதை அவனுக்குத் தெரிவிக்க முயன்றான். வஸுதேவன் தாமரைமலர்போன்ற தன் முகத்தை மலரச்செய்து மனவருத்தமுற்றிருப்பினும் அதை வெளிக்குக் காட்டாமல் சிரித்துக்கொண்டே வெட்கமற்ற கம்ஸனைக் குறித்து 'நல்லியற்கை யுடையவனே! உனக்கு இவளிடத்தினின்று பயம் கிடையாதல்லவா? இவளுடைய பிள்ளைகளிடத்தினின்று உனக்குப் பயம் நேருமென்

றல்லவோ அசரீரவாக்கு சொல்லிற்று. உனக்கு எவர்களிடத்தினின்று பயம் உண்டாயிருக்கின்றதோ, அப்படிப்பட்ட இவளுடைய பிள்ளைகளை உனக்கு நான் கொடுத்துவிடுகிறேன். நீ அவர்களைக் கொன்றாலும் ஸரி; கொல்லாமல் விட்டாலும் ஸரி. என்மேல் அபராதமில்லை' என்றான். அப்பால் கம்ஸன் அவ்வஸுதேவனுடைய வாக்யத்தின் அபிப்ராயத்தை அறிந்து நன்மனமுடைய தன் [1] பகினியின் வதத்தினின்று மீண்டான். பிறகு வஸுதேவனும் ஸந்தோஷமடைந்து அந்தக் கம்ஸனைப் புகழ்ந்து தன் க்ருஹத்திற்குச் சென்றான். அப்பால் கர்ப்பந் தரிக்கும்படியான காலம் நேருகையில் ஸமஸ்த தேவதாஸ்வரூபையான தேவகி வர்ஷந்தோறும் ஒருபிள்ளை விதம் எட்டுப்பிள்ளைகளையும் ஒரு பெண்ணையும் பெற்றாள். அப்பொழுது வஸுதேவன் பொய் பேசுவதற்கு மிகவும் பயந்தவனாகையால் தான் செய்தப்ரதிஜ்ஞையைப் பாதுகாக்க முயன்று மனவருத்தத்துடன் கீர்த்திமானென்னும் பேருடைய முதற் பிள்ளையைக் கம்ஸனிடம் கொண்டுபோய்க் கொடுத்தான். ஸாதுக்களுக்கு எதுதான் பொறுக்கமுடியாது? ஆத்ம பரமாத்மாக்களின் உண்மையை அறிந்தவர்கள் எதைத் தான் விரும்புவார்கள்? தேஹம் தேஹானுபந்திகள் ஆகிய இவற்றில் எதையும் விரும்பமாட்டார்களல்லவா? அல்பஸ்வபாவமுடையவர்கள் எதைத்தான் செய்யமாட்டார்கள்? எப்படிப்பட்ட பாபகார்யத்தையும் செய்வார்கள். ஜிதேந்த்ரியர்கள் எதைத்தான் துறக்கமாட்டார்கள்? ஆகையால் ஆழ்ந்தமனமுடைய வஸுதேவன் தன் பிள்ளையைக் கம்ஸனிடம் கொண்டுபோய்க் கொடுத்தான். அந்தக் கம்ஸனும் வஸுதேவன் ஸுகதுக்கங்களிரண்டையும் துல்யமாக நினைத்திருப்பதையும் ஸத்யந்

1. பகினி-உடன் பிறந்தவள்.

தவழுதிருப்பதையுங் கண்டு மனக்களிப்புற்றுச் சிரித்துக்கொண்டே 'இந்தக் குமாரன் திரும்பிப்போகட்டும். இவனிடத்தினின்று எனக்கு மரண பயம் இல்லை. உங்களுடைய எட்டாவது பிள்ளையிடத்தினின்றல்லவோ எனக்கு மரணம் ஏற்பட்டிருக்கின்றது' என்றான். அப்பால் வஸுதேவன் அப்படியே என்று அதை அங்கீகரித்துப் பிள்ளையை எடுத்துக்கொண்டு சென்றான். ஆயினும் பாபிஷ்டனும் நிலையற்ற மனமுடையவனுமாகிய அந்தக் கம்ஸனுடைய வார்த்தையை அவன் அபிநந்திக்கவில்லை. ஒருகால் நாரதமுனிவர் கம்ஸனிடம் வந்து 'இடைச்சேரியிலுள்ள நந்தன் முதலிய இடையர்களும் அவர்களுடைய பத்னிகளும், வஸுதேவன முதலிய வ்ருஷ்ணி வம்சத்தவர்களும் தேவகி முதலிய அவர்களுடைய பத்னிகளும், நந்தன் வஸுதேவன் இவ்விருவர்களுடைய ஜ்ஞாதிகளும் பந்துக்களும் நண்பர்களும் ஆகிய அனைவரும் தேவதைகளின் அம்சங்களால் பிறந்தவர்களாகையால் தேவதைகளே. கம்ஸனைத் தொடர்ந்தவர்கள் அனைவரும் அஸுரர்களின் அம்சத்தினால் பிறந்தவர்களாகையால் அஸுரர்களே. ஆகையால் தான் உலகங்களுக்கு உபத்ரவத்தை விளைவிக்கின்றார்கள்' என்னும் இவ்விஷயத்தையும், பூமிக்குப் பாரமாயிருக்கின்ற மன்னவர்களாகிற தைத்யர்களைப் பகவான் வதிக்கமுயற்சி கொண்டிருப்பதையும் அவனுக்குச் சொன்னார். நாரதமஹர்ஷி புறப்பட்டுப்போனவுடன் கம்ஸன் யாதவர்கள் தேவதைகளின் அம்சத்தினால் பிறந்தவர்களென்பதையும், பகவான் தன்னை வதிப்பதற்காகத் தேவகியின் கர்ப்பத்தில் அவதரிக்கப்போகிறானென்பதையும் அறிந்து, தேவகி வஸுதேவன் இவர்களுக்கு விலங்கிட்டுச் சிறைச்சாலையில் அடைத்துப் பரம புருஷனென்னும் ஸந்தேஹத்தி

னாலும் அவர்களால் தனக்கு உபத்ரவம் நேருமென்னும் சங்கையினாலும் அவர்களுக்குப் பிறக்கும் பிள்ளைகளை யெல்லாம் அவ்வப்பொழுது வதித்துக்கொண்டிருந்தான். உலகத்தில் அரசர்கள் பெரும்பாலும் பிறருடைய ப்ராணன்களால் தங்கள் ப்ராணன்களுக்கு த்ருப்தியை விளைப்பவர்களாகி மன இரக்கமில்லாத வேடர்கள் போன்று தாய் தந்தைகளையும் உடன்தோன்றல்களையும் பிள்ளைகளையும் ஸ்னேஹிதர்களையும் குழந்தைகளையும் கொல்லுவார்கள். கம்ஸன் தான் பூர்வஜன்மத்தில் காலநேமி யென்னும் மஹாஸுரனாகப் பிறந்து விஷ்ணுவினால் வதிக்கப்பட்டதை அறிந்து அவ்விஷ்ணுவினிடத்தில் பக்ஷபாதமுள்ள யாதவர்களோடு விரோதித்துக்கொண்டிருந்தான். மஹாபலமுடைய அக்கம்ஸன போஜர் அந்தகர் முதலிய யாதவர்களுக்கு ப்ரபுவும் தனக்குத் தந்தையுமாகிய உக்ரஸேனனையும் சிறையில் அடைத்துச் சூரஸேன தேசங்களைத் தானே அநுபவித்து வந்தான். முதல் அத்யாயம் முற்றிற்று.

பகவான் தேவகியின் கர்ப்பத்தில் புகுந்திருத்தலும், ப்ரஹ்மாதி தேவதைகள் அவனை ஸ்தோத்ரஞ் செய்தலும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அப்பொழுது ப்ரலம்பன் பகன் சாணூரன் த்ருணாவர்த்தன் மஹாசனன் முஷ்டிகன் அரிஷ்டன் த்விவிதன் பூதனை கேசி தேனுகன் இவர்களோடும் பாணன் நரகன் முதலிய மற்றும் பல அஸுர ராஜர்களோடும் கூடி மஹாபலிஷ்டனாகிய ஜராஸந்தனையும் உதவியாகப் பற்றிக் கம்ஸன் யாதவர்களுக்கு உபத்ரவத்தைச் செய்து

கொண்டு வந்தான். யாதவர்களும் அந்தக் கம்ஸனால் பீடிக்கப்பட்டு அவ்விடத்தை விட்டுக் குருக்ஷேத்ரம் பாஞ்சாலம் கேகயம் ஸால்வம் விதர்ப்பம் நிஷதம் மகதம் கோஸலம் முதலிய தேசங்களுக்குச் சென்றார்கள். சில பந்துக்கள் அவனையே அனுஸரித்துப் பணிந்து வந்தார்கள். அங்ஙனம் கம்ஸன் தேவகியினுடைய ஆறு கர்ப்பங்களைக் கொல்லுகையில், விஷ்ணுவின் அம்சமாகிய அனந்தன் அந்தத் தேவகிக்கு ஸந்தோஷத்தையும் துக்கத்தையும் விளைத்துக் கொண்டு அவளுக்கு ஏழாவது கர்ப்பமாய்த் தோன்றினான். ஸமஸ்த ஜகத்திற்கும் அந்தராத்மாவான பகவானும் தன்னையே நாதனாகப்பற்றியிருக்கின்ற யாதவர்களுக்குக் கம்ஸனிடத்தினின்று பயம் நேர்ந்திருப்பதை அறிந்து தன் யோகமாயையை நோக்கித் 'தேவி! பத்ரே! நீ இடையர்களாலும் பசுக்களாலும் அலங்கரிக்கப்பட்ட நந்தகோகுலத்திற்குப்போவாயாக. அங்கு வஸுதேவனுடைய பார்யையாகிய ரோஹிணி இருக்கின்றாள். மற்றுமுள்ள அவனுடைய பார்யைகளும் கம்ஸனிடத்தினின்று பயந்து ஆங்காங்குப் பர்வத குகை முதலிய இடங்களில் மறைந்து வஸித்துக் கொண்டிருக்கிறார்கள். இப்பொழுது என்னுடைய அம்சமாகிய ஆதிசேஷன் தேவகியின் ஏழாவது கர்ப்பமாய்த் தோன்றியிருக்கிறான். அந்தக் கர்ப்பத்தை இழுத்துக்கொண்டு ரோஹிணியின் வயிற்றில் சேர்ப்பாயாக. மங்கள ஸ்வபாவமுடையவளே! பிறகு நான் என்னுடைய திவ்யமங்கள விக்ரஹத்துடன் தேவகிக்குப் பிள்ளையாய் வந்து பிறக்கப்போகிறேன். நீயும் நந்தனுடைய பத்னியாகிய யசோதையிடத்தில் பிறக்க வேண்டும். அவரவர் விரும்புகிற வரங்களையெல்லாங் கொடுப்பவர்களில் தலைமையுள்ள உன்னை மனுஷ்

யர்கள் பலவகை உபஹாரங்களாலும் மற்றும் பலவித பூஜைகளாலும் ஆராதிப்பார்கள். மற்றும், உனக்குப் பூமியில் ஆலயங்களையும், துர்க்கை பத்ரகாளி விஜயை வைஷ்ணவி குமுதை சண்டிகை க்ருஷ்ணை மாதவி கன்னிகை மாயை நாராயணி ஈசானை சாரதை அம்பிகை என்னுமிவை முதலிய நாமங்களையும் ஏற்படுத்துவார்கள். தேவகியின் கர்ப்பத்தினின்று உன்னால் இழுக்கப் பட்டமையைப்பற்றி அந்தச் சேஷனை ஸங்கர்ஷணனென்றும், உலகங்களுக்கெல்லாம் ஸந்தோஷத்தை விளைப்பவனாகையால் ராமனென்றும், மிகுந்த பலமுடையவனாகையால் பலபத்ரனென்றும் சொல்லுவார்கள்' என்று கட்டளையிட்டான். இங்ஙனம் பகவானால் கட்டளையிடப்பெற்ற அந்த யோகமாயையும் அப்படியே ஆகட்டுமென்று அவனுடைய வார்த்தையைச் சிரஸில் வஹித்து ப்ரதக்ஷிணஞ்செய்து பூமிக்கு வந்து அப்படியே செய்தது. பிறகு யோகமாயை தேவகியின் கர்ப்பத்தை ரோஹிணியிடங்கொண்டு சேர்க்கையில் பட்டணத்திலுள்ள ஜனங்கள் 'தேவகியின் கர்ப்பம் உருக்குலைந்து நழுவிற்று' என்று கதறினார்கள். அப்பால் பக்தர்களுக்கு அபயங்கொடுக்குந் தன்மையனும் ஸர்வாந்தராத்மாவுமாகிய பகவான் தேவதைகளின் அம்சத்தினால் பிறந்த வஸுதேவனுடையமனத்தில் ஸங்கல்பஜ்ஞானத்தினால் ப்ரவேசித்தான். பகவானுடைய தேஜஸ்ஸைத் தரித்திருக்கிற வஸுதேவன் ஸூர்யன்போல் திகழ்வுற்று இத்தகையதென்று நிரூபிக்கமுடியாத பேரொளியுடன்கூடிக் கம்ஸன் முதலியவர்களுக்கு வருந்தியும் பொறுக்கமுடியாதிருந்தான். பிறகு தேவகி வஸுதேவனால் ஆதானஞ் செய்யப்பட்டதும் தன் ஸங்கல்பஜ்ஞானம் நழுவாதிருக்கப்பெற்றதும் ஜகத்தையெல்லாம் தனக்குச் சரீரமாகவுடையதும்

ஜகத்திற்கெல்லாம் தான் அந்தராத்மாவா யிருப்பது மாகிய பகவானுகிற கர்ப்பத்தைக் கிழக்குதிக்கு மேகத்தில் மறைந்திருக்கின்ற ஆநந்தகரனுன சந்த்ர னைப் போலத் தன் வயிற்றில் தரித்தாள். ஜகத்திற் கெல்லாம் ஆதாரனுன பரமபுருஷனுக்கும் ஆதாரமா யிருக்கின்ற அந்தத் தேவகி அக்னிஜ்வாலைபோன் றிருப்பினும் கம்ஸனுடைய சிறைச்சாலையில் அடைப் புண்டிருக்கையில், வேதத்திற்கிணங்காத அறிவுடைய மூர்க்கனிடத்தில் நிர்த்துஷ்டமான ஸரஸ்வதிபோல விளக்கமற்றிருந்தாள். ஒருவராலும் வெல்லமுடியாத பரமபுருஷனைக் கர்ப்பத்தில் தரிக்கின்றவளும் தன் ஒளியினுல் க்ருஹத்தை விளங்கச் செய்கின்றவளும் பரிசுத்தமான புன்னகையுடன் திகழ்கின்றவளுமாகிய அந்தத் தேவகியைக் கம்ஸன் பார்த்து 'என் ப்ராணன் களைப் பறிப்பதற்காகப் பகவான் இவளுடைய கர்ப் பத்தில் புகுந்திருக்கிறுன்! இந்தத் தேவகி இதற்கு முன்பு இவ்வளவு ஒளியுடன் விளங்கவில்லை. இப்பொ ழுது இவளுடைய ஒளி விலக்ஷணமாயிருக்கின்றதாகை யால் இவளுடைய கர்ப்பத்தில் விஷ்ணு ப்ரவேசித் திருக்கிறுனென்பதில் ஸந்தேஹமில்லை. தேவதைகளின் கார்யத்தை முக்யமாக நிறைவேற்றுந்தன்மையுடைய இவ்விஷ்ணு என் பராக்ரமத்தை அழிக்காதிருக்கு மாறு நான் இவ்விஷயத்தில் சீக்ரமாகச் செய்யவேண் டியது என்ன? இவளை வதிக்கலாமென்று பார்த்தால், இவள் ஸ்த்ரீயா யிருக்கிறுள்; மேலும் கர்ப்பிணி; கர்ப் பிணியான ஸ்த்ரீயை வதித்தால், அது புகழையும் செல்வத்தையும் அனுகூலமான ஆயுளையும் அழித்து விடும். கர்ப்பிணியை வதித்தவன் தான் ஜீவித்துக் கொண்டிருப்பினும் செத்தாற்போலவே. எவன் தேஹத்தையே ஆத்மாவாக அபிமானித்து அதற்காக மிகவுங் கொடிய செயல்களைச் செய்கின்றுனே, அவன் செத்த பின்பு அவனை மனுஷ்யர்கள் சபிப்பார்கள்.

'அவன் பேரிருள் சூழ்ந்த நரகத்தை அடைவான். இது நிச்சயம்' என்று தனக்குள் சொல்லிக்கொண்டு சிந்தித்துத் தான் அவனை வதிக்கவல்லவனாயினும் கர்ப்பிணியை வதிக்கையாகிற மிகவுங் கொடிய கார்யத்தினின்று தானே மீண்டு அந்த விஷ்ணுவின் பிறவியை எதிர்பார்த்து அவனிடத்தில் இடைவிடாமல் த்வேஷத்தை வளர்த்துக்கொண்டிருந்தான். அவன் உட்காருவது படுப்பது நிற்பது புசிப்பது உலாவுவது பருகுவது முதலிய எல்லா ஸமயங்களிலும் விஷ்ணுவையே சிந்தித்துக்கொண்டிருந்து ஜகத்தெல்லாம் அவ்விஷ்ணு மயமாகவே தோற்றக் கண்டான். அப்பொழுது ப்ரஹ்ம தேவனும் ருத்ரனும் மற்றுமுள்ள தேவதைகளும் கந்தர்வாதிகளான உபதேவதைகளும் நாரதர் முதலிய முனிவர்களும் அவ்விடம் வந்து தேவகியின் கர்ப்பத்தில் இருக்கின்ற ஸர்வஜ்ஞனான பரமபுருஷனை வேதவாக்யங்களால் ஸ்தோத்ரஞ் செய்தார்கள்.

தேவதைகள் சொல்லுகிறார்கள்:—பரமபுருஷ! நீ ஸத்யஸங்கல்பன்; சேதநாசேதனரூபமான ஜகத்தைக் காட்டிலும் விலக்ஷணன்; ப்ரக்ருதிபுருஷ காலங்களைச் சரீரமாகவுடையவன்; சேதநாசேதனரூபமான ப்ரபஞ்சத்திற்குக் காரணன்; விகாரமற்ற பரமவ்யோமமென்கிற பரமபதத்தில் வாஸஞ்செய்பவன்; விகாரமற்ற ஜீவாத்மாக்களைக்காட்டிலும் விகாரமற்றவன். (ஜீவாத்மாக்களுக்கு ப்ரக்ருதியைப்போல் ஸ்வரூபம் மாறுதலாகிற விகாரமில்லையாயினும் ஸ்வபாவம் மாறுகையாகிற விகாரமுண்டு. உனக்கு அதுவுங் கிடையாது) நீ சந்த்ர ஸூர்யர்களுக்கு நிர்வாஹகன். அவர்களையே நேத்ரங்களாக உடையவன்; புண்யகர்மங்களுக்கும் பொய்பேசாமையாகிற ஸத்யத்திற்கும் நிர்வாஹகன்;

ஸ்வரூபத்தினாலும் ஸ்வபாவத்தினாலும் விகாரமற்றவன். இப்படிப்பட்ட உன்னைச் சரணம் அடைகின்றோம். விதையும் முளையும் போல மாறிமாறி வருகின்ற இந்த ப்ரபஞ்சமாகிற வ்ருக்ஷத்திற்கு நீ யொருவனே ஆதாரமாயிருக்கின்றனை. ஸுகதுக்கங்கள் இதற்கு இரண்டு பழங்கள். ஸத்த்வ ரஜஸ் தமஸ்ஸுக்களென்கிற மூன்று குணங்களே இதற்கு மூன்று வேர்கள். இந்த வ்ருக்ஷம் தர்ம அர்த்த காம மோக்ஷங்களென்கிற நான்கு ரஸங்களும், பூதஸூக்ஷ்மங்களாகிற ஐந்து விழுதுகளும், ஆறு இந்த்ரியங்களாகிற உருவங்களும், ரக்த மாம்ஸாதி தாதுக்களாகிற ஏழு தோல்களும், கைகள் கால்கள் தலை கழுத்து மார்பு வயிறு என்னும் இவ்வெட்டு அவயவங்களாகிற எட்டுக்கிளைகளும், ஒன்பது த்வாரங்களாகிற ஒன்பது பொந்துகளும், ப்ராணாதிகளும் உபப்ராணன்களுமாகிற பத்து இலைகளும், ஜீவாத்ம பரமாத்மாக்களாகிற இரண்டு பக்ஷிகளுமுடையது. சேதனாசேதன ரூபமான இந்தப்ரபஞ்சமாகிற வ்ருக்ஷத்திற்கு நீயொருவனே உத்பத்தி காரணன். நீயே இதை ஸம்ஹரிக்கின்றனை. இதனுடைய ஸ்திதியை நடத்துகிறவனும் நீயே. ஜீவாத்மாக்கள் உன் மாயையால் மதிமயங்கி அறிவற்று உன்னைப் பலவாறு காண்கிறார்கள். இந்த ப்ரபஞ்சமெல்லாம் தானேயாகி யமைந்திருக்கின்ற உன்னை அறியாமல் ப்ரபஞ்சத்திலுள்ளவற்றை யெல்லாம் வெவ்வேறாக நினைக்கின்றார்கள். ஜ்ஞானஸ்வரூபனும் ஸர்வாந்தராத்மாவுமாகிய நீ ஜங்கம ஸ்தாவர ரூபமான இந்த ப்ரபஞ்சத்தின க்ஷேமத்திற்காகச் சுத்த ஸத்த்வமயங்களாகி ஸாதுக்களுக்கு ஸுகத்தையும் துஷ்டர்களுக்கு அடிக்கடி துக்கங்களையும் விளைக்கவல்ல பல அவதாரங்களைச் செய்கின்றனை. தாமரைக்கண்ணனே! சில பண்டிதர்கள் சுத்த ஸத்த்வமயமான திவ்யமங்கள

விக்ரஹமுடைய உன்னிடத்தில் ஸமாதியினால் மனத்தை நிலைநிறுத்திப் பெரியோர்களால் தமக்கு உதவி செய்யப்பட்ட உன் பாதாரவிந்தங்களாகிற ஓடத்தைக் கொண்டு ஸம்ஸாரமாகிற ஸமுத்ரத்தைக் குளப்படிபோல் அலக்ஷ்யமாகத் தாண்டுகிறார்கள். நித்யவிபூதியென்று கூறப்படுகிற பரமபதத்தை வாஸஸ்தானமாகவுடையவனே! உன்னிடத்தில் மிகுந்த பக்தியுடைய பெரியோர்கள் தாண்ட முடியாமல் பயங்கரமான ஸம்ஸாரமாகிற ஸமுத்ரத்தை உன் பாதாரவிந்தங்களாகிற ஓடத்தினால் தாங்கள் தாண்டி அதை இவ்விடத்திலேயே வைத்துப் போகிறார்கள். (தாங்கள் தாண்டினது மாத்ரமல்லாமல் மற்றவர்களுக்கும் ஸம்ஸாரஸாகரத்தைத் தாண்டுவதற்கு இதுவே உபாயமென்று உன் பாதாரவிந்தங்களைக் காட்டிக் கொடுத்து விட்டுப் போகிறார்கள்) இங்ஙனம் நீ ஸத்புருஷர்களை அனுக்ரஹிக்குந் தன்மையனாயிருக்கின்றனை. தாமரையிதழ் போன்ற கண்களுடையவனே! வேறு சிலர் தங்களைத் தாங்களே முக்தியடைந்தவர்களென்று வீணாக அபிமானித்து உன்னிடத்தில் பக்தியில்லாமையால் மனத்தூய்மையின்றி ப்ரயாஸப்பட்டு வர்ணாஶ்ரமாதிரூபமான சிறந்த பதவியைப் பெற்றும் உன்பாதாரவிந்தங்களைப் பணியாமல் அந்தப்பதவியினின்று கீழ் விழுகின்றார்கள். மாதவனே! உன் பக்தர்களோவென்றால் அவர்களைப்போல நல்வழியினின்று ஒருகாலும் நழுவுகிறதில்லை. உன்னிடத்தில் நிலைநின்ற பக்தியுடையவர்களாகி உன்னால் பாதுகாக்கப்பட்டு [1] விக்னஸேனாபதிகளின தலைகளின்மேல் திரிகின்றார்கள். நீ உலகங்களைப் பாதுகாக்கும்பொருட்டுச் சுத்தஸத்த்வமயமான உருவங்களை ஏற்றுக்கொள்கின்றனை.

1. விக்னமில்லாமல் பக்தியோகத்தை நடத்திக் கடைசியில் அனாயாஸமாக உன்னைப் பெறுகிறார்களென்பது கருத்து.

நீ ஸங்கல்பத்தினாலேயே உலகங்களைப் பாதுகாக்க வல்லவனேயாயினும், உன் பக்தர்கள் வேதங்களில் விதிக்கப்பட்ட யஜ்ஞாதி கர்மங்கள் உபாஸனம் தவம் ஸமாதி இவைகளால் உன்னை ஆராதிக்கும்பொருட்டே நீ பல உருவங்களை ஏற்றுக்கொள்கின்றனை. அவ்வுருவங்கள் ப்ராணிகளுக்கு நன்மைகளை விளைக்கின்றன. ஜகத்காரணனே! ஜ்ஞானத்தை விளைத்து அஜ்ஞானத்தினால் விளைகிற அஹங்கார மமகாரங்களைப் போக்குவதும் சுத்த ஸத்த்வமயமாயிருப்பதும் உனக்கு அஸாதாரணமுமாகிய இத்தகைய உருவங்களை நீ ஏற்றுக்கொள்ளாதிருப்பாயாயின், இவ்வுலகத்திலுள்ளவர்கள் தங்கள் தங்கள் குணங்களின் தோற்றங்களுக்குத் தகுந்தபடி உன்னைத் தேவமனுஷ்யாதிகளோடு ஸமானனென்று அனுமானிப்பார்களன்றி, நீ அவர்களைக்காட்டிலும் விலக்ஷணனாயிருப்பதை அறியமாட்டார்கள். நீ வேதவாக்யங்களாலும் அவற்றைத் தொடர்ந்த மனத்தினாலும் ஊஹிக்கத்தகுந்த ஸ்வபாவமுடையவன். எல்லாவற்றையும் ஸாக்ஷாத்கரிப்பவன். உன்னுடையகுணங்களும் செயல்களும் பிறவிகளும் நாமரூபங்களும் விலக்ஷணமாகையால் இப்படிப்பட்டவையென்று நிரூபிக்கமுடியாதவை. ஆயினும் யஜ்ஞாதி கர்மங்களில் உச்சரிக்கிற அக்னி இந்த்ராதி சப்தங்கள் அந்த அக்னி இந்த்ராதி தேவதைகளுக்கு அந்தர்யாமியான உன்னுடைய நாமங்களேயென்று நினைத்து அத்தகைய உன்னை ஆராதிக்கிறார்கள். தேவனே! மற்றும், உன்னுடைய ஆராதனரூபமான யஜ்ஞாதி கர்மங்களைச் செய்து உன்னிடத்தில் பக்தி உண்டாகப்பெற்ற பெரியோர்களே உன்னுடைய குணம் செயல் முதலியவை விலக்ஷணங்களென்று அறிவார்களன்றி மற்றவர் அறியமாட்டார்கள். நாதனே! எவனேனும் மங்களத்தை விளைக்கவல்ல அஸாதாரணமான உன்னு

டைய நாமங்களையும் உருவங்களையும் பிறர் சொல்லக் கேட்பதும் கேட்பவர்களுக்குச் சொல்வதும் நாமங்களை நினைப்பதும் உருவங்களை த்யானிப்பதும் செய்து கொண்டு உட்காருவது திரிவது புசிப்பது முதலிய செயல்களிலும் உன்னுடைய பாதாரவிந்தங்களில் நிலை நின்ற மனமுடையவனுயிருப்பானுயின், அவன் மோக்ஷமாகிற பெரிய நன்மையைப் பெறுவானன்றி மீளவும் ஸம்ஸாரத்திற்கு ஆளாகமாட்டான். தனனைப் பற்றினுருடைய வருத்தங்களைப்போக்குந்தன்மையனே! எங்களுக்குப் பெரிய ஸந்தோஷமாயிற்று. ஏனென்றால், ஸர்வேச்வரனை உன்னுடைய பிறவியாலும் அடிவைப்பாலும் இனிப் பூமியின் பாரம் நீங்கினுற்போலவே. மற்றும், [1] த்வஜம் வஜ்ரம் அங்குசம் முதலிய ரேகைகள் அமைந்து ரமணீயங்களான உன் அடிவைப்புக்களால் அலங்கரிக்கப்பட்டதும் உன்னுல் அருள்புரியப் பெற்றதுமாகிய இப்பூமியை சித்யவிபூதியைப்போல் நாங்கள்பார்க்கப்போகிறோம். இதெல்லாம் எங்களுக்கு ஸந்தோஷமல்லவா? ஜகதீசனே! நீ ஜீவாத்மாக்களைப் போல் கர்மத்தினுல் விளையும் பிறவியுடையவனல்ல. ஆயினும் உன்னுடைய பிறவிக்குக் காரணம் விளையாடவேண்டுமென்கிற உன்னுடைய ஸங்கல்பத்தை யொழிய மற்றொன்றும் எங்களுக்குத் தெரியவில்லை. இத்தன்மை மற்றெவர்க்கும் கிடையாது. இதென்ன ஆச்சர்யம்! ஸம்ஸாரபயத்தைப் போக்குந்தன்மையனே! நீ ஜகத்திற்கு ஆதாரனும் அந்தராத்மாவுமாகிய உன்னுடைய ஸங்கல்பத்தினுலல்லவோ ப்ரக்ருதியைக் கொண்டு இந்த ஜகத்தினுடைய ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை நடத்துகின்றனை. அந்த ஸங்கல்பமே உன்னுடைய பிறவிக்குங் காரணமென்று நாங்கள் நினைக்கின்றோம்.

---

1. த்வஜம்-கோடி; வஜ்ரம்-வஜ்ராயுதம்; அங்குசம்-மாவெட்டி.

நீ, முன்பு மத்ஸ்யம் குதிரை ஆமை பன்றி ந்ருஸிம்ஹம் க்ஷத்ரியன் ப்ராஹ்மணன் தேவன் முதலிய ஜாதிகளில் அவதரித்து எங்களையும் மூன்று லோகங்களையும் பாதுகாத்ததுபோல, இப்பொழுதும் பூமியின் பாரத்தைப் போக்கி எங்களைப் பாதுகாப்பாயாக. யாதவ ஶ்ரேஷ்டனே! உனக்கு நமஸ்காரம்.

1 அம்மா! நம்முடைய நன்மைக்காக ஷாட்குண்ய பூர்ணனான ஸாக்ஷாத் பரமபுருஷன் உன்னுடைய கர்ப்பத்தில் ப்ரவேசித்திருக்கின்றான். மரணமடையப் போகிற கம்ஸனிடத்தினின்று நீ பயப்படவேண்டாம். உன் பிள்ளை யாதவர்களையெல்லாம் பாதுகாக்கப் போகின்றான்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் தேவதைகள் அந்தப் பரமபுருஷனைத் தங்கள் புத்திக்கு எட்டினவளவு ஸ்தோத்ரம் செய்து ப்ரஹ்ம ருத்ரர்களை முன்னிட்டுக்கொண்டு ஸ்வர்க்கலோகம் போய்ச்சேர்ந்தார்கள். இரண்டாவது அத்யாயம் முற்றிற்று.



ஸ்ரீக்ருஷ்ணாவதாரமும், தேவகி வஸு-
தேவர்களின் ஸ்தோத்ரமும், வஸு-
தேவன் ஸ்ரீக்ருஷ்ணனைக் கோகுலங்
கொண்டு போய்ச் சேர்த்துவருதலும்.



ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:-பிறகு கர்மத்தினால் விளையும் பிறவியற்ற ஸர்வேஶ்வரனான பகவான் பிறக்கவேண்டு

1. இங்ஙனம் தேவதைகள் தேவகியின் கர்ப்பத்திலுள்ள பரமபுருஷனை ஸ்தோத்ரஞ்செய்து தேவகியைக் குறித்துச் சொல்லுகிறார்கள்.

மென்று நினைக்கையில், அக்காலம் எல்லாக் குணங்களும் அமைந்து மிகவும் அழகாயிருந்தது. பகவானுடைய ஜன்ம நக்ஷத்ரமாகிய ரோஹிணி நக்ஷத்ரத்திற்கு மற்ற நக்ஷத்ரங்களில் இருக்கிற ஸூர்யாதி க்ரஹங்களும் அஸ்வினி முதலிய மற்ற நக்ஷத்ரங்களும் அநுகூலங்களாயிருந்தன. திசைகளெல்லாம் தெளிவுற்றிருந்தன. ஆகாயத்தில் உதித்த நக்ஷத்ரங்களெல்லாம் சாந்தமாயிருந்தன. பட்டணங்களும் க்ராமங்களும் இடைச்சேரிகளும் அமைந்த பூமிமுழுவதும் மங்களங்கள் நிறைந்திருந்தது. நதிகள் தெளிந்த ஜலமுடையவைகளாகப் பெருகின. ஜலாதாரங்களில் தாமரைகள் அழகாய் மலர்ந்தன. வனங்களெல்லாம் பக்ஷிகளும் வண்டுகளும் கூட்டங்கூட்டமாய் ஒலிக்கப்பெற்ற பூங்கொத்துக்கள் நிறைந்து விளங்கின. காற்று ஸுகமான ஊறலும் நல்ல வாஸனையும் அமைந்து சிறிதுந் தூசியின்றி வீசிற்று. முன்பு சாந்தமாயிருந்த ப்ராஹ்மண க்ஷத்ரிய வைஸ்யர்களின் அக்னிகள் அப்பொழுது கலக்கமின்றிக் கொழுந்துவிட்டெரிந்தன. தேவதைகளின் மனங்களும் ஸாதுக்களின் மனங்களும் ப்ரஸன்னமாயின. அந்தப் பகவான் அவதரிக்கும் பொழுது ஆகாயத்தில் துந்துபிவாத்யங்கள் முழங்கின. கின்னரர்களும் கந்தர்வர்களும் பாடினார்கள். ஸித்தர்களும் சாரணர்களும் துதித்தார்கள். வித்யாதரஸ்த்ரீகளும் அப்ஸரஸ்த்ரீகளும் நர்த்தனஞ் செய்தார்கள். முனிவர்களும் தேவதைகளும் மனக்களிப்புடன் பூமழை பொழிந்தார்கள். பேரிருள் மூடின அர்த்தராத்ரி ஸமயத்தில் ஜநார்த்தனன் தோன்றும்பொழுது மேகங்கள் மெல்லமெல்ல ஸமுத்ரங்கள்போல் காஜித்தன. இத்தகைய மங்களமான ஸமயத்தில், கிழக்கு திக்கில் பூர்ண சந்த்ரன் உதிப்பதுபோல, தேவதைபோன்ற தேவகியிடத்தில் ஜ்ஞானம் சக்தி முதலிய ஸமஸ்த கல்யாண



2067. ஸ்ரீகிருஷ்ணாவதாரம்.

குணங்களும் அமைந்த ஸ்ரீமஹாவிஷ்ணு ஆவிர்ப்பவித்தான். செந்தாமரைக் கண்களும் நான்கு புஜங்களும் சங்கம் கதை முதலிய ஆயுதங்களும் திருமார்பில் ஸ்ரீவத்ஸமென்கிற அடையாளமும் கழுத்தில் திகழ்கின்ற கௌஸ்துபமணியும் பீதாம்பரமும் மிகவும் விலையுயர்ந்த வைடூர்யரத்னங்கள் இழைத்த க்ரீடம் குண்டலம் இவற்றின் காந்தியால் சூழப்பட்டு விளங்குகின்ற திருக்குழற்கற்றையும் அமைந்து நீலமேகம்போலக் கறுத்துப் பார்க்கப் பதினாயிரங் கண்களும் போராதபடி மிகவும் அழகாகி, சிறந்த அரைநாண்மாலை தோள்வலை கைவளை முதலிய ஆபரணங்களால் திகழ்வுற்று அற்புதமான உருவமுடைய பாலகனைத் தோற்றுகின்ற பகவானை வஸுதேவன் கண்டான். அவ்வஸுதேவன் ஸாக்ஷாத் பரம புருஷன் தனக்குப் பிள்ளையாகப் பிறந்திருக்கக் கண்டு ஆச்சர்யத்தினால் கண்கள் மலர்ந்து பகவானுடைய அவதாரமாகிய மஹோத்ஸவத்தினால் பரபரப்புற்று அப்பொழுதே ஸ்நானஞ் செய்து ப்ராஹ்மணர்களுக்குப் பதினாயிரம் பசுக்களைப் கொடுப்பதாக மனத்தில் ஸங்கல்பித்துக் கொண்டான். பாரதனே! பிறகு வஸுதேவன் தன் தேஹகாந்தியால் ப்ரஸவக்ருஹத்தை விளங்கச் செய்கின்ற குமாரனைப் பரம புருஷனென்று நிச்சயித்து உடம்பு வணங்கப்பெற்றுக் கைகளைக் குவித்து மனவூக்கமுற்றுக் கம்ஸனிடத்தினின்று பயமற்று அந்தப்பகவானுடைய ப்ரபாவத்தை அறிந்து ஸ்தோத்ரஞ் செய்தான்.

வஸுதேவன் சொல்லுகிறான்:-நீ சேதநாசேதனங்களைக்காட்டிலும் விலக்ஷணனான பரம புருஷன் தான். எனக்குத் தெரிந்தது. நீ கேவலஜ்ஞானாநந்தஸ்வரூபன்; ஸமஸ்த புத்திகளையும் அவற்றின் வ்யாபாரங்களையும் ஸாக்ஷாத்கரிப்பவன். அத்தகைய நீ இந்த உலகங்க

ளைப் படைப்பதற்கு முன்பு ஸூக்ஷ்ம சேதநாசேதனங்களைச் சரீரமாகக்கொண்டு காரணனாயிருந்து உன் சரீரமாகிய ப்ரக்ருதியினால் ஸ்தூல சேதநாசேதனரூபமான இந்த ஜகத்தை யெல்லாம் படைத்து அப்பால் அதைப் பாதுகாக்கும் பொருட்டு ஸங்கல்பஜ்ஞானத்தினால் அதில் ப்ரவேசித்தும் அதன் விகாரங்கள் தீண்டப் பெறுமையால் ப்ரவேசிக்காதவன்போலத் தோற்றுகின்றனை. மஹத்து அஹங்காரம் தன்மாத்ரங்கள் ஆகிய ப்ரக்ருதியின் பரிணாமங்களான ஏழு தத்த்வங்களும் அவற்றின் பரிணாமங்களான ஆகாசம் முதலிய ஸ்தூல பூதங்களும் இந்த்ரியங்களும் வெவ்வேறுசக்தியுடையவைகளாகையால் ஒன்றோடொன்று சேராமல் தனியேயிருந்து ப்ரஹ்மாண்டமாகிய கார்யத்தை விளைக்குந் திறமையற்று ஒன்றோடொன்று சேர்ந்து கலந்து ப்ரஹ்மாண்டத்தை உண்டுபண்ணுகின்றன; பிறகு அந்த ப்ரஹ்மாண்டத்தில் உண்டானவைபோலத் தோற்றுகின்றன. வாஸ்தவத்தில் அவை முன்னமே இருக்கின்றவையாகையால் அந்த ப்ரஹ்மாண்டத்தில் உண்டானவையன்று. இங்ஙனமே நீ இந்த ப்ரபஞ்சம் உண்டாவதற்கு முன்னமே இதற்குக் காரணமாயிருந்து இதைப் படைத்து இதற்குள் ப்ரவேசித்து நிறைந்திருக்கின்றனை. ஜ்ஞானத்தினால் நிரூபிக்கத் தகுந்த ஸ்வபாவமுடைய தேவமனுஷ்யாதி பூதங்களில் நீ அமைந்திருப்பினும் அவற்றின் விகாரங்கள் தீண்டப்பெறுமல் நித்ய சுத்தனாயிருக்கின்றனை. நீ என்றும் குவியாது மலர்கின்ற ஜ்ஞானப்ரகாசமுடையவன். கர்மத்தினால் ஜ்ஞான ஸங்கோசம் உண்டாவது ஜீவாத்மாக்களுக்கேயன்றி உனக்குக் கிடையாது. உனக்கு உள்ளென்றும் புறமென்றும்கிடையாது. நீ எங்கும் நிறைந்திருப்பவன். இந்த ப்ரபஞ்சத்திலுள்ளவையெல்லாம் நீயே. நீ எல்லாவற்றையும் சரீரமாகவுடையவன். தேஹத்தின் குணங்

கள் ஆத்மாக்களிடத்தில் ஸம்பந்திக்கிறதில்லை. ஆத்மாக்கள் அஜ்ஞானத்தினால் தேஹகுணங்களைத் தங்களிடத்தில் ஏறிட்டுக்கொள்கிறார்களன்றி, அது உண்மையன்று. அங்ஙனமே பரமாத்மாவாகிய உன்னிடத்தில் உன் சரீரமான சேதனாசேதனங்களின் குணங்கள் ஸம்பந்திக்கிறதில்லை. இவ்வுலகத்தில் புலப்படும் வஸ்துக்களைப் பரமாத்மாவைக்காட்டிலும் ஸ்வதந்த்ரமாயிருப்பவையென்று எவன் நினைக்கிறானோ, அவன புத்தியற்றவன். அவனுடைய மதத்தை இது ஸரியன்றென்று தூஷிப்பதற்காக எடுத்துரைக்கலாமன்றி மற்றப்படி அதை நெஞ்சிலும் நினைக்கலாகாது. பெரியோர்கள் இது ஸரியன்றென்று கழித்ததை அவன் இதுவே ஹிதமென்று எடுத்துக்கொண்டிருக்கிறான். ஆகையால் அவனுடைய மதம் ஸரியன்று. உனக்கு ஸங்கல்பம் தவிர மற்றொரு வ்யாபாரமுங் கிடையாது. நீ ஸத்த்வாதி குணங்களற்றவன்; நிர்விகார ஸ்வரூபன். ஆயினும் உன்னிடத்தினின்று இந்த ஜகத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்கள் உண்டாகின்றனவென்று வேதாந்தங்கள் சொல்லுகின்றன. ஆனால் 'நிர்விகாரனான எனக்கு விகாரத்திற்கிடமான [1] ஜகத்காரணத்வம் எங்ஙனம் சேரும்?' என்னில், ப்ரக்ருதி புருஷர்களுக்கு நியாமகனும் அவற்றைச் சரீரமாகவுடையவனும் ஜ்ஞானம் சக்தி முதலிய குணங்கள் அமைந்தவனும் ஸ்வரூபத்தினாலும் ஸ்வபாவத்தினாலும் அளவற்றவனுமாகிய உன்னிடத்தில் அந்த ஜகத்காரணத்வம் சேராததன்று. ஸூக்ஷ்ம சேதனாசேதனங்களைச் சரீரமாகவுடைய நீயே ஸ்தூல சேதனாசேதனங்களடங்கின இந்த ப்ரபஞ்சமாய் விரிகின்றனையாகையால் ஸ்வபாவம் மாறுதல் ஸ்வரூபம் மாறுதல் முதலிய விகாரங்களெல்லாம் உன் சரீரமான சேதனாசேதனங்களுக்கேயன்றி

1. ஜகத்காரணத்வம்-ஜகத்திற்குக் காரணமாயிருக்கை.

உனக்குக் கிடையாது. ஆகையால் உனக்கு ஜகத்காரணத்வம் கூடும். ஆனால் நீயே ஜகத்தாகப் பரிணமிக்கிறு யென்பது எங்ஙனம் சேருமென்னில், சேதனு சேதன ரூபமான ப்ரபஞ்சத்திற்கு நீ ஆதாரமாகி அந்தராத்மாவாய்த் தரித்துக்கொண்டிருக்கின்றனையாகையால் உன் சரீரமான அந்தச்சேதனு சேதனங்களின் பிறவிமுதலிய பரிணுமங்களை உன்னிடத்தில் ஏறிட்டுச் சொல்லுகிறது மாத்ரமேயன்றி, உனக்கு நேரே பரிணுமங்கள் எவையும் கிடையாது. அத்தகைய நீ மூன்று லோகங்களையும் பாதுகாக்கும்பொருட்டுச் சுத்த ஸத்த்வமயமான உருவங்களை நேரே ஏற்றுக்கொள்கின்றனை. இந்த ஜகத்தின் ஸ்ருஷ்டிக்காக ரஜோகுணமயமாயிருப்பதும் சிவந்த நிறமுடையதுமான சரீரத்தை ப்ரஹ்மதேவனென்னும் ஜீவன் மூலமாய் ஏற்றுக்கொள்கின்றனை. ப்ரளயத்திற்காகத் தமோகுணமயமாயிருப்பதும் கறுத்த நிறமுடையதுமாகிய சரீரத்தை ருத்ரனென்னும் ஜீவன் மூலமாய் ஏற்றுக்கொள்கின்றனை. ப்ரபு! ஸர்வேஸ்வரனே! நீ இவ்வுலகத்தைப் பாதுகாக்கும்பொருட்டு என் க்ருஹத்தில் அவதரித்தனை. ராஜாக்களென்னும் பேருடைய கோடி கோடியான அஸுரக் கூட்டங்களால் தூண்டப்பட்ட ஸைன்யங்களையெல்லாம் அழிக்கப்போகின்றனை. தேவதேவனே! பெரியோர்களின் கோஷ்டியில் நுழையத் தகாத பெருந் துஷ்டனாகிய இக்கம்ஸன், நீ என் க்ருஹத்தில் பிறக்கப்போகிறுயென்று கேள்விப்பட்டு அந்த த்வேஷத்தினால் உன்னுடைய முன் தோன்றல்களையெல்லாம் கொன்றான். அவன் தன் புருஷர்கள் மூலமாய் உன்னுடைய அவதாரத்தைக் கேட்டு இப்பொழுதே கையுங் கத்தியுமாய் வந்து சேருவான். எனக்குப் பயமாயிருக்கிறது. ஆகையால் நீ இவ்வுருவத்தை மறைத்துக்கொள்வாயாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—பிறகு தேவகி மஹாபுருஷனுக்கு அஸாதாரணமான லக்ஷணங்கள் அமைந்த அப்புதல்வனைக் கண்டு பரமபுருஷனென்றறிந்து முன்பு கம்ஸனிடத்தினின்று பயந்திருப்பினும் பயந்தீர்ந்து பரிசுத்தமான புன்னகையுடையவளாகி அவனை இங்ஙனம் துதித்தாள்.

தேவகி சொல்லுகிறாள்:— இந்த்ரியங்களுக்கு விஷயமாகாததும் இந்த ப்ரபஞ்சம் உண்டாவதற்கு முன்பும் அழியாதிருப்பதும் ஸத்த்வாதிகுணங்கள் தீண்டப்பெறாததும் வளர்தல் குறைதல் முதலிய விகாரங்களின்றி என்றும் ஒருவாறாயிருப்பதும் ஆகாசம் முதலிய பஞ்சபூதங்களின் குணங்களான ஒலிஔறல் முதலிய விசேஷங்களற்றதும் ஸ்வயம்ப்ரகாசமும் சோகமோஹாதி விகாரங்களற்றதும் புண்யபாபரூபமான வ்யாபாரங்களற்றதும் என்றும் குவியாது மலர்கின்ற ஜ்ஞானதீபமுடையதும் ஸ்வரூபத்தினாலும் குணங்களாலும் அளவற்றதுமான யாதொரு பரமாத்ம ஸ்வரூபத்தை வேதாந்தங்கள் நிரூபிக்கின்றனவோ, அப்படிப்பட்ட பரமாத்மன் மஹாவிஷ்ணு ஸாக்ஷாத் பரமபுருஷன் நீயே. இரண்டு பரார்த்தங்கள் அடங்கிய ப்ரஹ்மதேவனுடைய ஆயுள் முடியுங் காலமாகிய ப்ரஹ்ம ப்ரளயத்தில் [1] ப்ருதிவி முதலிய மஹா பூதங்கள் காலவேகத்தினால் தங்கள் காரணங்களில் மறையுங் க்ரமத்தில் பூதாதியான அஹங்காரதத்த்வத்திலும், அது தனக்குக் காரணமான மஹத்தத்த்வத்திலும், அதுவும் தனக்குக் காரணமான அவ்யக்தத்திலும், அவ்யக்தம் அக்ஷரத்திலும், அக்ஷரம் தமஸ்ஸிலும், தமஸ்ஸு உன்னிடத்திலும் மறைகையில் நீயொருவனே

1. ப்ருதிவி-பூமி.

மிருந்து நிற்கின்றனை. அதனால் நீ சேஷனென்னும் பெயர் பெறுகின்றனை. ஸூக்ஷ்மதசையை அடைந்து அவ்யக்தமென்னும் பெயருடைய ப்ரக்ருதியைச் சரீரமாகக் கொண்டவனே! நிமிஷம் முதல் ஸம்வத்ஸரம் வரையிலுள்ள இக்காலம் ப்ரஹ்மாதிகளையும் அடக்கியாளும்படியான மேன்மையுடையது. இக்காலத்தினாலல்லவோ நீ ஜகத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை நடத்துகின்றனை. (இக்காலத்தில் தான் ப்ரபஞ்சம் முழுவதும் நடக்கின்றது). அப்படிப்பட்ட இக்காலத்தை உன்னுடைய சேஷ்டையென்று சொல்லுகிறார்கள். இவ்வாறு காலத்தையுங்கூட அடக்கியாள்பவனும் க்ஷேமத்தை விளைப்பவனுமாகிய உன்னைச் சரணம் அடைகின்றேன். பிறத்தல் சாதல் முதலிய ஸம்ஸார துக்கங்களை அநுபவிக்கும் புருஷன் ஸம்ஸாரமாகிற மஹாஸர்ப்பத்தினின்று பயந்து அதினின்று விடுபட விரும்பி எல்லா லோகங்களையும் ஓடித்திரிந்தும் அந்தப் பயம் நீங்கப் பெறுகிறதில்லை. அவனே தெய்வாதீனமாய் உன் பாதாரவிந்தங்களைச் சரணம் அடைவானாயின அந்தப் பயம் நீங்கப்பெற்றுத் தான் செய்யவேண்டிய செயல்கள் நிறைவேறிச் சிந்தையற்று ஸுகமாயிருக்கின்றான். அந்த ஸம்ஸாரமாகிற ஸர்ப்பம் அவனிடத்தினின்று பயந்தோடுகின்றது. (இங்ஙனம் ஸம்ஸாரமாகிற மஹாபயத்தைப் போக்கி மோக்ஷமாகிற பெரிய நன்மையைக் கொடுக்குந்தன்மையுள்ள உனக்கு ஸாம்ஸாரிக ஸுகங்களைக் கொடுப்பது ஒரு பொருளோ?) அப்படிப்பட்ட நீ கொடுமையினால் பயங்கரனான கம்ஸனிடத்தினின்று பயந்திருக்கின்ற எங்களைப் பாதுகாப்பாயாக. நீ உன் ப்ருத்யர்களின் பயத்தைப்போக்குந் தன்மையனல்லவா? பரமபுருஷனென்பதை வெளியிடுவதும் யோகிகளால் த்யானிக்கத் தகுந்

தமாகிய இவ்வுருவத்தை என்னைப்போன்ற [1] மாம்ஸ சக்ஷுஸ்ஸுக்களுடைய கண்களுக்கு ப்ரத்யக்ஷமாகச் செய்யவேண்டாம். மதுஸூதனு! பாபிஷ்டனுகிய இக்கம்ஸன் என்னிடத்தில் நீ பிறந்திருப்பதை அறியவேண்டாம். தைர்யமற்ற மதியுடைய நான் உன்னுடைய அவதாரத்தைப்பற்றிக் கம்ஸனிடத்தினின்று பயப்படுகின்றேன். ப்ரபஞ்சத்தையெல்லாம் சரீரமாகக்கொண்டு அதற்கு அந்தராத்மாவாகி அதெல்லாம் தானேயென்னும்படி விளங்குந் தன்மையனே! சங்கம் சக்ரம் கதை தாமரைமலர் ஸ்ரீ மஹாலக்ஷ்மி இவற்ருல் பெரிய அழகமைந்ததும் நான்கு புஜங்களுடையதும் ப்ராக்ருத ஜனங்களுக்கு நேராததுமாகிய இவ்வுருவத்தை மறைத்துக்கொள்வாயாக. நாதனே! ஜகத்ஸ்ருஷ்டியின் ஆரம்பத்தில் உன்னுடைய நாபிகமலத்தில் இந்த ப்ரபஞ்சத்தையெல்லாம் தரித்துக்கொண்டிருக்கின்றனை. அப்படிப்பட்ட நீ என் கர்ப்பத்தில் பிறந்தாயென்பது மனுஷ்ய லோகத்தின் ரீதியை அனுஸரித்துச் செய்த கார்யமேயன்றி மற்றென்றுமன்று. இவ்வுலக ரீதியை அனுஸரிக்க வேண்டிய அவஶ்யமில்லாதிருப்பினும் இப்படி நீ செய்தது மிகவும் ஆச்சர்யமாயிருக்கின்றது. உன் மஹிமையை என்னென்று சொல்லுவேன!

(ஸ்ரீசுகர் சொல்லுகிருர்:—இங்ஙனம் மாதாபிதாக்களால் துதி செய்து வேண்டப்பெற்ற அந்தப் பகவான் தன்னுடைய அஸாதாரணமான திவ்யமங்கள விக்ரஹத்தைக் காட்டினதற்குக் காரணத்தைச் சொல்ல முயன்று பூர்வ வ்ருத்தாந்தத்தைச் சொன்னுன்).

---

1. மாம்ஸ சக்ஷுஸ்ஸுக்கள்—மாம்ஸமயமான கண்களையுடையவர்கள்; ஞானக்கண்ணில்லாத மூடர்கள்.

ஸ்ரீ பகவான் சொல்லுகிறான்:—இதற்குக் கீழ் மூன்ருவது ஜன்மத்தில் ஸ்வாயம்புவ மன்வந்தரத்தில் நீ ப்ருஸ்னியென்னும் பேருடைய ஒரு மடந்தையாயிருந்தனை. உன் பர்த்தாவாகிய இவ்வஸுதேவன் அப்பொழுது பரிசுத்தனான ஸுதபஸ்ஸென்னும் ப்ரஜாபதியாயிருந்தான். அப்பொழுது நீங்கள் நான்முகனால் ப்ரஜைகளைப் படைக்கும்படி நியமிக்கப்பட்டு மனத்தையும் மற்ற இந்த்ரியங்களையும் அடக்கிக்கொண்டு பெரிய தவம் நடத்திக்கொண்டிருந்தீர்கள். க்ரமமாக ஏற்படுகின்ற மழை காற்று வெயில் பனி வெருக்கம் முதலிய ருதுதர்மங்களை யெல்லாம் பொறுத்து ப்ராணவாயுவை அடக்கி மனமலங்களையெல்லாம் தீரப்பெற்று மரங்களினின்றும் உதிர்ந்த இலைகளையும் காற்றையும் ஆஹாரமாகக்கொண்டு என்னிடத்தினின்று வரங்களை விரும்பி ராகாதிதோஷங்கள் தீண்டப்பெருத மனத்தினால் என்னை ஆராதித்தீர்கள். மங்கள ஸ்வபாவமுடையவளே! நீங்கள் என்னிடத்தில் மனத்தை நிலைநிறுத்தி ஒருவராலும் வருந்தியும் நடத்த முடியாத பெருந்தவத்தை நடத்திக்கொண்டிருக்கையில் தேவமானத்தினால் பன்னிராயிரம் வர்ஷங்கள் கடந்தன. பாபமற்றவளே! வரங் கொடுப்பவர்களில் சிறந்தவனும் ஸர்வநாதனும் உங்களால் பக்தியுடன் த்யானிக்கப்பட்டவனுமாகிய நான் உங்கள் தவத்தினாலும் ஸ்ரத்தையினாலும் ஸந்தோஷம் அடைந்து நீங்கள் விரும்பும் வரங்களைக்கொடுக்கும்பொருட்டு நான்கு புஜங்கள் முதலிய சிஹ்னங்களோடு கூடின இவ்வுருவத்துடன் உங்களுக்குத்தோற்றி 'உங்களுக்கு இஷ்டமான வரங்களை வேண்டுங்கள்' என்று மொழிகையில் நீங்கள் என்னைப்போன்ற புதல்வனை விரும்பினீர்கள். சப்தாதி விஷயங்களை அனுபவித்தறியாதவர்களும்

பிள்ளையில்லாதவர்களும் தம்பதிகளுமாகிய நீங்கள் என் மாயையால் மதிமயங்கி மோக்ஷத்தை விரும்பவில்லை. நீங்கள் என்னைப்போன்ற பிள்ளையைப் பெறுகையாகிற வரத்தையே பெற்று நான் போன பின்பு மனோரதம் கைகூடிச் சப்தாதி விஷயங்களை அனுபவித்துக்கொண்டிருந்தீர்கள். அப்பொழுது ரூபம் ஔதார்யம் முதலிய குணங்களால் எனக்கு நிகரான மற்றொருவனையுங் காணாமல் நானே உங்களுக்குப் பிள்ளையாகப் பிறந்து ப்ருஸ்னிகர்ப்பனென்று பெயர் பெற்றிருந்தேன். அந்த நீங்களே அடுத்த ஜன்மத்தில் கஶ்யபரும் அதிதியுமாகப் பிறந்திருந்தீர்கள். அப்பொழுது அதிதியாகிய உனக்குக் கஶ்யபரிடத்தினின்று மீளவும் நான் பிள்ளையாகப் பிறந்து இந்த்ரனுக்குத் தம்பியாகையால் உபேந்த்ரனென்றும் வாமன உருவமுடையவனாயிருந்தேனாகையால் வாமனனென்றும் ப்ரஸித்தனாயிருந்தேன். அப்பொழுது அதிதியும் கஶ்யபருமாயிருந்த நீங்களே இப்பொழுது தேவகி வஸுதேவர்களாகப் பிறந்திருக்கிறீர்கள். உங்களுக்கு இந்த மூன்றும் ஜன்மத்தில் மீளவும் நான் அதே உருவத்துடன் பிள்ளையாகப் பிறந்தேன். நல்லொழுக்கமுடையவளே! நான் சொன்னது உண்மையேயல்லவா? முன்பும் இவனே நமக்குப் பிள்ளையாகப் பிறந்தானென்று தெரியும்பொருட்டு உங்களுக்கு இவ்வுருவத்தைக் காட்டினேன். இப்படியில்லாமல் ஸாதாரணமான மனுஷ்ய உருவத்துடன் பிறப்பேனாயின், என்னுடைய அவதாரஜ்ஞானம் உங்களுக்கு உண்டாகாது. நீங்கள் என்னை எப்பொழுதும் பிள்ளையென்று பாவித்துக்கொண்டிருப்பினும் சிற்சில ஸமயங்களில் பரப்ரஹ்மமென்று பாவித்து என்னிடத்தில் நிலைநின்ற நட்புடையவர்களாகிச் சிறப்புடையதான என் கதியைப் பெறுவீர்கள்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— ஸ்ரீஹரி இங்ஙனம் மொழிந்து பேசாதிருந்தான். பிறகு தாய் தந்தைக

ளான தேவகீ வஸுதேவர்கள் பார்த்துக்கொண்டே யிருக்கையில் அப்பொழுதே தன் மாயையினால் ஸாதாரணமான சிசுவைப்போன்றிருந்தான். பிறகு வஸுதேவன் பகவானால் தூண்டப்பட்டு அந்தக் குழந்தையை எடுத்துக்கொண்டு [1] ஸூதிக்ருஹத்தினின்று வெளிப் புறப்பட விரும்பும்பொழுது கோகுலத்தில் நந்தனுடைய பார்யையாகிய யசோதை ப்ரக்ருதிக்கு அபிமானி தேவதையான யோகமாயையாகிற புதல்வியைப் பெற்றாள். அப்பொழுது அந்த யோகமாயை தன் மஹிமையால் த்வாரபாலர்களையும் பட்டணத்து ஜனங்களையும் புத்தி முதலிய ஸமஸ்த இந்த்ரியங்களும் பறியுண்டு படுத்துறங்கும்படி செய்தது. மற்றும், அப்பொழுது த்வாரங்களெல்லாம் பெரிய கதவுகளை மூடி இரும்புப் பூட்டுகளையும் செங்கிலிகளையும் இட்டுத் தாண்டிப்போகமுடியாதிருந்தன. வஸுதேவன் ஸ்ரீக்ருஷ்ணனை எடுத்துக்கொண்டு நந்தகோகுலத்திற்குப் புறப்படுகையில், அந்த த்வாரங்களெல்லாம் ஸூர்யோதயத்தில் இருள் பறந்தோடுவது போலத் தாமே திறந்துகொண்டன. அப்பொழுது மேகம் மெல்ல மெல்லக் கர்ஜனை செய்துகொண்டு மழைபெய்தது. ஆதிசேஷன் தன் பணங்களால் அந்த மழைஜலத்தைத் தடுத்துக்கொண்டு வஸுதேவனைப் பின்றொடர்ந்தான். மேகம் விடாமழையாகப் பெய்துகொண்டிருக்கையில் ஆழ்ந்த ஜலப்ரவாஹத்தின் வேகத்தினால் அலைகள் கிளம்பி நுரைகளும் உண்டாகப்பெற்று மிகவும் பயங்கரமான பலவாயிரம் நீர்ச்சுழிகள் நிறைந்திருக்கின்ற யமுனாநதி, ஸமுத்ரம் ஸ்ரீராமனுக்கு வழிவிட்டாற் போல, வஸுதேவனுக்கு வழிவிட்டது. அப்பால் வஸுதேவன் நந்தகோகுலத்திற்குச் சென்று அங்கு

1. ஸூதிக்ருஹம்-ப்ரஸவக்ருஹம்.



2077. வஸுதேவன் ஸ்ரீக்ருஷ்ணனை எடுத்துக்கொண்டு யமுனையைத் தாண்டுதல்.

இடையர்களெல்லோரும் யோகமாயையினால் உடம்பு தெரியாமல் உறங்குவதைக் கண்டு யசோதையின் படுக்கையில் தன் புதல்வனை வைத்து அவளுடைய பெண்ணை யோகமாயையை எடுத்துக்கொண்டு மீளவும் தன் க்ருஹத்திற்கு வந்து அப்பெண் குழந்தையைத் தேவகியின் படுக்கையில் விட்டு முன் போலவே பாதங்களில் விலங்கைப் பூட்டிக் கதவையும் அடைத்துப் பேசாதிருந்தான். நந்தனுடைய பார்யையாகிய யசோதையோ வென்றால் குழந்தை பிறந்ததை மாத்ரம் அறிந்தாளன்றி ஸ்ரமத்தினாலும் யோகமாயையின் மஹிமையாலேற்பட்ட உறக்கத்தினால் நினைவு மாறப்பெற்றிருந்தமையாலும் அது பிள்ளையென்றும் பெண்ணென்றும் அதன் அடையாளங்களை உற்றுப்பார்க்கவில்லை. மூன்றாவது அத்யாயம் முற்றிற்று.

கம்ஸன் யோகமாயையின் வாக்யத்தைக் கேட்டுப்பயந்து மந்த்ரிகளுடன் ஆலோசித்து உலகத்திலுள்ள குழந்தைகளையெல்லாம் கொல்லும்படி நிச்சயித்தல். 

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— வஸுதேவன் சிறைச்சாலையில் புகுந்து முன்போலவே இருக்கையில் உள்ளும் புறமுமுள்ள வாசற்களெல்லாம் முன்போலவே மூடிக்கொண்டன. பிறகு அந்தச் சிறைச்சாலையைப் பாதுகாக்கும் புருஷர்கள் குழந்தையின் அழுகுரலைக் கேட்டு விழித்துக்கொண்டெழுந்து விரைந்தோடிக் கம்ஸனிடஞ் சென்று தேவகியின் கர்ப்பத்தினின்று சிசு பிறப்பதையே பயத்துடன் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிற அந்தக் கம்ஸனுக்குச் சிசு பிறந்த வ்ருத்தாந்

த்தை அறிவித்தார்கள். போஜவம்சத்தரசனாகிய அக்கம்ஸன் இது ஸமயமென்று நினைத்துச் சீக்ரமாகப் படுக்கையினின்று எழுந்து தழதழத்து அடிகள் தடைபடவும் தலைமயிர்கள் அவிழ்ந்தலையவும் பெற்று விரைவுடன் ஸூதிக்ருஹத்திற்கு வந்தான். நல்லியற்கையுடைய தேவகி அங்ஙனம் தன் ப்ராதாவான கம்ஸன் வருவதைக் கண்டு வருந்தி மனஇரக்கத்திற்கிடமாகிக் கேட்போர் மனம் கரையும்படி இங்ஙனம் மொழிந்தாள்.

தேவகி சொல்லுகிறாள்:—மங்களஸ்வபாவமுடையவனே! இக்குழந்தை உனக்கு மறுமகளாகவேண்டும். பெண்ணாகப் பிறந்த இக்குழந்தையை வதிக்கலாகாது. நீ தெய்வத்தினால் என் புதல்வர்களுக்கு ம்ருத்யுவாக ஏற்படுத்தப்பட்டு அக்னிபோல் ஜ்வலிக்கின்ற என் பிள்ளைகள் பலரையும் கொன்றனை. ப்ராதாவே! இந்த ஒரு பெண்ணைமாத்ரம் எனக்குக் கொடுப்பாயாக. ப்ரபூ! நான் உனக்குப் பின்பிறந்தவள்; உன்னால் தயை செய்யத் தகுந்தவள்; பிள்ளைகள் பலரும் மாண்டு வருத்தமுற்றவள். ஆகையால், அப்பனே! மந்தபாக்யையாகிய எனக்குக் கடைசியில் பிறந்த இப்புதல்வியை மாத்ரம் கொடுப்பாயாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் புதல்வியைப் புஜங்களால் மார்பில் அணைத்துக்கொண்டு மிகவும் மன இரக்கத்திற்கிடமாயிருக்குமாறு கண்ணுங்கண்ணீருமாய்ப் புலம்புகின்ற தேவகி வேண்டிக்கொண்டிருப்பினும், துர்ப்புத்தியாகிய கம்ஸன் அவளை விரட்டி அவள் கையினின்று அக்குழந்தையைப் பிடுங்கிக் கொண்டான். அவன் அப்பொழுதுதான் பிறந்திருக்கின்ற உடன்தோன்றலின் புதல்வியாகிய அக்குழந்தையைப் பாதங்களிற் பிடித்துக்கொண்டு தன் ப்ரயோ




2079. கம்ஸன் யோகமாயையை வதிக்கமுயல அது ஆகாயத்திற் கிளம்பிப் போதல்.

ஜனத்தையே நினைத்து ஸ்னேஹத்தைத் துறந்து கல்லின்மேல் தூக்கி அடித்தான். ஸ்ரீமஹாவிஷ்ணுவின் தங்கையாகிய அப்பெண் அந்தக் கம்ஸனுடைய ஹஸ்தத்தினின்று உயரக்கிளம்பி அப்பொழுதே தன் ஸ்வரூபத்தை ஏற்றுக்கொண்டு ஆகாயத்திற்சென்று ஆயுதங்களோடு கூடின நீண்ட எட்டுப் புஜங்கள் அமைந்து திவ்யமான பூமாலை வஸ்த்ரம் சந்தனம் குங்குமம் முதலிய பூச்சு ரத்னங்கள் இழைத்த ஆபரணங்கள் ஆகிய இவற்றை அணிந்து தனுஸ்ஸு சூலம் பாணம் கேடயம் கத்தி சங்கம் சக்ரம் கதை இவ்வாயுதங்களைத் தரித்துச் சிறப்புடைய பல உபஹாரங்களை ஏந்திக்கொண்டிருக்கிற ஸித்தர் சாரணர் கந்தர்வர் அப்ஸரமடந்தையர் கின்னரர் உரகர் ஆகிய இவர்களால் துதிக்கப்பெற்றுக் கம்ஸனை நோக்கி 'மதிகேடனே! என்னைக்கொன்றாலும் உனக்கு என்ன ப்ரயோஜனம்? மூடா! அசரீரிவாக்கினால் முன்பு சொல்லப்பட்டவனும் உன்னை அழிப்பவனுமாகிய உன் சத்ரு ஏதோ ஓரிடத்தில் உண்டாகி வளர்ந்து வருகின்றான். அதில் ஸந்தேஹம் வேண்டாம். மனஇரக்கத்திற்கிடமான சிசுக்களை வீணாக நீ ஹிம்ஸிக்கவேண்டாம்' என்று மொழிந்து பூஜிக்கத்தகுந்த பெருமையுடைய அந்த யோகமாயை பலநாமங்களையுடைய பல இடங்களில் தானும் துர்க்கை காளி முதலிய பல நாமங்களைப் பூண்டு வாஸஞ்செய்து வந்தது. கம்ஸன் அந்த யோகமாயை மொழிந்ததைக் கேட்டு மிகவும் வியப்புற்றுத் தேவகீ வஸுதேவர்களைச் சிறைச்சாலையினின்று விடுவித்து வணக்கத்துடன் மொழிந்தான்.

கம்ஸன் சொல்லுகிறான்:— ஓ என்னுடன் பிறந்தவளே! ஓ என் மணவாளனே! நான் ராக்ஷஸன்போல் வந்து உங்கள் பிள்ளைகள் பலரையும் ஹிம்ஸித்தேன். நான் பாபிஷ்டன். ஆ! இதென்ன வருத்தம்! மன

இரக்கமின்றிப் பந்துக்களையும் நண்பர்களையும் துறந்து துஷ்ட ஸ்வபாவனாகி உங்கள் புதல்வர்களைக் கொன்ற அப்படிப்பட்ட மஹாபாபிஷ்டனாகிய நான் எந்த லோகங்களை அடைவேனோ? நான் கேவலம் ஸ்தாவர ஜன்மம் பெறுவேனன்றி வேறில்லை. நான் ப்ரஹ்ம ஹத்யை செய்தவன்போல ஜீவித்திருந்தும் செத்தாற் போலவே. முன்பு தெய்வம் 'இவளுடைய எட்டாவது கர்ப்பம் உன்னை வதிக்கப்போகிறது' என்று சொல்லிற்று. இப்பொழுது 'உனக்கு ம்ருத்யு ஏதோ ஓரிடத்தில் உண்டாயிருக்கின்றான்' என்று சொல்லிற்று. ஆகையால் மனுஷ்யர்கள்மாத்ரமே யென்பதில்லை; தெய்வமுங்கூட மனுஷ்யர்களைப்போல் பொய் பேசுகிறது. இந்தத் தெய்வத்தின் வார்த்தையை நம்பியல்லவோ நான் என்னுடன்தோன்றலின் பிள்ளைகளைக் கொன்று பாபிஷ்டனானேன். மிகுந்த விவேகமுடையவர்களே! மரணம்அடைந்த உங்கள் பிள்ளைகளைப்பற்றி நீங்கள் சோகிக்கவேண்டாம். அவர்கள் தங்களுடைய கர்மத்தினால் மரணம் அடைந்தார்களேயன்றி வேறில்லை. அவரவர் செய்த கர்மத்தின் பலனை அவரவர்களே அனுபவிக்கவேண்டுமல்லவா? ஆகையால்ஜந்துக்கள் தத்தம் கர்மங்களுக்குத் தகுந்தபடி தூண்டுகிற தெய்வத்திற்கு உட்பட்டு ஸர்வகாலத்திலும் ஒரே இடத்தில் சேர்ந்திருக்கமாட்டார்கள். கர்மானுகுணமாகஜன்மமரணங்களைப் பெற்றுச் சுற்றிக்கொண்டேயிருப்பார்கள். பூமியினின்று மேற்கிளம்பின தூட்கள் சேருவதும் பிரிவதுமாயிருப்பதுபோல் பூதங்களும் ஒருகால் சேருவதும் ஒருகால் பிரிவதுமாயிருக்கும். பூமியினின்றுண்டான தூட்கள் சேருவதும் பிரிவதுமாயிருப்பினும் பூமி ஒருவாறாகவேயிருப்பதுபோல், பூதங்களின் பரிணாமமான சரீரங்கள் ஜன்மமரணாதி விகாரங்களைப் பெறினும்

அவற்றைத் தரித்துக்கொண்டிருக்கும் ஜீவாத்மா வேறுபாடின்றி ஒருவராகவே இருப்பான். தேஹங்களுக்கு ஜன்மமரணாதிவிகாரங்களுக் கிடமாயிருக்கை இயற்கையாகையால் அவற்றைப்பற்றிச் சோகிக்கவேண்டியதில்லை. ஜீவாத்மாவுக்கு விகாரமே இல்லாமையாலும் நித்யனாகையாலும் அவனைப்பற்றியும் சோகிக்கவேண்டியதில்லை. இங்ஙனம் தேஹத்திற்கும் ஆத்மாவுக்கும் உள்ளபேதத்தை ஆராய்ந்தறியானாயின் தேஹத்தையே ஆத்மாவென்று ப்ரமிப்பான். அந்த ப்ரமம் நீங்காத வரையில் தேஹ ஸம்பந்தமும் தேஹவியோகமுமாகிற ஜன்ம மரணங்களோடு கூடிய ஸம்ஸாரம் நீங்காது; 'நான் கொல்லுகிறேன்; கொல்லப்பட்டேன்' என்கிற ப்ரமமும் மாறாது. ஆகையால், மக்களஸ்வபாவமுடையவர்களே! உங்கள் புதல்வர்களை நான் வதித்திருப்பினும், நீங்கள் அவர்களைப்பற்றிச் சோகிக்கவேண்டாம். ப்ராணிகள் அனைவரும் கர்மத்திற்குட்பட்டுத் தாங்கள் தாங்கள் செய்த கர்மத்தின் பலனாக ஏற்பட்ட ஜன்மமரணாதிகளை அவச்யம் அனுபவித்தே தீரவேண்டும். எதுவரையில் தேஹத்தைக்காட்டிலும் விலக்ஷணனான ஆத்மாவின் ஸ்வரூப நிலைமையை உள்ளபடி யறியாமல் 'நான் அடியுண்டேன்; நான் அடிக்கின்றேன்' என்று ப்ரமத்தினால் தேஹ தர்மத்தை ஆத்மாவினிடத்தில் ஏறிட்டு நினைக்கிறானோ, அதுவரையில் அந்த ப்ரமமுடையவன் அறிவற்ற மூடனாகித் தன்னை வதிக்கப்படுகிறவனாகவும் வதிக்கிறவனாகவும் பாவித்து அவற்றால் விளையும் சோகம் பயம் முதலியவற்றை அனுபவிப்பான். ஆகையால் ஸாதுக்களும் பந்துக்களிடத்தில் வாத்ஸல்யமுடையவர்களுமாகிய நீங்கள் என்னுடைய துர்ப்புத்தித்தனத்தைப் பொறுப்பீர்களாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— கம்ஸன் மணவாளனான வஸுதேவனையும் உடன்பிறந்தவளான தேவகியையும் பார்த்து இங்ஙனம் மொழிந்து அப்பால் கண்ணுங் கண்ணீருமாய் அவர்களுடைய பாதங்களைப் பிடித்துக் கொண்டான். பிறகு யோகமாயையின் வார்த்தையினால் இவர்கள் தோஷமற்றவர்களென்று நம்பித் தன் ஸ்னேஹத்தைக் காட்டிக்கொண்டு அந்தத் தேவகி வஸுதேவர்களை விலங்கினின்று விடுவித்தான். தேவகி, இங்ஙனம் பச்சாத்தாபம் உண்டாகப்பெற்ற ப்ராதாவான கம்ஸனிடத்தில் பொறுமை கொண்டு கோபத்தைத் துறந்தாள். வஸுதேவனும் பொறுத்து நச்சிரித்துக்கொண்டே கம்ஸனைப் பார்த்து 'மிகுந்த மதியுடையவனே! மஹாபாக்யசாலீ! நீ சொல்லுவதெல்லாம் வாஸ்தவமே. மஹாராஜனே! ப்ராணிகளுக்கு 'நான் அடியுண்டேன்; நான் அடிக்கிறேன்' என்னும் புத்தி தேஹாத்மப்ரமமாகிற அஜ்ஞானத்தினால் உண்டானதே. தேஹாத்மப்ரமம் ஆத்ம ஸ்வரூபத்தின் உண்மை தோற்றாமையால் உண்டானது. அந்த அஹம் பாவத்தினால்தான் சத்ருவென்றும் மித்ரனென்றும் பேதபுத்தி உண்டாகின்றது. ஆத்மாவைக்காட்டிலும் வேறுபட்ட தேஹத்தை ஆத்மாவாக ப்ரமித்துச் சோகம் ஸந்தோஷம் பயம் த்வேஷம் லோபம் மோஹம் மதம் இவை தொடரப்பெற்று அசேதனங்களான கட்கம் முதலிய வஸ்துக்களால் அசேதனத்தை அடிக்கின்ற ஈச்வரனைக் காண்கிறதில்லை; தானென்றும் பிறனென்றும் பேதத்தையே காண்கின்றார்கள்; அவரவர் கர்மங்களுக்குத் தகுந்தபடி ஸர்வேச்வரன் அவர்களுக்கு ஜன்மமரணாதிகளை விளைக்கின்றானாகையால் ஒருவனாலும் மற்றொருவனுக்கு ஒருவித அபராதமும் உண்டாகிறதில்லை. ஆகையால் நீ மொழிந்தது உண்

மையே' என்றான். இங்ஙனம் கம்ஸன் தேவகீ வஸு-தேவர்களால் விஸ்வாஸம் அமைந்திருக்கும்படி மொழிந்து அனுமதி கொடுக்கப்பெற்றுத் தன் க்ருஹத்திற்குச் சென்றான். அப்பால் அந்த ராத்ரி கழிந்து பொழுது விடிகையில் கம்ஸன் மந்த்ரிகளை அழைத்து யோகமாயை மொழிந்ததையெல்லாம் அவர்களுக்குச் சொன்னான். தேவதைகளுக்குச் சத்ருக்களும் தேவதைகளின் மேல் கோபமுடையவர்களும் நன்மை தீமைகளைப் பற்றின விவேகம் நன்கு தேரப்பெறாதவர்களும் தைத்யர்களுமாகிய அக்கம்ஸனுடைய மந்த்ரிகள் அவனைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தார்கள்.

மந்த்ரிகள் சொல்லுகிறார்கள்:— போஜவம்சத்தரசர்களில் சிறந்தவனே! யோகமாயை இங்ஙனம் மொழிந்ததாயின், பட்டணங்கள் க்ராமங்கள் இடைச்சேரிகள் முதலிய இடங்களில் சென்று, பிறந்து பத்து நாள் கழிந்தவைகளும் கழியாதவைகளுமான சிசுக்களையெல்லாம் இப்பொழுது வதித்துவிடுவோம். உன் தனுஸ்ஸின் நாண்கோஷங்களைக் கேட்டமாத்ரத்தில் ஓயாமல் பயந்து யுத்தஞ் செய்யப் பின்வாங்குகிறவர்களான தேவதைகள் எவ்வளவு ப்ரயத்னங்கள் செய்யினும் நமக்கு என்ன கெடுதியைச் செய்யப்போகிறார்கள்? பாணங்களை ஓயாமல் தொடுத்து விடுகிற உன்னுடைய பாணஸமூஹங்களால் அடியுண்டு பிழைத்தால் போதுமென்று விரும்பி ஓடிப் போவதே தங்களைப் பாதுகாப்பதற்கு உரிய மேலான உபாயமென்று நிச்சயித்துத் தங்கள் ஸ்தானங்களைத் துறந்து மூலைக்கொருவராக ஓடிப்போனார்கள். சில தேவதைகள் உன்னிடத்தினின்று பயந்து ஆயுதங்களைத் துறந்தும், சில தேவதைகள் அரையாடையும் தலைமயிர் முடிச்சும் அவிழ்ந்து கலைந்தும் பயந்தோமென்று

சொல்லிக்கொண்டு கைகளைக் குவித்து நின்றார்கள். ஆயினும், நீ அஸ்த்ர சஸ்த்ரங்கள் மறந்தவர்களையும் ரதமற்றவர்களையும் பயத்தினால் வணங்கினவர்களையும் யுத்தத்தை விட்டு வேறு ப்ரயோஜனங்களில் மனம் சென்றவர்களையும் யுத்தத்தினின்று திரும்பிப்போகிறவர்களையும் தனுஸ்ஸு முறிந்து யுத்தஞ் செய்யாதவர்களையும் அடிக்கிறதில்லையாகையால் தேவதைகள் பயந்து உன்னிடத்தினின்று தப்பிப்போனார்களேயன்றி எதிர்த்து யுத்தஞ் செய்திருப்பார்களாயின் அன்றே முடிந்திருப்பார்கள். வீட்டில்மாத்ரமே சூரர்களும் யுத்தந்தவிர மற்ற இடங்களில் வீரவாதம்பேசுகிறவர்களுமாகிய தேவதைகளால் என்ன செய்யமுடியும்? ஸாதாரண தேவதைகளின் கதை அப்படி இருக்கட்டும். உன்னிடத்தில் பயந்து ஜனஸஞ்சாரமில்லாத இடத்தில் வாஸஞ்செய்கிற விஷ்ணுவினாலாவது காட்டில் வஸிக்கிற ருத்ரனாலாவது அல்பவீர்யனான இந்த்ரனாலாவது நித்யோபவாஸியாய் மன இரக்கத்திற்கிடமான ப்ரஹ்மதேவனாலாவது என்ன செய்யமுடியும்? ஒன்றும் செய்யமுடியாது. ஆயினும் சத்ருக்களாகையால் தேவதைகளை நாம் உபேக்ஷிக்கலாகாதென்று நினைக்கின்றோம். ஆகையால் அவர்களை வேரோடு பிடுங்கி நாசஞ்செய்வதற்கு உன் ப்ருத்யர்களான எங்களை நியமிப்பாயாக. சரீரத்தில் உண்டாயிருக்கும் வ்யாதியை உபேக்ஷிப்போமாயின், அது வேரூன்றி ஸர்வவிதத்தினும் போக்கமுடியாதிருப்பதுபோலவும், போகிகள் இந்த்ரியங்களை உபேக்ஷிப்பார்களாயின் அவை விஷயங்களில் தாழ்ந்த பின்பு மீட்கமுடியாதிருப்பதுபோலவும், சத்ருவை உபேக்ஷித்திருப்போமாயின் அவன் பலம் வளரப்பெற்று அப்பால் அசைக்கவுமுடியாதிருப்பான். வர்ணாஸ்ரமங்களுக்குத் தகுந்தபடி வேதங்களால்

நிரூபிக்கப்படுகிற தர்மங்களுக்கு நிர்வாஹகனான ஸ்ரீமஹாவிஷ்ணுவே தேவதைகளுக்கு மூலம். அவனை அழித்தோமானால் தேவதைகளை அழித்தாற்போலவேயாய்விடும். கண்ணுக்குப் புலப்படாமல் மறைந்திருக்கின்ற அவ்விஷ்ணுவை நம்மால் எங்ஙனம் அழிக்க முடியுமென்றால், வேதங்கள் பசுக்கள் ப்ராஹ்மணர்கள் தவம் தக்ஷிணைகளோடுகூடின யாகங்கள் ஆகிய இவையே அவ்விஷ்ணுவுக்கு மூலமாகையால் இவற்றை அழித்தோமாயின், அவனை அழித்தாற்போலாய்விடும். ஆகையால், மன்னவனே! பலவகை உபாயங்களாலும், வேதமோதுந்தன்மையர்களும் பரப்ரஹ்மத்தை உள்ளபடி அறிந்து உபதேசிக்குந் திறமையுடையவர்களும் தவமுடையவர்களும் யாகஞ் செய்பவர்களுமாகிய ப்ராஹ்மணர்களையும், யாகாதிகர்மங்களுக்கு வேண்டிய நெய் முதலியவற்றைக் கறக்கும்பசுக்களான பசுக்களையும் வதிப்போம். ப்ராஹ்மணர்கள் பசுக்கள் வேதங்கள் தவம் ஸத்யம் தமம் சமம் ஶ்ரத்தை தயை பொறுமை யாகங்கள் இவையெல்லாம் ஸ்ரீமஹாவிஷ்ணுவின் சரீரம். அவ்விஷ்ணு தேவதைகளுக்கு ப்ரபு; அஸுரர்களை த்வேஷிக்குந் தன்மையன்; ஹ்ருதய குஹைகளில் மறைந்து ஸஞ்சரித்துக்கொண்டிருப்பவன். ப்ரஹ்மதேவன் ருத்ரன் இந்த்ரன் முதலிய லோகபாலர்கள் ஆகிய இவர்களோடு கூடின ஸமஸ்த தேவதைகளும் அவ்விஷ்ணுவையே ஆதாரமாக வுடையவர்கள். ஆகையால் ரிஷிகளை ஹிம்ஸிக்கையே அவ்விஷ்ணுவை வதிப்பதற்குரிய உபாயமாம். ரிஷிகளை வதித்தோமாயின், அவர்களைச் சரீரமாகவுடைய விஷ்ணு அழிந்து போவான். அவன் அழிந்து போகையில் அவனை ஆதாரமாகவுடைய தேவதைகள் தாமே அழிந்து போவார்கள்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—கெடுமதியுடைய அக் கம்ஸன் அங்ஙனம் துர்ப்புத்திகளான தன் மந்த்ரிகளுடன் கலந்தாலோசித்துக் காலபாசத்தினால்கட்டுண்டு ப்ராஹ்மண ஹிம்ஸையையே ஹிதமாக நினைத்தான். அப்பால் ஸாதுஜனங்களை ஹிம்ஸிப்பதற்காக அதையே ப்ரியமாகவுடையவர்களும் காமரூபர்களுமான தானவர்களைத் திக்குக்களில் செல்லும்படி நியமித்துத் தான் க்ருஹத்திற்குச் சென்றான். அப்பால் ரஜோகுணத்தை இயற்கையாகவுடையவரும் தமோகுணத்தினால் மூடப்பட்ட மனமுடையவருமாகிய அந்தத் தானவர்கள் ம்ருத்யு ஸமீபித்திருக்கப்பெற்று ஸத்புருஷர்களுக்கே மனவருத்தத்தை நடத்திக்கொண்டு வந்தார்கள். பெரியோர்களிடத்தில் அபசாரப் படுவார்களாயின், அது அந்த ப்ராணிகளின் ஆயுள் செல்வம் புகழ் தர்மம் தர்மத்தினால் பெறக்கூடிய புண்யலோகம் விருப்பங்கள் ஆகிய இந்தன்மைகளை யெல்லாம் போக்கி மரணத்தையும் விளைக்கும். நான்காவது அத்யாயம் முற்றிற்று.

நந்தன் ஸ்ரீக்ருஷ்ணனுக்கு ஜாதகரணம் நடத்தி மதுரையில வஸுதேவனுடன் கலந்து பேசுதல.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—உதாரமான மனமுடைய நந்தன் பிள்ளை பிறக்கையில் ஸந்தோஷம் அடைந்து வேதங்களை உணர்ந்த அந்தணர்களை வரவழைத்துத் தான் ஸ்நானம்செய்து அலங்கரித்துக்கொண்டு ஸ்வஸ்தி வாசனம் செய்வித்து விதிப்படி ஜாதகர்மத்தை நடத்திப் பித்ருக்களையும் தேவதைகளையும்

பூஜித்தான். அப்பால் நன்கு அலங்காரஞ் செய்யப்பெற்ற இருபதினாயிரம் பசுக்களையும், ரத்னஸமூஹங்களாலும் ஸ்வர்ணங்களாலும் வஸ்த்ரங்களாலும் அலங்கரித்துப் பர்வதம்போல் குவித்த ஏழுஎள்ளுக் குவியல்களையும் ப்ராஹ்மணர்களுக்குக் கொடுத்தான். ஜீவாத்மன் பரமாத்மோபாஸனத்தினுல் ஹேயஸம்பந்தமற்றுப் பரிசுத்தனுவதுபோல, [1] ஜாதாசௌசத்தில் க்ருஹம் பத்து நாட்களாகிற காலத்தினுலும், தேஹம் ஸ்நான சௌசாதிகளாலும், பிறந்த குழந்தை ஜாத கர்மம் முதலிய ஸம்ஸ்காரங்களாலும், க்ருஹ தேவதை மந்த்ர ஜபம் யாகம் இவைகளாலும், பசு ஸ்வர்ணம் தனம் தான்யம் இவை தானங்களாலும், மனம் ஸந்தோஷத்தினுலும் சுத்தி அடைகின்றனவாகையால் அந்த நந்தன் தான் ஸ்நானம் செய்து ஸ்வஸ்திவாசனம் நடத்திப் பசு ஸ்வர்ணம் முதலிய தானங்களையும் கொடுத்தான். அப்பொழுது ப்ராஹ்மணர்கள் ஸ்வஸ்திமந்த்ரங்களைப் படித்தார்கள். புராணஞ் சொல்லுகிற ஸூதர்களும் வம்சாவளி படிக்கிற மாகதர்களும் ஸ்துதி பாடகர்களான வந்திகளும் மற்றும் ஸங்கீத பாடகர்களும் புராணுதிகளைப் பாடினர்கள். பேரி வாத்யங்களும் துந்துபி வாத்யங்களும் அடிக்கடி முழங்கின. கோகுலத்தில் வாசல்களும் முற்றங்களும் வீடுகளின் உட்புறங்களும் நன்றாக விளக்கித் தெளித்து விசித்ரமான த்வஜங்களாலும் பதாகைகளாலும் பூமாலைகளாலும் புதிய வஸ்த்ரங்களாலும் தளிர்த் தோரணங்களாலும் அலங்காரம் செய்யப்பெற்றிருந்தன. பசுக்களும் எருதுகளும் கன்றுகளும் மஞ்சள் எண்ணெய் இவை பூசப்பெற்று அற்புதமான தாதுக்கள் மயில்தோகைகள் பூமாலைகள் புதிய வஸ்த்ரங்கள் பொற் சங்கிலிகள் இவை இடப்பெற்று விளங்கின. இடையர்களெல்லாரும்

1. ஜாதாசௌசம்-பிறவித் தீட்டு.

விலையுயர்ந்த வஸ்த்ரங்களையும் ஆபரணங்களையும் கவசங்களையும் தலைப்பாகைகளையும் அணிந்து கைகளில் பலவகைஉபஹாரங்களை ஏந்திக்கொண்டு நந்தனுடைய மாளிகைக்கு வந்தார்கள். பருத்தழகிய இடையின் பின்புறமுடைய இடைப்பெண்களும் யசோதைக்குப் பிள்ளை பிறந்த வ்ருத்தாந்தத்தைக் கேட்டு மனக்களிப்புற்று ஆடையாபரணங்களாலும் மெய் சந்தனம் முதலியவைகளாலும் தங்களை அலங்கரித்துக்கொண்டு தாமரை மலர்போன்ற முகங்களில் புதிய குங்குமங்களாகிற தாதுகள் திகழப்பெற்றுப் பற்பல உபஹாரங்களை ஏந்திக்கொண்டு கொங்கைகள் குலுங்க விரைந்து வந்தார்கள். காதுகளில் நன்குகத் துடைத்து நிமலமாய் விளங்குகின்ற ரத்னகுண்டலங்களையும் கழுத்தில் பதகங்களையும் அரையில் அற்புதமான ஆடைகளையும் கைகளில் வளைகளையும் அணிந்து நந்தனுடைய மாளிகைக்கு விரைந்து செல்கிற இடைப்பெண்கள் நடைவேகத்தினால் அவிழ்ந்தலைகின்ற தலைச்சொருக்கினின்று வழியில் பூமழைபொழியவும் தலைமயிர்களும் கொங்கைகளும் முத்துமாலைகளும் அசைவதனால் ஒருவகையழகு திகழவும் பெற்று விளங்கினார்கள். அந்தக் கோபிகைகள் அப்பாலகனைப் பார்த்து 'எங்களை நெடுங்காலம் பாதுகாப்பாயாக' என்று ஆசீர்வாதங்களைச் செய்து மஞ்சள் பொடிகளையும் எண்ணெயையும் கந்தப்பொடி முதலிய மற்றும் பலவகைப் பொடிகளையும் ஜலத்தையும் ஒருவர்மேல் ஒருவர் இறைத்துக்கொண்டு பாடினார்கள். ஸர்வலோகேச்வரனான ஸ்ரீக்ருஷ்ணன் பலராமனோடு நந்த கோகுலத்தை அடைகையில் அம்மஹோத்ஸவத்திற்காக அற்புதமான பல வாத்யங்கள் முழங்கின. இடையர்களும் ஸந்தோஷம் அடைந்து தயிர் பால் நெய் ஜலம் வெண்ணெய் இவற்றை ஒருவர்மேல் ஒருவர் இறைப்பதும் பூசுவதும் தூவுவதுமாய்

விளையாடினார்கள். பெரும்புகழும் ஆழ்ந்த மனமுடையவனுமாகிய நந்தனென்றால் அந்த ஸூதர் முதலியவர்களுக்கும் பரதசாஸ்த்ரம் முதலிய வித்யைகளால் ஜீவிக்கிற மற்றுமுள்ள ப்ராணிகளுக்கும் ஆடை ஆபரணம் பசுக்கள் இவற்றையும் அவரவர் விரும்புகிற மற்ற விருப்பங்களையும் கொடுத்து அவரவர்களை உரியபடி பூஜித்தான். வஸுதேவனுடைய பார்யையாகிய மிகுந்த பாக்யமுடைய ரோஹிணியும் தங்கள் க்ருஹ தேவதையான விஷ்ணுவின் ஆராதனத்திற்காகவும் தன் பிள்ளையினுடைய நன்மைக்காகவும் திவ்யமான வஸ்த்ரங்களையும் பூமாலைகளையும் கண்டாபரணம் முதலிய ஆபரணங்களையும் அணிந்து நந்தனாலும் மற்ற கோபர்களாலும் அபிநந்திக்கப்பெற்று நடமாடிக்கொண்டிருந்தாள். ஸ்ரீக்ருஷ்ணன் ப்ரவேசித்தவன்று முதல் நந்தகோகுலம் எல்லா ஸம்ருத்திகளும் நிறைந்து பரமபுருஷன்வஸித்துக்கொண்டிருக்கையால் மஹோத்ஸவம் முதலிய பல நற்குணங்கள் அமைந்து ஸ்ரீமஹாலக்ஷ்மியின் விளையாடுமிடம்போன்றிருந்தது. குருவம்சத்தை வளர்ப்பவனே! நந்தன் கோபர்களுக்குக் கோகுலத்தைப் பாதுகாக்கும்படி ஏற்பாடு செய்து கம்ஸனுக்குவர்ஷந்தோறும் செலுத்தவேண்டிய கப்பத்தைக் கொடுக்கும்பொருட்டு மதுரைக்குச் சென்றான். அப்பொழுது வஸுதேவன் ப்ராதாவைப்போல மிகவும் ஸ்னேஹத்திற்கிடமாகிய நந்தன்வந்திருப்பதாகக் கேள்விப்பட்டு ராஜனாகிய கம்ஸனுக்குக் கப்பஞ் செலுத்தியாய்விட்டதையும் தெரிந்துகொண்டு அந்த நந்தன் இறங்கியிருக்குமிடத்திற்குப் போனான். நந்தனும் அவ்வஸுதேவன் வந்ததைக்கண்டு ப்ராணன் வந்தால் தேஹம் எழுந்திருக்குமாறு விரைவுடன் எழுந்திருந்து

ஸந்தோஷம் அடைந்து ப்ரீதியினால் தழுதழுத்து மிகவும் அன்பிற்கிடமான வஸுதேவனைப் புஜங்களால் அணைத்துக் கொண்டான். பிறகு நந்தனால் பூஜிக்கப் பட்ட வஸுதேவன் ஸுகமாக உட்கார்ந்திருக்கின்ற அந்நந்தனைப் பார்த்து ஆதரவுடன் ஆரோக்யமா வென்று விசாரித்துப் புதல்வர்களிடத்தில் மனஞ் செல்லப்பெற்று இங்ஙனம் மொழிந்தான்.

வஸுதேவன் சொல்லுகிறான் :—அப்பனே! நெடு நாளாகப் பிள்ளையில்லாதிருந்து மூப்பையும் அடைந்து 'இனி நமக்கு ஸந்தானம் உண்டாகாது' என்று அந்த ஆசையினின்றுங்கூட மீண்டிருந்த உனக்குத் தெய்வா தீனமாய் இப்பொழுது பிள்ளைபிறந்ததென்பது எனக்கு மிகவும் ஸந்தோஷமாயிருக்கின்றது. சக்ரம்போலச் சுழன்று கொண்டிருக்கின்ற இந்த ஸம்ஸாரத்திலிருக் கும் புருஷன் தான் மீளவும் [1] பிள்ளையாய்ப் பிறக்கிறு னென்பது ஸந்தோஷத்திற்கிடமான விஷயமல்லவா? மற்றும் நீ இப்பொழுது எனக்குப் புலப்பட்டது பெரிய ஸந்தோஷம். அன்பிற்கிடமானவர்களைக் காண் பது அரிதல்லவா? இதே ஜன்மத்தில் நான் உன்னைக் கண்டது எனக்கு மீளவும் பிறந்தாற்போலிருக்கிறது. நான் இந்த ஸம்ஸாரத்தில் இருந்துகொண்டே

1. 'ஆத்மாவை புத்ரநாமாஸி' என்கிற ஸ்ருதியையும் 'ஜாயதே அஸ்யாம் பதிரிதி ஜாயா' என்கிற ஜாயாசப்தத்தின் வ்யுத் பத்தியையும் நினைத்து இங்ஙனம் சொல்லுகிறது. 'ஆத்மாவை' என்கிற ஸ்ருதிக்குத் தானே பிள்ளையாகப் பிறக்கிறுனென்று பொருள். கணவன் தானே பார்யையிடத்தில் பிள்ளையாகப் பிறக்கிறுகையால் பத்னிக்கு ஜாயை யென்னும் பெயர் உண்டா யிருக்கிறதென்று ஜாயாசப்தவ்யுத்பத்தியின் பொருள்.

யிருப்பினும் கம்ஸபயத்தினின்று விடுபட்டமையை ஆலோசித்தால் மீளவும் பிறந்தாற்போலிருக்கின்றது. கம்ஸனால் சிறையில் அடைப்புண்ட எனக்கு உன் காட்சி மிகவும் அரிதாயிருந்ததல்லவா? ஆகையால் நான் சிறையினின்று விடுபட்டு உன்னைக்கண்டமை எனக்குப் பெரிய ஸந்தோஷமாயிருக்கின்றது. நண்பனே! ப்ரவாஹத்தில் அடித்துக்கொண்டுபோகிற கட்டை முதலியவை ஓரிடத்தில் சேர்ந்திருக்க முடியாதது போலப் பற்பல கர்மங்களுடையவர்களும் அந்தக் கர்மவேகத்தினால் பற்பல இடங்களிற் சுற்றும்படி தூண்டப்படுகிறவர்களுமாகிய ப்ராணிகள் நட்புடையவர்களாயினும் மனக்களிப்புடன் ஓரிடத்தில் கலந்திருப்பது அரிது. அப்பனே! அது நிற்க, பசுக்களுக்கு அனுகூலமாயிருப்பதும் ரோகங்களுக்கு இடங்கொடாததும் ஜலம் புல் கொடி செடி முதலியவை அளவற்றிருப்பதும் மிகுந்த விஸ்தாரமுடையதும் ஸ்னேஹிதர்களுடன் உன்னால் வாஸஞ் செய்யப்பெற்று வருவதுமாகிய அவ்வனம் க்ஷேமமாயிருக்கின்றதா? அப்பா! உன்னுடைய கோகுலத்தில் என் புதல்வன் தாயுடன் கூடி உன்னால் [1] உபலாலனம் செய்யப்பெற்று உன்னையே தந்தையாகப் பாவித்துக்கொண்டு க்ஷேமமாயிருக்கிறானா? ஒருவன் தர்ம அர்த்த காமங்களால் நிறைவாளனாயிருப்பினும், அவனிடத்தில் நட்புடைய அவனுடைய பந்துக்கள் அவற்றை அனுபவித்து வருவார்களாயின், அப்பொழுதான் அவை பயன் பெறும். அவர்கள் வருத்தமுற்றிருப்பார்களாயின், அந்தத் தர்ம அர்த்த காமங்கள் பயனற்றவைகளேயாம்.

நந்தன் சொல்லுகிறான்:—அப்பனே! உனக்குத் தேவகியிடத்தில் பிறந்த பல புதல்வர்களும் கம்ஸனால் கொல்லப்பட்டார்களே. ஆ! இதென்ன வருத்தம்!

1. உபலாலனம்-சீராட்டல்.

கடைசியில் ஒரு கன்னிகை மிருந்தது. அதுவுங்கூட ஸ்வர்க்கலோகம் போயிற்றே. இவ்வுலகத்திலுள்ள ஜனங்களெல்லாம் அத்ருஷ்டாதீனமான ஸுகதுக்கங்களையுடையவை. ஜனங்களையெல்லாம் அத்ருஷ்டமே அடக்கி ஆள்கின்றது. தனக்கு ஸுகதுக்காதிகளெல்லாம் அத்ருஷ்டாதீனமென்று நினைத்துத் தேஹத்தைக் காட்டிலும் விலக்ஷணனான ஆத்மாவின் ஸ்வரூபத்தை உள்ளபடி அறிகிறவன் தேஹத்தைப்பற்றியும் அதைத்தொடர்ந்த மற்றவர்களைப்பற்றியும் உண்டாகிற ஸுகதுக்கங்களால் மதிமயங்கப் பெறமாட்

வஸுதேவன் சொல்லுகிறுன்:—நண்பனே! மன்னவனுக்கு வர்ஷந்தோறும் செலுத்தவேண்டிய கப்பம் செலுத்தியாய்விட்டது. என்னையும் பார்த்தாயிற்று. இனி இங்கு நெடுநாள் இருக்கவேண்டாம். கோகுலத்தில் பல உத்பாதங்கள் உண்டாகின்றன. ஆகையால் நீ சீக்ரம் புறப்பட்டுப் போவாயாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறுர்:-இங்ஙனம் வஸுதேவனால் சொல்லப்பட்ட நந்தன் முதலிய கோபர்கள் அவனிடம் விடைபெற்றுக்கொண்டு எருதுகள் கட்டப்பெற்ற வண்டிகளின் மேல் ஏறிக்கொண்டு கோகுலஞ் சென்றுர்கள். ஐந்தாவது அத்யாயம் முற்றிற்று.

## பூதனு ஸம்ஹாரம்

ஸ்ரீசுகர் சொல்லுகிறுர்:—நந்தன் வழியில் போகும் பொழுதே வஸுதேவனுடைய வார்த்தை பொய்யாகாதென்று நிச்சயித்து என்ன உத்பாதம் நேரிடுமோவென்று சங்கித்துப் பரமபுருஷனைச் சரணம் அடைந்தான். அப்பொழுது இளம்பிள்ளைகளைக் கொல்லுங்



2092. பூதகுஸம்ஹாரம்.

தன்மையுடைய பூதனை யென்னும் ராக்ஷஸி கம்ஸனால் அனுப்பப்பட்டுப் பட்டணங்களிலும் க்ராமங்களிலும் சேரிகளிலும் உள்ள சிசுக்களை யெல்லாம் வதிப்பதே பணியாகப்பெற்று ஆங்காங்கு உலாவிக்கொண்டிருந்தாள். தன்னிடத்தில் மாறுதமனமில்லைமையுடைய பக்தர்களுக்கு ப்ரபுவான பகவானுடைய குணங்களைக் கேட்பது கீர்த்தனம் செய்வது முதலியன ராக்ஷஸர்களை அழிக்கும் திறமையுடையவை. ஜனங்கள் தங்கள் தங்கள் வ்யாபாரங்களோடுகூட அந்தப் பகவானுடைய குணங்களைக் கேட்பது முதலியவற்றையும் நடத்தாது போவார்களாயின் அவ்வவ்விடங்களில் தான் ராக்ஷஸிகள் நடையாடுவார்களன்றிப் பகவானுடைய குணங்களைக் கேட்பது முதலியவற்றை விடாது நடத்தும் பெரியோர்களிருக்குமிடங்களில் அவர்கள் தலைகாட்டமாட்டார்கள். இனி ஒன்றான பகவான் வஸிக்குமிடத்தில் அவர்கள் நுழைய இடமில்லையென்பதைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? அந்தப் பூதனையென்னும் ராக்ஷஸி ஒருகால் நந்தகோகுலத்திற்கு அருகாமையில் வந்து நினைத்தபடி வடிவங்கொள்ள வல்லவளாகையால் ஆச்சர்யமான வேஷத்தினால் தன்னுருவத்தை மறைத்துக்கொண்டு அதற்குள் நுழைந்தாள். அவள் பருத்தழகிய நிதம்பங்களாலும் அத்தகைய கொங்கைகளின் பாரத்தினாலும் வருந்தி முறிவதுபோன்ற நுண்ணிய இடையும் அழகிய ஆடையும் அசைகின்ற காதணிகளில் ஒளி படியப்பெற்றுத் திகழ்கின்ற முன்னெற்றி மயிர்களால் அலங்கரிக்கப்பட்டு விளங்குகின்ற முகமும் அமைந்து தலைச்சொருக்கில் மல்லிப்புஷ்பங்களை அணிந்து அழகிய புன்னகையோடுகூடின கடைக்கண்களினின்று பரவுகின்ற நோக்கங்களால் இடைச்சேரியிலுள்ளவர்களின் மனத்தைப் பறித்தாள். கோபிமார்கள் அவளைக் கண்டு 'மிகுந்த அழகுடையவளும் கையில் தாமரைமலர் தரித்தவளுமாகிய ஒன்றான

ஸ்ரீமஹாலக்ஷ்மியே தன் கணவனை பரமபுருஷனைக் காண இவ்விடம் வந்திருக்கிறாள்' என்று நினைத்தார்கள். பாலர்களை வதிக்குங் க்ரஹமாகிய அந்தப் பூதனை இடைச்சேரியில் ஆங்காங்குள்ள சிசுக்களைத் தேடிக்கொண்டு தெய்வாதீனமாய்த் தன்னுடைய அழகைக் கண்டு மெய்ம்மறந்திருக்கிற கோபிகைகளால் தடுக்கப்படாமலே நந்தனுடைய மாளிகையில் நுழைந்து அஸத்துக்களுக்கு ம்ருத்யுவும் தன்னுடைய தேஜஸ்ஸை மறைத்துக்கொண்டு பஸ்மத்தில் மறைந்திருக்கிற அக்னிபோன்றிருப்பவனுமாகிய பாலகனைப் படுக்கையில் கண்டாள். [1] ஜங்கமஸ்தாவரரூபமான ஸமஸ்த பூதங்களுக்கும் அந்தராத்மாவாகி அவற்றின் மனோ பாவங்களை யெல்லாம் அறிந்த அப்பரம புருஷன், அப்பூதனை பாலர்களை வதிக்கும் க்ரஹமென்பதை அறிந்தவனாயினும் ஸங்கல்ப மாத்ரத்தினால் வதிக்க வல்லவனாயினும் இளமையை நடனஞ் செய்து ஒன்றும் பேசாதிருந்தான். அனந்தரம் அந்த ராக்ஷஸி, அப்பாலகன் துஷ்டர்களின் ப்ராணன்களைப் பறிப்பவனும் இயற்கையில் ஜகத்தின் சேஷ்டைகளை யெல்லாம் அறிந்தவனும் தனக்கு ம்ருத்யுவாக ஏற்பட்டிருப்பவனுமாகிய பரம புருஷனென்பதை அறியாமல் தேசகால வஸ்து பரிச்சேதங்களற்றவனாயினும் மானிடத்தன்மையை அனுஸரித்து அளவுற்றவன்போன்றிருக்கிற அக்குழவியை ஒன்றுந் தெரியாத மூடன் உறங்குகின்ற ஸர்ப்பத்தைக் கயிறென்று மடியில் எடுத்து வைத்துக்கொள்வதுபோல, மடியில் எடுத்து வைத்துக்கொண்டாள். அப்பாலகனுடைய தாய்மார்களான யசோதை ரோஹிணி இவ்விருவரும் கொடுங்கருத்துடையளாயினும் மேலுக்கு மிகவும் அனுகூலமான சேஷ்டைகளுடைய

1. ஜங்கமம்-அசையும் பொருள்; ஸ்தாவரம்-அசையாப்பொருள்.

வளும் உறையில் சொருகப்பட்ட கூருள்ள கத்தி போன்றவளும் சிறந்த மடந்தையின் உருவந்தரித்த வளுமாகிய அப்பூதனையைக் கண்டும் அவளுடைய தேஜஸ்ஸினால் மதிமயங்கித் தடுக்கப்பட்டவர்கள் போன்று வெறுமனே பார்த்துக்கொண்டிருந்தார்க ளன்றி அவளைத் தடுக்கவில்லை. அப்பால் கொடுந் தன்மையுடைய அப்பூதனை அந்தக் குழந்தையை மடியில் எடுத்துவைத்துக்கொண்டு தன் முலையை அவன் வாயில் மடுத்து வருந்தியும் ஜரிப்பித்துக் கொள்ள முடியாத வீர்யமுடையதும் பொறுக்க முடியாததுமாகிய விஷமாகிற பாலை அவனுக்கு ஊட்டினாள். பகவானும் கோபமுற்று அவள் ஸ்தனங் களை இறுக்கிப் பிடித்து ப்ராணன்களோடுகூட ஸ்தன் யத்தைப் பருகினான். அப்பொழுது அவள் ஸமஸ்த ப்ராணமர்மங்களிலும் பீடிக்கப்பட்டு 'இவ்வளவோடு போதும்; சீக்ரம் விடு விடு' என்று மொழிந்து கண்களை மலர விழித்துப் பாதங்களையும் புஜங்களையும் அடிக்கடி உதைத்து உடம்பெல்லாம் புழுங்கப்பெற்றுக் கோஷ மிட்டாள். மிகவும் கம்பீரமான வேகமுடைய அவளு டைய கோஷத்தினால் பர்வதங்களோடுகூடின பூமியும் ஸூர்யாதி க்ரஹங்களோடுகூடின ஆகாயமும் நடுக்க முற்றன. பாதாளமும் திசைகளும் ப்ரதித்வனி செய் தன. ஜனங்களெல்லாம் இடிவிழுகிறதென்று சங்கித் துப் பூமியில் விழுந்தார்கள். அந்த ராக்ஷஸி ஸ்தனங் களில் பீடிக்கப்பட்டு வாயைத் திறந்துகொண்டு தன்னுருவத்தைப் பெற்று வஜ்ராயுதத்தினால் அடி யுண்ட வ்ருத்ராஸுரன்போல் இடைச்சேரி முழுவதும் நிரம்ப விழுந்தாள். அவளுடைய தேஹம் கீழ் விழும் பொழுது ஆறு க்ரோசங்களுக்கு இடையிலுள்ள மரங்களையெல்லாம் சூர்ணஞ்செய்தது. மன்னவனே! அச்சரீரம் பெரிய அற்புதமாயிருந்தது. கலப்பையளவு

நீண்ட பயங்கரமான கோரைகளையுடைய முகமும் குஹைகள்போன்ற மூக்குகளும் [1] கண்டசைலங்கள் போல் பருத்துயர்ந்த முலைகளும் சிவந்து விரிந்த தலை மயிர்களும் பாழ்ங்கிணறுபோல் ஆழ்ந்த கண்களும் மணற்குன்று போன்ற [2] ஜகனமும் உயரக்கட்டின அணைகள் போன்ற புஜங்களும் துடைகளும் பாதங்களும் ஜலம் வற்றின வெறும் மடுபோன்ற வயிறும் உடைய அந்தப் பூதனையின் தேஹத்தைக் கண்டு முன்னமே அவளுடைய மூச்சுக்காற்றுக்களாலும் கோஷத்தினாலும் ஹ்ருதயம் காது தலை இவை பிளவுண்ட இடையர்களும் இடைச்சிகளும் நன்கு பயந்தார்கள். அவர்கள் எவ்விதத்திலும் பயமின்றி அவள்மேல் விளையாடிக்கொண்டிருக்கிற பாலகனைக் கண்டு விரைந்தோடி வந்து பரபரப்புடன் எடுத்துக் கொண்டார்கள். அனந்தரம் அந்தக் கோபிமார்கள் யசோதை ரோஹிணி இவர்களுடன் கலந்து அந்தப் பாலகனுக்குக் [3] கோபுச்சப்ரமணம் முதலிய உபாயங்களால் எல்லா இடங்களிலும் ரக்ஷை செய்தார்கள். முதலில் குழந்தைக்குப் பசுவின் மூத்ரத்தினாலும் பிறகு பசுவின் தூளாலும் ஸ்னானம் செய்வித்துக் கோமயத்தினால் நெற்றி முதலிய பன்னிரண்டு இடங்களில் பன்னிரு நாமங்களால் ரக்ஷை செய்தார்கள். அந்தக் கோபிமார்கள் பிறகு ஆசமனஞ்செய்து முதலில் தங்கள் சரீரத்தில் கைகளிலும் மற்ற அங்கங்களிலும் தனித்தனியே அகாரம் முதல் க்ஷகாரம்வரையிலுள்ள அக்ஷரங்களை ந்யாஸஞ்செய்து அப்பால் குழந்தையின் சரீரத்தில் கைகளிலும் மற்ற அங்கங்களிலும் அக்ஷரங்களை ந்யாஸஞ் செய்து 'பிறவியற்ற பகவான் உன் பாதங்களையும், அணுஸ்வரூபனான ஜீவாத்மாவையும்

1. கண்டசைலங்கள்-குண்டுக்கல்.

2. ஜகனம்-இடையின் பின்புறம்.

3. கோபுச்சப்ரமணமாவது-த்ருஷ்டிதோஷ பரிஹாரத்திற்காகச் செய்கிற ஒருவகைச் செயல்.

உள்ளே புகுந்து நியமிக்கின்ற பகவான் உன் முழந்தாள்களையும், யஜ்ஞங்களால் ஆராதிக்கப்படுகிறவனும் யஜ்ஞங்களில் கொடுக்கிற ஹவிர்ப்பாகங்களைப் புசிப்பவனும் அவற்றிற்குப் பலன் கொடுப்பவனுமாகிய பகவான் உன் துடைகளையும், தன் பக்தர்களைக் கைவிடாத அச்சுதன் உன் கடித்தடத்தையும், ஹயக்ரீவன் உன் வயிற்றையும், ஈசன் உன்னுடைய வஸ்தி (நாபியின் கீழ்ப்பாகம்) உதரம் ஹ்ருதயம் ரோமம் இவற்றையும், ஸர்வஜ்ஞனான பகவான் உன் கண்டத்தையும், ஸர்வவ்யாபகனான பகவான் உன் புஜத்தையும், மூன்றடிகளால் உலகங்களையெல்லாம் அளந்த த்ரிவிக்ரமன் உன் முகத்தையும், ஈஶ்வரன் உன் சிரஸ்ஸையும் பாதுகாப்பார்களாக. சக்ராயுதம் தரித்த பகவான் முன்னிலும், கதையேந்தின பகவான் பின்னிலும், தனுஸ்ஸைத் தரித்த மதுஸூதனன் கத்தியைத் தரித்த அஜிதன் இவர்கள் பக்கங்களையும், சங்கம் தரித்த பகவான் ஆக்னேயம் முதலிய கோணங்களிலும், உபேந்த்ரன் மேலும், ஹலாயுதன் கீழும், ஸர்வாந்தராத்மாவான பரமபுருஷன் எல்லாப்புறங்களிலும் உன்னைப் பாதுகாப்பார்களாக. ஹ்ருஷீகேசம் உன்னுடைய இந்த்ரியங்களையும், நாராயணன் உன் ப்ராணன்களையும் ஶ்வேதத்வீப நாதன் உன் சித்தத்தையும், யோகேஶ்வரன் உன் மனத்தையும், [1] ப்ருஶ்னிகர்ப்பன் உன் புத்தியையும், ப்ரக்ருதி புருஷர்களைக் காட்டிலும் விலக்ஷணனான பகவான் உன் அஹங்காரத்தையும் பாதுகாப்பார்களாக. விளையாடிக்கொண்டிருக்கும்பொழுது கோவிந்தனும், படுத்திருக்கும்பொழுது

---

1. ப்ருசனிக்குப் பிள்ளையாகப் பிறந்த பகவான். இவ்விஷயம், க்ருஷ்ணன் தன்னவதாரத்தைப்பற்றி தேவகிக்குச் சொல்லுமிடத்தில் வெளிச்சம்; அங்குக் காண்க.

மாதவனும், நடக்கும்பொழுது வைகுந்தனும், உட்காரும்பொழுது ஸ்ரீய:பதியும், புசிக்கும்பொழுது ஸமஸ்த க்ரஹங்களுக்கும் பயங்கரனான யஜ்ஞபுருஷனும் உன்னைப் பாதுகாப்பார்களாக. டாகினிகள் யாதுதானிகள் கூஶ்மாண்ட க்ரஹங்கள் இவை முதலிய பாலக்ரஹங்களும் பூத ப்ரேத பிசாசர்களும் யக்ஷ ராக்ஷஸ விநயகர்களும் கோடரை ரேவதி ஜ்யேஷ்டை பூதனை மாத்ருகை முதலியவைகளும் தேஹம் ப்ராணன் இந்த்ரியம் இவற்றை அழிக்குந தன்மையுள்ள உன்மாதக்ரஹம் அபஸ்மாரக்ரஹம் முதலியவைகளும் ஸ்வப்னங்களில் புலப்படுகிற பெரிய உத்பாதங்களும், மற்றும் வ்ருத்தக்ரஹங்கள் பாலக்ரஹங்கள் எவ்வெவை உண்டோ அவைகளும் ஆகிய துஷ்டக்ரஹங்களெல்லாம் ஸ்ரீமஹாவிஷ்ணுவின் நாமோச்சாரணத்தினால் பயந்து நசித்துப்போமாக' என்று பலவாறு ரக்ஷை செய்தார்கள். நிலைநின்ற அன்புடைய கோபிகைகளால் இங்ஙனம் ரக்ஷை செய்யப்பெற்ற புதல்வனைத் தாயான யசோதை எடுத்து முலை கொடுத்துப் படுக்கவிட்டாள். அவ்வளவில் நந்தன் முதலிய இடையர்கள் மதுரையினின்று கோகுலத்திற்கு வந்து பூதனையின் தேஹத்தைக் கண்டு மிகவும் வியப்புற்றார்கள். 'வஸுதேவன் வந்து சொன்னபடியே இப்பொழுது உத்பாதம் உண்டாயிருக்கிறது, கண்டீர்களா? அவ்வஸுதேவன் பூர்வஜன்மத்தில் ரிஷியாகவோ யோகீஶ்வரனாகவோ இருந்து இப்பொழுது இப்படி பிறந்திருக்கவேண்டும். இது நிச்சயம். இல்லாத பக்ஷத்தில் அவனுக்கு இது எப்படித் தெரியக்கூடும்? அல்லது ஒரு ரிஷியாவது யோகீஶ்வரனாவது நமக்கு அங்ஙனம் வஸுதேவனாய் வந்து புலப்பட்டிருக்கவேண்டும். ஆ! இதென்ன ஆச்சர்யம்' என்று கோபர்கள் ஒருவர்க்

கொருவர் சொல்லிக்கொண்டார்கள். அனந்தரம் அந்த இடையர்கள் அப்பூதனையின் சரீரத்தைக் கோடாலிகளால் கை வேறு கால் வேறாகத் தனித்தனியே வெட்டி வெகு தூரத்தில் கொண்டுபோய்ப் போகட்டுக் கட்டைகளை அடுக்கிக் கொளுத்தினார்கள். ஸ்ரீ க்ருஷ்ணன் ஸ்தன்யபானம் செய்த ஸம்பந்தத்தினால் அந்த க்ஷணமே பாபங்களெல்லாம் தொலையப்பெற்ற அப்பூதனையின் சரீரத்தைக் கொளுத்தும்பொழுது அதினின்று கிளம்பிவரும் புகை காரகிற்புகையின் வாஸனையோடொத்த வாஸனையுடையதாயிருந்தது. உலகத்திலுள்ள இளைஞர்களையெல்லாம் வதித்துக்கொண்டிருந்தவளும் ரக்தத்தைப் புசிக்கும் ராக்ஷஸியுமாகிய பூதனை வதிக்கவேண்டுமென்னும் எண்ணத்துடன் ஸ்ரீக்ருஷ்ணனுக்கு ஸ்தன்யங் கொடுத்துப் பெரியோர்கள் பெறும் பரமகதியாகிய முக்தியை அடைந்தாள். பரமாத்மாவான ஸ்ரீ க்ருஷ்ணனுக்கு மிகவும் அன்பிற்கிடமான ஏதேனும் ஒரு வஸ்துவை அன்புடைய அவன் தாய்மார்களைப்போல ச்ரத்தையோடும் பக்தியோடுங் கொடுப்பவன் நல்ல கதியைப் பெறுவானென்பதைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? பகவான் உலகங்களால் புகழப்பட்ட ப்ரஹ்மாதிகளாலும் புகழத்தகுந்தவைகளும் பக்தர்களின் ஹ்ருதயகமலத்தில் அமைந்திருப்பவைகளுமாகிய தன் பாதங்களால் அவளுடைய அங்கத்தை மிதித்தேறி ஸ்தன்யபானஞ் செய்தான். அந்த ராக்ஷஸியும் மஹாநந்தஸ்வரூபனான அப்பரமபுருஷனோடொத்திருக்கையாகிற முக்தியைப் பெற்றாள். அந்தப் பகவானால் பருகப்பட்ட முலைப்பால்களையுடைய பசுக்களும் தாய்மார்களும் முக்தியைப் பெற்றார்களென்பதில் ஸந்தேஹம் உண்டோ? அந்தப் பசுக்களும் தாய்மார்களும் பிள்ளை யென்னும் ஸ்னேஹத்தினால் முலைப்பால்களை மேன்மேலெனப் பெருக்க அவற்றை

யெல்லாம் ஸ்ரீ க்ருஷ்ணன் நிரம்பப் பானஞ் செய்தானல்லவா? கைவல்யம் முதலிய ஸமஸ்த புருஷார்த்தங்களையுங் கொடுப்பதற்காகவன்றோ பகவான் தேவகிக்குப் பிள்ளையாக வந்து பிறந்தான். மன்னவனே! ஸ்ரீ க்ருஷ்ணனை ஓயாமல் பிள்ளையென்று பாவித்துக் கொண்டிருக்கிற அவன் தாய்மார்களுக்குத் தேஹாத்மப்ரமம் முதலிய அஜ்ஞானத்தினால் விளைகிற ஸம்ஸாரம் மீளவும் உண்டாகாது. இடையர்கள் அந்தப் பிணப்புகையின் வாஸனையை முகர்ந்து 'இதென்ன ஆச்சர்யம்! இதற்கு இப்படிப்பட்ட பரிமளம் எப்படி வந்தது' என்று மொழிந்துகொண்டே இடைச்சேரியில் நுழைந்தார்கள். மதுரையினின்று வந்த நந்தன் முதலியவர் பூதனை வந்தது முதலியதையும் அவள் மரணம் அடைந்ததையும் குழந்தை க்ஷேமமாயிருப்பதையும் கேட்டு மிகவும் வியப்புற்றார்கள். தேசாந்தரம் போய்வந்த ஆழ்ந்த மனமுடைய நந்தன் புதல்வனை எடுத்து உச்சி மோந்து மிகுதியும் ஆநந்தம் அடைந்தான். பூதனை மோக்ஷம் அடைந்த இந்த வ்ருத்தாந்தத்தையும் ஸ்ரீ க்ருஷ்ணனுடைய அற்புதச் செயலையும் மனவூக்கத்துடன் கேட்கும் புருஷன் பூமியைப் பாதுகாக்கும்பொருட்டு அவதரித்த பரமபுருஷனாகிய அந்த ஸ்ரீ க்ருஷ்ணனிடத்தில் பக்தி உண்டாகப் பெறுவான். ஆறாவது அத்யாயம் முற்றிற்று.

—••◆ { சகடாஸுரனை முறித்தலும், த்ருணாவர்த்தனை மாய்த்தலும், வாயில் விஸ்வரூபங் காட்டுதலும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— எங்கும் நிறைந்த பரமபுருஷனாகிய ஸ்ரீ க்ருஷ்ணன், இங்ஙனம் துஷ்டர்களைத் தொலைப்பது அவர்களுக்கு மோக்ஷங் கொடுப்பது முதலியவற்றையும் மற்றும் பல செயல்களையும் செய்து

கொண்டும் இடையர்களுக்கும் இடைச்சிகளுக்கும் ஸுகத்தை விளைத்துக்கொண்டும் கோகுலத்தில் வளர்ந்து வந்தான்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறுன்:—தன்னைப் பற்றினுருடைய பாபங்களைப் போக்குந்தன்மையனும் ஸர்வலோக நியாமகனுமாகிய பகவான் மத்ஸ்யம் முதலிய எந்தெந்த அவதாரங்களால் எந்தெந்தச் செயல்களைச் செய்தானே, அவையெல்லாம் செவிக்கினியவைகளும் மனத்திற்கு மஹாநந்தத்தை விளைப்பவைகளுமாயிருக்கின்றன. ஆயினும், எவனேனும் இந்த ஸ்ரீ க்ருஷ்ணனுடைய சேஷ்டையைக் கேட்பானுயின், அவனுடைய மனச்சோர்வும் சப்தாதி விஷயங்களைப் பற்றின பலவகை விருப்பமும் பறந்தோடுகின்றன. சீக்ரத்தில் மனம் பரிசுத்தமாகின்றது. பகவானிடத்தில் ப்ரீதியும் அவன் பக்தர்களிடத்தில் ஸ்னேஹமும் உண்டாகின்றன. ஆகையால், உமக்குத் திருவுள்ளமாயின், அழகியதான அந்த ஸ்ரீ க்ருஷ்ண சரித்ரத்தையே எமக்குச் சொல்வீராக. மனுஷ்யனுய் வந்தவதரித்து மனுஷ்ய ஜாதியை அனுஸரித்து நடக்கிற ஸ்ரீ க்ருஷ்ணன் இன்னம் என்னென்ன அற்புதமான பால சேஷ்டைகளைச் செய்தானே அவற்றையும் எங்களுக்கு மொழிவீராக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறுர்:—ஒருகால் [1] உத்தானத்தைப்பற்றின உத்ஸவத்திற்காக ஸ்னனம் நடத்துகிறவன்று ஜன்மநக்ஷத்ரமாகிய ரோஹிணி நக்ஷத்ரமும் சேருகையில் அம்மஹோத்ஸவத்திற்காக ஒன்று சேர்ந்திருக்கிற கோபஸ்த்ரீகளின் இடையில் நல்லொழுக்கமுடைய யசோதை பல வாத்ய கோஷங்களுடனும் ப்ராஹ்மணர்கள் வந்தோதுகிற ஸ்வஸ்திவாசனம் முத

1. உத்தானம்-எழுந்து நிற்கை.

லிய மந்த்ரகோஷங்களுடனும் தன் புதல்வனுக்கு அபி ஷேகம் செய்தாள். நந்தன் மனைவியான யசோதை அன்னாதிகளையும் வஸ்த்ரங்களையும் பூமாலைகளையும் அவரவர் விரும்புகிற மற்றும் இஷ்ட வஸ்துக்களையும் பசுக்களையும் கொடுத்துப் பூஜிக்கப்பட்ட அந்தணர்க ளால் ஸ்வஸ்திவாசனம் செய்து மஞ்சனமாட்டி அங்க ரக்ஷாதிகள் செய்யப்பெற்றவனும் கண்ணுறக்கமுற்ற வனுமாகிய தன் புதல்வனைப் படுக்கவிட்டு உறங்கப் பண்ணினாள். உதாரமனமுடைய அந்த யசோதை உத்தானமஹோத்ஸவத்தில் பெரிய மனக்களிப்புடன் உலாவலுற்று வந்த கோபர்களைப் பூஜித்துக்கொண் டிருக்கையில், தூங்கி யெழுந்தழுகின்ற தன் புதல்வ னுடைய அழுகுரலைக் கேளாதிருந்தாள். அந்தக்குழவி ஸ்தன்யபானஞ் செய்ய விரும்பி அழுதுகொண்டே தன் பாதங்களை உயர உதைத்தான். அப்பொழுது அஸுர னால் ஆவேசிக்கப்பெற்ற [1] சகடத்தின்கீழ் இட்டுத் தொங்குகின்ற தொட்டிலில் சயனித்திருக்கும் சிசு வாகிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய தளிர்போன்ற ம்ருதுவான பாதத்தினால் உதைப்புண்ட அச்சகடம் அதில் வைத் திருந்த பலரஸங்கள் அமைக்கப்பெற்ற வெண்கலம் முதலிய பாத்ரங்கள் உடைந்து சக்ரங்களும் இருசும் மாறியுருண்டு ஏற்காலும் முரிந்து கீழ்மேலாய் விழுந் தது. யசோதை முதலிய கோபஸ்த்ரீகளும் உத்தான மஹோத்ஸவத்திற்கு வந்த மற்ற மடந்தையர்களும் நந்தன் முதலிய கோபர்களும் அந்த அற்புதத்தைக் கண்டு மனங்கலங்கி 'எப்படி சகடம் தானே தலைகீழ் விழுநதது?' என்று பேசிக்கொண்டார்கள். அங்கு வந்திருந்தவர்கள் அனைவரும் இங்ஙனமே மொழிந்து கொண்டு மிகவும் வருந்தி மதிமயங்கி மனவருத்தத்

1. சகடம்-வண்டி.

துடன் சுற்றிலுஞ் சூழ்ந்துகொண்டார்கள். அப்பொழுது அங்கு விளையாடிக் கொண்டிருந்த பாலகர்கள் சகடம் விழுந்ததற்குக் காரணம் தெரியாமல் மதிமயங்கி வருந்துகிற அந்தக் கோபர்களையும் கோபிமார்களையும் குறித்து 'இச்சகடம் அழுகின்ற இக் குழந்தையின் பாதத்திணல் உதைக்கப்பட்டு விழுந்தது. ஸம்சயம் இல்லை' என்று மொழிந்தார்கள். அந்தக் கோபர்கள் அதைக் கேட்டும் அறியாத பிள்ளைகளின் சொல்லென்று நம்பவில்லை. அக் குழவியின் அளவற்ற பலத்தை அவர்கள் அறியவில்லை. அப்பால் யசோதை அழுகின்ற அப்புதல்வனை எடுத்துப் பாலக்ரஹமென்று சங்கித்து ப்ராஹ்மணர்களை வரவழைத்து [1] ரக்ஷாக்னமான மந்த்ரங்களால் ஸ்வஸ்திவாசனம் செய்து ஸ்தன்யபானஞ் செய்வித்தாள். பிறகு ப்ராஹ்மணர்கள் மனவூக்கத்துடன் எட்டுத் திசைகளிலும் பலிகளை இட்டுப் பலிஷ்டர்களான இடையர்களைக் கொண்டு அந்தச் சகடத்தை முன்போலவே ஸ்தாபித்து அதற்கு வேண்டிய கருவிகளையும் அமைத்து ஹோமஞ் செய்து தயிர் அக்ஷதை குசம் ஜலம் இவைகளால அர்ச்சனை செய்தார்கள். நந்தகோபன் அஸூயை பொய் வஞ்சனை பொறாமை ஹிம்ஸை கர்வம் இவையற்றவர்களும் ஸத்யசீலர்களுமான அந்தணர்கள் செய்யும் ஆசீர்வாதங்கள் ஒருகாலும் வீணாகமாட்டாவென்று தெரிந்து ப்ராஹ்மணர்களைக் கொண்டு ஸாமவேதம் ருக்வேதம் யஜுர்வேதம் இவற்றைச் சேர்ந்த மந்த்ரங்களால் ஸம்ஸ்காரம் செய்யப்பெற்றவைகளும் பரிசுத்தமான ஓஷதிகள் இடப்பெற்றவைகளுமான ஜலங்களால் குழந்தைக்கு ஸ்நானம் செய்வித்து ஸ்வஸ்திவாசனமும் செய்து மனவூக்கத்துடன் ஹோமமும் செய்வித்து அந்தணர்களுக்கு அறுசுவைகளாகிற பெருங்குணமுடைய அன்னத்தை அளித்தான்.

1. ராக்ஷஸர்களை அழிக்கும்படியான.

மற்றும், அவன் குழந்தையின் க்ஷேமத்திற்காகப் புதிய வஸ்த்ரம் பூமாலை பொற்சங்கிலி இவற்றால் அலங்காரம் செய்யப்பெற்றவைகளும் குணங்களெல்லாம் அமைந்தவைகளுமான பசுக்களை அந்தணர்களுக்குக் கொடுத்தான். மந்த்ரங்களை உணர்ந்த அவ்வந்தணர்களும் மனவூக்கத்துடன் அக்குழந்தைக்கு ஆசீர்வாதங்களைச் செய்தார்கள். அப்பொழுது அவர்கள் செய்த அவ்வாசீர்வாதங்களெல்லாம் ஒருகாலும் பொய்யாகவில்லை. அவை யெல்லாம் அவ்வப்படியே நிச்சயமாகப் பலித்தன. நல்லொழுக்கமுள்ள யசோதை ஒருகால் புதல்வனை இடையில் ஏற்றிச் சீராட்டிக்கொண்டிருக்கையில், திடீரென்று அக்குழவி பர்வதசிகரம்போலக் கனக்கப் பாரத்தினால் வருந்தி வியப்புற்றுக் குழந்தையைப் பூமியில் வைத்து உத்பாதசங்கையினால் உலகத்தின் செயல்களுக்கெல்லாம் நிர்வாஹகனான பரமபுருஷனை த்யானித்தாள். அப்பொழுது த்ருணாவர்த்தனென்னும் பெயருடைய ஓரஸுரன் கம்ஸனால் தூண்டப்பட்டுச் சுழற்காற்றாக வந்து வெறுந்தரையில் உட்கார்ந்திருக்கின்ற அந்தக் குழவியை எடுத்துக்கொண்டு போயினான். அவன் வரும்பொழுது கோகுலம் முழுவதும் சுழற்காற்றாக வீசித் தூட்களால் இடைச்சேரியிலுள்ள எல்லாருடைய கண்களையும் மறைத்துப் பயங்கரமான பெரிய சப்தத்தினால் பத்துத்திசைகளையும் நிறைத்துக்கொண்டு வந்தான். அப்பொழுது கோகுலம் முழுவதும் ஒரு முஹூர்த்தகாலம் தூளாலும் இருட்டினாலும் நிறைந்திருந்தது. அக்காலம் யசோதை தன் புதல்வனை எவ்விடத்தில் வைத்தாளோ அவ்விடத்தில் அவனைக் காணவில்லை. மற்றும், அப்பொழுது சுழற்காற்றாக வீசுகின்ற த்ருணாவர்த்தனால் எறியப்பட்ட பறற்கல்களால் பீடிக்கப்பட்டு மதி மயங்கி எவனும் தன்னையாவது பிறனையாவது காணப்




2105. சகடாஸுர பஞ்ஜனம்.

பெறவில்லை. இங்ஙனம் மிகவும் கொடிய சுழற்காற்றினால் விடாமழைபோலத் தூள் பெய்துகொண்டிருக்கையில் தாயான யசோதை பிள்ளைபோன வழியைக் காணாமல் பெண்பிள்ளையாகையால் மிகவும் மன இரக்கத்திற் கிடமாயிருக்குமாறு அப்புதல்வனை நினைத்துப் பூமியில் விழுந்து கன்றை இழந்த பசுவைப்போல் கதறினாள். அப்பால் சுழல்காற்று மண்மழையின் வேகம் இவை சிறிது குறைந்திருக்கையில் அவளுடைய அழுகுரலைக் கேட்டுக் கோபிகைகள் மிகவும் மன வருத்தமுற்று முகத்தில் கண்ணீர் பெருகப்பெற்று அவ்விடம் வந்து அந்த நந்தகுமாரனைக் காணாமல் அழுதார்கள். சுழற்காற்றின் உருவங்கொண்ட த்ருணாவர்த்தன் ஸ்ரீக்ருஷ்ணனைப் பறித்துக்கொண்டு போகும் பொழுது வேகம் அடங்கப்பெற்று மிக்க வருத்தத்துடன் ஆகாயஞ் சென்று ஸ்ரீக்ருஷ்ணன் பெரும் பாரமாயிருக்கையால் அவனைத் தரித்துக்கொண்டு அப்புறம் போக முடியாதிருந்தான். அந்தப்பாலகன் மஹாபலிஷ்டனாகிய தனக்கும் தரிக்க முடியாமல் பெரும் பளுவாயிருக்கையால் கல்லென்றே நினைத்து அக்குழவியால் கழுத்தில் திடமாகப் பிடியுண்டு அவனை விடுவிக்கவும் முடியாதிருந்தான். கழுத்தில் பிடித்துக்கொண்டதனால் சேஷ்டையற்றுக் கண்கள் பிதுங்கி வெளி வரப்பெற்ற அஸுரன் இன்னது இனியதென்று தெரியாதபடி சில பேச்சுக்களைப் பேசி ப்ராணன்களை இழந்து குழந்தையுடன் கோகுலத்தில் வந்து விழுந்தான். ஆகாயத்தினின்று பாறையின்மேல் விழுந்து அவயவங்களெல்லாம் சிதறப்பெற்று ருத்ரனுடைய பாணத்தினால் பிளவுண்ட த்ரிபுரம் போல மிகவும் பயங்கரமாயிருக்கின்ற அவ்வஸுரனை அங்குக் கூட்டங்கூடி அழுதுகொண்டிருக்கிற கோபிகைகள் கண்டார்கள். அப்பால் அவர்கள் அவ்

வஸுதேவனுடைய மார்பில் தொங்கிக்கொண்டிருக்கிற ஸ்ரீக்ருஷ்ணனை எடுத்துக்கொண்டு வந்து தாயான யசோதையிடம் கொடுத்து வியப்புற்றார்கள். அஸுரனால் ஆகாயமார்க்கத்தில் கொண்டுபோகப்பெற்றும் க்ஷேமமாய் ஜீவித்துக்கொண்டிருக்கின்ற புதல்வனைப் பெற்றுக் கோபிமார்களும் நந்தன் முதலிய கோபர்களும் மிகுந்த ஸந்தோஷம் அடைந்தார்கள். 'ராக்ஷஸன் கொல்லுவதற்குக் கொண்டுபோயும், இப்பாலகன் க்ஷேமமாய் மீண்டு வந்தானே! ஆ! இதென்ன ஆச்சர்யம்! கொடுந்தன்மையுடைய துஷ்டன் தன்னுடைய பாபத்தினாலேயே அடியுண்டு மாண்டுபோனான். ஸாதுவோவென்றால், பிறரையும் தன்னைப்போல் ஸமமாகப் பார்க்குந் தன்மையனாகையால் பயத்தினின்று விடுபட்டான். 'நாம் என்ன *தவம் செய்தோமோ? என்ன பகவதாராதனம் செய்தோமோ? குளம் கிணறு வெட்டுவித்தல் முதலிய பூர்த்த கர்மங்கள் என்னென்ன செய்தோமோ? என்ன யாகஞ் செய்தோமோ? என்ன தானதர்மம் செய்தோமோ? நாம் பூர்வஜன்மத்தில் ப்ராணிகளிடத்தில் த்ரோஹபுத்தியின்றி எல்லாவற்றிலும் நட்புடன் இருந்து என்ன புண்யம் செய்தோமோ? ஏனென்றால், குழந்தை ராக்ஷஸனிடம் அகப்பட்ட பின்பு மீளவும் பிழைத்துவர வழியுண்டோ? அங்ஙனம் மரணம் அடைந்தானென்றே நிச்சயிக்க வேண்டிய இப்பாலகன் தன் பந்துக்கள் அனைவரும் ஸந்தோஷம் அடையும்படி தெய்வாதீனமாய் பிழைத்து வந்து சேர்ந்தானல்லவா? இது நம்முடைய புண்யபலமேயன்றி வேறில்லை' என்ற இவ்வுரைகளையும் மற்றும் பல உரைகளையும் அவர்கள் பேசிக்கொண்டிருந்தார்கள். நந்தகோபன் ப்ருஹத்வனத்தில் இத்தகைய அற்புதங்களையும் இன்னம் பல அற்புதங்களையும் பலவாறு கண்டு வியப்புற்று மீளவும் வஸுதேவன் மொழிந்தது உண்மையேயாயிற்றென்று புகழ்ந்தான்.

### ஸ்ரீ க்ருஷ்ணன் கொட்டாவி விடும் பொழுது விஶ்வரூபங் காண்பித்தல்.

ஒருகால் யசோதை குழந்தையை மடியில் எடுத்து விட்டுக்கொண்டு பிள்ளையிடத்திலுள்ள ஸ்னேஹத்தினால் பெருகிவருகின்ற ஸ்தன்யத்தை அவனுக்கு ஊட்டினாள். மன்னவனே! தாயான அம்மாதரசி வயிறார ஸ்தன்யபானஞ் செய்த அப்புதல்வனுடைய அழகிய புன்னகையோடு கூடின முகத்தைப் பார்த்துச் சீராட்டிக்கொண்டிருக்கையில் கொட்டாவி விடுகின்ற அக்குழவியின் வாயில் ஜகத்தையெல்லாங் கண்டாள். ஆகாயம் த்யாவாபூமிகள் நக்ஷத்ரங்களின் தொகுதி திசைகள் ஸூர்யன் சந்த்ரன் அக்னி காற்று ஸமுத்ரங்கள் த்வீபங்கள் பர்வதங்கள் நதிகள் வனங்கள் ஜங்கமஸ்தாவரரூபமான பூதங்கள் ஆகிய இவற்றையெல்லாம் தன் பிள்ளைவாயுள் கண்டாள். மன்னவனே! மான்குட்டியின் கண்கள்போன்ற கண்களையுடைய அந்த யசோதை புதல்வனுடைய முகத்தில் இங்ஙனம் ப்ரபஞ்சத்தையெல்லாம் கண்டு உடம்பு நடுங்கப்பெற்றுக் கண்களை மூடிக்கொண்டு மிகவும் வியப்புற்றாள். ஏழாவது அத்யாயம் முற்றிற்று.

### நாமகரணமும், பாலக்ரீடையில் தாய்க்கு விஶ்வரூபங் காட்டுதலும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ராஜனே! யாதவர்களுக்குப் புரோஹிதரும் மஹாதபஸ்வியுமாகிய கர்க்கமுனிவர் வஸுதேவனால் தூண்டப்பட்டு நந்தகோகுலத்திற்குச் சென்றார். நந்தன் அவரைக் கண்டு மிகவும் ஸந்தோஷமுற்று எழுந்து எதிர்கொண்டு நமஸ்காரஞ் செய்து கைகூப்பி ஸாக்ஷாத் பகவானென்னும் புத்தி

யுடன் பூஜித்தான். அந்த நந்தன் அதிதிஸத்காரம் செய்யப்பெற்று ஸுகமாக உட்கார்ந்திருக்கின்ற அம்முனிவரை உண்மையும் ப்ரியமுமான வார்த்தையினால் மனக்களிப்புறச் செய்து மீளவும் மொழிந்தான்.

நந்தன் சொல்லுகிறான்:—ப்ராஹ்மண ச்ரேஷ்டரே! விருப்பங்களெல்லாம் நிறைவேறப்பெற்று நிறைவாளராயிருக்கின்ற உமக்கு எங்களால் என்ன ஆக வேண்டியிருக்கிறது? ஒன்றுமில்லை. 'நான் நிறைவாளனாயின், தனிகர்களின் வாசலைத் தேடி ஏன் வருகிறேன்?' என்றால், உம்மைப்போன்ற பெரியோர்கள் தங்கள் ஆச்ரமத்தினின்று வெளியில் திரிவது சப்தாதி விஷயங்களில் மனவிருப்பமுற்று மனஇரக்கத்திற்கிடமான எங்களைப்போன்ற க்ருஹஸ்தர்களின் க்ஷேமத்திற்காகவேயன்றி வேறு ப்ரயோஜனத்திற்காகவன்று. இந்த்ரியங்களுக்கு விஷயமாகாத வஸ்துக்களின் ஸ்வரூபத்தை அறிவதற்கு ஸாதனமாயிருப்பதும் க்ருஹநக்ஷத்ரங்களின் சாரங்களைத் தெரியப்படுத்துவதுமாகிய ஜ்யோதிச்சாஸ்த்ரத்தை நீரே நேராக இயற்றினீர். இந்த ஜ்யோதிச்சாஸ்த்ரத்தினால் மற்ற புருஷர்களும் கீழ் நடந்தது மேல்வரப்போகிறது இவற்றை அறிகின்றார்கள். ப்ராஹ்மண ச்ரேஷ்டரே! ஆகையால் நீர் இந்தப் பிள்ளைகளுக்கு நாமகரணம் முதலிய ஸம்ஸ்காரங்களைச் செய்ய உரியவராயிருக்கின்றீர். மனுஷ்யர்களனைவர்களுக்கும் ப்ராஹ்மணன் ஜன்மத்தினால் குருவல்லவா? ஆகையால் நீர் இதை நடத்தியருள வேண்டும்.

கர்க்கர் சொல்லுகிறார்:— நான் யாதவர்களுக்கு ஆசார்யனென்று பூமியெங்கும் ப்ரஸித்தனாயிருப்பவன். நான் உன்பிள்ளைக்கு நாமகரணாதிஸம்ஸ்காரஞ் செய்வேனாயின், பாபிஷ்டமான மதியுடைய கம்ஸன் உன்

பிள்ளையையும் தேவகியின் பிள்ளையென்றே நினைப்பான். 'யதுகுலாசார்யனுகிய உம்மால் ஸம்ஸ்காரஞ் செய்ததைக் கொண்டு ஒருகால் யாதவகுமாரனென்று அறிவானுயினும் வஸுதேவனுடைய பிள்ளையென்றும், தேவகியிடத்தில் பிறந்தவனென்றும் அக்கம்ஸன் எப்படி அறியமுடியும்?' என்றால், சொல்லுகிறேன். உனக்கும் வஸுதேவனுக்கும் உள்ள ஸ்னேஹம் ப்ரஸித்தமே. இது கம்ஸனுக்குத் தெரியாததன்றே. மற்றும், அக்கம்ஸன் அசரீரவாக்கை நினைத்தும் தேவகியின் பெண்ணான யோகமாயையின் வார்த்தையைக் கேட்டும் 'தேவகியின் எட்டாவது கர்ப்பம் பெண்ணுயிருப்பதற்கு உரியதன்று. பிள்ளையாகவே யிருக்கவேண்டும். வஸுதேவன் என்னிடத்தில் பயந்து தன்பிள்ளையைத் தன்ஸ்னேஹிதனான நந்தனிடம் ஒருவர்க்கும் தெரியாமல் வைத்திருக்கிறான். ஆகையால்தான் யாதவர்களுக்குப் புரோஹிதனான கர்க்கன் அப்புதல்வனுக்கு நாமகரணுதிஸம்ஸ்காரங்களைச் செய்தான். தேவகியின் புதல்வி 'உன்சத்ரு ஓரிடத்தில் வளர்கிறான்' என்று சொன்னதும் அமைகின்றது' என்று சிந்தித்துச் சிறிதும் ஸந்தேஹமின்றி உன்புதல்வனைக் கொன்றாலும் கொன்றுவிடுவான். அது நமக்குப் பெரிய அநீதியாம்.

நந்தன் சொல்லுகிறான்:—இந்தக் கோகுலத்தில் என்னுடைய பந்துக்களுக்கும் தெரியாமல் ஏகாந்தமான இடத்தில் ஸ்வஸ்திவாசனம் செய்து [1] த்விஜாதிகளுக்கு அவஸ்யமாய் நடத்தவேண்டிய ஸம்ஸ்காரத்தை மாத்ரம் நடத்துவீராக, வாத்யகோஷம் முதலியனவைவையும் வேண்டியதில்லை.

1. இரு பிறப்பினர்களான ப்ராஹ்மணுதிகளுக்கு.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ப்ராஹ்மணஶ்ரேஷ்டராகிய அந்தக் கர்க்கர் நந்தனால் வேண்டப்பட்டுத் தானே செய்ய நினைத்திருந்தாராகையால் ஏகாந்தமான இடத்தில் ஒருவர்க்கும் தெரியாமல் மறைந்திருந்து பாலகர்களுக்கு அந்த நாமகரண ஸம்ஸ்காரத்தை நடத்தி நந்தனைக் குறித்து இங்ஙனம் மொழிந்தார்.

கர்க்கர் சொல்லுகிறார் :—இந்த ரோஹிணியின் புதல்வன் நண்பர்களைத் தன் குணங்களால் களிப்புறச் செய்வானாகையால் ராமனென்று கூறப்படுவான். மிகுந்த பலமுடையவனாகையால் இவனைப் பலனென்றும், ஒரு காலத்தில் யாதவர்களுக்குள் ஒருவர்க்கொருவர் மனஸ்தாபம் நேருகையில் அவர்களை ஸமரஸப்படுத்தி ஒன்றுசேர்க்கப் போகிறானாகையால் ஸங்கர்ஷணனென்றும் வழங்குவார்கள். யுகங்கள்தோறும் திருவுருவங்களை ஏற்றுக்கொள்கிற இந்த உன் புதல்வனுக்கு ஒவ்வொரு யுகத்தில் ஒரு வர்ணமாக வெளுப்பு சிவப்பு மஞ்சள் என்ற இம்மூன்று வர்ணங்கள் உண்டாயிருந்தன. இப்பொழுது கறுப்புவர்ணத்தை ஏற்றுக்கொண்டிருக்கிறான். ஆகையால் இவன் க்ருஷ்ணனென்று பெயர் பெறுவான். அழகனாகிய இப்புதல்வன் முன்பு ஒரு காலத்தில் வஸுதேவனுக்குப் பிள்ளையாகப் பிறந்திருந்தானாகையால் அறிஞர்கள் இவனை வாஸுதேவனென்று சொல்லுகிறார்கள். உன் புதல்வன் குணங்களுக்கும் செயல்களுக்கும் பொருந்தினவைகளான பல நாமங்களும் பல உருவங்களுமுடையவன். அவற்றையெல்லாம் என்னைப்போன்ற முனிவர்கள் அறிவார்களேயன்றி மற்றவர்கள் அறியமாட்டார்கள். இவன் உங்களுக்கு ஐஹிகம் ஆமுஷ்மிகம் என்கிற இருவகையான நன்மையையும் செய்வான்; கோபர்களையும் கோகுலத்தையும் களிப்புறச்செய்வான். இப்புதல்வ

னால் நீங்கள் பல வருத்தங்களையும் அனாயாஸமாகக் கடப்பீர்கள். கோகுலநாதனே! முன்பு ஜகத்தெல்லாம் அராஜகமாயிருக்கையில், துஷ்டர்களால் பீடிக்கப் பட்ட ஸாதுக்கள் இவனால் பாதுகாக்கப்பெற்று உத் ஸாஹத்துடன் வளர்ந்து அந்தத் துஷ்டர்களை யெல் லாம் வென்றார்கள். மிகுந்த பாக்யமுடையவனே! இந்த உன் பிள்ளையிடத்தில் ப்ரீதி செய்யும் மனுஷ் யர்கள், விஷ்ணுவின் பக்ஷத்தைத் தொடர்ந்தவர்கள். அஸுரர்களால் அவமதிக்கப்படாதிருப்பதுபோல, எத்தகைய சத்ருக்களாலும் பரிபவிக்கமுடியாதிருப் பார்கள். நந்தனே! ஆகையால் இந்த உன் புதல்வன் குணம் செல்வம் புகழ் ப்ரபாவம் இவைகளால் நாராயண னோடொத்தவன். இவனை மனவூக்கத்துடன் பாது காத்து வருவாயாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் கர்க்கர் தனக்கு மொழிந்து தன் க்ருஹத்திற்குப் போகையில், பிறகு நந்தன் ஸந்தோஷமுற்றுத் தன் விருப்பங்க ளெல்லாம் கைகூடினவென்று நினைத்தான். இப்படி சிலகாலம் கழிகையில், ராமனும் கேசவனும் ஆகிய இருவரும் கோகுலத்தில் முழந்தாள்களாலும் கை களாலும் தவழ்ந்து விளையாடத் தொடங்கினார்கள். கோகுலத்தின் சேறுகளில் பாதங்களை இழுத்துக் கொண்டு அப்பாதங்களில் அணிந்த சதங்கைகளின் கோஷத்தினால் அழகாயிருக்குமாறு தவழ்ந்து செல் கின்ற அந்த ராமகேசவர்கள் அந்தக் கால்சதங்கை களின் த்வனியைக் கேட்டு மனமகிழ்ந்து வீதியில் நடை யாடுஞ் ஜனங்களைத் தொடர்ந்து சில அடிகள் போவ தும் ஒன்றுமறியாத குழந்தைகள் பயப்படுவது போலப் பயந்து தாய்மார்களிடம் திரும்பிவருவதுமாகி விளையாடிக்கொண்டிருந்தார்கள். அவர்களின் தாய் மார்களான ரோஹிணீ யசோதைகள் மன இரக்கத்

திறல் ஸ்தனங்களில் பால் பெருகப்பெற்றுச் சேருகிற
அங்கராகத்தினால் அழகியர்களான தம் புதல்வர்களைக்
கைகளால் வாரியெடுத்து மார்பில் அணைத்துக்
கொண்டு முலைகொடுத்து அவர்கள் ஸ்தன்யபானஞ்
செய்கையில் அழகிய புன்னகையும் சிறியபல்முளைகளும்
அமைந்த அக்குழந்தைகளின் முகத்தைக் கண்டு
பெருங்களிப்புற்றார்கள். பெண்டிர்கள் பார்த்துக்
களித்து வியப்புறும்படியான குமாரலீலைகளையுடைய
அந்த ராமக்ருஷ்ணர்கள் கோகுலத்துள் கன்றுகளின்
வால்களைப் பிடித்துக்கொண்டு அவற்றால் இங்கு
மங்கும் இழுக்கப்பட்டு விளையாடுகையில் கோபிகைகள்
வீட்டுவேலைகளையெல்லாம் துறந்து வந்து அதைக்
கண்டு சிரித்து மனக்களிப்புற்றார்கள். விளையாட்டில்
மிகவும் விருப்பமுற்று நின்ற இடத்தில் நிலைகொள்
ளாதபடி முழுவதும் தவழ்ந்தோடுகின்ற அக்குழந்தை
களை மான் முதலிய கொம்புள்ள ஜந்துக்கள் அக்னி
நாய் முதலிய கோரையுள்ள ஜந்துக்கள் ஸர்ப்பங்கள்
ஜலம் மயில் முதலிய பக்ஷிகள் முள் ஐ இவற்றினின்று
தடுக்கவும் வீட்டுவேலைகளைச் செய்யவும் முடியாமல்
தாய்மார்களான ரோஹிணி யசோதைகளிருவரும்
மிகவும் மனநிலைமை பற்றிருந்தார்கள். ராஜச்ரேஷ்
டனே! ராமக்ருஷ்ணர்கள் ஸ்வல்பகாலத்திற்குள்ளா
கவே ஜாநுகால் முழந்தாள்களாலும் ஜாநுகால் பாதங்க
ளாலுமாகக் கோகுலம் முழுவதும் விரைந்து திரியத்
தொடங்கினார்கள். அனந்தரம் மஹாநுபாவனாகிய
அந்த ஸ்ரீக்ருஷ்ணன் தன்னோடொத்த வயதுடைய
இடைப்பிள்ளைகளோடும் பலராமனோடும் கூடி இடைச்
சேரியிலுள்ள மடந்தையர்களுக்கு மனக்களிப்பை
விளைத்துக்கொண்டு விளையாடினான். கோபிகைகள்

ஸ்ரீக்ருஷ்ணனுடைய அழகியதான [1] பால்யசாபலத்தைக் கண்டு அவனுடைய தாயான யசோதையிடம் வந்து அவன் செவிப்பட இங்ஙனம் மொழிந்தார்கள்.

கோபிகைகள் சொல்லுகிறார்கள்:—ஒருகால் அல்லாத ஸமயத்தில் கன்றுகளை அவிழ்த்துவிடுகிறான். அவற்றிற்குடையவர்கள் வேண்டாமென்று முறையிடுகையில் அதைக் கேட்டுச் சிரிக்கின்றான். ருசியுள்ள தயிர் பால்களைத் திருடிச் சாப்பிடுகிறான். (இவனுக்கு வேண்டுமானால் கொடுக்கமாட்டோமா? இவன் திருட வேண்டுமா? கொடுத்தாலும் அதை உபேக்ஷித்துத் திருடியே சாப்பிடப் பார்க்கிறான்.) திருடுவதற்குப் பல உபாயங்கள் செய்கிறான். தான் சாப்பிடுவதற்கு முன்னமே குரங்குகளுக்குப் பங்கிட்டுக் கொடுக்கிறான். அவை த்ருப்தி அடைந்து தான் கொடுப்பதைப் பக்ஷியாதிருக்குமாயின் பானையை உடைத்துவிடுகிறான். ஒருகால் தயிர் வெண்ணெய் முதலியவை எவையும் அகப்படாது போமாயின், எங்கள்மேல் கோபித்துப் படுக்கையில் படுத்துறங்குங் குழந்தைகளை அழ மூட்டி விட்டுப் போகின்றான். உயரத்தில் வைத்திருக்குந் தயிர் வெண்ணெய் முதலியவை கைக்கெட்டாதாயின் மணை உரல் முதலியவற்றைக் கொண்டு வந்து போகட்டு அவற்றின்மேலேறி எடுப்பதற்கு உரிய உபாயங்களைச் செய்கின்றான். அப்படி செய்தும் எட்டாத பக்ஷத்தில் பாத்ரங்களில் வைத்திருக்குந் தயிர் வெண்ணெய் முதலியவற்றைப் பக்ஷிக்க விரும்பிப் பாத்ரங்களில் கல் முதலியவற்றை வீசியெறிந்து பொத்தல் பண்ணுகிறான். இவன் அந்த உபாயங்களெல்லாம் நன்றாகக் கற்றுணர்ந்தவன். இருட்டறையில் சென்று திவ்ய ரத்னங்களால்

1. இளம்பருவத்தினால் ஏற்பட்ட சாபலம்.

அலங்காரஞ்செய்யப்பெற்று ஒளியினால் வஸ்துக்களை விளங்கச் செய்வதுமாகிய தன்னுடம்பையே அருகாமையில் கொண்டுபோய் அதின் வெளிச்சத்தினால் அங்குள்ளவைகளைக் கண்டறிகிறான். கோபிகைகள் வீட்டு வேலைகளில் ஊக்கமுற்றிருக்கிற ஸமயம் பார்த்து நுழைந்து இங்ஙனம் பற்பல சேஷ்டைகள் செய்கின்றான். இங்ஙனம்செய்வதைக் கண்டு 'இவன் திருடன்' என்று சொல்வோமாயின், 'நீ திருடி' என்னுமிவை முதலிய பலதிரஸ்காரங்களைப் பேசுகிறான். நன்கு மெழுகி அலங்காரஞ் செய்த வீட்டில் மூத்ரம் பெய்வது முதலியன செய்கின்றான். திருட்டுக்கு வேண்டிய உபாயங்களால் பல கார்யங்கள் செய்திருப்பினும் உன்னருகாமையில் ஒன்றுமறியாத பெரிய ஸாதுவாயிருக்கின்றான்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் கோபிகைகள் வந்து இவர்கள் என்ன சொல்லுவார்களோவென்று பயந்தவன்போலக் கண்கள் நடுங்கப்பெற்று நிற்கின்ற அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய அழகிய திருமுகத்தைப் பார்த்துக்கொண்டே பலவாறு முறையிடப்பெற்ற யசோதை சிரித்த முகத்துடன்கூடி ஏன் இப்படி செய்தாயென்று விரட்டவுங்கூட விருப்பமுறாதிருந்தாள். (ஒருகால் கோபிகைகள் தனித்தனியே ஸ்ரீக்ருஷ்ணனை அவன் செய்த அபராதத்தைச் சொல்லும்பொருட்டு எடுத்துக்கொண்டு யசோதையிடம் வந்து அவன் அவளருகாமையில் இருக்கக் கண்டு தாங்கள் கொண்டு வந்த க்ருஷ்ணனையும் காணாமல் எல்லாரும் வெட்கமுற்றுத் தத்தம் க்ருஹத்திற்குத் திரும்பிப்போனார்கள்.) ஒருகால் விளையாடிக்கொண்டிருக்கிற பலராமன் முதலிய இடைப்பிள்ளைகள் 'க்ருஷ்ணன மண தினறான' எனறு தாயான யசோதைக்குச் சொன்னார்கள். அவள் ஹிதத்தை விரும்பி

ஸ்ரீக்ருஷ்ணனைக் கையில் பிடித்துக்கொண்டு விரட்டிப் பயத்தினால் அலமந்த காட்சியமைந்த கண்களையுடைய அந்த ஸ்ரீக்ருஷ்ணனை நோக்கி மொழிந்தாள். 'அடக்க மற்ற மதியுடையவனே! ஒருவர்க்குந் தெரியாமல் ஏன் மண் தின்றனை? உன் நண்பர்களான இப்பிள்ளைகள் சொல்லுகிறார்களே! உன் தமையனாகிய பலராமனும் சொல்லுகிறானே' என்றாள்.

ஸ்ரீக்ருஷ்ணன் அதைக் கேட்டு:—'அம்மா! நான் மண் தின்னவில்லை. இவர்களெல்லாரும் பொய் சொல்லு கிறார்கள். இவர்கள் சொல்லுவது உண்மையாயின், நீ நேரில் என்வாயைக் காண்பாய்' என்றான். இங்ஙனம் சொல்லக்கேட்ட யசோதை 'ஆனால் வாயைத்திற' என் றாள். விளையாட்டிற்காக மானிடக்குழவியாய்த் தோற்று கின்றவனும் அழியாத ஐஶ்வர்யமுடையவனும் ஷாட் குண்யபூர்ணனும் தன் பக்தர்களுடைய தீமைகளைப் போக்குந் தன்மையனுமாகிய அந்த ஸ்ரீ க்ருஷ்ணன் யசோதையால் அங்ஙனம் மொழியப்பெற்று வாயைத் திறந்தான். அந்த யசோதை ஜங்கமஸ்தாவரங்களும் ஆகாயமும் திசைகளும் பர்வதங்கள் த்வீபங்கள் ஸமுத்ரங்கள் இவை அடங்கின பூலோகமும் வாயு அக்னி சந்த்ரன் நக்ஷத்ரங்கள் இவற்றோடு கூடின ஜ்யோதிர்மண்டலமும் ஆவரண ஜலமும் ஸூர்யன் முதலிய தேஜஸ்ஸும் அந்தரிக்ஷ லோகமும் ஸ்வர்க்க மும் அதலம் முதலிய விவரலோகங்களும் ஸாத்த்விகா ஹங்காரத்தின் கார்யமான ஶ்ரோத்ரம் முதலிய பத்து இந்த்ரியங்களும் மனமும் தன்மாத்ரங்களும் ஸத்த்வ ரஜஸ்தமஸ்ஸுக்களென்கிற மூன்று குணங்களும் ஆகிய ப்ரபஞ்சத்தையெல்லாம் கண்டாள். ஆத்மாக் கள் காலம் ஸ்வபாவம் கர்மம் வாஸனை இவற்றால் சரீரங்கள் பலவாறு பேதித்திருக்கப்பெற்று விசித்ரமா

யிருக்கின்ற இந்த ப்ரபஞ்சத்தையும் கண்டாள். தன் பிள்ளையின் தேஹத்தில் திறந்தவாயில் ஒரேதடவையில் கண்ட யசோதை 'அவ்வளவும் ஸ்வப்னமோ? அல்லது தேவமாயையோ? அல்லது என்னுடைய ப்ரமமோ? அல்லது இந்த என் புதல்வனுடைய ஸ்வாபாவிகமான ஒரு சக்தி விசேஷமோ என்று மதிமயங்கினாள். மீளவும 'புத்தி மனத்தின் வ்யாபாரம் வாக்கு இவற்றால் உள்ளபடி விரைந்து ஊஹிக்க முடியாத இந்த ப்ரபஞ்சமெல்லாம் எதை ஆதாரமாகவுடையதோ, எதனிடத்தினின்று உண்டாகின்றதோ, எதனால் ஜீவிக்கின்றதோ, எதனிடத்தில் மறைகின்றதோ, அப்படிப்பட்டதும் இன்னது இனியதென்று நிரூபிக்கமுடியாததும் முமுக்ஷுக்களால் அடையத்தகுந்ததுமாகிய பரமாத்மஸ்வரூபத்தை வணங்குகிறேன். 'இந்த நந்தன் என் கணவன். இவன் என்னுடைய பிள்ளை. கோபர்களும் கோபிகைகளும் கோதனங்களும் என்னுடையவை. கோகுலத்திற்கு நாதனாகிய நந்தனுடைய ஸமஸ்த ஸொத்துக்களையும் நான் பாதுகாத்து வருகிறேன்' என்கிற இந்தக் கெட்ட புத்தி எனக்கு எவனுடைய ஸங்கல்பத்தினால் உண்டாயிற்றோ அப்படிப்பட்ட பகவானே எனக்குக் கதி (என்னுடைய அந்த அஹங்கார

என்று கோபிகையான யசோதை உண்மையை அறிகையில், ஸமர்த்தனும் ஸர்வேச்வரனுமாகிய அந்த ஸ்ரீ க்ருஷ்ணன் புத்ர ஸ்னேஹத்தை மிகவும் விளைப்பதாகிய தன் மாயையைப் பரப்பினான் (மாயையினால் அவளுடைய விவேகத்தை மறைத்தான்). அப்பொழுதே அந்தக் கோபிகை 'இவன் பரமாத்மா' என்னும் புத்தி மாறப்பெற்றுப் பிள்ளையை மடியில் ஏறவிட்டுக் கொண்டு முன்போலவே ஸ்னேஹம் நிறைந்த மன

முடையவளாயிருந்தாள். வேதங்களின் பூர்வ பாகங்கள் அவற்றின் உத்தரபாகங்களான வேதாந்தங்கள் ஸாங்க்யம் யோகம் பாஞ்சராத்ர ஸம்ஹிதைகள் இவைகளால் பாடப்பட்ட மஹிமையுடைய அந்த ஸ்ரீ க்ருஷ்ணனை அவள் உள்ளபடி அறிந்தும் மீளவும் அவனுடைய மாயையினால் மதிமயங்கி அவனைக் கேவலம் புதல்வனாகவே பாவித்திருந்தாள்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:-அந்தணர் தலைவரே! நந்தனாவது மிகுந்த பாக்யமுடைய யசோதையாவது இப்படி பெரும்பயனை விளைக்கும்படியான என்ன பாக்யஞ் செய்தார்கள்? ஸர்வேஶ்வரன் பிள்ளையாகப் பிறந்து யசோதையின் ஸ்தனங்களைப் பானஞ் செய்தானல்லவா? இதை விட மற்றொரு பாக்யமுண்டோ? தாய்தந்தையர்களான தேவகி வஸுதேவர்கள் ஸ்ரீக்ருஷ்ணனுடைய கம்பீரமான பால்யசேஷ்டைகளை ஏன் அனுபவிக்கப் பெறவில்லை? உலகங்களின் பாபங்களைப் போக்கவல்லதான அந்த ஸ்ரீ க்ருஷ்ண லீலையை இப்பொழுதும் பண்டிதர்கள் பாடுகிறார்களல்லவா?

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அஷ்ட வஸுக்களில் ஶ்ரேஷ்டனாகிய த்ரோணனென்பவன் ப்ரஹ்மதேவனால் 'பகவான் பூபாரத்தை ஒழிக்கும்பொருட்டுப் பூமியில் அவதரிக்கப் போகிறான். அவனுக்குப் பால் கொடுக்கும்பொருட்டு ரிஷிகள் பசுக்களாய்ப் பிறக்கப்போகிறார்கள். நீ அந்தப் பசுக்களைப் பாதுகாக்கும்பொருட்டு இடையர்களில் ஒருவனாகப் பிறக்கவேண்டும்' என்று மொழியப்பெற்றுத் தன் பார்யையான தாரையென்பவளுடன் அந்த ப்ரஹ்மதேவனுடைய கட்டளையை நிறைவேற்ற முயன்று அவனைக் குறித்து 'நாங்கள் பூமியில் பிறந்த பின்பு எங்களுக்கு மஹாதேவனும் ஸர்வேஶ்வரனுமாகிய பரமபுருஷனிடத்தில் பக்தி உண்டாகும்படி அனுக்ரஹஞ் செய்ய வேண்டும். வேறு உபா

யங்களால் கடக்க முடியாததும் ஸம்ஸாரத்தை விளைப் பதுமாகிய பாபத்தை அந்தப் பக்தியினால் கடக்கக்கூடு மல்லவா ?' என்றான். மஹானுபாவனாகிய அந்த த்ரோ ணன் 'அப்படியே ஆகட்டும்' என்று ப்ரஹ்மதேவனால் மொழியப்பெற்று இவ்வுலகத்தில் கோகுலத்தில் நந்த னென்னும் பெயர்பூண்டு பிறந்தான். அந்தத் தாரை யென்கிற அவனுடைய பார்யை யசோதையாகப் பிறந் தாள். பாரதனே ! ஆகையால் இடையர்கள் இடைச்சி கள் இவர்களுக்குள் தம்பதிகளான யசோதா நந்தர்க ளுக்குப் பிள்ளையாகத் தோன்றின பகவானிடத்தில் மிகவும் பக்தி உண்டாயிருந்தது. ஸ்ரீ க்ருஷ்ணனும் ப்ரஹ்மாவின் கட்டளையை உண்மை செய்யும்பொருட் டுப் பலராமனுடன் கோகுலத்தில் வாஸஞ் செய்து கொண்டு தன்னுடைய லீலையினால் அவர்களுக்கு ஸந்தோஷத்தை விளைத்துக் கொண்டிருந்தான். எட்டாவது அத்யாயம் முற்றிற்று.

## ஸ்ரீ க்ருஷ்ணன் உரலில் கட்டுண்ட வ்ருத்தாந்தம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார் :—ஒருகால் வீட்டு வேலைக் காரிகள் அனைவரும் வேறு கார்யங்களால் தூண்டப் பட்டிருக்கையில் நந்தன் மனைவியான யசோதை தானே தயிர் கடையத் தொடங்கினாள். அவள் கவிக ளால் நிபந்தனஞ் செய்யப்பட்ட அந்த ஸ்ரீ க்ருஷ்ண னுடைய பால்ய சரித்ரங்களை யெல்லாம் நினைத்துத் தயிர்கடையும் பொழுது பாடிக்கொண்டிருந்தாள். அழகிய புருவங்களையுடைய அந்த யசோதை பெரிய கடித்தடத்தில் வெண்பட்டு வஸ்த்ரந் தரித்து அதன் மேல் அரைநாண்மாலை அணிந்து பிள்ளையிடத்தில் ஸ்னேஹத்தினால் ஸ்தனங்களில் பால் பெருகவும் உடம்பு அசையவும் கயிற்றை ச்ரமப்பட்டு இழுக்கின்ற கைகளில் வளைகள் ஒலிக்கவும் காதுகளில் குண்டலங்

கள் குலுங்கவும் முகம் வேர்க்கவும் தலைச் சொருக்கி னின்று மாலதிப் புஷ்பங்கள் சொரியவும் பெற்று ஸ்ரீ க்ருஷ்ண லீலைகளைப் பாடிக்கொண்டே தயிர் கடைந்தாள். அப்பொழுது ஸ்ரீ க்ருஷ்ணன் ஸ்தன்ய பானஞ் செய்ய விரும்பித் தயிர் கடைகின்ற அந்த யசோதையிடம் வந்து அவர்களுக்கு ப்ரீதியை விளைத்துக்கொண்டு மத்தைப் பிடித்துத் தயிர் கடையவொட்டாமல் தகைந்தான். அவளும் அவனை மடியில் ஏறவிட்டுப் புன்னகையோடுகூடின அவன் முகத்தைப் பார்த்துக்கொண்டே ஸ்னேஹத்தினால் பெருகுகின்ற ஸ்தன்யத்தைக் கொடுத்தாள். அப்பொழுதுகாயவைத்த பால் பொங்கி வழியக்கண்டு த்ருப்தி உண்டாகப் பெறாமல் இன்னம் பருகவேண்டுமென்று விரும்புகிற அந்த ஸ்ரீ க்ருஷ்ணனைவிட்டு விரைவுடன் எழுந்து சென்றாள். அவன் அதனால் கோபித்துச் சிவந்த உதட்டைப் பற்களால் கடித்துப் பொய்யாகவே கண்ணீர் பெருக்கிக் கற்குழவியால் தயிர் கடையும் பாண்டத்தை உடைத்து உள்ளே சென்று வெண்ணெயை எடுத்து ஏகாந்தமாகப் பக்ஷித்துக்கொண்டிருந்தான். அப்பொழுது யசோதை பால் நன்றாகக் காய்ந்திருக்கக் கண்டு அதை இறக்கி மீண்டுவந்து [1] ததிபாண்டம் உடைந்திருக்கக் கண்டு அது தன் பிள்ளை செய்த கார்யமென்று உணர்ந்து சிரித்தாள். அப்புதல்வனையும் அங்குக் காணவில்லை. அப்பால் யசோதை, உரலடியின்மேல் உட்கார்ந்து வெண்ணெயை குரங்குக்குவேண்டியவளவுகொடுத்துக் கொண்டிருப்பவனும் திருட்டுத்தனம் தோன்றுமாறு அலமந்த கண்களையுடையவனுமாகிய அந்த ஸ்ரீ க்ருஷ்ணனைக் கண்டு தெரியாமல் மெல்லமெல்லப் பின்னே சென்றாள். கையில் தடியை எடுத்துக்கொண்டு வந்

1. ததிபாண்டம்—தயிர்ப்பானை.

திருக்கின்ற அந்த யசோதையைக் கண்டு ஸ்ரீ க்ருஷ்ணன் விரைவுடன் உரலினின்றும் எழுந்து பயந்தவன் போல அப்புறம் ஓடினன். அப்பொழுது அந்த யசோதை தவத்தினால் தூண்டப்பட்ட யோகிகளின் மனமுங்கூட எவனை அணுகமுடியாமல் மயங்குகின்றதோ, அப்படிப்பட்ட பரமபுருஷனாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணனைப் பின்றொடர்ந்தோடினாள். அழகிய இடையுடையவளும் நிதம்பங்களின் பாரத்தினால் நடை தடைபடப் பெற்றவளுமாகிய தாயான யசோதை பின்றொடர்ந்து வேகத்தினால் அவிழ்ந்த தலைச்சொருக்கினின்று வழியெல்லாம் புஷ்பங்கள் இறையப் பெற்றுச் சென்று அவனைப் பிடித்துக்கொண்டாள். அபராதஞ் செய்தவனும் மை கலந்து நிரம்பின கண்களைக் கையினால் பிசைந்துகொண்டிருப்பவனும் பயத்தினால் தழதழத்த கண்களுடையவனும் 'இவள் என்ன செய்வாளோ?' என்று தன்னை உற்றுப் பார்க்கின்றவனுமாகிய அந்த ஸ்ரீ க்ருஷ்ணனைக் கையில் பிடித்துக்கொண்டு பயமுறுத்தி அடிக்கத் தொடங்கினாள். பிள்ளையிடத்தில் ப்ரீதியுடைய அந்த யசோதை பிள்ளை பயந்திருப்பதை அறிந்து தடியை அப்புறம் போகட்டு அவன் ப்ரபாவத்தை அறியாமல் அவனைக் கயிற்றால் கட்ட விரும்பினாள். அவனுக்கு உள்ளும் புறமும் முன்னும் பின்னும் கிடையாது. அவன் ஜகத்தினுடைய முன்னும் பின்னும் உள்ளும் புறமும் நிறைந்திருப்பவன். ஜகத்திற்குக் காரணனாகையாலும், அதில் அந்தராத்மாவாய் அமைந்திருப்பவனாகையாலும், ஜகத்தெல்லாம் அவனே. அத்தகையனும் மானிட உருவம் பூண்டவனுமாகிய அப்பரம புருஷனை அந்தக் கோபிகை தன் பிள்ளையாக நினைத்து ப்ராக்ருதனான மற்றொரு குழவியைப்போலக் கயிற்றால் உரலில் கட்டினாள். யசோதை, அபராதஞ்செய்தானென்று அக்குழவியைக்

கட்டும் பொருட்டுக் கொணர்ந்த கயிறுபோராமல் இரண்டங்குலம் குறைந்தது. ஆகையால் அவள் மற்றொரு கயிற்றைக் கொணர்ந்து அத்துடன் புணைத்தாள். அதுவும் போராமல குறைந்தது. மீளவும் அத்தோடு மற்றொரு கயிற்றைப் புணைத்தாள். அதுவும் போரவில்லை. இங்ஙனம் அவள் எத்தனை கயிறுகள் கொண்டு வந்து புணைக்கினும் அது போராமல் இரண்டங்குலங் குறைவாகவே யிருந்தது. அவள் இவ்வாறு தன் வீட்டிலுள்ள கயிறுகளையெல்லாம் கொண்டுவந்து புணைத்துக்கொண்டிருந்தாளன்றி அதினின்று மீளவில்லை. கோபிகைகள் அதைக் கண்டு வியப்புற்றிருக்கையில் அந்த யசோதை தானும் புன்னகை செய்து வியப்புற்றிருந்தாள். அப்பொழுது உடம்பெல்லாம்புழுங்கித் தலைச்சொருக்கு அவிழ்ந்து பூமாலையும் கலைந்து வருந்துகின்ற தன் மாதாவின் ச்ரமத்தைக் கண்டு அவளிடத்தில் மனம் இரங்கித் தன்னைக் கட்டும்படி அனுகூலனாயிருந்தான். ப்ரஹ்மதேவன் முதலிய லோகபாலர்களோடு கூடின இந்த ஜலத்தெல்லாம் எவனுடைய அதீனத்தில் இருக்கின்றதோ, அப்படிப்பட்ட ஸர்வேச்வரன் ஸ்வதந்த்ரனென்பதைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? மன்னவனே! ஆயினும் அந்த ஸ்ரீ க்ருஷ்ணரூபியான பரமபுருஷன் இங்ஙனம் யசோதைக்குக் கட்டும்படி அனுகூலனாகித் தான் பக்தபராதீனனென்பதை வெளியிட்டான். மோக்ஷங்கொடுப்பவனாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணனிடத்தினின்று கோபிகை பெற்ற இந்த அனுக்ரஹத்தை ப்ரஹ்மதேவனாவது ருத்ரனாவது சரீரத்திலேயே வஸிக்கின்ற ஸ்ரீமஹாலக்ஷ்மியாவது பெறவில்லை. கோபிகையின் புதல்வனாகிய இந்த ஸ்ரீக்ருஷ்ணபகவான் ஸம்ஸாரஸாகரத்தைத் தாண்டுவதற்குத் தன்னையே ஓடமாகப் பற்றினவர்களும் தன்னிடத்தில் மிகுந்தபக்தியுடையவர்களுமான

ஞானிகளுக்கு எளிதில் அறியக்கூடியவனாயிருப்பது போல மற்றப்ராணிகளுக்கு எளிதில் அறியக்கூடியவனல்லன். தாயான யசோதை இங்ஙனம் உரலில் கட்டிவிட்டு வீட்டுவேலைகளில் மனவூக்கமுற்றிருக்கையில் ஸமர்த்தனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் குபேரனுடைய பிள்ளைகளும் நலகூபரன் மணிக்ரீவன் என்று பெயர்கள் பெற்றவர்களும் முன்பு செல்வக்கொழுப்பினால் நேர்ந்த நாரதமுனிவருடைய சாபத்தினால் வ்ருக்ஷ ஜன்மம் பெற்று யமளார்ஜுனவ்ருக்ஷங்களாயிருப்பவர்களுமான இரண்டு யக்ஷர்களைக் கண்டான். ஒன்பதாவது அத்யாயம் முற்றிற்று.

யக்ஷர்களின் சாபத்தை நிரூபித்தலும்,
ஸ்ரீ க்ருஷ்ணன் யமளார்ஜுனங்களை
முரித்தலும், யக்ஷர்கள ஸ்ரீ க்ருஷ்ணனைத்
துதித்து விடைபெற்றுப் போதலும்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:—மஹானுபாவரே! குபேரன் பிள்ளைகளான யக்ஷர்களுடைய சாபத்தின் காரணத்தைச் சொல்லுவீராக. தேவர்ஷியாகிய நாரதருக்குக் கோபம் வரும்படி அவர்கள் செய்த நிந்தைக்கிடமான கார்யம் யாது?

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:-குபேரனுடைய பிள்ளைகளான இரண்டு யக்ஷர்கள் ருத்ரனுக்குப் பரிசாரகர்களாயிருந்தும் செல்வப்பெருக்கினால் மிகவும் கொழுத்து யௌவனமதத்தினால் மதிமயங்கிக் கங்கையில் அழகியதான கைலாஸபர்வதத்தின் உபவனத்தில் வாருணியென்ற மத்யத்தைப் பானஞ் செய்து அதனாலுண்டான மதத்தினால் கண்கள் சுழலப் பெற்றுத் தங்களைத் தொடர்ந்து பாடிக்கொண்டு வருகிற மடந்தையர்களுடன் புஷ்பித்திருக்கின்ற அவ்வனத்தில் உலாவிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் பிறகு தாமரைக்காடுகள்

வரிசை வரிசையாய் அடர்ந்திருக்கின்ற கங்காநதியின் இடையில் இழிந்து ஆண்யானைகள் பெண்யானைகளுடன் விளையாடுவதுபோல, யௌவனப் பருவமுடைய மடந்தையர்களுடன் கலந்து விளையாடினார்கள். தேவருஷியாகிய நாரதர் தெய்வாதீனமாய் அவ்விடம் வந்து ஜலக்ரீடை செய்கின்ற அந்த யக்ஷர்களைக் கண்டு அவர்கள் உடம்பு தெரியாமல் மதித்திருப்பதை அறிந்தார். யக்ஷமடந்தையர்கள் அம்முனிவர் வந்திருப்பதைக் கண்டு வெட்கமுற்றுச் சபிக்கப்போகிறாரேயென்று பயந்து விரைவுடன் ஆடைகளை எடுத்து உடுத்துக் கொண்டார்கள். யக்ஷர்களோவென்றால் ஆடையை உடுத்துக்கொள்ளாமல் திகம்பரர்களாகவே இருந்தார்கள். குபேரனுடைய பிள்ளைகளான அந்த யக்ஷர்கள் செல்வப்பெருக்கினால் மதித்துக் கண்தெரியாதவர்களாகி மத்ய பானஞ் செய்து மதிமயங்கி யிருப்பதைக் கண்டு அவர்களை அனுக்ரஹிக்க விரும்பிச் சாபங் கொடுக்க முயன்று இங்ஙனம் மொழிந்தார்.

நாரதர் சொல்லுகிறார்:—மனத்திற்கினியவைகளான சப்தாதிவிஷயங்களை அனுபவிக்கும் புருஷனுக்குச் செல்வப்பெருக்கினால் விளையும் மதத்தைப் போல நற்குலத்தில் பிறவி முதலியவற்றால் விளைகிற மற்ற மதங்கள் புத்தி ப்ரம்சத்தை விளைக்க வல்லவையாக மாட்டா; ரஜோகுணத்தின் கார்யமான காம க்ரோதாதிகளையும் வளர்க்கமாட்டா. செல்வப்பெருக்கினால் விளையும் மதமே புத்திப்ரம்சத்தையும் விளைத்துக் காம க்ரோதங்களையும் வளர்க்கும். செல்வக்கொழுப்பு நேருமாயின், ஸ்த்ரீஸங்கம் சூதாட்டம் மத்யபானம் ஆகிய இவை உண்டாகின்றன. மற்றும், செல்வக் கொழுப்பினால் மதிமயங்கினவர்கள் நஶ்வரமான இந்தத் தேஹத்தைக் கிழத்தனம் மரணம் முதலிய விகாரங்க

ளற்றதாகவும் ஶாஶ்வதமாகவும் பாவித்து இந்த்ரியங்களை அடக்காமல் மன இரக்கமின்றிப் பசுக்களை வதிக்கிறார்கள். இச்சரீரம் 'நரதேவன், பூதேவன், ஸ்வர்க்கதேவன்' என்னும் இவை முதலிய பல பெயர்களைப் பெறினும் கடைசியில் 'புழு, விஷ்டை, பஸ்மம்' என்னும் இவை முதலிய பெயர்களைப் பெறுகின்றது. (சரீரத்தைக் கொளுத்துவார்களாயின் பஸ்மமென்றும், நாய் முதலிய ஜந்துக்கள் பக்ஷிக்குமாயின் விஷ்டையென்றும், அவையும் பக்ஷிக்காதுபோமாயின் புழுவென்றும் பெயர்களைப் பெறுகின்றது). இத்தகையதான அந்தச் சரீரத்தின் ஸுகத்திற்காக நரகத்தை விளைக்கும்படியான ப்ராணி த்ரோஹத்தைச் செய்பவன் எதை அறிவான்? அவனுக்கு நன்மை தீமைகளில் எதுவும் தெரியாது. 'தேஹம் கடைசியில் எப்படியாயினும் ஜீவதசையில் நமக்கு ஸ்வாதீனமாயிருக்கிறதாகையால் நாம் அதன்ஸுகத்திற்காக யத்னஞ்செய்யவேண்டியது அவஶ்யமே' என்றால், ஆராய்ந்துபார்க்கில் ஜீவதசையிலும் தேஹம் நமக்கு ஸ்வாதீனமென்று சொல்லமுடியாது. ப்ராணன் போனபின்பு தேஹம் அக்னிக்கும் நாய் முதலிய ஜந்துக்களுக்கும் அதீனமாவதுபோல ஜீவதசையில் தேஹம் அன்னத்தின் பரிணாமமாகையால் அன்னங் கொடுக்கிறவனுடையதென்று ஏன் சொல்ல முடியாது? ரேதஸ்ஸினால் உண்டாகிறதாகையால் கர்ப்பாதானஞ் செய்தவனுடையதென்று ஏன் சொல்லமுடியாது? தாய் பத்துமாதங்கள் கர்ப்பத்தில் சுமந்து பிறக்கிறாளாகையால் அவளுடையதென்று ஏன் சொல்லமுடியாது? பெண்ணை விவாஹம் செய்து கொடுக்கும்போது இவளுக்குப் பிறக்கும் பிள்ளையை எனக்குக் கொடுக்கவேண்டுமென்று ஏற்பாடுசெய்துகொண்டுகொடுப்பதும்

உண்டல்லவா? அவ்வண்ணம் தாயைப்பெற்ற பாட்டன் ஸ்வீகாரஞ் செய்துகொள்வானாயின், அவனுடைய தென்று ஏன் சொல்லமுடியாது? ஒருவன் விலைக்கு வாங்குவானாயின், அவனுடையதென்று ஏன் சொல்ல முடியாது? ஒருவன் பலாத்காரமாகப் பிடித்துக் கொண்டு போவானாயின், அவனுடையதென்று ஏன் சொல்லமுடியாது? ஆகையால் தேஹம் ஜீவதசையிலும் நம்முடையதென்பதற்கு இடமில்லை. இங்ஙனம் பலர்க் குப் பொதுவாயிருப்பதும் ப்ரக்ருதியினின்று தோன்றி அதிலேயே மறைவதுமாகிய இந்தத் தேஹத்தையே ஆத்மாவென்று நினைத்து மூடர்களைத் தவிர மதி யுடைய மற்ற எவன்தான் அதன் ஸுகத்திற்காக ஜந்துக்களை ஹிம்ஸிப்பான்? செல்வக்கொழுப்பினால் வெளிக்கண்ணும் உட்கண்ணும் கெட்டுத் தடுமாறுகிற புருஷனுக்கு ஏழ்மையென்பது மேலான அஞ்சனமாம். தரித்ரனொருவனே பிறரையும் தன்னைப்போல் பார்ப் பான். பாதத்தில் முள் தைக்கப்பெற்றவன் வருந்திப் பிறனுக்கு அவ்வருத்தம் விளைவதை விரும்புகிறதில்லை. ஏனென்றால், அவன் 'நம் பாதத்தில முள் பொற்றின தால் நாம் வருந்துகின்றோம்; இந்த முள் பிறனுடைய பாதத்தில் பொற்றுமாயின் அவனும் நம்மைப்போல் வருந்துவான். ஆகையால் இந்த முள் பிறனுடைய பாதத்தில் பொற்றவேண்டாம்' என்று நினைக்கிறான். அவன் தனக்கு நேர்ந்த கார்யகாரணங்களைக் கண்டு பிறனுக்கும் அப்படியே நேருமென்று ஊஹிக்கிறான். காலில் முள் பொற்றாதவன் அங்ஙனம் நினைக்கமாட் டான். தரித்ரன் அஹங்காரமற்று வித்யாமதம் தன மதம் அபிஜனமதம் என்கிற மூன்று மதங்களுமின்றி உரிய ஆஹாரம் நேரப்பெறாமையால் சரீரம் உலர்ந்து வருந்துகிறான். அதுவே அவனுக்குப் பெரிய தவமா கின்றது. என்றும் பசியினால் சரீரம் உலர்ந்து அன்

னத்தை அபேக்ஷிக்கிற தரித்ரனுடைய இந்த்ரியங்கள் உலர்ந்துபோகின்றன. அவனுக்குப் பரஹிம்ஸை தானே நிவர்த்திக்கின்றது. (பிறனை ஹிம்ஸிக்கவேண்டு மென்னும் புத்தி அவனுக்கு உண்டாகிறதில்லை.) இப்படிப்பட்ட தரித்ரனுக்குத்தான் எல்லாவற்றையும் ஸமமாகப்பார்க்குந் தன்மையுடைய ஸாதுக்களின் ஸமாகமம் உண்டாகின்றது. அந்த ஸாதுக்களின் ஸஹவாஸத்தினால் சப்தாதி விஷயங்களிலுள்ள விருப்பத்தைப் போக்கிக்கொள்கின்றான். பிறகு சீக்ரத்தில் ப்ரக்ருதிஸம்பந்தம் நீங்கிப் பரிசுத்தனாகின்றான். போகமோக்ஷங்களைக் கொடுக்கவல்ல பரமபுருஷனுடைய பாதாரவிந்தங்களையே மேலான புருஷார்த்தமாக நினைத்திருப்பவர்களும் ஸமஸ்த பூதங்களையும் தங்களோடொத்தவைகளாகப் பார்க்கின்றவர்களுமான ஸாதுக்கள் அஹங்காரத்திற்கிடமான தனத்தை உபேக்ஷிப்பார்களேயன்றி அதை விரும்பமாட்டார்கள். அவர்களுக்கு அதனால் ஆகவேண்டிய ப்ரயோஜனம் ஒன்றும் இல்லை. அந்தப் பணம் அனர்த்தங்களுக்கிடமான மனத்தை விளைக்குமாகையால் நிந்திக்கத்தக்கதேயன்றிப் புகழத்தகுந்ததன்று. ஆகையால் அது பெரும்பாலும் அஸத்துக்களிடத்தில் சேருமேயன்றி ஸத்துக்களிடத்தில் சேராது. பணத்தை விரும்பாத ஸாதுக்களுக்குப் பணக்கொழுப்பினால் அஹங்காரமுற்றவர்களும் பெரியோர்களோடு ஸஹவாஸமற்றவர்களுமாகிய அஸத்துக்களால் ஆகவேண்டிய ப்ரயோஜனம் என்ன இருக்கிறது? ஒன்றுமில்லை. அவர்கள் ஸாதுக்களால் உபேக்ஷிக்கத்தகுந்தவர்களே. ஆகையால் செல்வப்பெருக்கினால் கொழுத்து விவேகமற்றவர்களும் இந்த்ரியங்களை அடக்காத மூடர்களும் ஸ்த்ரீலோலர்களும் வாருணியென்ற மத்யத்தைப் பருகி

மதித்திருப்பவர்களுமாகிய இந்த யக்ஷர்களுக்கு அஜ்ஞானத்தினால் உண்டாயிருக்கிற கொழுப்பைப் போக்குகிறேன். இவர்கள் லோகபாலனான குபேரனுடைய பிள்ளைகளாயிருந்தும் அஜ்ஞானம் குடிகொண்டு தங்கள் அரையில் ஆடையற்றிருப்பதையும் அறியாதிருக்கிறார்கள். ஆகையால் இவர்கள் ஸ்தாவரஜன்மத்தையே பெறுதற்குரியவர்கள். இப்படியாகில்தான் இவர்கள் மீளவும் இவ்வாறு அவிவேகம் செய்யமாட்டார்கள். அந்த ஸ்தாவரஜன்மத்திலும் என்னுடைய அனுக்ரஹத்தினால் இவர்களுக்குப் பூர்வஜன்ம ஸ்மரணம் மாறாதிருக்கும். மற்றும், இவர்கள் என்னுடைய அனுக்ரஹத்தினால் தேவமானத்தினால் நூறுவர்ஷங்கள் சென்றபின்பு வஸுதேவகுமாரனான ஸ்ரீக்ருஷ்ணபகவானுடைய ஸாந்நித்யம் பெற்று ஸ்தாவரஜன்மம் நீங்கி ஸ்வர்க்கவாஸிகளான தேவர்களின் தன்மையை அடைந்து அந்த வாஸுதேவனிடத்தில் பக்தியுடையவர்களாயிருக்கப்போகிறார்கள்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—தேவர்ஷியாகிய நாரதர் இங்ஙனம் மொழிந்து நாராயணாஸ்ரமத்திற்குச் சென்றார். நலகூபர மணிக்ரீவர்கள் யமளார்ஜுன வ்ருக்ஷங்களாகப் பிறந்தார்கள். ஸ்ரீக்ருஷ்ணன் பகவத்பக்தர்களில் முக்யராகிய நாரதமஹர்ஷியினுடைய அவ்வசனத்தை உண்மை செய்யும்பொருட்டு மெல்லமெல்ல உரலை இழுத்துக்கொண்டு யமளார்ஜுன வ்ருக்ஷங்கள் இருந்த இடத்திற்கு வந்தான். 'தேவர்ஷியாகிய நாரதர் எனக்கு மிகவும் அன்பிற்கிடமானவர். ஆகையால் அவர் குபேரனுடைய குமாரர்களைக் குறித்து என்னமொழிந்தாரோ; அதை அப்படியே நிறைவேற்றுகிறேன்' என்னுங் கருத்துடன் யமளார்ஜுனவ்ருக்ஷங்களின் இடையில் சென்றான். அந்த ஸ்ரீக்ருஷ்ணன் அங்கு நுழைந்த

வுடனே அவன் இழுத்துக்கொண்டு போகிற உரல் குருக்கே விழுந்தது. மாயக்குழவியாகிய அந்தத் தாமோதரன் தன்னைத் துடர்ந்துவருகின்ற உரல் நடுவே குறுக்கிட்டுத் தடைபட்டு நிற்பதைக் கண்டு அதை வலிவுடன் இழுக்கையில், யமளார்ஜுனங்கள் அவ்வேகத்தினால் அடியோடு வேர்களெல்லாம் முறிந்து ஸ்ரீக்ருஷ்ணனுடைய பராக்ரமத்தினால் அடித்திப்பை தளிர்கள் கிளைகள் இவையெல்லாம் மிகவும் நடுங்கப் பெற்றுப் பெருங்கடுமையான சப்தஞ் செய்துகொண்டு விழுந்தன. அப்பொழுது அந்த வ்ருக்ஷங்களினின்று அக்னியைப்போலப் பெரிய ஒளிப்பெருக்கினால் திசைகளையெல்லாம் விளங்கச்செய்துகொண்டு இரண்டு ஸித்தர்கள் கிளம்பினார்கள். அவர்கள் ஸ்ரீ க்ருஷ்ணனுக்கு அருகாமையில் வந்து ஸமஸ்த லோகங்களுக்கும் நாதனாகிய அந்த ஸ்ரீ க்ருஷ்ணனைத் தலையால் வணங்கி அஞ்சலி செய்துகொண்டு ரஜோகுணம் கழிந்து பரமஸாத்த்விகர்களாகி இங்ஙனம் மொழிந்தார்கள்.

ஸித்தர்கள் சொல்லுகிறார்கள்:— ஓ க்ருஷ்ண! க்ருஷ்ண! மிகுந்த ப்ரபாவமுடையவனே! நீ ஸாதாரண இடைப்பிள்ளையல்லை. ஆதிகாரணனாகிய பரமபுருஷன் நீயே. கார்யதசையில் நாமரூபங்களுக்கு இடமாகி ஸ்தூலமாயிருப்பதும் காரணதசையில் நாமரூபங்களுக்கு இடமாகாமல் ஸூக்ஷ்மமாயிருப்பதுமாகிய இந்த ப்ரபஞ்சமெல்லாம் ஸ்வரூபத்தினாலும் குணங்களாலும் அளவற்ற பரப்ரஹ்மமாகிய உன்னுடைய சரீரமென்று வேதாந்தங்கள் கூறுகின்றன. நீயொருவனே ஸமஸ்த பூதங்களுடைய தேஹம் ப்ராணன் மனம் இந்த்ரியம் இவற்றிற்கு நியாமகன். ப்ரபஞ்சத்தைத் தூண்டுகிற காலமும் நீயே. ஷாட்குண்ய பூர்ணனே! நீ சேதனாசேதனங்களுக்கு நேருகிற எவ்வகை விகாரங்களும் தீண்டப்பெறாதவன். ஸ்ரீ மஹா

விஷ்ணுவென்று கூறப்படுகிற பரமபுருஷன் நீயே. நீயே மஹத்தத்த்வம். அந்த மஹத்தத்த்வத்திற்குக் காரணமாயிருப்பதும் ஸத்த்வ ரஜஸ் தமஸ்ஸுக்களென்கிற மூன்று குணங்களை வடிவாகவுடையதுமாகிய ஸூக்ஷ்மப்ரக்ருதியும் நீயே. தேஹாதிகளை அதிஷ்டானஞ் செய்பவனும் ஸமஸ்த சரீரங்களிலும் உள்ள மனம் முதலிய இந்த்ரியங்களையெல்லாம் ஸாக்ஷாத்கரிப்பவனுமாகிய ஜீவனும் நீயே. இந்த்ரியங்களால் அறியப்படுகிற சப்தாதி விஷயங்கள் அவ்விந்த்ரியங்களை அறியவல்லமையற்றிருப்பதுபோல, ப்ராக்ருத குணங்களின் பரிணமங்களும் உன்னால் அறியப்படுகிறவைகளுமான இந்த்ரியங்கள் உன்னை அறியவல்லவையல்ல. இவ்வுலகத்தில் குணகார்யங்களான இந்த்ரியங்களால் சூழப்பட்ட எந்த ஜீவன்தான் அக்குணங்களுக்குக் காரணனும் ப்ரகாசகனுமாகையால் அவற்றிற்கு முன்னமே ஸித்தனாயிருக்கின்ற உன்னை ஸாக்ஷாத்கரிக்க வல்லவனாவான்? யோகாப்யாஸத்தினால் தெளிந்த மனமுடையவர்களே உன்னை அறிவார்கள். அத்தகையனும் ஷாட்குண்ய பூர்ணனும் ஸாதுக்களைக் காக்கும்பொருட்டு வஸுதேவனுக்குப் பிள்ளையாய் வந்தவதரித்தவனும் எல்லாவற்றையும் படைப்பவனும் [1] தனக்குமாத்ரமே விளங்குகின்ற குணங்களால் மறைக்கப்பட்ட மஹிமையுடையவனும் இயற்கையில் அளவற்ற குணங்களுடையவனும் ஸ்வரூபத்திலும் அளவற்றவனுமாகிய உனக்கு நமஸ்காரம். கர்மத்தினால் விளையும்

1. ஸத்த்வரஜஸ்தமோ குணங்களின் கார்யமான தேஹஸம்பந்தம் சேதனனுக்குப் பகவானுடைய மஹிமையை மறைக்கின்றதென்று கருத்து. அக்குணங்களின் உண்மை பகவானுக்கே தோற்றுமன்றி மற்றவர்க்குத் தோற்றுதாகையால் தனக்கு மாத்ரமே விளங்குகின்ற என்றது.

சரீர ஸம்பந்தமற்ற நீ மனுஷ்யர் முதலிய ப்ராக்ருதர்களுக்குள் அவர்களைப்போலவே அவதரிப்பினும் உன்னவதாரங்கள் எல்லாம் இணையெதிரில்லாதவைகளும் கர்மவச்யர்களான ப்ராணிகளிடத்தில் நேரக்கூடாதவைகளும் அந்தந்த அவதாரங்களுக்கு அஸாதாரணங்களுமான வீரச்செயல்களால் கர்மவச்யரான ப்ராணிகளைக்காட்டிலும் விலக்ஷணங்களென்று அறியப்படுகின்றன. ப்ராணிகளின் விருப்பங்களையெல்லாங் கொடுக்க வல்லவனாகிய நீ பலராமனுடன் உன்ஸங்கல்பரூபஜ்ஞானத்தினால் இஹபரலோக ஸுகங்களையும் மோக்ஷஸுகத்தையும் விளக்கும்பொருட்டு இப்பொழுது அவதரித்தமை யுக்தமே. சிறந்த கல்யாண குணங்களுடையவனே! உனக்கு நமஸ்காரம். மஹாமங்களஸ்பாவமுடையவனே! உனக்கு நமஸ்காரம். ஜகத்திற்கெல்லாம் மங்களத்தை விளைப்பவனே! உனக்கு நமஸ்காரம். மிகவும் அமங்களமான வ்ருக்ஷஜன்மத்தினின்று எங்களை விடுவித்தனையாகையால் நீ விச்வமங்களனென்பது எங்களிடத்திலேயே வெளியாயிற்றல்லவா? ஜகத்திற்கெல்லாம் ஆதாரனும் ஜகத்தில் எங்கும் நிறைந்தவனும் அந்த ஜகத்தின் குணங்கள் தன்மேல் தீண்டப்பெறாமல் திகழ்கின்றவனுமாயிருக்கையால் வாஸுதேவனென்று பெயர் பெற்றவனும் தாஹம் சோகம் மோஹம் முதலிய ஊர்மிகளற்றவனும் யாதவர்களுக்கு ப்ரபுவுமாகிய உனக்கு நமஸ்காரம். எல்லையற்ற மஹாநந்தமுடையவனே! எங்களை உன்னடியார்களுக்கு அடியராயிருக்கும்படி அனுக்ரஹித்து அனுமதி கொடுப்பாயாக. உன்பக்தராகிய நாரதமஹர்ஷியின் அனுக்ரஹத்தினால்தான் ஷாட்குண்யபூர்ணனும் புருஷார்த்த நிதியுமாகிய உன்னுடைய தர்சனம் எங்களுக்கு உண்டாயிற்று. இங்ஙனம்

மஹாபலன்களை விளைப்பதாகையால் உன் தாஸர்களுக்குத் தாஸராயிருக்குந் தன்மையை நாங்கள் வேண்டுகிறோம். அவ்வாறு அருள்புரிவாயாக. ஜகத்திற்கெல்லாம் ஆதாரனே! எங்களுடைய நாக்கு உன் குணங்களைச் சொல்லுவதிலும் காதுகள் உன் கதையைக் கேட்பதிலும, கைகள் உன் பூஜாரூபமான கர்மங்களிலும், மனம் உன்பாதாரவிந்தங்களை த்யானிப்பதிலும், எங்கள் தலை உன்னை வணங்குவதிலும் உன்னடியார்களை வணங்குவதிலும், கண்கள் உன் சரீரங்களான பெரியோர்களைக் காண்பதிலும் உன் திருவுருவங்களைக் காண்பதிலும் ஊக்கமுற்றிருக்கும்படி அருள்புரிவாயாக.

ஸ்ரீ சுகர் சொல்லுகிறார்:—கோகுலத்திற்கு நாதனாகிய ஸ்ரீ க்ருஷ்ணபகவான இங்ஙனம் அந்த யக்ஷர்களால் துதிக்கப்பெற்றுக் கயிற்றால் உரலில் கட்டுண்டிருந்தபடியே சிரித்துக்கொண்டு யக்ஷர்களைக் குறித்து மொழிந்தான்.

ஸ்ரீ பகவான் சொல்லுகிறான்:— மன இரக்கமுடைய நாரதமுனிவர் செல்வக்கொழுப்பினால் கண் தெரியாதிருந்த உங்களுக்குச் சில வைராக்ய வசனங்களைச் சொல்லிச் செல்வத்தினின்று நழுவச் செய்து உங்களை அனுக்ரஹித்த விஷயம் எனக்கு முன்னமே தெரியும். கண்களுக்கு இருட்டினால் உண்டாகுந்தடை ஸூர்யனைக் காணும்வரையிலுமே தொடர்வதுபோல, இந்த ஸம்ஸாரத்திலுள்ள புருஷனுக்கு ஸம்ஸாரபந்தம் என்னிடத்தில் நிலைநின்ற மனமுடையவர்களும் ஸமஸ்த பூதங்களையும் தங்களோடு ஸமமாகப் பார்க்குந்தன்மையர்களுமான பெரியோர்களின் தர்சனம் நேரும் வரையிலுமே தொடர்ந்துவருமன்றி அதற்கு மேல் தொடராது. ஓ நளகூபர மணீக்ரீவர்களே! நீங்கள் என்னையே மேலான கதியாகப் பாவித்துக்

கொண்டு உங்களிருப்பிடம் செல்வீர்களாக. உங்களுக்கு என்னிடத்தில் நல்ல ப்ரீதிவிசேஷம் உண்டாயிற்று. இதுவே அனைவராலும் ஆசைப்படத் தகுந்தது. இது ஸம்ஸாரபந்தத்தைப் போக்கும்.

ஸ்ரீ சுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் பகவானால் மொழியப்பெற்ற அந்த யக்ஷர்கள் உரலில் கட்டுண்டிருக்கின்ற அந்த ஸ்ரீ க்ருஷ்ணனை அடிக்கடி ப்ரதக்ஷிணஞ் செய்துகொண்டு வடதிசையைக் குறித்துச் சென்றார்கள். பத்தாவது அத்யாயம் முற்றிற்று.

நந்தாதிகள் ப்ரஹத்வனத்தை விட்டு
ப்ருந்தாவனத்திற்குப் போதலும்,
பகாஸுர வத்ஸாஸுரர்களின் வதமும்.

ஸ்ரீ சுகர் சொல்லுகிறார்:— குருஸ்ரேஷ்டனே! நந்தன்முதலிய கோபர்கள் முரிந்து விழுந்த அர்ஜுன வ்ருக்ஷங்களின் சப்தத்தைக் கேட்டு இடிவிழுகிறதோ என்று சங்கித்துப் பயந்து அவ்விடம் வந்தார்கள். அங்குப் பூமியில் விழுந்திருக்கின்ற யமளார்ஜுன வ்ருக்ஷங்களைக் கண்டு உரலில் கயிற்றால் கட்டுண்டு அதை இழுத்துக்கொண்டு போகின்ற அப்பாலகனே அந்த வ்ருக்ஷங்கள் விழுந்ததற்குக் காரணமென்று அறியாமல் 'இந்த வ்ருக்ஷங்களை முரித்து விழத் தள்ளினது யாருடைய கார்யம்? இது எந்தக்காரணத்தினால் நேர்ந்தது? ஆ! இதென்ன ஆச்சர்யம்? நமக்கு மேன்மேலென்ன உத்பாதங்கள் உண்டாகின்றனவே' என்று பயந்து ப்ரமித்தார்கள். இங்ஙனம் ப்ரமிக்கின்ற அந்த இடையர்களைக் குறித்து அங்கிருந்த இடைப்பிள்ளைகள் 'இந்த ஸ்ரீ க்ருஷ்ணன் இந்த வ்ருக்ஷங்களின் இடையில் உரலை இழுத்துக்கொண்டு போகையில் உரல் குறுக்கே விழுந்து தடுக்க அதை வலிவுடன் இழுத்தான். அதனால் வ்ருக்ஷங்கள் முரிந்துவிழுந்தன.

இதுமாத்ரமேயல்லாமல் இந்த வ்ருக்ஷங்களினின்று இரண்டு திவ்யபுருஷர்களும் கிளம்பக்கண்டோம்' என்று மொழிந்தார்கள். அவர்கள் 'இது எங்ஙனம் சேரும்? சேராது' என்று அப்பிள்ளைகளின் வார்த்தையை நம்பவில்லை. சிலர் 'இக்குழந்தையே ஒருகால் வ்ருக்ஷங்களை முறித்திருக்கக்கூடும்' என்று ஸந்தேஹமுற்றார்கள். நந்தன் கயிற்றால் கட்டுண்டு உரலை இழுத்துக்கொண்டு போகின்ற தன்புதல்வனைக் கண்டு சிரித்த முகத்துடன் அவனைக் கட்டினின்று விடுவித்து 'அட! க்ருஷ்ணா! பழம் வாங்கிக்கொள்வாய்' என்று மொழிந்தான். அந்த அச்சுதனும் தான் ஸ்வர்க்கம் மோக்ஷம் முதலிய ஸமஸ்த பலன்களையும் கொடுக்கவல்லவனாயினும் கேவலம் ப்ராக்ருதபாலகன்போலப் பழத்தை விரும்பித் தாயிடம் சென்று கேட்டுக் கையில் நெல்லை எடுத்துக்கொண்டு சென்றான். பழம் விற்கிறவளும் கொண்டுவந்த நெல்லெல்லாம் வழியில் கீழே சிந்திப் போய்க் கடையில் வெறுங்கையனாய் வந்து நிற்கிற அவ்வச்சுதனுடைய இரண்டு கைகளையும் பழங்களால் [1] நிறைத்தாள். உடனே அந்தப்பழம் விற்கிறவளுடைய பழக்கூடை முழுவதும் ரத்னங்களால் நிறைந்தது.

---

1. 'பழம் வாங்கவேணுமென்று கொண்டுவந்த நெல்லெல்லாம் அறியாதவனாகையால் செவ்வையாய்க் கொண்டுவரத் தெரியாமல் நடுவழியில் சிந்திவிட்டு வந்தான்' என்பதை அறிந்து பழம் விற்கிறவள் மன இரக்கத்துடன் குழந்தையின் முகத்தைக் கண்டு மனம் உருகி அவனுடைய இரப்பையுங் கண்டு செயலற்றுப் பழங்களைக் கை நிரம்பக் கொடுத்தாள். பகவத்விஷயத்தில் செய்த கிஞ்சித்காரமாகையால் அவளுடைய பழக்கூடை ரத்னங்களால் நிரம்பிற்றென்று கருத்து. அவன் நெல்லைக் கொண்டுவந்து கூடையிற்போட அவள் பழங்கொடுத்தாள். போகட்ட நெற்களெல்லாம் ரத்னங்களாகிக் கூடை நிரம்பிற்றென்றும் சிலர் கூறுவார்கள்.

கோபிகைகளால் ஒருகால் புகழ்ந்து கைத்தாளமிடுவது முதலியன செய்து உத்ஸாஹப்படுத்தப்பட்டு மரப்பொம்மைபோல அவர்களுக்குட்பட்டு அவர்கள் உரக்கப் பாடுகையில் ஒன்றுமறியாத பாலன்போல் ஆடுவதும் பாடுவதுமாயிருந்தான். ஒருகால் அவர்களால் மணை படி பாதுகை முதலியன கொண்டுவரும்படி நியமிக்கப்பட்டு அவற்றைக் கொண்டுவர வல்லமையற்றவன்போல மிக்க வருத்தத்துடன் எடுத்துக் கொண்டு வருவான். அவர்களுக்கு ப்ரீதியை விளைத்துக்கொண்டு கையை அசைக்குவான். அவன் தன் வைபவத்தை அறிந்தவர்களுக்குத் தான் பக்தபராதீனனென்பதை வெளியிட்டுக்கொண்டு இத்தகைய பால்யசேஷ்டைகளால் இடைச்சேரியிலுள்ள ஜனங்களுக்கெல்லாம் ஸந்தோஷத்தை விளைத்துக்கொண்டிருந்தான். யமளார்ஜுன வ்ருக்ஷங்களை முறித்த அந்த ஸ்ரீ க்ருஷ்ணன் ஒருகால் ஆற்றங்கரைக்குச் சென்று பலராமனோடும் மற்றுமுள்ள சேரியிற்பிள்ளைகளோடுங்கூடி வெகுநேரமாய் விளையாடிக்கொண்டிருக்கையில், ரோஹிணி அழைத்தாள். அழைத்தும் அந்தப் புதல்வர்கள் விளையாட்டில் ஊக்கமுற்றிருக்கையால் திரும்பி வராதிருக்கையில், பிள்ளைகளிடத்தில் மிகுந்த வாத்ஸல்யமுடைய அந்த ரோஹிணி யசோதையை அனுப்பினாள். அந்த யசோதை போஜனஞ் செய்யவேண்டிய வேளையையுங் கடந்து பிள்ளைகளுடன் விளையாடுகின்ற ராம க்ருஷ்ணர்களைக் கண்டு பிள்ளையினிடத்தில் ஸ்னேஹத்தினால் ஸ்தனங்களில் பால் பெருகப்பெற்று அவர்களை அழைத்தாள்.

யசோதை சொல்லுகிறாள் :—க்ருஷ்ணா! க்ருஷ்ணா! தாமரைக் கண்ணா! அப்பனே! இங்கு வருவாயாக. ஸ்தன்யபானஞ் செய்வாயாக. விளையாடினது போதும். பசியினால் இளைத்திருக்கின்றனை. ஆகையால்

இப்பொழுது நீ போஜனஞ் செய்யவேண்டும். ஓ ராமா! அப்பனே! குலத்தை வளர்ப்பவனே! நீ உன் தம்பியை அழைத்துக்கொண்டு சீக்ரம் வருவாயாக. நீ காலையிலேயே ஆஹாரஞ் செய்தனை. குழந்தாய்! விளையாடல்களால் இளைப்புற்றிருக்கின்றனை. கோகுலத்திற்கு நாதனாகிய நந்தன் போஜனஞ் செய்ய முயன்று உங்களை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறான். நீ வருவாயாக. வந்து எங்களுக்கு ப்ரியஞ் செய்வாயாக. அட! ராம க்ருஷ்ணர்களைத் தொடர்ந்து விளையாடும் பிள்ளைகளே! நீங்கள் உங்கள் க்ருஹங்களுக்குப் போவீர்களாக. அப்பனே! உன் உடம்பெல்லாம் புழுதி படிந்திருக்கின்றது. ஆகையால் நீ மஞ்சனமாட வருவாயாக. மற்றும், இன்று நீ பிறந்த திருநக்ஷத்ரம். ஆகையால் ஸ்நானஞ் செய்து பரிசுத்தனாகி ப்ராஹ்மணர்களுக்குப் பசுக்களைத் தானஞ் செய்வாயாக. பார், பார். உன் தோழர்கள் அனைவரும் தங்கள் தாய்மார்களால் ஸ்நானம் செய்வித்து நன்கு அலங்காரமும் செய்விக்கப்பெற்று வந்திருக்கிறார்கள். நீயும் குளித்து நன்கு அலங்கரித்துக்கொண்டு போஜனமுஞ் செய்து விளையாடலாம்.

ஸ்ரீ சுகர் சொல்லுகிறார் :— ப்ரஹ்மாதிகளான அனைவரிலும் சிறந்த அந்தப் பரமபுருஷனை யசோதை கேவலம் தன் புதல்வனாக நினைத்து ஸ்னேஹம் நிறைந்த மனமுடையவளாகி ராமனையும் க்ருஷ்ணனையும் கையிற் பிடித்துக்கொண்டு தன் க்ருஹத்திற்குச் சென்று மங்கள கார்யங்களை நடத்தினாள்.

இங்ஙனம் பலவாறு பெருப் பெரிய உத்பாதங்களை அனுபவித்த நந்தன் முதலிய கோபவ்ருத்தர்கள் அனைவரும் ஒருகால் ஒன்று சேர்ந்து இடைச்சேரியின் க்ஷேமத்தைப்பற்றிச் செய்யவேண்டிய கார்யத்தைக் குறித்து ஆலோசித்தார்கள். அவர்களில் ஜ்ஞானத்தி

னாலும் வயதினாலும் முதிர்ந்தவனும் தேசகாலங்களுக்கு உரியபடி செய்யவேண்டிய ப்ரயோஜனங்களின் உண்மையை அறிந்தவனும் ராமக்ருஷ்ணர்களுக்கு ப்ரியஞ்செய்பவனுமாகிய உபநந்தனென்பவன் நந்தாதிகளைக் குறித்து இங்ஙனம் மொழிந்தான்.

உபநந்தன் சொல்லுகிறான்:—நாம் கோகுலத்திற்கு ஹிதத்தை விரும்புவோமாயின் இதைவிட்டுப்புறப்பட்டுப்போவதே நலம். இங்கு வாஸஞ்செய்யும் ப்ரஜைகளாகிய நமக்கு நாசத்தை விளைக்கும்படியான பல உத்பாதங்கள் உண்டாயின. மேலும் பல உத்பாதங்கள் வரப்போகின்றன. கீழ்வந்த உத்பாதங்கள் எல்லார்க்கும் தெரிந்தவைகளே. இப்பாலகன் பாலர்களை வதிக்குங் க்ரஹமான ராக்ஷஸியிடம் அகப்பட்டு மிகவும்வருந்தித் தெய்வாதீனமாய் விடுபட்டான். பகவானுடைய அனுக்ரஹத்தினால் சகடமும் இவன்மேல் விழாமல் தப்பிற்று. சுழற்காற்றின் உருவங்கொண்டு வந்த அஸுரனால் இப்பாலன் பக்ஷிகள் ஸஞ்சரிக்குமிடமாகிய ஆகாச மார்க்கத்தில் கொண்டுபோகப் பெற்றும் கல்லின்மேல் விழுந்து பெரிய ஆபத்தை அடையவேண்டியவனாயினும் அதினின்று நம்இஷ்டதேவதைகளால் பாதுகாக்கப்பட்டான். இப்பாலகன் அர்ஜுன வ்ருக்ஷங்களின் இடையில் செல்ல அவை முறிந்து விழ இவனாவது மற்ற பிள்ளைகளில் எவனாவது மரணம் அடையாதிருந்ததும் அச்சுதன் செய்த ரக்ஷணமே. உத்பாதத்தினால் விளையும் அனர்த்தம் கோகுலத்தை அழிப்பதற்கு முன்னமே பிள்ளைகளை அழைத்துக் கொண்டு இவ்விடத்தினின்று புறப்பட்டுப் போவோம். ப்ருந்தாவனமென்று ப்ரஸித்திபெற்ற ஒரு வனம் இருக்கின்றது. அது பசுக்களுக்கு ஹிதமாயிருக்கும்; புதிய கானகங்கள் பலவும் அடர்ந்திருக்கும்; இடையர்களும் இடைச்சேரிகளும் பசுக்களும் வாஸஞ் செய்யத்

தகுந்தது; அழகிய பர்வதமும் புற்களும் அமைந்திருக்கும். ஆகையால் நாம் இப்பொழுதே அவ்விடத்திற்குப் போவோம். வண்டிகளைப் பூட்டுவீர்களாக. காலதாமதஞ் செய்யவேண்டாம். ஆநிரைகளெல்லாம் முன்னே போகட்டும். நான் சொல்வது உங்களுக்கு இஷ்டமாயின், புறப்படுவோம்.

ஸ்ரீ சுகர் சொல்லுகிறார்:—கோபர்களெல்லோரும் அதைக் கேட்டு ஒருமித்த மதியுடையவர்களாகி நல்லது நல்லதென்று மொழிந்து தங்கள் தங்கள் வ்ரஜங்களைப் பிரித்துக் கருவிகளையெல்லாம் சகடங்களில் ஏற்றிக்கொண்டு புறப்பட்டார்கள். மன்னவனே! கோபர்கள், கிழவர்களையும் பாலர்களையும் பெண்டுகளையும் ஸமஸ்தமான உபகரணங்களையும் வண்டிகளில் ஏற்றி ப்ரயாண ஸந்நாஹங்களெல்லாஞ் செய்து பரிவாரங்களோடுகூடிக் கையில் தனுஸ்ஸை ஏந்திப் பசுமந்தைகளை முன்னிட்டுப் புல்லாங்குழல்களை ஊதிக்கொண்டு பெரிய வாத்யகோஷத்துடன் சென்றார்கள். கோபிகைகள் அழகிய ஆடைகளை உடுத்துப் பொன்னலங்காரங்களை அணிந்து கொங்கைகளில் பூசின குங்குமத்தின் காந்தியினால் திகழ்வுற்றுச் சகடங்களில் ஏறி மனக்களிப்புடன் ஸ்ரீக்ருஷ்ணனுடைய லீலைகளைப் பாடிக்கொண்டு சென்றார்கள். யசோதையும்ரோஹிணியும் க்ருஷ்ணராமர்களுடன் ஒரு வண்டியில் ஏறிக்கொண்டு அந்த ஸ்ரீ க்ருஷ்ணனுடைய கதைகளைக் கேட்பதனால் மிகவும் ஸந்தோஷமுற்று விளங்கினார்கள். நந்தன் முதலிய கோபர்கள் இங்ஙனம் புறப்பட்டு ஸர்வகாலங்களிலும் ஸுகத்தை விளைப்பதாகிய ப்ருந்தாவனத்திற்குச் சென்று சகடங்களால் அர்த்த சந்த்ரனோடொத்த ஸந்நிவேசம் அமைந்திருக்கும்படி கோகுலஸ்தானத்தை (இடைச்சேரியை) ஏற்படுத்தினார்கள். மன்னவனே! ராமக்ருஷ்ணர்கள் ப்ருந்தாவனத்தையும்

கோவர்த்தன பர்வதத்தையும் யமுனா நதியின் மணற்குன்றுகளையும் கண்டு மிகுந்த ஸந்தோஷம் அடைந்தார்கள், அவ்யக்தமதுரமான வாக்யங்களையுடைய அந்த ராமக்ருஷ்ணர்கள் பால்யசேஷ்டைகளால் இடைச்சேரியிலுள்ளவர்கள் அனைவர்க்கும் ஸந்தோஷத்தை விளைத்துக்கொண்டிருந்து சில காலம் செல்லுகையில் கன்றுகளை மேய்க்கத் தொடங்கினார்கள். இடைச்சேரிக்கு அருகாமையில் விளையாட்டிற்கு வேண்டிய பல கருவிகளை எடுத்துக்கொண்டு இடைப்பிள்ளைகளுடன் கன்றுகளை மேய்த்துக்கொண்டிருந்தார்கள். அவர்கள் ஒருகால் புல்லாங்குழல் வாசிப்பதும், ஒருகால் வில்வக்காய் நெல்லிக்காய் முதலிய அடிக்கத்தகுந்த வஸ்துக்களால் இடைப்பிள்ளைகளை அடிப்பதும், ஒருகால் சிறிய சதங்கைகளை அணிந்த பாதங்களால் உதைப்பதும், ஒருகால் முழந்தாள்களையும் கைகளையும் பூமியில் ஊன்றிக் கறுப்புக் கம்பளி முதலியவற்றால் உடம்பை மூடிக்கொண்டு வ்ருஷபங்கள்போல நடப்பவர்களும் அங்ஙனமே சப்தஞ் செய்பவர்களுமாகிய இடைப்பிள்ளைகளுடன் தாங்களும் வ்ருஷபங்கள் போன்று அங்ஙனம் சப்தித்து யுத்தஞ் செய்வதும், ஹம்ஸம் மயில் இவை முதலிய ஜந்துக்களைப்போல் திரிந்து சப்தஞ் செய்வதுமாகி ப்ராக்ருத பாலகர்கள்போலத் திரிந்துகொண்டிருந்தார்கள். ராமக்ருஷ்ணர்கள் தங்கள் ஸ்னேஹிதர்களுடன் யமுனைக்கரையில் கன்றுகளை மேய்த்துக்கொண்டிருக்கையில், ஓர் அஸுரன் அவர்களை வதிக்க விரும்பிக் கன்றின் உருவந்தரித்து அவ்விடம் வந்தான். ஸ்ரீ க்ருஷ்ணன் கன்றின் உருவங்கொண்டு தானும் ஒரு கன்றுபோல் கன்றுகளின் கூட்டத்தினிடையில் கலந்திருக்கிற அவ்வஸுரனைக் கண்டறிந்து பலராமனுக்குக் காட்டித் தான் மெல்லமெல்ல அறியாத

வன்போல அவனருகே சென்றான் அவ்வச்சுதன் [1]வத்ஸ ரூபியான அவ்வஸுரனைப் பின்கால்களில் வாலுடன பிடித்துக்கொண்டு சுழற்றி அவ்வளவில் ப்ராணன்களை இழந்த அவனை அருகிலிருந்த விளாமரத்தின்மேல் வீசியெறிந்தான. பெருஞ் சரீரமுடைய அவ்வஸுரனுடைய பாரத்தைப் பொறுக்கமுடியாமல் அந்த விளாமரத்தின் நுனிக்கிளைகள் முறிந்து விழ, அவற்றுடன் அவ்வஸுரனும் கீழே விழுந்தான். இடைப்பிள்ளைகள் அனைவரும் அவ்வஸுரன மாண்டுகீழே விழுந்ததைக் கண்டு நல்லது நல்லதென்று புகழ்ந்தார்கள். ஆகாயத்தில் தேவதைகளும் ஸந்தோஷம் அடைந்து புஷ்பவர்ஷங்களைப் பெய்தார்கள. அந்த ராமக்ருஷ்ணர்கள் ஸமஸ்தலோகங்களுக்கும் முக்யரக்ஷகர்களாயிருந்தும் வத்ஸபாலகளாகி ஒருகால் காலையில் புசிக்கவேண்டிய பழைய அன்னத்தை எடுத்துக்கொண்டு பசுவின் கன்றுகளை மேய்த்துக்கொண்டு திரிந்தார்கள். ராமக்ருஷ்ணாதிகளான இடைப்பிள்ளைகள் அனைவரும் தங்கள் தங்கள் கன்றினங்களைப் பாதுகாத்துக்கொண்டு ஜலாசயத்தின் அருகாமையில் சென்று கன்றுகளைத் தண்ணீர குடிப்பித்துத் தாங்களும் குடித்தார்கள். அவர்கள் அவ்விடத்தில் ஒரு ஜந்துவைக் கண்டார்கள். வஜ்ராயுதத்தினால் பிளவுண்டு நழுவின பர்வதசிகரம்போன்ற அதைக் கண்டு பயந்தார்கள். அந்த ஜந்து பகனென்னும் மஹாஸுரன். அவன் கொக்கின் உருவந்தரித்திருந்தான. மஹாபலிஷ்டனும் கூரான மூக்குடையவனுமாகிய அந்தப் பகாஸுரன் திடீரென்று க்ருஷ்ணனைப் பிடித்து விழுங்கினான். ராமனைத் தவிர மற்ற இடைப்பிள்ளைகள் ஸ்ரீக்ருஷ்ணனைப் பகாஸுரன் விழுங்

1. வத்ஸரூபியான—கன்றினுருவந்தரித்த.

கக் கண்டு ப்ராணனை இழந்த இந்த்ரியங்கள்போல ஸ்ரீக்ருஷ்ணனைப் பிரிந்து அசேதனங்கள்போன்றிருந்தார்கள். ஜகத்திற்கெல்லாம் தந்தையாகிய ப்ரஹ்ம தேவனுக்குந் தந்தையாயினும் லீலையினால் இடைப்பிள்ளையாய்த் தோன்றின மஹாபுருஷனாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் விழுங்கினமாத்ரத்தில் [1]தாலுமூலங்களையெல்லாம் அக்னியைப்போல் கொளுத்தக்கண்டு அதைப் பொறுக்கமுடியாமல் அவ்வஸுரன் உடனே அவனைக் கக்கினான் அவன் உருக்குலையாமல் க்ஷேமமாயிருக்கக் கண்டு அவ்வஸுரன் மூக்கினால் அவனைக் கொல்ல விரும்பிக் கோபத்துடன் மீளவும் அவன்மேல் எதிர்த்தோடினான். தன்னைப் பெற விரும்பும் ஸத்புருஷர்களுக்குத் தானே உபாயமாயிருப்பவனும் தேவதைகளுக்கு ஸந்தோஷத்தை விளைப்பவனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் தன்னை எதிர்த்து வருகின்றவனும் கம்ஸனுக்கு நண்பனுமாகிய அந்தப் பகாஸுரனை ஹுங்காரத்தினால் தடுத்து இடைப்பிள்ளைகள் பார்த்துக்கொண்டிருக்கையில் கைகளால் மூக்குகளைக் கீழும் மேலுமாய்ப் பிடித்துக்கொண்டு கோரையைக் கிழிப்பதுபோலக் கிழித்தான். அப்பொழுது தேவலோகவாஸிகள் பகாஸுரனைக் கொன்ற க்ருஷ்ணன்மேல் நந்தனவனத்தில் பூத்த மல்லி முதலிய புஷ்பங்களை இறைத்தார்கள். பேரி சங்கு முதலிய வாத்ய கோஷங்களுடன் ஸ்தோத்ரஞ் செய்தார்கள். இடைப்பிள்ளைகள் அதைக் கண்டு மிகவும் வியப்புற்றார்கள். இந்த்ரியங்கள், போனப்ராணன் தன்ஸ்தானத்திற்கு வந்து சேரப்பெற்றுக் களிப்பதுபோல, அவ்விடைப்பிள்ளைகள் பகாஸுரனுடைய வாயினின்று விடுபட்ட க்ருஷ்ணனைப் பெற்றுக் கட்டியணைத்துக் களித்துக் கன்றுகளையெல்லாம் ஒன்றுசேர்த்து ஓட்டிக்கொண்டு கோகுலத்

1. தாலுமூலம்—தவடையின் அடிப்பாகம்.

திற்கு வந்து பகாஸுரனைக் கொன்ற அந்த வ்ருத்தாந் தத்தை இடையர்களுக்குச் சொன்னார்கள். கோபர் களும் கோபிமார்களும் அதைக் கேட்டு வியப்புற்று மிகுந்த ப்ரீதியுடையவர்களாகையால் த்வரையுடன் வந்து அந்த ஸ்ரீக்ருஷ்ணனை லோகாந்தரத்தினின்று வந்தவனைப்போல் கண்டு த்ருப்தி அடையாத கண்களுடையவர்களாகிப் பெரிய ஆவலுடன் பார்த்துக்கொண்டிருந் தார்கள். 'ஆ! இதென்ன ஆச்சர்யம்! ஆ! இதென்ன வருத்தம்! இப்பாலகனுக்கு மரணகாரணங்கள் பலவும் நேர்ந்தன. ஆயினும் இவனைக் கொல்ல வந்தவர்கள தங்கள் கருத்து ஈடேறப் பெறுமை மாத்ரமேயல்லாமல், அனிஷ்டத்தையும் பெற்றார்கள். பூர்வஜன்மத்தில் எவ ரால் எவர்க்குப் பயம் உண்டாயிற்றோ, அவர்களுக்கு மற்றவர்களால் பயம் உண்டாகும். இவர்கள் பயங்கர மான காட்சியுடையவர்களாயினும் இப்பாலகனைப் பரிப விக்க வல்லராகிறதில்லை, இவனைக் கொல்லவேண்டு மென்று விரும்பி விட்டில்கள் அக்னியில் விழுவது போல, இவனமேல் விழுந்து தாங்களே மாண்டுபோகின் றார்கள். ஆ! ஆச்சர்யம், ப்ரஹ்மவித்துக்களான அந் தணர்களின வாக்குகள ஒருகாலும் பொய்யாகிறதில்லை. கர்க்கா எங்ஙனம மொழிந்தாரோ, அதை அங்ஙனமே நாம் அனுபவித்தோம' என்று நந்தன முதலிய கோபர் கள் மனக்களிப்புடன் க்ருஷ்ணராமர்களின் கதையைச் சொல்லி ஸந்தோஷமுற்று ஸம்ஸாரவேதனையைச் சிறி தும் அறியாதிருந்தார்கள். இங்ஙனம் வீடுகட்டுவது அணைகட்டுவது குரங்குகள்போலக் கிளம்பிக் குதிப்பது முதலிய பலவகையான கௌமாரசேஷ்டைகளால் விளை யாடிக்கொண்டிருந்து கௌமாராவஸ்தையைக் கடந் தார்கள். பதினொன்றாவது அத்யாயம்.

அகாஸுரவதம்

*ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் விடியற்காலையில் எழுந்து நண்பர்களான கன்று மேய்க்கும் பிள்ளைகளை எழுப்பிக்கொண்டு வனத்திலேயே முதல்வேளைபோஜனஞ் செய்ய விரும்பிக் கன்றுகளை ஓட்டிக்கொண்டு அழகிய வேணுநாதத்துடன் புறப்பட்டான். ஒருவர்க்கொருவர் நட்புடைய அனேகமாயிரங் கோபகுமாரர்கள் அழகிய உறி கொம்பு குழல் இவைகளைக் கையில் ஏந்திக்கொண்டு ஆயிரத்திற்கு மேற்பட்டவைகளான தங்கள் தங்கள் கன்றுகளை முன்னிட்டுக்கொண்டு அந்த ஸ்ரீக்ருஷ்ணனோடுகூடவே மனக்களிப்புடன் புறப்பட்டார்கள். பிறகு அந்தக் கோபகுமாரர்கள் தங்கள் தங்கள் கன்றுகளைக் கணக்கற்றவைகளான ஸ்ரீக்ருஷ்ணனுடைய கன்றுகளுடன் ஒரு மந்தையாகச் சேர்த்து மேய்த்துக்கொண்டு பாலக்ரீடைகளால் விளையாடினார்கள். அவர்கள் தங்கள் தாய்மார்களால் பாலமணி குந்தமணி ரத்னம் பொன் இவைகளைப் பூட்டி அலங்காரம் செய்யப்பெற்றவர்களாயினும் காய் தளிர் பூங்கொத்து புஷ்பங்கள் மயிலிறகு கைரிகாதிதாதுக்கள் ஆகிய இவைகளால் தங்களை அலங்கரித்துக்கொண்டார்கள். அவர்கள் ஒருவர்க்கொருவருடைய உறி முதலியவற்றைத் திருடி ஒளித்துவைப்பதும், அவற்றிற்குடையவர்கள் தேடி யெடுப்பார்களாயின், அவற்றை அவ்விடத்தினின்று தூரத்தில் வீசியெறிவதும், அங்குப் போய் எடுக்கப்போவார்களாயின அவற்றை அவ்விடத்தினின்று தூரத்தில் வீசியெறிவதும் சிரித்து மீண்டு தாங்களே எடுத்துக்கொள்வதுமாகி விளையாடினார்கள்.

---

*இது முதல் மூன்று அத்யாயங்கள் பின்புள்ளவர்களால் சேர்க்கப்பட்டனவென்று கூறுகிறார்கள்.

ஸ்ரீக்ருஷ்ணன் வனத்தின் சோலையைப் பார்க்க விரும்பித் தூரம் போகையில் கோபகுமாரர்கள் நான் முன்னே நான் முன்னே யென்று போட்டியிட்டு விரைவுடன் ஓடிச்சென்று அவனைத் தொட்டுக் களித்தார்கள். சிலர் வேணுகானஞ் செய்வதும், சிலர் கொம்புகளை ஊதுவதும், சிலர் அதற்கு ஒத்திருக்குமாறு பாடுவதும், சிலர் குயில்களோடு கூடக் கூவுவதும், சிலர் பக்ஷிகளின் நிழல்களைத் தொடர்ந்தோடுவதும், சிலர் ஹம்ஸங்களோடு அழகாக நடப்பதும், சிலர் கொக்குகளோடு கூட உட்காருவதும், சிலர் மயில்களோடுகூடக் கூத்தாடுவதும், சிலர் குரங்குகளின் வாலைப் பிடித்திழுப்பதும். சிலர் அந்தக் குரங்குகளோடுகூட மரமேறுவதும், சிலர் அவற்றோடு கூடப் பல்லைக் காட்டுவது மூஞ்சியைக் காட்டுவது புருவத்தை நெரிப்பது முதலிய விகாரமான சேஷ்டைகளைச் செய்வதும், சிலர் ஒரு கிளையினின்று மற்றொரு கிளைக்குக் கிளம்பிக் குதிப்பதும், சிலர் தவளைகளோடு கூடக் கிளம்பிக்கிளம்பிச் செல்வதும், சிலர் ஆற்று வெள்ளத்தில் நீந்துவதும், சிலர் தங்கள் பரதிபிம்பங்களைப் பரிஹஸிபபதும், சிலர் ப்ரதித்வனிகளை வைவதுமாயிருந்தார்கள். [1]ப்ரஹ்மாநந்தானுபவத்தினால் தனக்குத் தாஸர்களாகிய ஸத்புருஷர்களுக்குப் பரதெய்வமாய்த் தோற்றுகின்றவனும் அவனுடைய மாயையினால் மதிமயங்கின மூடஜனங்களுக்கு ஸாதாரணமானிடக் குழவியாய்த் தோற்றுகின்றவனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணனுடன் மஹாபுண்யசாலிகளான கோபகுமாரர்கள் இங்ஙனம் விளையாடினார்கள். பல ஜன்மங்களில் உபவாஸா

---

1. ப்ரஹ்மாநந்தானுபவஜனித ப்ரீதிகாரித தாஸ்யத்தை அடைந்தவர்கள். அதாவது-ப்ரஹ்மாநந்தானுபவத்தினால் உண்டான ப்ரீதியினால் தூண்டப்பட்டு மேன்மேலும் தாஸ்யவ்ருத்தியிலிருப்பவர்க

திகளால் சரீரத்தை உலர்த்தி அதனால் பரிசுத்தமான மனமுடைய யோகிகளுக்குங் கூட எவனுடைய பாத தூளி கிடைக்க அரிதோ, அப்படிப்பட்ட பகவானே தானே இந்த இடைச்சேரியிலுள்ளவர்கள் கண்களுக்கு விஷயமானார். இவர்களுடைய பாக்யத்தை என்னென்று சொல்லுவேன்? இது மிகவும் அற்புதமாயிருக்கின்றது. இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணனும் மற்ற கோபகுமாரர்களும் விளையாடிக்கொண்டிருக்கையில், அகனென்னும் மஹாஸுரன் அவர்கள் ஸுகமாக விளையாடிக் கொண்டிருப்பதைக் கண்டு பொறுக்க முடியாமல் அவர்களை எதிர்த்து வந்தான். அம்ருதபானஞ் செய்து மரணபயமற்ற தேவதைகளுங்கூடத் தாங்கள் ஸுகமாக ஜீவித்திருக்க விரும்பி 'இவன் எப்பொழுது சாவானோ' என்று அவனுடைய நாசத்தை எதிர் பார்த்துக்கொண்டிருந்தார்கள். பகி பகன இவர்களுக்குப பின பிறநதவனாகிய அந்த அகாஸுரன் கம்ஸனால் கட்டளையிடப்பெற்று க்ருஷ்ணன் முதலிய சிறு பிள்ளைகளைப் பார்த்து 'அதோ புலப்படுகின்ற இவர்களுக்குள் இவன என்னுடைய ஸஹோதரனாகிய பகாஸுரனைக் கொன்றவன். ஆகையால் இவனைப் பலராமன் முதலிய மற்ற பிள்ளைகளுடன கொன்று விடுகிறேன். இந்த க்ருஷ்ணாதிகளை என் ஸ்னேஹிதனான பகனுக்கு [1] எள்ளுஞ் ஜலமுமாகச் செய்வேனாயின், அப்பொழுது இடைச் சேரியிலுள்ளவர்கள அனைவரும் மாண்டாற்போலவே. ப்ராணன் போனபின்பு சரீரங்களில் என்ன சிந்தை இருக்கிறது? ப்ராணன் போனபின்பு சரீரம் உடனே நசித்துப் போமல்லவா? ப்ராணிகள பிள

1. எள்ளுஞ் ஜலமும்போல் த்ருப்தியை விளைக்குமாகையால் இவர்களை வதிப்பதே என் ஸ்னேஹிதனுக்கு எள்ளுஞ் ஜலமுமென்று கருத்து. இவர்களைக் கொன்று என் ஸ்னேஹிதனுக்கு த்ருப்தியை விளைக்கிறேனென்க.

ளைகளையே ப்ராணனாகவுடையவர்கள். ப்ராணன்கள் போன்ற பிள்ளைகளை நான் கொன்றபின்பு இடைச்சேரியிலுள்ளவர்கள் தாங்களே மாண்டு போவார்களாகையால், அவர்களைப்பற்றித் தனியே யத்னஞ் செய்யவேண்டியதில்லை' என்று நிச்சயித்துக்கொண்டு துர்ப்புத்தியுடைய அந்த அகாஸுரன் ராமக்ருஷ்ணாதிகளை விழுங்கிவிடவேண்டுமென்று விரும்பி யோஜனைதூரம் நீண்டு பெரிய பர்வதம்போலப் பருத்துக் குஹைபோன்ற வாயைத் திறந்துகொண்டிருக்கிற அற்புதமான பெரிய மலைப்பாம்பின உருவத்தைத் தரித்து அவர்கள் போகும் வழியில் படுத்திருந்தான். அந்த மலைப்பாம்பின் கீழுதடு பூமியிலும் மேலுதடு மேகமண்டலத்திலுமாயிருந்தன. வாயைத் திறந்துகொண்டிருக்கிற அந்த மலைப்பாம்பின் கடைவாய்கள் குஹைகள்போன்றிருந்தன. அதனுடைய கோரைகள் பர்வத சிகரங்கள் போன்றிருந்தன. அதனுடைய உள்வாயெல்லாம் பெரிய அந்தகாரம் மூடியிருந்தது. அதன நாக்கு நீண்ட வழிபோன்றிருந்தது. அதன் மூச்சுக்காற்று பெரிய நெருப்புக்காற்றுப்போன்றிருந்தது அதன கண்கள் காட்டுத்தீபோல எரிக்குந்திறமையுடையவைகளாயிருந்தன. கோபகுமாரர்கள் அனைவரும் வாயைத்திறந்துகொண்டிருக்கிற வாஸ்தவமான அந்த மலைப்பாம்பையே ப்ருந்தாவனத்தினுடைய அழகிய நிலைமையென்று ப்ரமித்து விபரீதமாக (வாயைத் திறந்துகொண்டிருக்கிற மலைப்பாம்பு போலிருக்கிறதென்று) உத்ப்ரேக்ஷித்தார்கள். 'ஓ நண்பர்களே ! இதோ முன்னே புலப்படுகிற இவ்வுருவம் ஒரு ஜந்துபோலத் தோன்றுகிறதல்லவா? மற்றும், நம்மை விழுங்குவதற்கு வாயைத் திறந்துகொண்டிருப்பதுபோலத் தோன்றுகிறதல்லவா !' என்று சில பிள்ளைகள் சொல்ல, அதைக் கேட்டு வேறு சில பிள்ளைகள் 'நண்பர்களே !

ஸூர்யகிரணங்களால் சிவந்திருக்கிற மேகம் மேலுதடு போலவும் அந்த மேகத்தின் காந்தியால் சிவந்திருக்கின்ற தரை கீழுதடுபோலவும் புலப்படுகின்றன; பாருங்கள். இடப்பக்கத்திலும் வலப்பக்கத்திலுமுள்ள பர்வத குஹைகள் கடைவாய்கள் போன்றிருக்கின்றன. இந்த இடம் வலங்களிலுள்ள பர்வத சிகரங்களின வரிசைகள் கோரைப்பற்களோடொத்திருக்கின்றன. அகன்று நீண்டிருக்கிற இந்த மார்க்கம் அதன் நாக்கை நிகர்த்திருக்கின்றது. இந்தப் பர்வதசிகரங்களினிடையிலுள்ள அந்தகாரம் அதன் உள்வாய்போல் தோன்றுகிறது. காட்டுத்தீயினால் சுட்டிக்கொண்டிருக்கிற இப்பெருங்காற்று மூச்சுக்காற்றுபோல் தோன்றுகிறது; பாருங்கள். காட்டுத்தீயினால் கொளுத்தப்பட்ட ஜந்துக்களின் துர்க்கந்தம் மாம்ஸங்களைத் தின்ற மலைப்பாம்பின் வாய்நாற்றம்போன்றிருக்கிறது. கன்றுகளும கன்றுமேய்ப்பவர்களுமாகிய நாமெல்லாரும் நுழைவோம். நம்மை விழுங்கிவிடுமோ என்ன? அப்படி விழுங்குமாயின் இதுவும பகாஸுரனைப்போல் க்ஷணத்திற்குள் இந்த ஸ்ரீக்ருஷ்ணனால் நாசம அடையப் போகின்றது' என்று மொழிந்து பகாஸுரனைக் கொன்ற ஸ்ரீக்ருஷ்ணனுடைய அழகிய முகத்தைக் கண்டு உரக்கச் சிரிப்பதும கைகளால் தாளமிடுவதுமாகி நடந்து சென்றார்கள். இங்ஙனம இடைப்பிள்ளைகள் 'அது உண்மையான மலைப்பாம்பு' என்பதை அறியாமல ஒருவர்க்கொருவர் பேசுகிற பொய்வார்த்தையைக் கேட்டு ஸ்ரீக்ருஷ்ணன உண்மையான பாம்பையே இவர்கள் பொய் செய்கிறார்களென்று சிந்தித்து ஸமஸ்த பூதங்களுடைய ஹ்ருதயங்களிலும் வஸிப்பவனாகையால் ராக்ஷஸன மலைப்பாம்பின் உருவந தரித்திருக்கிறானென்பதை அறிந்து தன்னைச்சேர்ந்தவைகளான கன்றுகளை

யும் கன்று மேய்க்கும் பிள்ளைகளையும் அதில் நுழையாத படி தடுக்கவேண்டுமென்று நினைத்துக்கொண்டிருக்கையில், அதற்குள்ளாகவே கன்றுகளும் கன்றுமேய்க்கும் பிள்ளைகளுமாகிய அவையெல்லாம் அவ்வஸுரனுடைய வயிற்றிற்குள் நுழைந்தன. ஆனால் ஜீர்ணமாகவில்லை. அவ்வஸுரன் தன் ஸ்னேஹிதனான பகாஸுரனுடைய வதத்தை நினைத்துப் பகசத்ருவான ஸ்ரீக்ருஷ்ணன் நுழைவதை எதிர்பார்த்துக்கொண்டிருந்தானாகையால் தன்வயிற்றில் நுழைந்த கன்றுகளையும் கன்று மேய்க்கும் பிள்ளைகளையும ஜரிக்கும்படி செய்யவில்லை. எல்லார்க்கும் அபயங் கொடுப்பவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் தன்னையொழிய வேறு நாதனற்றவர்களும் தீனர்களுமாகிய அவர்களெல்லோரும் தன் கையினின்று நழுவி ம்ருத்யுவைப்போன்ற அவ்வஸுரனுடைய ஜாடராக்னிக்கு இரையானமையைக் கண்டு தெய்வாதீனமாய் நேர்ந்தமைக்கு வியப்புற்றுக் கருணையால் கலங்கி 'துர்ப்புத்தியாகிய இவ்வஸுரன் பிழையாமல் நசித்துப்போவதும் ஸாதுக்களாகிய இந்த கோபகுமாரர்கள் அழியாமல் ஜீவிப்பதுமாகிய இவ்விரண்டும் ஒரே ஸமயத்தில் எப்படி நேரும்? இதற்காக நாம் என்ன செய்யவேண்டும்?' என்று தனக்குள் சிந்தித்து ஸர்வஜ்ஞனாகையால் தானே அதற்குச் செய்ய வேண்டிய கார்யத்தை ஆராய்ந்தறிந்து தன்னைப் பற்றினவர்களுடைய வருத்தங்களைப்போக்குந் திறமையுடைய தானும அவ்வஸுரனுடையவாயில் நுழைந்தான். அப்பொழுது மேகத்தில மறைந்துகொண்டிருக்கிற தேவதைகள் பயந்து ஹாஹாவென்று இரைச்சலிட்டார்கள். அகாஸுரனுடைய பந்துக்களான கம்ஸன் முதலிய ராக்ஷஸர்கள் ஸந்தோஷித்தார்கள். அழிவற்றவனும் ஷாட்குண்ய பூர்ணனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் தேவ

தைகள் செய்த ஹாஹாகாரத்தைக் கேட்டுத் தான் ஒருவித கெடுதியுமின்றித் தன்னையும தன்னைச் சேர்ந்த பிள்ளைகளையும் கன்றுகளையும சூர்ணஞ் செய்ய விரும்புகிற அவ்வஸுரனுடைய கழுத்தில் சீக்ரமாக வளர்ந்தான். அப்பொழுது பெருந்தேஹமுடைய அவ்வஸுரன மூக்கு ரந்த்ரங்கள் தடை படப்பெற்றுக் கண்கள் பிதுங்கி இப்படியும் அப்படியும்சுழன்று வருந்திக்கொண்டிருக்கையில அவனுடைய சரீரத்திற்குள் காற்று தடைபட்டு வளாந்து மண்டையைப் பிளந்துகொண்டு வெளிவந்தது. அங்ஙனம் வெளிவந்த காற்றுடன ஸமஸ்த ப்ராணன்களும் வெளியாகையில், போகமோக்ஷங்களைக் கொடுக்கவல்ல மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் மரணம் அடைந்தாற்போலிருக்கிற கன்றுகளையும் நண்பர்களான கன்று மேய்க்கும் பிள்ளைகளையும் அம்ருதஞ் சொரிகிற தன கண்ணோக்கத்தினால் எழுப்பிக்கொண்டு அவர்களுடன் மீளவும் வாய் வழியாகவே வெளியில் வந்து சேர்ந்தான். பருத்திருக்கின்ற அந்த மலைப்பாம்பின் சரீரத்தினின்று அற்புதமாயிருப்பதும் ஜ்ஞானத்தினால் பெரியதும் ஸ்வயம்ப்ரகாசமுமாகிய ஆத்மஸ்வரூபம கிளம்பித் தன் தேஜஸ்ஸினால் பத்துத் திசைகளையும் விளங்கச் செய்துகொண்டு ஸ்ரீக்ருஷ்ணபகவான் அந்த மலைப்பாம்பினுருவத்தினின்று வெளிவருவதை ஆகாயத்தில் எதிர்பார்த்துக்கொண்டிருந்து அவன் வெளிவந்த பிறகு தேவதைகள் பார்த்துக்கொண்டிருக்கையில் அவனிடத்தில் ப்ரவேசித்தது. அது மிகவும் ஆச்சர்யமாயிருந்தது. அப்பால் தேவதைகள் மிகவும் ஸந்தோஷம் அடைந்து புஷ்பங்களாலும், அப்ஸரமடந்தையர்கள் நாட்யங்களாலும்,நன்கு பாடுபவர்களான கந்தர்வர்கள் பாட்டுக்களாலும், வாத்யங்களை ஏந்தினவர்



2148. அகாஸுரவதம்.

கள் வாத்யங்களாலும், ப்ராஹ்மணர்கள் ஸ்தோத்ரங்களாலும், ப்ருத்ய கணங்கள் ஜயசப்தங்களாலும் தங்கள் கார்யத்தை நிறைவேற்றின ஸ்ரீக்ருஷ்ணனுக்குப் பூஜை செய்தார்கள். ப்ரஹ்மதேவன் அற்புதமான அந்த ஸ்தோத்ரங்கள் அழகிய வாத்யகோஷங்கள் பாட்டுக்கள் சப்தங்கள் முதலிய பல மஹோத்ஸவங்களையும் மற்றும் பல மங்களத்வனிகளையும் தன் வாஸஸ்தானத்திற்கு அருகாமையில் கேட்டு விரைந்து தோடிவந்து ஸ்ரீக்ருஷ்ணனுடைய மஹிமையைப் பார்த்து வியப்புற்றான். மன்னவனே! அற்புதமான அந்த மலைப்பாம்பின் தோல் உலர்ந்து வெகுகாலம் கோகுலவாஸிகளுக்கு க்ரீடாஸ்தானமாயிருந்தது. இது ஒரு ஆச்சர்யமன்று. மேன்மையுடைய தேவரிஷ்யாதிகளும் தாழ்மையாயிருக்கப்பெற்ற ப்ரஹ்மாதிகளுக்கும் மேலாயிருப்பவனும் உலகங்களையெல்லாம் படைப்பவனும் மாயையினால் மானிடக் குழவியின உருவத்தை ஏற்றுக்கொண்டிருப்பவனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய ஸ்பர்சம் நேர்ந்தமாத்ரத்தினால் அகாஸுரனுங்கூடப் பாபங்களையெல்லாம் உதறி அஸத்துக்களுக்கு மிகவும் கிடைக்க அரிதான பரமாத்ம ஸாம்யத்தைப் பெற்றானென்னுமதுவே பெரிய ஆச்சர்யம். மன்னவனே! மனோபாவத்தினால் ஏற்பட்ட பகவச்சக்தியுடையதாகையால் மனோமயமென்று சொல்லப்படுகிற இந்தப் பகவானுடைய அர்ச்சாரூபமான திருமேனியை ஒருகால் மனத்தில் த்யானிப்பானாயின், அது அவனுக்கு மோக்ஷத்தைக் கொடுக்கிறது. நித்யாநந்த ஸ்வரூபனும் பராக்ருத குணங்களற்றவனும் இணையெதிரில்லாதவனுமாகிய ஒன்றான அந்தப் பகவானையே மனத்தில் த்யானிப்பானாயின், அவன் மோக்ஷத்தைக் கொடுப்பானென்பதைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? பகவான்

கௌமார வயதில் ம்ருத்யுஸ்வரூபனான அகாஸுரனிடத்தினின்று தங்களை விடுவித்த இந்த வ்ருத்தாந்தத்தை அப்பொழுதே கண்டனுபவித்த இடைப்பிள்ளைகள் பௌகண்டக வயதில் அப்பொழுதுதான் நடந்ததாக வியப்புடன் இடைச்சேரியிலுள்ளவர்களுக்குச் சொன்னார்கள். பன்னிரண்டாவது அத்யாயம் முற்றிற்று.

## வத்ஸாபஹார வ்ருத்தாந்தம்.

ஸூதர் சொல்லுகிறார்:—ஓ அந்தணர்களே! பரீக்ஷித்து மன்னவன தன்னைப் பாதுகாத்த பகவானுடைய அற்புதமான வ்ருத்தாந்தத்தை இங்ஙனம் கேட்டு மீளவும் பரிசுத்தமான அந்தப் பகவானுடைய வ்ருத்தாந்தத்தைப்பற்றியே ஸ்ரீசுகமுனிவரை வினவினான். அவன் அந்த ஸ்ரீக்ருஷ்ணபகவானால பறிக்கப்பட்ட மனமுடையவன். ஆகையால அவனுடைய வ்ருத்தாந்தத்தை எவ்வளவு கேட்கினும த்ருப்தி அடையாமல் மேனமேலும அதையே கேட்கவேண்டுமென்று விருப்பமுற்றிருந்தான்.

பரீக்ஷித்துமன்னவன் சொல்லுகிறான்:—அந்தணரே! காலாந்தரத்தில் நடந்தது எப்படி அக்காலத்தில் நடந்ததாகும். பகவான் கௌமாரவயதில் செய்த வ்ருத்தாந்தத்தை இடைப்பிள்ளைகள் பௌகண்டக வயதில் அறிந்தார்களென்றீரே. அது எப்படி? மஹாயோகியே! அதன் காரணத்தை எனக்குச் சொல்வீராக. அஜ்ஞானாந்தகாரத்தைப் போக்குங் குருவே! அதைக் கேட்கவேண்டுமென்று எனக்குப் பெரிய குதூஹலம் உண்டாயிருக்கின்றது. இதற்குக் காரணம நிச்சயமாகப் பகவானு

டைய மாயையேயென்று எனக்குத் தோற்றுகிறது. மற்றப்படிக்கு இங்ஙனம் சேராது. குரு! நாங்கள் க்ஷத்ரியாதமர்களாயினும் இவ்வுலகத்தில் மிகவும் பாக்யசாலிகள். ஏனென்றால், பரிசுத்தமான ஸ்ரீக்ருஷ்ணனுடைய கதையாகிற அம்ருதத்தை உம்மிடத்தினின்று அடிக்கடி பானஞ் செய்கிறோமல்லவா?

ஸூதர் சொல்லுகிறார்:—இங்ஙனம் வினவப்பெற்ற அந்தச் சுகமுனிவர் மன்னவன் நினைவு மூட்டின பகவானால் இந்த்ரியங்களெல்லாம பறிக்கப்பெற்று மீளவும் மெல்ல ப்ரயத்னப்பட்டு வெளிவிஷயங்களைப்பற்றின அறிவைப் பெற்றுப் பகவத் பக்தர்களில் சிறந்த மன்னவனை நோக்கி இங்ஙனம் மொழிந்தார்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மிகுந்த மதியுடையவனே! நன்றாக வினவினாய். நீ பகவானுடைய கதையைக் கேட்டுக்கொண்டேயிருப்பினும் அடிக்கடி அதைப் புதிதுபுதிதாகச் செய்கின்றனை. ஸாரத்தை அறிந்த ஸத்புருஷர்களின் தன்மை இதுதான். அவர்கள் தங்கள் வாக்கு செவி மனம் இவற்றையெல்லாம் அச்சுதனிடத்திலேயே உபயோகப்படுத்தி அவனையே ஸர்வகாலமும் அனுபவித்துக்கொண்டிருப்பினும், ஸ்த்ரீலோலர்களுக்கு மடந்தையர்களைப்பற்றின வார்த்தைகள் மிகவும் புதிதுபுதிதாகத் தோற்றுவதுபோல, அவர்களுக்கு அச்சுதனுடைய வ்ருத்தாந்தம் க்ஷணந்தோறும் மிகவும் புதிதுபுதிதாகத் தோற்றும். மன்னவனே! சொல்லக்கூடாத ரஹஸ்யத்தையும் உனக்குச் சொல்லுகிறேன்; மனவூக்கத்துடன் கேட்பாயாக. ஆசார்யர்கள் அன்பிற்கிடமபன சிஷ்யனுக்கு ரஹஸ்யத்தையும் சொல்லுவார்களல்லவா? ஸ்ரீக்ருஷ்ணபகவான கன்றுகளையும் கன்று மேய்க்கிற இடைப்பிள்ளைகளையும் ம்ருத்யு

வைப்போன்ற அகாஸுரனுடைய வாயினின்றும் ரக்ஷித்து அவர்களைத் தாமரையோடையின் மணற்குன்றிற்கு அழைத்துக்கொண்டு வந்து இங்ஙனம் மொழிந்தான்.

பகவான் சொல்லுகிறான்:—ஓ நண்பர்களே! இந்த மணற்குன்று மிகவும் அழகாயிருக்கிறது. நம்முடைய விளையாடல்களையெல்லாம் இங்கு நன்றாக உபயோகப் படுத்தலாம். இங்கு மணல் மெதுவாகவும் நிர்மலமாகவும் இருக்கின்றது. இந்தத் தாமரையோடையில் தாமரைமலர்கள் நிரம்பவும் மலர்ந்திருக்கின்றன. அவற்றின் வாஸனையால் வண்டுகளும் மற்றும் பல பறவைகளும் இழுக்கப்பட்டு வந்து மொய்த்துக்கொண்டிருக்கின்றன. இங்குள்ள வ்ருக்ஷங்கள் அவற்றின் த்வனிகளால் ப்ரதித்வனி எழுப்பெற்று அழகாயிருக்கின்றன. நமக்கு இவ்விடத்திலேயே பகல் வளர்ந்துவிட்டது. சாப்பாட்டு வேளை தப்பிப்போகின்றது. நாமும் பசியினால் வருந்தியிருக்கிறோம். ஆகையால் இவ்விடத்திலேயே போஜனஞ் செய்யவேண்டும். கன்றுகள் ஜலங் குடித்து ஸமீபத்திலேயே மெல்லமெல்லப் புல் மேய்ந்துகொண்டிருக்கட்டும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அதைக் கேட்ட பிள்ளைகள் அப்படியே ஆகட்டுமென்று கன்றுகளைத் தண்ணீர் குடிப்பித்துப் புல் முளைத்துப் பச்சென்றிருக்கிற இடத்தில் அவற்றை மடக்கி நிறுத்திப் பகவானுடன் பழைய அன்னங்கட்டிக்கொண்டுவந்த மூட்டைகளை அவிழ்த்துப் புசித்தார்கள். அவ்வரண்யத்தில் க்ருஷ்ணனைச் சுற்றி நாற்புறத்திலும் பலவரிசைகள் மண்டலம் மண்டலமாக ஒருவரோடொருவர் கலந்து இடைவெளியின்றி உட்கார்ந்து அவனுக்கு எதிர்முகமாகி ஸந்தோஷத்தினால் கண்கள் மலரப்பெற்றிருக்கிற இடைப்பிள்ளை

கள் தாமரைமலரில் அதன் காயைச்சுற்றி நெருங்கியிருக்கிற இதழ்கள்போல் விளங்கினார்கள். அவர்களில் சிலர் புஷ்பங்களாலும், சிலர் இலைகளாலும், சிலர் தளிர்களாலும், சிலர் முளைகளாலும், சிலர் காய்களாலும், சிலர் அன்னங் கொண்டுவந்த சிக்கங்களாலும் சிலர் பட்டைகளாலும் போஜன பாத்ரங்களை ஏற்படுத்திக்கொண்டு புஜித்தார்கள். அவர்கள் எல்லாரும் ஸ்ரீக்ருஷ்ணனுடன் கூடித் தங்கள்தங்கள் போஜனத்தின் ருசியைத் தனித தனியே ஒருவர்க்கொருவர் காட்டிக்கொண்டு சிரிப்பதும் சிரிக்கச்செய்வதுமாகிப் புசித்தார்கள். யஜ்ஞங்களில் கொடுக்கபபடுகிற ஹவிர்ப்பாகஙகளைப் புசிக்கும் பரமபுருஷனாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் மாயையினால் மானிடப் பாலகனைப்போல விளையாடலுற்று ஸ்வர்க்கலோகத்து தேவஜனங்கள பார்த்துக்கொண்டிருக்கையில் அரைக்கும அரையாடைக்கும இடையில் குழலையும் வலக்கைமூலையில் கொம்பு கோல்களையும் வலககையில் ருசியுள்ள அன்னக்கவளத்தையும அதற்கு வேண்டிய மாங்காய் முதலிய ஊறுகாய்களை விரல்சநதுகளிலும் தரித்து இடைப்பிள்ளைகளின இடையில் நின்று தன்னைச் சுற்றி உட்காாநதருக்கின்ற நண்பர்களாகிய அப்பிள்ளைகளைப் பரிஹாஸவாக்யங்களால் சிரிக்கச்செய்துகொண்டு புசித்தான். பாரதனே! அந்த இடைப்பிள்ளைகள் இங்ஙனம் ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் நிலைநின்ற மனமுடையவர்களாகிப் புசிததுக்கொண்டிருக்கையில் கன்றுகள் புல்மேய்வதில் விருப்பமுற்று நெடுக்காட்டில் தூரம சென்றன. அந்தக் கன்றுகளைக் காணமல் பயந்திருக்கின்ற நண்பர்களைப் பார்த்து ஸ்ரீக்ருஷ்ணன் அவர்களுடைய பயத்தைப போக்கி 'நீங்கள் போஜனஞ் செய்வதினின்று மீள

வேண்டாம். நான் போய்க் கன்றுகளைத் தேடி ஓட்டிக் கொண்டு வருகிறேன்' என்று மொழிந்து கையில் தரித்த அன்னக்கவளத்தோடுகூடவே மலைகளிலும் மலைக் குகைகளிலும் புதர்களிலும் இன்னம் நெருக்கமான இடங்களிலும் கன்றுகளைத் தேடிக்கொண்டு சென்றான்.

{ ப்ரஹ்மதேவன் தெரியாமல் வந்து கன்றுகளையும் கன்று மேய்க்கும் பிள்ளைகளையும் டறித்துக்கொண்டு போய் ஸ்ரீக்ருஷ்ணன் தானே அவையெல்லாமாய் நடக்கக் கண்டு வியப்புறுதல். }

முன்பு அகாஸுரனிடத்தினின்று பிள்ளைகளையும் கன்றுகளையும் விடுவித்த பகவானுடைய அற்புதச் செயலை ஆகாயத்தில் இருந்து பார்த்துப் பெரு வியப்புற்ற நான்முகன் ஸர்வேச்வரனான இந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய அழகியதான வேறு மஹிமையையும் பார்க்க விரும்பி அந்த ஸமயம் பார்த்துவந்து முதலில் கன்றுகளையும், ஸ்ரீக்ருஷ்ணன் கன்றுகளைத் தேடப்போன பொழுது கன்று மேய்க்கும் பிள்ளைகளையும் கொண்டு போய் வேறிடத்தில் சேர்த்து மறைந்தான். பிறகு கன்றுகளைத் தேடிக்கொண்டு சென்ற ஸ்ரீக்ருஷ்ணன் அங்கெங்கும் அவற்றைக் காணுமல் திரும்பி மணற்குன்றுக்கு வந்து அந்தக் கன்றுமேய்க்கும் பிள்ளைகளையும் காணுமல் அவ்விரண்டையும் வனத்தில் நாற்புறத்திலும் திரிந்து தேடினன். ஸ்ரீக்ருஷ்ணன் கன்றுகளையும் பிள்ளைகளையும் நடுக்காட்டில் வெகுதூரம் தேடியும் அவற்றை எங்கும் காணுமல் ஸர்வஜ்ஞனுகையால் எல்லாம் ப்ரஹ்மதேவன் செய்த கார்யமென்று சீக்ரமாகத் தெரிந்துகொண்டான். பரமபுருஷனை ஸ்ரீக்ருஷ்ணன்

கன்றுமேய்க்கும் பிள்ளைகளின் சிறிய சரீரங்களும் கன்றுகளின் சிறிய சரீரங்களும எவ்வளவோ, அவ்வளவேயுள்ள சரீரங்களும், அவற்றின் கை கால் முதலிய அவயவங்கள் எவ்வளவோ அவ்வளவேயுள்ள அவயவங்களும், கோல் கொம்பு குழல் இலை சிக்கம் இவை எவ்வளவோ அவ்வளவேயான அவைகளும், ஆபரணங்கள ஆடைகள் இவை எவ்வளவோ அவ்வளவேயான அவைகளும், ஸ்வபாவம் குணம் பெயர் உருவம் வயது இவை எவ்வளவோ அவ்வளவேயான அவைகளும், விளையாட்டு முதலியவை எத்தகையனவோ அத்தகையனவேயான அவைகளும் ஆகிய இவையெல்லாம் தானேயாகி 'ஜகத்தெல்லாம் விஷ்ணுமயமே' என்னும் வார்த்தையின் பொருள் மூர்த்தீகரித்தாற்போல விளங்கினான். இங்ஙனம் அந்த ஸ்ரீக்ருஷ்ணன் எல்லாம் தானேயாகித் தானேயாகிய கன்றுமேய்க்கும் பிள்ளைகளால் தானேயான பசுங்கன்றுகளை மேய்த்துத் தன் விளையாடல்களால் க்ரீடித்துக்கொண்டே கோகுலத்திற்குள் நுழைந்தான். அவரவர்கன்றுகளைத் தனித்தனியே பிரித்து அவரவர் தொழுவங்களில் அடைத்து அந்தந்த இடைப்பிள்ளைகளாகி அவரவர்க்ருஹங்களில் ப்ரவேசித்தான். அந்தப் பிள்ளைகளின் தாய்மார்கள் குழலோசையைக் கேட்டு விரைவுடன் எழுந்து தங்கள் பிள்ளைகளென்று நினைத்துப் பரப்ரஹ்மத்தைக் கைகளால் பெரிய ஆநந்தத்துடன் வாரியணைத்து ஸ்னேஹத்தினால் பெருகுவதும் அம்ருதம்போல் மதுரமாயிருப்பதும் மத்யம்போல் மதத்தை விளைப்பதுமாகிய ஸ்தன்யத்தைப் பானஞ் செய்வித்தார்கள். இங்ஙனம் ஸ்ரீக்ருஷ்ணன் ஜாமக்கணக்கின்படி ஸாயங்காலத்தில் க்ருஹத்திற்குச் சென்று அழகிய சேஷ்டைகளால் இடையர்களையும் இடைச்சிகளையும் மனக்களிப்புறச்

செய்துகொண்டு என்னைத் தேய்ப்பது ஸ்னானஞ்செய்விப்பது சந்தனம் குங்குமம் முதலியன பூசுவது அலங்கரிப்பது காப்பிடுவது திலகமிடுவது மையிடுவது முதலிய உபசாரங்களெல்லாம் செய்து உபலாலனஞ் செய்யப்பெற்றிருந்தன. பிறகு மேயப் போயிருந்துவந்த பசுக்கள், தொழுவத்தில் நுழைந்து ஹுங்காரங்களால் அழைக்கப்பெற்று அருகாமையில் வந்திருக்கின்ற கன்றுகளை அடிக்கடி நக்கிக்கொண்டிருந்து மடியினின்றும் பெருகுகிற பாலை ஊட்டக்கொடுத்தன. கன்றுகளும் கன்று மேய்க்கும் பிள்ளைகளும் தானேயாயிருக்கிற அந்த ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் பசுக்களுக்கும் இடைச்சிகளுக்கும் நாள்தோறும் ஸ்னேஹம் வளர்ந்துவருவது ஒன்றுமாத்ரந்தவிரத் தாய்மார்கள் செய்கிற சீராட்டல் முதலிய மற்றவைகளெல்லாம் முன்போலவேயிருந்தன. கன்றுகளிடத்திலும் பசுக்களிடத்திலும் ஸ்ரீக்ருஷ்ணனுக்கு 'இவள் என்னுடைய தாய்; நான் இவளுடைய பிள்ளை' என்கிற மதிமயக்கந்தவிர மற்ற பிள்ளைத்தனமெல்லாம் முன்போலவே யிருந்தது. இடைச்சேரியிலுள்ளவர்களுக்குத் தங்கள் பிள்ளைகளைக்காட்டிலும் ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் முன்னமே இடைவிடாத பெருமபரீதி உண்டாயிருந்தது. இப்பொழுது தங்கள் பிள்ளைகளிடத்திலும் ஒருவர்ஷம் வரையில் தினந்தோறும் எல்லையில்லாமல் ஸ்ரீக்ருஷ்ணனிடத்திற்போலவே ப்ரீதி வளர்ந்துவந்தது. இங்ஙனம் கன்றுகள் கன்று மேய்க்கும் பிள்ளைகளென்னும் வ்யாஜத்தினால் தானே தன்னைப் பாதுகாத்துக்கொண்டு ஒருவர்ஷம்வரையில் வனத்திலும் கோகுலத்திலும் விளையாடிக்கொண்டிருந்தான். ஒருவர்ஷம் நிரம்புவதற்கு ஐந்தாறு நாள்கள் குறைவாயிருக்கையில் ஒருநாள் ஸ்ரீக்ருஷ்ணன் கன்றுகளை மேய்த்துக்கொண்டு பலராமனுடன் வனத்

திற்குச் சென்றான். அப்பொழுது கோவர்த்தனபர்வதத்தின் நுனியில் வெகுதூரத்தில் புல்மேய்ந்துகொண்டிருக்கும் பசுக்கள் இடைச்சேரியின் ஓரத்தில் மேய்கிற கன்றுகளைக் கண்டன. அங்ஙனம் கண்ட பசுமந்தையிலுள்ள பசுமாடுகளெல்லாம் அக்கன்றுகளிடத்தில் ஸ்னேஹத்தினால் இழுக்கப்பட்டுத் தங்களை மறந்து, போகவொட்டாமல் தடுக்கிற மேய்க்கும் இடையர்களையும் கடந்து காடுமேடாகி நடக்கமுடியாத குறுக்குவழியே சென்று பெருவோட்டமாக ஓடுகின்றமையால் பின்கால்கள் இரண்டும் முன்கால்களோடிணைந்து இரண்டுபாதங்களால் நடப்பவைபோன்று கழுத்தை முசுப்போடிணைத்து முகத்தையும் வாலையும் உயரத்தூக்கிக்கொண்டு மடியினின்று நாற்புறத்திலும் பால் பெருகப்பெற்று ஹுங்காரங்களோடு சேரியின அருகாமைக்குப் போயின. பசுக்கள் பின்னணைக் கன்றுடையவைகளாயினும் முன்னணைக்கன்றுகளான அக்கன்றுகளின அங்கங்களை விழுங்குபவைபோன்று நக்கிக்கொண்டு தங்கள் மடியில் பெருகுகின்ற பாலை அவற்றிற்கு ஊட்டக்கொடுத்தன. இடையர்கள் அந்தப்பசுக்களைத் தடுப்பதற்குத் தாங்கள் பட்ட ப்ரயாஸங்களெல்லாம் வீணானமையால் உண்டான வெட்கத்துடனும் பெரிய கோபத்துடனும் நடக்கமுடியாத மூலைவழியே வந்த வருத்தத்துடனும் அவ்விடம் வந்து பசுக்களோடும் கன்றுகளோடும் கூடியிருக்கின்ற தங்கள் பிள்ளைகளைக் கண்டார்கள். பிறகு அவர்களைக் கண்டமாத்ரத்தினால் தலையெடுத்த ப்ரேமரஸத்தில் முழுகின மனமுடையவர்களாகி வெட்கம் கோபம் வழிநடந்துவந்த வருத்தம் இவைகளால் அவர்களையும் அடிக்கவந்தவர்கள் கோபம் தணியப்பெற்றமை மாத்ரமேயல்லாமல் அனுராகமும் உண்டாகப்பெற்றுக் கைக

ளால் வாரியெடுத்து அணைத்து உச்சி மோந்து என்று மில்லாத பெருங்களிப்புற்றார்கள். இங்ஙனம் பசுக்களோடுகூட இடையர்களும் தங்கள் பிள்ளைகளின் ஆலிங்கனத்தினால் ஸந்தோஷம் அடைந்து பெரிய வருத்தத்துடன் அவர்களை விட்டுப்பிரிந்து அப்புறம் சென்று அவர்களைப்பற்றிய நினைவினால் கண்ணீர் பெருகப் பெற்றிருந்தார்கள். பலராமன் கோபஸ்த்ரீகளுக்கு முலை தவிர்ந்த முன்னணைப்பிள்ளைகளிடத்தில் க்ஷணந்தோறும் ப்ரீதி வளர்ந்து வருவதையும், ஆவலின் மிகுதியையும் கண்டு அதற்குக் காரணந்தெரியாமல் அதைக்குறித்துச் சிந்தித்தான்:— 'இடைச்சேரியிலுள்ளவர்களுக்கு ஸர்வாந்தராத்மாவான வாஸுதேவஸ்வருபனாகிய ஸ்ரீக்ருஷ்ணனிடத்திற்போலத் தங்கள் பிள்ளைகளிடத்திலும் கூட இப்பொழுது சிலநாளாக என்றுமில்லாத ப்ரீதி வளர்ந்து வருகின்றது. இதற்குமுன்பு அவர்களுக்கு இவ்வளவு ப்ரீதி ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் மாத்ரம் உண்டாயிருந்ததேயன்றித் தங்கள் பிள்ளைகளிடத்தில் இவ்வளவு ப்ரீதி என்றும் கிடையாது. இதென்ன? ஆச்சர்யமாயிருக்கின்றதே! இதென்ன மாயையோ? தேவதைகளின் மாயையோ? அல்லது மனுஷ்யர்களின் மாயையோ? அஸுரர்களின் மாயையோ? எனக்கு இங்ஙனம் தோற்றுகிறது. பெரும்பாலும் என் ஸ்வாமியாகிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய மாயையே இது. மற்றவர்களின் மாயை ஸகலஜனங்களையும் மதிமயங்கச் செய்யுமேயன்றி என்னை மதிமயங்கச்செய்யுந்திறமையுடையதன்று' என்று சிந்தித்துப் பலராமன் திவ்யஜ்ஞானமாகிற நேத்ரத்தினால் கன்றுகளையும் கன்றுமேய்க்கும் பிள்ளைகளையும் ஸ்ரீக்ருஷ்ணஸ்வருபங்களாகக் கண்டான். அந்தப் பலராமன்

ஸ்ரீக்ருஷ்ணனைப் பார்த்து, 'நாதா! கன்றுகள் ரிஷிகளின் அம்சங்களென்றும் கன்றுமேய்க்கும் பிள்ளைகள் தேவதைகளின் அம்சங்களென்றும் நான் இதுவரையில் அறிந்திருந்தேன். இப்பொழுது அப்படி இல்லை. 'கன்றுகள் கன்றுமேய்க்கும் பிள்ளைகள்' என்னும் பேதத்தை உட்கொண்ட அறிவிலும் நீயே விஷயமாகத் தோற்றுகின்றனை. ஆகையால் நீ எல்லாவற்றையும் தனித்தனியே விவரித்து எப்படி நடந்ததோ அப்படியே எனக்குச் சொல்வாயாக' என்று வினவினான். பிறகு ஸ்ரீக்ருஷ்ணன் நடந்ததையெல்லாம் சுருக்கமாகச் சொல்லக்கேட்டுப் பலராமன் தெரிந்துகொண்டான். ப்ரஹ்மதேவனும் தன்னுலகஞ் சென்று அங்குத் தன்னைப்போலவே நான்முக உருவங்கொண்ட ஸ்ரீக்ருஷ்ணனால் மதிமயங்கின த்வாரபாலகர்களால் பரிபவஞ் செய்யப்பெற்றுத் திரும்பிவந்தான். அந்த ப்ரஹ்மதேவன் தனக்கு ஏற்பட்ட காலக்கணக்கின்படி ஒரு நொடிப்பொழுதில் ஸத்யலோகம் போய் மீண்டு வந்து முன்போலவே ஒருவர்ஷம்வரையில் பலராமனுடன் க்ரீடித்துக்கொண்டிருக்கிற ஸ்ரீக்ருஷ்ணனைக் கண்டான். அவன் 'கோகுலத்தில் எவ்வளவு பிள்ளைகளும் கன்றுகளும் உண்டோ அவையெல்லாம் என்னுடைய மாயப்படுக்கையில் படுத்திருக்கின்றன. இன்னம் எழுந்திருக்கவில்லை. என் மாயையினால் மதிமயங்கிக் கிடக்கிற அவற்றைக்காட்டிலும் இங்குப் புலப்படுகிற இப்பிள்ளைகளும் கன்றுகளும் வேறென்பதில் ஸந்தேஹமில்லை. இவை எங்கிருந்து வந்தன. நான் எவ்வளவு கொண்டு போனேனோ அவ்வளவு கன்றுகளும் பிள்ளைகளும் ஒரு வர்ஷமாக ஸ்ரீக்ருஷ்ணனுடன் க்ரீடித்துக்கொண்டிருக்கின்றன' என்று வேறான இந்தக் கன்றுகளையும் கன்று மேய்க்கும் பிள்ளைகளையுங் குறித்து நெடுநேரஞ் சிந்தித்

தும் 'இவர்கள் பரப்ரஹ்மரூபனான ஸ்ரீக்ருஷ்ணஸ்வரூபர்களே' என்று தெரிந்துகொள்வதற்கு வருந்தியும் வல்லனாகவில்லை. மதிமயக்கமற்றவனும் ஜகத்தையெல்லாம் மதிமயங்கச் செய்பவனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணனை ப்ரஹ்மதேவன் தனக்கு அந்தராத்மாவான அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய சக்திவிசேஷமான தன்மாயையினால் மதிமயங்கச் செய்ய முயன்று அந்த மாயையினால் தானே மதிமயங்கி நின்றான். இருள் மூடின ராத்ரியில் பனித்திவலைகள் பெய்வதாலுண்டாகும் இருளும் பகலில் மின்மினிப்பூச்சியின் வெளிச்சமும் தனித்துத்தோற்றமல் அவற்றிலேயே மறைவதுபோல, மஹாபுருஷனிடத்தில் மாயை செய்ய முயன்ற அற்பனுடைய மாயை அவனுக்குள் விகிதகெடுதியையுஞ் செய்யமுடியாமல் மறைவதுமாத்ரமேயன்றி மாயை செய்ய முயன்றவனுடைய திறமையையும் அழித்துவிடும். ப்ரஹ்மதேவன் பார்த்துக்கொண்டிருக்கையில் அந்த க்ஷணமே எல்லாக் கன்றுகளும் கன்றுகளை மேய்க்கிற எல்லாப் பிள்ளைகளும் காலமேகங்கள்போலக் கறுத்துப பொன்னிறமான பட்டுவஸ்த்ரந்தரித்து நான்குபுஜங்களும் கைகளில் சங்கு சக்ரம் கதை தாமரை மலர் இவைகளும் அமைந்து கிரீடம் குண்டலம் முத்துமாலை வனமாலை இவைகளையும தோள்களில் ஸ்ரீவத்ஸத்தின் சோபையால் திகழ்கின்ற தோள்வளைகளையும் கைகளில் ரதனங்கள் இழைக்கப் பெற்றுச் சங்குபோல் உருண்டிருக்கின்ற கைவளைகளையும் பூண்டு மார்பில் ஸ்ரீவத்ஸமென்னும் திருமறுவு திகழப்பெற்றுக் கழுத்தில் கௌஸ்துபமணி அணிந்து சிலம்பு கால்வளை அரைநாண்மாலை விரலணி இவைகளால் விளக்கமுற்றுப் பாதம்முதல சிரஸ்ஸுவரையில் ஸமஸ்த அவயவங்களிலும் மிகுந்த புண்யசாலிகளால் ஸமர்ப்பிக்கப்பட்ட

வைகளும் மெதுவாயிருப்பவைகளுமான துலஸிமாலைக ளால் நிறைந்து நிலவுபோல் வெளுத்த புன்னகையோடு கூடின சிவந்த கடைக்கண்ணோக்கங்கள் அமைந்து சிவந்த கடைக்கண்ணோக்கமாகிற ரஜோகுணத்தினால் தன்பக்தர்களுடைய மனோரதங்களைப் படைப்பவர்கள் போலவும் நிர்மலமான புன்னகையாகிற ஸத்தவகுணத் தினால் பாதுகாப்பவர்கள்போலவும் தோன்றித் தனனை முதற்கொண்டு பூச்சி புழுவரையிலுமுள்ள ஸமஸ்த மான ஜங்கமஸ்தாவரங்களும் உருவத்துடன வந்து கூத் துபாடு முதலிய பல உபசாரங்களால் தனித்தனியே உபாஸிக்கப்பெற்று அங்ஙனமே மூர்த்தீகரித்துத் தங்கள் மஹிமையால திரஸ்கரிக்கப்பட்ட ஸ்வாதந்திரியமுடை யவைகளான அணிமாதி அஷ்டைஶ்வர்யங்களாலும் அஜை முதலிய சக்திகளாலும் மஹத்து முதலிய இரு பத்துநான்கு தத்த்வங்களாலும் காலம் ஸ்வபாவம் ஸம் ஸ்காரம காமம கர்மம் குணம் இவை முதலியவைகளா லும் சூழப்பட்டு விகாரமற்றதும் அளவிறந்த ஜ்ஞான நந்த ஸ்வரூபமுமாகிய ஒன்றான பரப்ரஹ்மத்தின் அஸா தாரண மூர்த்திகளும வேதாநதபாகங்களில ஶ்ரமப்பட் டுத் தீர்ந்த மனங்களுக்கும எட்டாத அளவற்ற மஹி மையுடையவர்களுமாக ப்ரஹ்மதேவனுக்குத தோன்றி னார்கள். ப்ரஹ்மதேவன் கன்றுகள் கன்றுமேய்க்கும் பிள்ளைகள் முதலிய எல்லாவற்றையும் இங்ஙனம் ஒரு கால், ஜங்கமஸ்தாவரரூபமான இநத ப்ரபஞ்சமெல்லாம் எவனுடைய தேஜஸ்ஸினால் விளங்குகின்றதோ அப்ப டிப்பட்ட பரப்ரஹ்மஸ்வரூபங்களாகக் கண்டான். பிறகு அந்த ப்ரஹ்மதேவன் பதினொரு இந்த்ரியங்களும் பெரிய குதூஹலத்துடன காண்பது கேட்பது முதலிய செயல் களில் முயன்று தம்மைக் கடக்கும் விஷயமாகையால்

திறமையற்று மயங்கப்பெற்று இடைச்சேரியின் அதிஷ்டானதேவதையுடைய அநுகாமையில் அசையாது நிற்கும் ஸ்வர்ணமயமான நான்முகப்ரதிமைபோன்று அவர்களின் தேஜஸ்ஸினால் ஒளிமழுங்கி அசையாது நின்றிருந்தான். ஸர்வஸ்மாத்பரனும் காமத்தினால் விளையும் பிறவியற்றவனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணனை, இன்னது இனியதென்று ஊஹிக்கமுடியாததும் ப்ரக்ருதியைக்காட்டிலும் விலக்ஷணமாயிருப்பதும் ஸ்வயம்ப்ரகாசமும் அளவிறந்த ஜ்ஞானாநந்தஸ்வரூபமும் எல்லாம் பரமாத்மஸ்வரூபங்களேயன்றி அல்லாத ஸ்வதந்த்ரவஸ்துக்கள் எவையுமே இல்லையென்று முக்யமாக நிரூபிக்கிற வேதாந்தபாகங்களால் அறியக்கூடியதும் அஸாதாரணமான மஹிமையுடையதுமாகிய தனஸ்வரூபத்தைக் காட்ட, ப்ரஹ்மதேவன் அதைக்கண்டனுபவிக்குந் திறமையின்றி இதென்னென்று மதிமயங்கிக் கிடப்பதை அறிந்து தன் மாயையாகிற திரையினால் தன் ஸ்வரூபத்தை மறைத்தான். பிறகு ப்ரஹ்மதேவன இந்த்ரியங்கள் வெளித்தோனறப்பெற்றுச் செத்தவன எழுந்திருப்பதுபோல எழுந்து ஸம்ஜ்ஞையை அடைந்து மெல்லமெல்லக் கண்களைத் திறந்து தனனையும் இந்தப்ரபஞ்சத்தையும் கண்டான. அப்பொழுதே அந்த ப்ரஹ்மதேவன் கணகளை நாற்புறத்திலும் செலுத்தித் திசைகளையும் எதிரில் பழம் காய் முதலியவற்றைக் கொடுக்கையால் ஜனங்களுக்கு ஜீவனாதாரமான வ்ருக்ஷங்கள் பலவும் நிறைந்து நாற்புறத்திலும் இனியவஸ்துக்கள பலவும அமைந்து அழகாயிருப்பதும், பகவான் வாஸஞ்செய்கின்றமையால் கோபம் லோபம் முதலியன தீண்டப்பெறாததும இயற்கையில் மாறாத வைரமுடைய மனுஷ்யர்களும் ஸிம்ஹாதிம்ருகங்களும் நட்புடன் வஸிக்கப்பெற்றதுமாகிய ப்ருந்தாவனத்

தையும் கண்டான். பிறகு அந்த ப்ரஹ்மதேவன் அங்கு இடைப்பிள்ளைபோல் வேஷம் பூண்டு நடனஞ்செய்வதும் இணையற்றதும் அளவற்ற ஜ்ஞானஸ்வரூபமும் தேச கால வஸ்து பரிச்சேதங்களற்றதுமாகிய ஸ்ரீக்ருஷ்ண ரூபியான பரப்ரஹ்மம் முன்போலவே கையில் அன்னக் கவளத்தை ஏந்திக்கொண்டு நண்பர்களையும் கன்றுகளையும் தனியே தேடிக்கொண்டு திரிவதைக் கண்டான். அவன் இங்ஙனம் கண்டவுடனே தன் வாஹனத்தினின்றும் இறங்கித் தன் சரீரத்தை ஸ்வர்ணமயமான தண்டத்தைப்போல் பூமியில் அஷ்டாங்கங்களும் படும்படி சாய்த்து நான்கு கிரீடங்களின் நுனிகளால் அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய இணையடிகளை ஸ்பர்சித்து நமஸ்கரித்து ஆநந்தத்தின் மிகுதியால் பெருகின்ற கண்ணீர்களால் அபிஷேகஞ்செய்தான். அவன் முன்கண்ட மஹிமையை அடிக்கடி நினைத்து நெடுநேரம் ஸ்ரீக்ருஷ்ணனுடைய பாதங்களில் எழுந்தெழுந்து விழுந்து நமஸ்கரித்துக்கொண்டிருந்தான். அப்பால் அந்த ப்ரஹ்மதேவன் மெல்லமெல்ல எழுந்து கண்களைத் துடைத்துக்கொண்டு ஸ்ரீக்ருஷ்ணனைப்பார்த்து வணங்கின கழுத்துடன் கைகளைக் குவித்து வணக்கம் நடுக்கம் இவை உடையவனாகித் தழுதழுத்த உரையுடன் துதிக்கத் தொடங்கினான்.

பதின்மூன்றாவது அத்யாயம் முற்றிற்று.

---

(ப்ரஹ்மஸ்துதியும், ஸ்ரீக்ருஷ்ணன் பிள்ளைகளோடு வீட்டிற்குப்போதலும், பிள்ளைகள் அகாஸுரவ்ருத்தாந்தத்தை வீட்டில் கூறுதலும், ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் இடையர்களுக்கு அத்தகைய ப்ரீதி உண்டானதற்குக் காரணங்கூறுதலும்.)

ப்ரஹ்மதேவன் சொல்லுகிறான்:—துதிக்கத் தகுந்தவனே! காலமேகம்போல் கறுத்திருப்பவனும் மின்னல்

போல் விளங்குகின்ற பீதாம்பரம் உடுத்தவனும் குந்த மணிகளால் இயற்றின காதணி அணிந்தவனும் மயில் தோகையால் திகழ்கின்ற முகமுடையவனும் காட்டுப் புஷ்பங்களால் தொடுத்த பூமாலை பூண்டவனும் அனனக் கவளம் கோல் கொம்பு குழல் இவ்வடையாளங்களால் மிகுந்தசோபை அமைந்தவனும் மெதுவான பாதங்களுடையவனும் நந்தகுமாரனுமாகிய உனக்கு நமஸ்காரம். நீ ஏற்றுக்கொண்டிருக்கிற இந்த இடைப்பிள்ளையுருவத்தின் மஹிமையை உள்ளிந்த்ரியமான மனத்தினாலுங் கூட ப்ரஹ்மதேவனாகிய நானும் அறிவதற்கு வல்லமையற்றிருக்கின்றேன. கேவலஜ்ஞானாநந்த ஸ்வரூபனை பரமாத்மாவாகிய ஒன்றான உன் மஹிமையை நான் அறியமாட்டேனென்பதைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? என பாரர்த்தனையை நிறைவேற்றும்பொருட்டு என்னிடத்தில் அருளபுரிந்து நீ இந்த உருவத்தை ஏற்றுககொண்டாயெனபதுமாத்ரமே எனக்குத் தெரியும். இவ்வுருவம உனக்கு உனஸங்கல்பத்தினால் ஏறபட்டதேயன்றி எங்கள் சரீரம்போல் கர்மத்தினால் ஏற்பட்டதனறு. மற்றும், இது சுத்தஸத்த்வமயமேயன்றிப பஞ்சபூதஙகளின் பரிணாமமன்று. ஒருவராலும் வெல்லமுடியாத மஹானுபாவனே! எவர்கள் ப்ரக்ருதியைக்காட்டிலும் வேறுபட்டதான ஆத்மஸ்வரூபத்தை உபாஸிக்கையாகிற ஜ்ஞானயோகத்தைத் துறந்து உனமாயையைக்கடப்பதற்கு உன்னையே சரணமாகப் பற்றித் தங்கள் வாணாஸ்ரமதர்மங்களை அனுஷ்டிக்கையாகிற நிலைமையில் நின்று மனோவாக்காயங்களென்கிற மூன்று கரணங்களாலும் ஸத்புருஷர்களால் கோஷிக்கப்பட்ட உன் கதையைச் செவிகளாரக் கேட்டு ஜீவிக்கின்றார்களோ; மூன்று லோகங்களிலுமுள்ள ஸமஸ்த போகங்களிலும் பற்றற்றவர்களான அவர்கள் உன்னையும் வெல்லுகிறார்கள்.

ப்ரபூ! நன்மைகைக் கறக்கவல்ல உன் விஷயமான பக்தியைத் துறந்து ஆத்மாவையே அனுபவிக்கையாகிற கைவல்யமெனகிற மோக்ஷத்தின்பொருட்டு ஜ்ஞானயோகத்தில் ப்ரயாஸப்படுகிறவர்களுக்கு அந்த ப்ரயாஸம் மாத்ரமே மிகுமன்றி மற்றொரு பயனும் உண்டாகாது. நெல்லைக் குத்துகிறவர்களுக்கு அரிசி கிடைக்குமன்றி நெல்லு போல தோற்றுகிற பெரிய உமியைக் குத்துகிறவர்களுக்கு அரிசி கிடைக்குமோ? அவர்களுக்கு ப்ரயாஸம் மாத்ரமல்லவோ மிகும்? பரமாநந்த ஸ்வரூபனே! இவ்வுலகத்தில் பல புருஷர்கள் பக்தியோகத்திற்கு உதவியாக ஜ்ஞானயோகத்தை அனுஷ்டித்துத் தங்கள் வர்ணாஸ்ரமங்களுக்கு ஏற்பட்ட தர்மங்களை அனுஷ்டிக்கையாகிற செயல்களையெல்லாம் உன்னிடத்தில் அர்ப்பணஞ்செய்து தங்கள் ஸத்கர்மங்களால் விளைந்ததும் தினந்தோறும் உன கதைகளைக் கேட்பதால் வளர்ந்து ப்ரத்யக்ஷம் போன்றிருப்பதுமாகிய பக்தியோகத்தினலேயே உன்னை உள்ளபடி அறிந்து பரமகதியான மோக்ஷத்தை அடைந்தார்கள். அளவற்ற மஹிமையுடையவனே! ஆயினும் ப்ராக்ருத குணங்கள் தீண்டப்பெருத உன்மஹிமை தூயமனத்தரான பெரியோர்களால்மாத்ரம அறியக் கூடியதன்றி மற்றவர்களால் அரியக்கூடியதன்று. நீ விகாரங்களற்றவன். கர்மத்தினல் விளையும் சரீரஸம்பந்தம் உனக்குக் கிடையாது. நீ தன்னைத் தானே அனுபவிக்குந்தன்மையன. உன்னை நீயே உள்ளபடி அறிவாயன்றி மற்ற எவரும் அறியவல்லரல்லர். பெரியோர்களுங் கூட, அறிய முடியாத ஸ்வரூபமுடையவனென்று அறிவார்களேயன்றி இவ்வளவனென்று அளவிட்டறியவல்லரல்லர். நீ குணங்களுக்கெல்லாம் ஆதாரமாயிருப்பவன். நீ இப்பொழுது ஜகத்

தின் ஹிதத்திற்காக எல்லாரும் கண்டனுபவிக்கும்படி அவதரித்திருக்கின்றனை. ஆயினும் உன் குணங்களையும் ஸ்வரூபத்தையும் இவ்வளவென்று அளவிட்டு எவர்கள் அறியவல்லவர்கள்? பூமியில் தூட்களையும் ஆகாயத்தில் பனித்திவலைகளையும் த்யுலோகத்தில் நக்ஷத்ரங்களையும் நெடுங்காலம் ப்ரயாஸப்பட்டு எண்ணி முடிக்கத் பெருந திறமையுடையவர்களாயினும் உன் குணங்களை எண்ண வல்லராகமாட்டார்கள். ஆகையால் மனோவாக்காயங்க ளென்கிற மூன்று கரணங்களாலும் உனக்கு நமஸ்கா ரஞ்செய்து உன் கருணையையே நன்றாக நினைத்துத் தன் புண்யபாபகர்மங்களால் நேரிட்ட ஸுகதுக்காதிபலன் களை அனுபவிப்பதைத் தவிர வேறொரு யத்னமும் செய் யாமல் ஜீவித்துக்கொண்டிருப்பவன் மோக்ஷத்தில் பங் குடையவனுவான். ஜகதீச! என்னுடைய துஷ்டத்தனத் தைக் காண்பாயாக ஆச்சர்யமான சக்தியுடையவர்களுக் கும் மேலான ஆச்சர்ய சக்தியுடையவனும் அளவிடமு டியாத ஸ்வரூப ஸ்வபாவங்களுடையவனும் ஜகத்காரண னும் பரமாத்மாவுமாகிய உன்னிடத்தில் மாயையைப் பரப்பி என் வைபவத்தைக் காட்ட விரும்பினேனல்லவா? என் செயல், நெருப்புப்பொரி தன்வைபவத்தை நெருப்பி டத்தில் காட்ட விரும்பினதுபோலிருக்கின்றது. இங்ங னம் என்னையும் உன்னையும் அறியாத நான் எவ்வளவன? பற்றினவர்களைக் கைவிடாத பரமனே! நான் ரஜோகு ணத்தினால் உண்டானவன். ஆகையால் நான உன் மஹி மையை அறியுந்திறமையற்றவன். என்னை நான் உனக் கு உட்படாத ஸ்வதந்த்ரப்ரபுவென்று பாவித்துக்கொண் டிருப்பவன்; ப்ரஹ்மதேவனென்னும் கர்வமாகிற பேரிரு ளால் கண்கள் குருடாயிருக்கப்பெற்றவன். ஆகையால் நான் உன்னிடத்தில் தௌர்ஜன்யத்தைக் காட்டினது

யுக்தமே. ஆயினும் ‘இவன் என்னுடைய ப்ருத்யனே. ஆகையால் இவனும் அருள்புரியத் தகுந்தவனே’ என்று நினைத்து மூடனாகிய என்னுடைய அபராதத்தைப் பொறுத்தருள்வாயாக. ப்ரதானம் மஹத்து அஹங்காரம் ஆகாசம் வாயு அக்னி ஜலம் இவைகளால் சூழப்பட்டதும் ஒருகுடம்போன்றதுமாகிய இந்த அண்டத்திற்குள் ஏழுசாண்சரீரமுடைய நான் எங்கே? இந்த அண்டத்தைப்போன்ற எண்ணிறந்த பல அண்டங்களாகிற பரமாணுக்கள் சூழப்பெற்ற சாளரங்கள்போன றமயிர்க்கால்களையுடைய நீ எங்கே? உன் மஹிமை எங்கே? ஆகையால் மிகவும் அற்பனாகிய என்னை மிகவும மேன்மையுடைய நீ அருள்புரியவேண்டும். இந்த்ரியங்களுக்கு விஷயமாகாத பரமனே! கர்ப்பத்திலிருக்கும் சிசு காலால் உதைக்கில அது தாய்விஷயத்தில் அபராதப்பட்டதாகுமோ? ஆகாதல்லவா? அங்ஙனமே உன்னுடைய கர்ப்பம்போன்ற நான்செய்த பிழையை நீ அபராதமாகக் கொள்ளலாகாது. உள்ளதென்றும் இல்லதென்றும் வழங்கப்படுகிற சேதநாசேதநரூபமான இந்த ஜகத்தில் சிறியதாயினும் பெரியதாயினும் உன்வயிற்றிற்கு வெளியில் என்ன இருக்கின்றது? எல்லாம் உன்வயிற்றில் உள்ளதேயன்றி அதில் இல்லாதது இவ்வுலகத்தில் எதுவுமே இல்லை. ஜகத்தெல்லாம அழிந்துபோகையில் ஸமுத்ரங்கள் எல்லாம் ஒரேவெள்ளமாக மூடிக்கொண்டிருக்கிற மஹாஜலத்தில் நாராயணனுடைய உதரத்தில் நாபியின் நாளத்தினின்று அயன் வெளிக்கிளம்பினானென்று ஜனங்கள் சொல்லுகிறார்களே; அந்தச்சொல் பொய்யன்று; உண்மையே. இது நிச்சயம். ஜகதீஶ்வரனே! நான் உன்னிடத்தினின்று உண்டானவனல்லவா என்ன? உண்டானவனே. ‘நாராயணனிடத்தினின்று

நீ உண்டானவனுயின், அது உண்மையாகவே இருக்கட்டும். அதனால் எனக்கு என்ன' என்கிறுயோ? அப்படியன்று. நீயேயல்லவா அந்த நாராயணன்? ஏனென்றால் நீ ஸமஸ்த பூதங்களுக்கும் அந்தராத்மாவாயிருக்கின்றனை. ஜகதீசனே! ஆகையால் நீ நாராயணனன்றே? நீ ஸமஸ்த லோகங்களையும் ஸாக்ஷாத்கரிக்கின்றனை. நாரமென்று சொல்லப்படுகிற ஜலத்தில் வீற்றிருக்கின்றமையால் நாராயணனென்று ப்ரஸித்தி பெற்றவனும் நீயே. நீ ஜகத்துமுழுவதும் வ்யாபித்திருப்பினும் அதிலடங்கின ஜலமாதாரத்தில் வீற்றிருப்பதுவும் உண்மையே. அது பொய்யன்று. இங்ஙனம் நாராயணசப்தத்தில் வெளியாகும் பொருள்களெல்லாம் உன்னிடத்திலேயே அமைகின்றனவாகையால் நீயே நாராயணன். ஜகத்தெல்லாம் உள்ளடங்கப்பெற்ற உன் திருமேனி ஸ்ருஷ்டிக்கு முன்பு ஜலத்தின்மேல் இருக்குமாயின் நீ நாராயணனென்பதில் ஸந்தேஹம் என்ன? ஷாட்குண்யபூர்ணனே! ஜலத்தின்மேலிருந்த அந்த உன் திருமேனியை நான் காணவில்லையா? அவ்வுருவம் என் ஹ்ருதயத்தில் நன்றாகத் தோற்றவில்லையா? மற்றும், அப்பொழுதே அவ்வுருவத்தை நீ எனக்குத் தெரியாதபடி மறைக்கவில்லையா? ஆகையால் நீயே நாராயணன். 'ஆம். ஜலத்தின்மேலிருந்ததும் நீ ஜலத்தில் கண்டதும் உன் ஹ்ருதயத்தில் நன்றாகத் தோற்றினதும் உடனே மறைக்கப்பட்டதுமாகிய உருவம் அநிருத்தமூர்த்தியினுடையதேயன்றி என்னுடையதன்று; ஆகையால் நானன்று நாராயணன்' என்னில், சொல்லுகிறேன்; கேள். பிறருடைய மாயைகளையெல்லாம் பயன்படாதபடி அழிக்குந் திறமையுடையவனே! உன்னையே சரணமாகப்பற்றினவர்களின் ப்ரக்ருதிஸம்பந்தத்தைப்போக்கும் பரமனே! நீ இந்த அவதாரத்தில் வெளியில் ஸ்பஷ்டமாகப்

புலப்படுகின்ற சேதநாசேதநரூபமான இந்தப்ரபஞ்சத்தையெல்லாம் உன்வயிற்றிற்குள் தாயான யசோதைக்குக் காட்டினதால் உன்னுடைய விசித்ரசக்தியை வெளியிட்டாயல்லவா? ஆகையால் அந்த அநிருத்தமூர்த்தியும் நீயேயன்றி வேறன்று. இதோ புலப்படுகிற சேதநாசேதநரூபமான இந்த ஜகத்தெல்லாம் நம்மிருவரோடுங்கூட வெளியில் எங்ஙனம் விளங்குகின்றதோ, அங்ஙனமே உன் வயிற்றிலும் விளங்கிற்றல்லவா? ஆ! என்ன ஆச்சர்யம்! இது உன்னுடைய விசித்ரசக்தியாலன்றி மற்ற எதனால் ஸம்பவிக்கும்? விசித்ர சக்தியைப் பற்றியே. உன் தாய்க்குக் காட்டினதுமாத்ரமேயோ? எனக்குங்கூட இப்பொழுதே நீ உன் விசித்ரசக்தியைக் காட்டவில்லையா என்ன? காட்டினையே. முதலில் நான் கன்றுகளையும கன்றுமேய்க்கும் பிள்ளைகளையும் பறித்துக்கொண்டு போகும்பொழுது ஒருவனாயிருந்தனை. பிறகு இடைச்சேரியிலுள்ள உன நண்பர்களான கன்று மேய்க்கும் பிள்ளைகளும கன்றுகளும் ஆகிய எல்லாமாக இருந்தனை. பிறகு அவையெல்லாம் நான்கு புஜங்களுடையவையாகி என்னோடுகூட ஸமஸ்தமான ஜங்கமஸ்தாவரங்களாலும் உபாஸிக்கப்பட்டுத் தோன்றினை. பிறகு அவ்வளவும் விராட்ரூபங்களாகத் தோன்றினை. ஆகையால் அளவற்றதும் இணையெதிரில்லாததும் க்ருஷ்ணரூபமுமான பரப்ரஹ்மமொன்றே மிகுந்திருக்கின்றது. தேஹாத்மாபிமானத்தினால் மதிமயங்கினமையால் உன்னுடைய உண்மையை அறியப்பெறாத பாக்யஹீனர்களுக்கு உன்மாயையைப் பரப்பி ஸ்ருஷ்டியில் நான்முகனாகிய என்னைப்போலவும், ரக்ஷணத்தில் விஷ்ணுவைப்போலவும் தோற்றுகின்றனை. உன்பதவியை உணர்ந்தவர்களுக்கு ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களில் பரஹ்ம

ருத்ரர்களென்கிற ஜீவாத்மாக்களுக்கு அந்தர்யாமியாக
வும், ரக்ஷணத்தில் நேரே உன்னுடைய அவதாரமாக
வும் தோற்றுகின்றனை. ஜகதீசனே! நீ கர்மத்தினால்
விளையும் பிறவியற்றவனாயினும் தேவதைகள் ரிஷிகள்
மனுஷ்யர்கள் திர்யக்குகள் ஜலஜந்துக்கள் ஆகிய இந்த
ஜாதிகளில் துஷ்டர்களின் கொழுப்பை அடக்குவதற்
காகவும் ஸத்புருஷர்களை அனுக்ரஹிப்பதற்காகவுமே
அவதரிக்கின்றனை. மஹாநந்தஸ்வரூபனே! ஷாட்குண்ய
பூர்ணனே! ஸமஸ்த பூதங்களுக்கும் அந்தராத்மாவாய்
நியமித்துக்கொண்டிருப்பவனே! எந்த ஜாதியிலென்று
வது எந்தப்ரகாரமென்றாவது எவ்வளவென்றாவது எக்
காலத்திலென்றாவது உன் சேஷ்டைகளை மூன்றுலோகங்
களிலும் எவன்தான் அறியவல்லவன்? யோகேச்வரனே!
உன்னுடைய ஆச்சர்யசக்தியைப் பரப்பி இங்ஙனம்
விளையாடுகின்றனை. உன்னையொழிந்த ஸ்வதந்த்ரவஸ்து
எதுவுமேயில்லை. நித்யஜ்ஞாநாநந்தஸ்வரூபனும் அள
விறந்த மஹிமையுடையவனுமாகிய உன்னிடத்தில் உன்
ஸங்கல்பரூப ஜ்ஞானத்தினால் உண்டாகி உன்னிடத்தி
லேயே மறைகின்றதாகையால் இந்த ஜகத்தெல்லாம்
உன்னைவிட்டுப் பிரிந்திருக்குந் தன்மையுடையதன்று. ஆயி
னும் அறியாதமூடர்களுக்கு உன்னைவிட்டுப் பிரிந்திருப்
பதுபோல் தோற்றுகின்றது. இந்த ப்ரபஞ்சமெல்லாம்
மிகப்பெரிய துக்கங்களுக்குமேல் பலதுக்கங்களுக் கிட
மாயிருக்கும்; விவேகிகளுக்கு ஸ்வப்னம்போலத் தோற்
றும். இது உண்மையான உணர்வற்றது; ஸர்வகால
மும் விகாரங்களுக்கிடமாகி மாறிக்கொண்டேயிருக்கு
மன்றி ஒருவாறுயிராது. ஆயினும் அவிவேகிகள் அதை
அறியாமல் நித்யமென்று ப்ரமிப்பார்கள். நீ அத்தகைய
ஜகத்தைச் சரீரமாகவுடையவனாகி அதைவிட்டுப் பிரியா

திருப்பினும் விகாரமற்றவன்; ஸ்வயம்ப்ரகாசஸ்வரூபன்; தேச கால வஸ்து பரிச்சேதங்களற்றவன்; ஜீவாத்மாக்களுக்குக் கர்மத்தினால் விளையும் தேஹவியோகம் உனக்குக் கிடையாது. கர்மத்தினால் விளையுந் தேஹஸம்பந்தமும் உனக்குக்கிடையாது. நீ புண்யபாபங்களாகிற மலங்களற்றவன்; என்றும் மாறாமல் ஒருவாறாகவே யிருப்பவன்; எங்கும் நிறைந்தவன்; தானல்லாத வஸ்து எதுவுமில்லாதவன்; தன்னைக்காட்டிலும் மேற்பட்ட குணமுள்ள வஸ்துவில்லாதவன்; அளவற்ற ஆநந்த ஸ்வரூபமுடையவன். இத்தகைய நீயே ஜகத்காரணன்; தனக்குச் சரீரமாகிய ப்ரக்ருதிபுருஷகாலங்களை ஸாக்ஷாத்கரிப்பவன்; ஸ்ருஷ்டிக்கு முன்பு சேதநாசேதநங்களெல்லாம் நாமரூபங்களுக்கிடமாகாமல் தன்னிடத்தில் மறைந்திருக்கப் பெற்றுத் தனியனாயிருப்பவன்; ஜகத்ஸ்ருஷ்டிக்கு முன்பும் அழியாதிருந்து ஜகத்ஸ்ருஷ்டியை நடத்தின பரமபுருஷன் நீயே. அஜ்ஞானமாகிற அந்தகாரத்தைப்போக்குந்தன்மையுடைய குருவாகிற ஸூர்யனிடத்தினின்றும் கிடைத்த வேதாந்த ஜ்ஞானமாகிற நல்ல நேத்ரத்தினால் இத்தகையனும் ஸமஸ்த ஆத்மாக்களுக்கும் அந்தராத்மாவுமாகிய உன்னைத் தங்களுக்கு அந்தராத்மாவாகவும் தங்களை உனக்குச் சரீரமாகவும் காண்கிறவர்கள் ஸம்ஸாரத்தை மேன்மேலும் விளைப்பதாகிய புண்யபாபகர்மங்களாகிற ஸமுத்ரத்தைக் கடப்பார்கள். இவ்விஷயத்தில் ஸந்தேஹமே இல்லை. பரமாத்மாவாகிய உன்னையே தங்களுக்கும் மற்ற ஆத்மாக்களுக்கும் அந்தராத்மாவாக அறியாத மூடர்களுக்கு அந்த அஜ்ஞானத்தினாலேயே ஸம்ஸாரமெல்லாம் மாறாமல் தொடர்ந்து வருகின்றது. தேஹாத்மாபிமானாதி அஜ்ஞானங்களைத் துறந்து பரமாத்மாவான உன்னை உள்ளபடி அறிவார்க

ளாயின், அப்பொழுதுதான் அவர்களுக்கு அந்த ஸம்ஸாரஸம்பந்தம் நீங்கும். கயிற்றைக் கண்டு அதைக் கயிறென்று தெரிந்துகொள்ளாமல் ஸர்ப்பமென்று ப்ரமித்துப் பயப்படுவதுபோல, ஜீவாத்மாக்கள் தேஹத்தையே ஆத்மாவென்று ப்ரமித்து ஸம்ஸாரதுக்கங்களை அனுபவிக்கிறார்கள். கயிறென்று தெரிந்தபின்பு ஸர்ப்பத்தைப் பற்றின பயம் நீங்குவதுபோல, ஆத்மா தேஹத்தைக் காட்டிலும் விலக்ஷணனென்று உணர்ந்து ஆத்மாவுக்கும் அந்தராத்மாவான பரமாத்மாவையும் உள்ளபடி உணர்வானாயின ஸம்ஸாரதுக்கங்கள் நீங்கும். ஸம்ஸாரபந்தமும் அதினின்று விடுபடுகையுமாகிய இவ்விரண்டிற்கும் அஜ்ஞானமும் ஜ்ஞானமும் காரணமேயன்றி மற்றெதுவும் காரணமன்று.பகலில் ஸூர்யன விளங்குகையில் இருள் பறந்தோடுவதுபோல, நித்யஜ்ஞானஸ்வரூபனும் ஜீவாத்மாவுக்கு அந்தராத்மாவும் அத்விதீயனுமாகிய பரமபுருஷனை வேதாந்த வாக்யங்களால் ஆராய்ந்தறிகையில் அஜ்ஞானத்தினால் விளைவதாகிய ஸம்ஸாரஸம்பந்தம் பறந்தோடும். ப்ரக்ருதிபுருஷர்களைக்காட்டிலும் விலக்ஷணனும் அவற்றிற்கு அந்தர்யாமியாய் நியமித்துக்கொண்டிருப்பினும் அவற்றின் தோஷங்கள் தீண்டப்பெறாதவனுமாகிய உன்னை ஜீவாத்மாக்களில் ஒருவனாகவும், தேஹத்தையே ஆத்மாவாகவும் ப்ரமித்துப் பரமாத்மாவை வெளியில் தேடுகிற சில மூடஜனங்களின் அறிவின்மையை என்னென்று சொல்லுவேன்? இதென்ன ஆச்சரியம்? வீட்டில் கெட்டுப்போனதைக் காட்டில் தேடுவாருண்டோ? மற்றும் சிலர் ஆத்மஸ்வரூபத்தை அறியாமல் தேஹத்தையே ஆத்மாவாகவும் தங்களை ஸ்வதந்த்ரர்களாகவும் ப்ரமித்து உன்னை வெளியில் தேடுகிறார்கள். அவர்களுடைய அஜ்ஞானமஹிமையை

என்னென்று சொல்லுவேன்? அனந்தனே! விவேகமுடைய பெரியோர்கள் தேஹத்தில் அடங்கியிருப்பதும் பரமாத்மாவைக்காட்டிலும் வேறுபட்டதுமான ஜீவன்வரையிலுள்ள இருபத்துநான்கு தத்த்வங்களில் எதையும் பரமாத்மாவென்று பாவிக்காமல் அவற்றைக் காட்டிலும் விலக்ஷணனும் இத்தகைய குணங்களுடையவனுமாகிய உன்னை ஆராய்ந்தறிகிறார்கள். கயிற்றின் உண்மையை அறிந்தவர்கள் அருகில் இருக்கின்ற கயிற்றைக் கண்டு அங்கு ஸர்ப்பம் இல்லாதிருக்க ஸர்ப்பம் இருக்கிறதாக ப்ரமிப்பார்களோ? அங்ஙனமே விவேகிகள் தேஹத்தை ஆத்மாவென்றாவது உன்னை மற்ற தத்த்வங்களில் ஏதேனுமொன்றாகவாவது ப்ரமிக்கமாட்டார்கள். தேவனே! உன் பாதாரவிந்தத்தினால் சிறிது அருள்புரியப்பெற்ற புருஷன்தான் ஷாட்குண்யபூர்ணனாகிய உனனுடைய மஹிமையின் உண்மையை அறிவான். அதனால் அருளப்பெறாதவன் ஜனஸஞ்சாரமில்லாத இடத்தில் இருந்து நெடுங்காலம் ஆராய்ந்து பார்க்கினும் உன்மஹிமையைச் சிறிதும் அறியமாட்டான். நீ அருள்புரிவதற்குக் காரணம் உன்பக்தர்களோடு ஸஹவாஸமே. ஆகையால் நான் இந்த நான்முகப் பிறவியிலாவது வேறுமனுஷ்யாதி ஜன்மங்களிலாவது மற்ற பசு பக்ஷி முதலிய திர்யக்கு ஜன்மங்களிலாவது உன்பக்தர்களினிடையில் இருந்து எதனால் உன் பாதாரவிந்தங்களைப் பணிவேனோ, அத்தகைய பெரும்பாக்யம் எனக்கு நேரும்படி அருள்புரிவாயாக. இடைச்சேரியிலுள்ள பசுக்களும் கோபிமார்களும் மஹா பாக்யமுடையவை. ஏனென்றால், நீ அந்தப் பசுக்களின பாலைக் கன்றாகவும் கோபிமார்களின ஸ்தனயத்தைப் பிள்ளையாகவும் இருந்து மனக்களிப்புடன் நிரம்பவும் பானஞ்செய்தாயல்லவா? ஸமஸ்தமான யாகங்களுங்கூட எவனுக்குப் பூர்ணமான

த்ருப்தியை விளைக்கமாட்டாவோ, அப்படிப்பட்ட நீ அவற்றின் ஸ்தந்யபானத்தினால் நிரம்பவும் த்ருப்தி அடைந்தாயல்லவா? ஆகையால் அவற்றின் பாக்யமஹிமையைச் சொல்லவேண்டுமோ? இடைச்சேரியிலுள்ள நந்தன் முதலிய இடையர்களின் பாக்யம் மிகவும் ஆச்சரியம். அவர்களுடைய பாக்யமே பாக்யம். அளவற்ற ஆநந்தமே வடிவாயிருக்கப்பெற்றதும் எங்கும் நிறைந்ததும் அநாதியுமாகிய பரப்ரஹ்மம் அவர்களுக்கு நண்பனாயிற்றல்லவா? அச்சுதனே! அவர்களின் பாக்யமஹிமை அப்படி இருக்கட்டும். அதை எவனால் இவ்வளவென்று அளவிட்டறியவல்லனாவான்? இந்த்ரியங்களுக்கு அபிமானிதேவதைகளான ருத்ரன் முதலிய நாங்கள் பதினொருவர்களுமே மிகுந்த பாக்யசாலிகள். ஏனென்றால், நாங்கள் இந்த இடையர்களின் இந்த்ரியங்களாகிற பானபாத்ரங்களால் அம்ருதம்போல் ருசியுள்ளதும் மத்யம்போல் மதத்தை விளைப்பதுமாகிய உன் பாதாரவிந்தங்களின் மகரந்தத்தை அடிக்கடி பானஞ்செய்கிறோமல்லவா? ஒவ்வொரு இந்த்ரியங்களுக்கு அபிமானிகளாகிய நாங்கள் சீர்த்தி ஸௌந்தர்யம் முதலிய ஒவ்வொரு குணத்தை அனுபவிப்பினும் பெரிய பாக்யசாலிகளென்று புகழத்தகுந்த பெருமையுடையவர்களாயிருக்கின்றோம். எல்லா இந்த்ரியங்களாலும் எல்லாக்குணங்களையும் அனுபவிக்கிற இந்த இடையர்களின்பாக்யத்தை என்னென்று சொல்லுவேன்? ஸ்ரீக்ருஷ்ணனே! நான் ஆசைப்படுகிற பெரும்பாக்யம் இதுவே. இந்த மனுஷ்ய லோகத்தில் அடவியில் கோகுலத்தில் எவனேனுமொருவனுடைய பாதங்களின் பராகங்களால் அபிஷேகம் நேரப்பெறுவதான ஏதேனுமொரு மனுஷ்யஜன்மத்தை நான் பெறுவேனாக. இந்த இடைச்சேரியிலுள்ளவன் ஒவ்

வொருவனும் ஷாட்குண்யபூர்ணனும் போகமோக்ஷங்களைக் கொடுப்பவனுமாகிய உன்னையே தன்ப்ராணதாரகமாக நினைத்திருப்பவனல்லவா? வேதாந்தங்களுங்கூட உன்பாததூளியைத் தேடிக்கொண்டிருக்கின்றனவேயன்றி இன்னம் கண்டறியவில்லை. தேவனே! பகாஸுரன் முதலிய கன்றுமேய்த்தோடிருந்த பாபிஷ்டையாகிய பூதனை உன்னைக் கொல்லவேண்டுமென்று நினைத்திருப்பினும் ஸாதுக்களின் வேஷம்பூண்டு ஸாதுவைப்போல் வந்து உன்னையே அடைந்தாள். வீடு பொருள் தங்கள் ப்ரியமான ஆத்மா பிள்ளை ப்ராணன் மனம் ஆகிய இவையெல்லாம் உனக்காகவேயென்று நினைத்திருக்கின்ற இடைச்சேரியிலுள்ளவர்களுக்கு ஜகத்திற்கெல்லாம் பலனான உன்னைக்காட்டிலும் மேலான எந்தபலனைக் கொடுக்கப்போகின்றனையோவென்று என்மனம் மயங்குகின்றது. (ஜகத்திற்கெல்லாம் பலனான நீ இவர்களுக்கு ப்ரத்யக்ஷமாகவேயிருக்கின்றனை. உன்னைக்காட்டிலும் மேற்பட்ட பலன் எதுவுமே இல்லை. ஆகையால் நீ இவர்களுக்கு எதைக் கொடுப்பாயென்று என்மனம் மயங்குகின்றது.) ஸ்ரீக்ருஷ்ணா! ஜனங்கள் எதுவரையில் எவ்விதத்திலாயினும் உன்னோடு ஸம்பந்தம் உண்டாகப்பெறாதிருப்பார்களோ, அதுவரையிலுமே அவர்களை ராகம் முதலிய துர்க்குணங்களாகிற திருடர்கள் ஸம்ஸாரமார்க்கத்தில் பறிப்பார்கள். அதுவரையிலுமே அவர்களுக்கு க்ருஹம் சிறைச்சாலைபோன்றிருக்கும். தேஹாத்மப்ரமாதிரூபமான அஜ்ஞானமும் அதுவரையிலுமே கால் விலங்குபோல் பந்தகமாயிருக்கும். அந்த ஸம்பந்தம் பெருமாயின், உடனே அவையெல்லாம் பறந்துபோம். நீ, ப்ராக்ருதசரீரம் ப்ராக்ருத வ்யாபாரம் ஆகிய ப்ரபஞ்சத்தின் தன்மையற்றவனாயினும் ஸங்கல்பத்தினால் ப்ரபஞ்சத்தை

அனுஸரித்து நடக்கின்றனையென்று எனக்குத் தோற்று கிறது. அதுவும் உன்னையே சரணமாகப் பற்றின உன் பக்தர்களுக்கு மாறாத ஸந்தோஷப்ரவாஹத்தை விளைப் பதற்காகவே. எவர்கள் உன்ஸ்வரூப ஸ்வபாவாதிகளை உள்ளபடி அறிகிறார்களோ, அவர்களே நீ ப்ரபஞ்சத்தை அனுஸரித்து நடப்பதின் காரணத்தை அறியவும். பல படச் சொல்லியென்ன? உன்வைபவம் என்னுடைய மனோவாக்காயங்களென்கிற மூன்று கரணங்களுக்கும் விஷயமாகிறதில்லை. எனக்கு இவ்வளவுமாத்ரமே தெரி யுமன்றி மற்றொன்றும் தெரியாது. ஸ்ரீக்ருஷ்ணனே! ஸர்வஜ்ஞனே! நீ எல்லாவற்றையும் அறிவாய். நான் ஒன்றையும் அறியமாட்டேன். ஜகத்திற்கெல்லாம் நீயே நாதனன்றி நானன்று. இதோ புலப்படுகின்ற ஜகத் தெல்லாம் உன்னால் படைக்கப்பட்டு உன்னிடத்திலேயே ஸ்வாதீனமாக வைக்கப்பட்டிருக்கின்றது. எனக்கும் இதற்கும் ஒரு ஸம்பந்தமும் கிடையாது. ஆகையால் எனக்கு அனுமதி கொடுப்பாயாக. ஸ்ரீக்ருஷ்ணா! வ்ருஷ் ணிகுலமாகிற தாமரைக்கு ஸந்தோஷத்தை விளைக்கும் ஸூர்யனே! பூமி தேவதைகள் ப்ராஹ்மணர்கள் பசுக் கள் இவையாகிற ஸமுத்ரத்திற்கு அபிவ்ருத்தியைக் கொடுக்குஞ் சந்த்ரனே! பாஷண்டதர்மமாகிற இருட் டைத் தொலைப்பவனே! பூமியிலுள்ள ராக்ஷஸர்களுக்கு த்ரோஹஞ் செய்பவனே! ஸூர்யன் வரையிலுள்ள ஸமஸ்தர்களாலும் நன்கு பூஜிக்கத்தகுந்தவனே! ஷாட் குண்ய பூர்ணனே! கல்பம்வரையிலும் உனக்கு நமஸ்கா ரம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ப்ரஹ்மதேவன் அளவிட முடியாத ஸ்வரூபஸ்வபாவங்களுடையவனாயினும் லீலைக் காகச் சுருக்கப்பட்ட திவ்யமங்கல விக்ரஹமுடைய ஸ்ரீ

க்ருஷ்ணபகவானை இங்ஙனம் துதித்து மூன்றுதரம் ப்ர தக்ஷிணம் செய்துநமஸ்கரித்துத் தன் வாஸஸ்தானமா கிய ஸத்யலோகம் போய்ச் சேர்ந்தான். எதிரேயிருந்த ப்ரஹ்மதேவனுக்கு அனுமதி கொடுத்தனுப்பிவிட்டு முன்போலவே தன நண்பர்கள் உட்கார்ந்திருக்கப்பெற்ற தன் மணற்குன்றிற்கே கன்றுகளை ஓட்டிக்கொண்டு வந் தான். அந்த இடைப்பிள்ளைகள் ஒருவர்ஷம் நிரம்பக் கடந்திருப்பினும் தங்கள் ப்ராணநாதனுகிய ஸ்ரீக்ருஷ்ண னைப் பிரிந்தும அவனுடைய மாயையினுல் மதிமயங்கி அரைக்ஷணம்போல் நினைத்தார்கள். பகவானுடைய மாயையினுல் மயங்கின மனமுடையவர்கள் எதைதைத் தான் மறக்கமாட்டார்கள். ஜகத்தெல்லாம் இந்தப் பகவா னுடைய மாயையினுல் மதிமயங்கித் தன்னையுங்கூட அடிக்கடி மறக்கின்றது. இனிப் பசி தாஹம் முதலிய வற்றை மறப்பது ஒரு ஆச்சர்யமோ? அந்த இடைப் பிள்ளைகள் அங்ஙனம் வருகின்ற தங்கள் நண்பனுன ஸ்ரீக்ருஷ்ணனைப் பார்த்து 'ஸ்ரீக்ருஷ்ணு! உனக்கு நல் வரவா? நீ வெகு சீக்ரத்தில் வந்தனை. நீ இல்லாமை யால் நாங்கள் ஒரு கவளங்கூடப் புசிக்கவில்லை. இங்கு வா; நாமெல்லாரும் கலந்து குளிர்ந்து போஜனஞ் செய் வோம்' என்று மொழிந்தார்கள். பிறகு ஸ்ரீக்ருஷ்ணன் சிரித்துக்கொண்டே சென்று பிள்ளைகளுடன் கூடிப் புசித்து மலைப்பாம்பின் தோலைக் காட்டிக்கொண்டே வனத்தினின்று கோகுலத்திற்குத் திரும்பிவந்தான். அந்த ஸ்ரீக்ருஷ்ணன், மயில்தோகை புதிய கைரிகாதி தாதுக்கள் இவைகளால் விசித்ரஞ் செய்யப்பட்ட அங்க முடையவனுகிக் குழல் இலை கொம்பு இவைகளை ஊதி அவற்றின் த்வனியால் ஸந்தோஷம் அடைந்து தன் னைத் தொடர்ந்து வருகின்ற இடைப்பிள்ளைகளால் பரி சுத்தமான கீர்த்திகள் பாடப்பெற்றுக் கோபிமார்களின்

கண்களுக்கு மஹாநந்தத்தை விளைக்கவல்ல காட்சியுடையவனுகிக் கன்றுகளை ஓட்டிக்கொண்டு கோகுலத்தில் நுழைந்தான். பிறகு கன்றுமேய்க்கும் பிள்ளைகள் இடைச்சேரியில் சென்று 'யசோதைக்கும் நந்தகோபனுக்கும் பிள்ளையாகிய இந்த ஸ்ரீக்ருஷ்ணன் இன்று ஒரு பெரிய மலைப்பாம்பைக் கொன்றான். எங்களையும் அந்த மலைப்பாம்பின் வாயினின்று விடுவித்தான்' என்று மொழிந்தார்கள்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:— ப்ரஹ்மர்ஷீ! இடைச்சேரியிலுள்ளவர்களுக்குத் தங்கள் பிள்ளைகளிடத்தில் ஒருநாளும் இல்லாத ப்ரீதி பிறர் பிள்ளையாகிய ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் எப்படி உண்டாயிற்று? அதற்குக் காரணம் சொல்லுவீராக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மன்னவனே! ஸமஸ்த ப்ராணிகளுக்கும் அந்தராத்மாவான பரமபுருஷனொருவனே மிகுந்த அன்பிற்கிடமானவன். தேஹம் தேஹத்தைத் தொடர்ந்த பந்துக்கள் முதலாக ஜீவன்வரையிலுள்ள மற்றவைகளெல்லாம் அந்தப் பரமபுருஷனுக்கு ப்ரியமாயிருப்பதைப்பற்றியே அன்பிற்கிடமாகின்றன. ஆகையால், ராஜேந்த்ரனே! ப்ராணிகளுக்கு தங்கள் சரீரத்தில் என்னுடையதென்னும் அபிமானத்தோடுகூடிய ப்ரீதி எவ்வளவு உண்டாகின்றதோ; அவ்வளவு ப்ரீதி அந்தத்தேஹத்தைத் தொடர்ந்த பிள்ளை பணம் வீடு முதலியவற்றில் உண்டாகிறதில்லை. (பரமாத்மாவோடு நேரே ஸம்பந்தமுடைய ஆத்மாவிடத்திலுள்ள ப்ரீதி தேஹத்தில் உண்டாகிறதில்லை. தேஹத்திலுள்ள ப்ரீதி பிள்ளையிடத்தில் உண்டாகிறதில்லை. பிள்ளையிடத்திலுள்ள ப்ரீதி பணத்தில் உண்டாகிறதில்லை. பணத்திலுள்ள ப்ரீதி வீடு முதலியவற்றில் உண்டாகிறதில்லை

ராஜச்ரேஷ்டனே! தேஹத்தையே ஆத்மாவென்று அபிமானித்திருப்பவர்களுக்கும் தேஹத்தில் எவ்வளவு ப்ரீதி உண்டாயிருக்கின்றதோ, அவ்வளவு ப்ரீதி அந்தத் தேஹத்தைத் தொடர்ந்த பிள்ளை பணம் முதலியவற்றில் உண்டாகிறதில்லை. தேஹத்தையுங்கூட நானென்று அபிமானிக்காமல் என்னுடையதென்று அபிமானிப்பார்களாயின், அது ஆத்மாவைப்போல ப்ரீதிக்கிடமாயிராது. விவேகிகளுக்குங் கூட அந்தத் தேஹத்தினிடத்தில் ப்ரீதி ஆத்மாவிடத்திலுள்ள ப்ரீதியைக் காட்டிலும் குறைந்திருக்குமேயன்றி முதலே ப்ரீதி மாறாது. ஏனென்றால் ஜீர்ணமாகி மரணமடைய முயன்றிருப்பினும் ஜீவித்திருக்கவேண்டுமென்னும் விருப்பம் ஜீர்ணமாகாது; பலியஸ்ஸாயிருக்கும். ஆகையால் ஸமஸ்த ப்ராணிகளுக்கும் தங்களுக்கு அந்தராத்மாவான ஸ்ரீக்ருஷ்ணனே மிகுந்த அன்பிற்கிடமானவன். அவனைப் பற்றியே ஜங்கம ஸ்தாவரரூபமான மற்ற இந்த ஜகத்தெல்லாம் ப்ரீதிக்கிடமாகின்றது. இந்த ஸ்ரீக்ருஷ்ணனை ஸமஸ்த ஆத்மாக்களுக்கும் அந்தராத்மாவான பரமபுருஷனென்றே அறிவாயாக. ஆயினும் அவன் தன் ஸங்கல்பத்தினால் ஜகத்தின் ஹிதத்திற்காக இங்குக் காமத்தினால் லௌகிக சரீரமுடைய ஒரு ஜீவன்போல் தோற்றுகிறானன்றி வேறில்லை. அதுவும் விவேகமற்ற மூடர்களுக்கேயன்றி ஜங்கமஸ்தாவரரூபமான ஜகத்தெல்லாம் பகவானுக்குச் சரீரம், அவனுக்குச் சரீரமாகாமல் அவனை விட்டுப் பிரிந்திருக்கும் வஸ்து எதுவுமே இல்லை' என்று வாஸ்தவத்தை அறிந்த விவேகிகளுக்கு அங்ஙனம் தோற்றமாட்டான். ஸமஸ்த வஸ்துக்களும் தங்கள் தங்கள் காரண வஸ்துக்களில் நிலையுற்றிருக்கின்றன. அத்தகைய காரணவஸ்துக்களுக்கும் ஆதாரனாயிருப்ப

வன் ஸ்ரீக்ருஷ்ணனே. ஆகையால் அவனைக்காட்டிலும் வேறுபட்ட வஸ்து என்ன இருக்கின்றது? அதை நிரூபிப்பாயாக அவனைக்காட்டிலும் வேறுபட்டதாக நிரூபிக்கத்தகுந்தவஸ்து எதுவுமே இல்லை. பரிசுத்தமும் அழகியதுமான புகழுடையதும் பெரியோர்களுக்கு அவலம்பமுமாகிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய தளிர்போன்ற பாதமாகிற ஓடத்தைப் பற்றினவர்களுக்கு ஸம்ஸாரமாகிற ஸமுத்ரம் குளப்படிபோல் ஸுகமாகவே தாண்டக்கூடியதாயிருக்கின்றது. பெரிய வைகுண்டமென்கிற பரமபதமே அவர்களுக்கு வாஸஸ்தானமாம். பல ஆபத்துக்களுக்கிடமான ஸம்ஸாரம் அவர்களுக்கு மறுபடியும் ஒருகாலும் உண்டாகாது. ஸ்ரீக்ருஷ்ணன் கௌமாரவயதில் செய்த அகாஸுரமோக்ஷ வ்ருத்தாந்தத்தை இடைப்பிள்ளைகள் பௌகண்டவயதில் அப்பொழுது தான் நடந்ததாக எப்படி சொன்னார்களென்பதைப் பற்றியல்லவோ நீ என்னை வினவினை. அதைப்பற்றிச் சொல்லவேண்டியதையெல்லாம் உனக்குச் சொன்னேன். ஸ்ரீக்ருஷ்ணனுடைய நண்பர்களான இடைப்பிள்ளைகள் வனத்தில் விளையாடினதையும், ஸ்ரீக்ருஷ்ணன் அகாஸுரனைக் கொன்ற வ்ருத்தாந்தத்தையும், புல்முளைத்த மணற்குன்றில் பிள்ளைகளுடன் போஜனஞ்செய்ததையும், கன்றுகளும் கன்றுமேய்க்கும் பிள்ளைகளுமாகத் தோன்றின சுத்தஸத்வமயமான பரப்ரஹ்மஸ்வரூபத்தையும் ப்ரஹ்மஸ்துதியையும் கேட்கும் புருஷனும் சொல்லும் புருஷனும் விருப்பங்களெல்லாம் கைகூடப்பெறுவார்கள். பதினான்காவது அத்யாயம் முற்றிற்று.

{ பலராமன் தேனுகாஸுரனை முறித்தலும், காளியமடுவில் ஜலங்குடித்து மூர்ச்சித்த பசுக்களையும் இடையர்களையும் எழுப்புதலும். }

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—பிறகு பௌகண்ட வயது வரப்பெற்ற அந்த ராமக்ருஷ்ணர்கள் பசுக்களை மேய்ப்பதற்கு உரியவர்களென்று ஸம்மதிக்கப்பட்டு நண்பர்களுடன் பசுக்களை மேய்த்துக்கொண்டு அடிவைப்புக்களால் ப்ருந்தாவனத்தை மிகவும் பரிசுத்தமாக்கினார்கள். (தாமரைமலர் கலசம் த்வஜம் வஜ்ரம் குடை முதலிய ரேகைகள் அமைந்த அடிவைப்புக்களால் ப்ருந்தாவனத்தை மிகவும் அழகாயிருக்குமாறு அலங்கரித்தார்கள்). அப்பொழுது ஸ்ரீக்ருஷ்ணன் தன்புகழைப் பாடுகிற இடையர்களால் சூழப்பட்டு பலராமனோடுங்கூடிக்குழலோசையுடன் பசுக்களை முன்னிட்டுக்கொண்டு விளையாட விரும்பி நிரம்பப்புஷ்பித்திருப்பதும் பசுக்களுக்கு ஹிதமுமாகிய ஒருவனத்திற்குள் நுழைந்தான். அவ்வனத்தில் வண்டுகளும் மற்றும் பல பறவைகளும் ம்ருகங்களும் இனிதாகச் சப்தித்துக்கொண்டிருந்தன. பெரியோர்களின்மனம்போலத் தெளிந்த ஜலமுடைய தாமரைத்தடாகங்களில் படிந்து குளிர்ந்திருப்பதும் தாமரை மலர்களின் பரிமளத்தை ஏந்திக்கொண்டுவருவதுமாகிய காற்று அவ்வனத்தில் ஸுகமாக வீசிக்கொண்டிருந்தது. ஸ்ரீக்ருஷ்ணன் அத்தகையதான அவ்வனத்தைக்கண்டு விளையாட மனங்கொண்டான். சிவந்த [1] பல்லவங்களின்சோபை அமைந்தவைகளும் பூ காய் பழம் இவற்றின் பாரத்தினால் பாதங்களை ஸ்பர்சிக்கிற நுனியுடையவைகளுமான வ்ருக்ஷங்களைக் கண்டு ஆதி

1. பல்லவம் - தளிர்.

புருஷனாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் ஸந்தோஷத்தினால் புன்னகை செய்துகொண்டே தமையனாகிய பலராமனைக் குறித்து இங்ஙனம் மொழிந்தான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—தேவஸ்ரேஷ்டனே! இந்த வ்ருக்ஷங்கள் புஷ்பம் பழம் முதலிய உபஹாரங்களை எடுத்துக்கொண்டு தாங்கள் வ்ருக்ஷஜன்மம் பெற்றதற்குக் காரணமான தங்கள் பாபமெல்லாம் தீரும் பொருட்டுத் தேவதைகளால் பூஜிக்கப்பட்ட உன்பாதாரவிந்தத்தைக் கிளைகளால் வணங்குகின்றன. ஓ ஆதிபுருஷனே! இந்த வண்டுகள் ஸமஸ்தலோகங்களுக்கும் பாவனமான உன்புகழைப் பாடிக்கொண்டு உன்னைப் பின்னே தொடர்ந்து பணிகின்றன. இந்த வண்டுகள் பெரும்பாலும் உன்பக்தர்களில் முக்யர்களான முனிக்கூட்டங்களே. ஆகையால்தான் கோபவேஷத்தினால் மறைந்திருப்பினும் பாபமற்ற தங்கள் தெய்வமாகிய உன்னை விடாமல் தொடர்கின்றன. ஸ்துதிக்கத்தகுந்தவனே! இதோ மயில்கள் ஸந்தோஷத்துடன் நர்த்தனஞ் செய்கின்றன. அங்ஙனமே மான்பேடைகள் கோபிகைகளைப்போல் கண்ணோக்கத்தினால் உனக்குப் ப்ரியஞ்செய்கின்றன. குயில்கள் கூட்டங்கூட்டமாயிருந்து தங்கள் க்ருஹமான வனத்திற்கு வந்திருக்கிற உனக்கு இனிய உரைகளால் ப்ரியஞ் செய்கின்றன. வனத்தில் வஸிக்கின்ற இந்தக் குயில் முதலியவைகளுங்கூட பாக்யமுடையவைகளே. நல்லறிவுடைய பெரியோர்களின இயற்கை இவ்வளவேயல்லவா? உன்னுடைய பாதாரவிந்தங்கள் படப்பெற்ற இப்பூமியும் இப்பூமியிலுள்ள புல் செடி முதலியவைகளும் பாக்யமுடையவைகளே. உன் நகங்களால் தொடப்பட்ட மரங்களும் கொடிகளும், மன இரக்கத்தோடு கூடின உன் கண்ணோக்கங்களைப்பெற்ற

இந்நதிகளும் பர்வதங்களும் பறவைகளும் ம்ருகங்களும் பாக்யமுடையவைகளே. உன்மார்பினால் அணைக்கப் பெற்ற கோபிகைகளும் பாக்யசாலினிகளே. ஸ்ரீமஹாலக்ஷ்மியுங்கூட உன் மார்பினால் அணைப்பதை ஆசைப் படுகிறாளல்லவா?

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் தமையனைப் பார்த்து மொழிந்து சோலையுடைய ப்ருந்தாவனத்தைப் பார்த்து மனக்களிப்புற்றுத் தாழ்வரைகளிலும் ஆற்றங்கரைகளிலும் பசுக்களை மேய்த்துக்கொண்டே விளையாடினான். தன்னைத்தொடர்ந்து வருகின்ற இடையர்களால் பாடப்பட்ட சரித்ரங்களையுடைய அந்த ஸ்ரீக்ருஷ்ணன், தனக்கு மிகவும் அன்பனாகிய பலராமனுடனகூடி ஒருகால் புஷ்பங்களில் தேனைகளைப் பருகி மதித்த வண்டுகள் பாடக் கேட்டுத் தானும் அவற்றைத் தொடர்ந்து பாடுவதும், ஒருகால் கலஹம்ஸங்களின சப்தத்தை அனுஸரித்துச் சப்திப்பதும், ஒருகால் நண்பர்களைச் சிரிப்பித்துக்கொண்டு கூத்தாடுகின்ற மயிலை அனுஸரித்துக் கூத்தாடுவதும், ஒருகால் பசுக்களுக்கும் இடையர்களுக்கும் மனத்திற்கினியதும் மேககர்ஜனம்போல் கம்பீரமாயிருப்பதுமாகிய தன்குரலால் பசுக்களை ப்ரீதியுடன் பெயர்களைச் சொல்லி அழைப்பதும், ஒருகால் சகோரம் க்ரௌஞ்சம் சக்ரவாகம் பரத்வாஜம் மயில் முதலிய பறவைகளை அனுஸரித்துக் கூவுவதும். ஒருகால் ஐந்துக்களுக்குள் புலி ஸிம்ஹங்களைக் கண்டு பயந்தாற்போல் நடனஞ் செய்வதும், ஒருகால் விளையாடி இளைப்புற்று இடையர்களின் மடியில் தலையை வைத்துப் படுத்திருக்கின்ற தமையனான பலராமனுக்குத் தானே கால்பிடிப்பது முதலிய உபசாரங்களால் இளைப்பாரச் செய்வதுமாகி விளையாடிக்கொண்டிருந்தான். அந்த ராம

க்ருஷ்ணர்களிருவரும் ஒருகால் ஆடுவது பாடுவது கிளம்பிப் பாய்வது ஒருவரோடொருவர் சண்டையிடுவது முதலிய விளையாடல்களில் தேறின இடையர்களைக் கைகளில் பிடித்துச் சிரித்துக்கொண்டே புகழ்வார்கள். அந்த ஸ்ரீக்ருஷ்ணன் ஒருகால் பாஹுயுத்தஞ்செய்த ஶ்ரமத்தினால் வருந்தி மரத்தடியில் தளிர்களைப் படுக்கையாகப் பரப்பி இடையர்களின மடியைத் தலையணையாகக் கொண்டு சயனிப்பான். அப்பொழுது மஹானுபாவனை அந்த ஸ்ரீக்ருஷ்ணனுக்குச் சிலர் கால்பிடிப்பார்கள். பாபமற்றவர்களான வேறு சிலர் விசிறிகளால் வீசுவார்கள். மஹாராஜனே! வேறு சிலர் ப்ரீதியினால் மனம் உருகப்பெற்று மனத்திற்கினியவைகளும் அவனுக்குத் தகுந்தவைகளுமான பாடல்களை மெல்லமெல்லப் பாடுவார்கள். தன்னைத் தானே அனுபவித்துக் களித்திருக்கையாகிற தன்னிலைமையை மறைத்துக்கொண்டு தன் ஸங்கல்பத்தினால் இடைப்பிள்ளைத்தனத்தை நடித்து அதற்குரிய செயல்களையும் செய்துகொண்டு ஸ்ரீமஹாலக்ஷ்மியால் சீராட்டப்பட்ட தளிர்போன்ற பாதங்களுடையவனாயினும் ப்ராக்ருதர்களோடுகூடி இடையிடையில் தான் ஸர்வேஶ்வரனென்பதை வெளியிடுகின்ற அமானுஷ சேஷ்டிதங்களையும் நடத்திக்கொண்டு அந்த ப்ராக்ருதர்களைப்போல் தானும் க்ரீடித்துக்கொண்டிருந்தான். அப்பொழுது ராமக்ருஷ்ணர்களுக்கு நண்பனாகிய ஸ்ரீதாமனென்னும் கோபாலனும் ஸுபலன் ஸ்தோகக்ருஷ்ணன் முதலிய மற்றவர்களும் ப்ரேமத்துடன் அவர்களை நோக்கி இங்ஙனம் மொழிந்தார்கள் 'ராம! ராம! மஹாபலமுடையவனே! ஸ்ரீக்ருஷ்ண! துஷ்டர்களை அடக்குந் திறமையுடையவனே! இவ்விடத்திற்கு அருகாமையில் பனஞ்சாலைகள் நிறைந்த பெரிய ஒருவனம்

இருக்கின்றது. அங்கு மிகப்பெரிய பனம்பழங்கள் விழுந்தும் விழுவதுமாயிருக்கின்றன. ஆனால் அவை துர்ப்புத்தியுள்ள தேனுகாஸுரனால் தகையப்பட்டிருக்கின்றன. ஓ ராமா! ஓ க்ருஷ்ணா! அவ்வஸுரன் மஹாவீர்யமுடையவன்; கழுதையின் உருவந்தரித்திருக்கிறான்; தனனோடொத்த பலமுடைய மற்றும் பல பந்துக்களால் சூழப்பட்டிருக்கிறான். அவன் அங்கு நுழைகின்ற மனுஷ்யர்களையெல்லாம் பிடித்துப் பக்ஷித்துவிடுகின்றான். ஆகையால் அவனிடத்தில் பயந்து மனுஷ்யர்கள் எவரும் அவ்வனத்தில் நுழைகிறதேயில்லை. சத்ருக்களை அழிப்பவனே! அதனால் அங்கு இதுவரையில் ஒருவராலும் பக்ஷிக்கப்படாதவைகளும் மிகுந்த மணமுடையவைகளுமாகிய பனம்பழங்கள் அமிதமாயிருக்கின்றன. அந்தப் பழங்களின் வாஸனை இதோ இவ்விடத்திலுங்கூட நாற்புறத்திலும் ிரமபி நமக்குத் தெரிகின்றது. க்ருஷ்ணா! அந்தப் பழங்களின் வாஸனையால அவற்றைப பக்ஷிக்கவேண்டுமென்று விருப்பங்கொண்ட மனமுடைய எங்களுக்கு அவற்றைக் கொண்டுவந்து கொடுப்பாயாக. ராமா! அந்தப் பழங்களைப் பக்ஷிக்கவேண்டுமென்று எங்களுக்குப் பேராசையாயிருக்கின்றது. உனக்கு ருசிக்குமாயின், போவாயாக. நாங்கள் நியமிக்க வல்லரல்லோம்' என்றார்கள். ஸமர்த்தர்களாகிய அந்த ராமக்ருஷ்ணர்கள், இங்ஙனம் மொழிகின்ற நண்பர்களின் வசனத்தைக் கேட்டு அவர்களின் இஷ்டத்தை நிறைவேற்ற விரும்பிச் சிரித்து அந்த இடையர்களால் சூழப்பட்டுப் பனங்காட்டிற்குச் சென்றார்கள். அவர்களில் பலராமன் அந்தத் தாலவனத்தில் நுழைந்து இரண்டு கைகளாலும் பனைமரங்களை நாற்புறத்திலும் பிடித்து மத்தகஜம்போல் பலத்தி

ஞல் அசைக்கிப் பழங்களை உதிர்த்தான். அப்பொழுது உதிர்கின்ற பழங்களின் சப்தத்தைக் கேட்டுக் கழுதையின் உருவந்தரித்த அஸுரன் வ்ருக்ஷங்களோடுகூடப் பூமியை நடுங்கச் செய்துகொண்டு எதிர்த்தோடி வந்தான். பலிஷ்டனாகிய அவ்வஸுரன் பலராமனைக் கிட்டிப் பின்கால்களால் பலமுள்ளவளவும் அவனை மார்பில் அடித்துக் காவென்று சப்தஞ் செய்துகொண்டு அவனைச் சுற்றிவந்தான். மீளவும் அவன் விரைந்து வந்து பெருங்கோபத்துடன் பின்னே திரும்பிய பின்கால்களைத் தூக்கி ராமனை அடிக்கத்தொடங்கினன். அந்தப் பலராமன் அவ்வஸுரனைப் பின்கால்களில் பிடித்துக் கொண்டு ஒற்றைக்கையினால் சுழற்றி ஆவலில் பிராணன்களை இழந்த அவ்வஸுரனைப் பனைமரத்தின் நுனியில் வீசியெறிந்தான். மிகவும் உயர்ந்த அந்த நுனியுடைய அப்பனைமரம் அவ்வஸுரனால் அடிக்கப்பட்டுப் பக்கத்திலுள்ள மற்றொரு பனைமரத்தை விழத்தள்ளிக் கொண்டே முறிந்து விழுந்தது. அந்தப் பக்கத்துமரமும் தன்பக்கத்திலுள்ள மற்றொரு மரத்தை விழத்தள்ளிக்கொண்டே தானும் முறிந்து விழுந்தது. அதுவும் தன்பக்கத்திலுள்ள மற்றொரு மரத்தை விழத்தள்ளிக்கொண்டே முறிந்து விழுந்தது. பலராமன் விளையாட்டிற்காக வீசியெறிந்த [1] ராஸபரூபியான அஸுரனுடைய தேஹத்தினால் அடியுண்ட வ்ருக்ஷம் ஒன்றும் அதனால் அடியுண்டது மற்றொன்றும் அதனால் அடியுண்டது மற்றொன்றுமாக அவ்வனத்திலுள்ள தாலவ்ருக்ஷங்கள் எல்லாம் பெருங்காற்றினால் அசைக்கப்பட்டவை போல் நடுங்கமுற்றன. ஜகதீச்வரனும் அளவற்றவனுமாகிய அந்தப் பகவானிடத்தில் இது ஒரு ஆச்சரிய

1. ராஸபம்-கழுதை.

மன்று. நூல்களில் வஸ்த்ரம்போல் இந்த ஜகத்தெல்லாம் அவனிடத்தில் குறுக்கும்நெடுக்குமாய்க் கோக்கப்பட்டிருக்கின்றதல்லவா? மன்னவனே! ஆகையால் அவன் பெருமைக்கு இது ஒருபுகழன்று. பிறகு தேனுகாஸுரனுடைய ஜ்ஞாதிகளாகிய [1]கர்த்தபங்கள் தங்கள் பந்துவாகிய தேனுகன் முடியப்பெற்று எல்லாம் பரபரப்புற்றுக் கர்ணகடோரமாகச் சப்தஞ் செய்துகொண்டு ராமக்ருஷ்ணர்களை எதிர்த்துவந்தன மன்னவனே! ராமக்ருஷ்ணர்களிருவரும் அங்ஙனம் எதிர்த்து வருகின்ற அந்தக் கழுதைகளையெல்லாம் அவலீலையாகப் பின்கால்களில் பிடித்துச் சுழற்றிப் பனைமரங்களில் வீசியெறிந்தார்கள். ராசிராசியாக உதிர்ந்திருக்கின்ற பலம் பழங்களாலும் ப்ராணன்களை இழந்த அஸுரதேஹங்களாலும் முறிந்து விழுந்த உயர்ந்துள்ள பனைமரங்களின் நுனிகளாலும் நிறைந்திருக்கின்ற அவ்வனத்தின பூமி மேகங்களால நிறைந்திருக்கிற ஆகாயம்போல் விளங்கிற்று. தேவதைகளும் ஸித்தசாரணாதிகளும் அந்த ஸ்ரீக்ருஷ்ணராமர்கள் செய்த மிகவும அற்புதமான அந்தச் செயலைக் கண்டு வியப்புற்றுப் பூமழை பொழிந்து வாத்யங்களை முழக்கி ஸ்தோத்ரஞ்செய்தார்கள். பிறகு மனுஷ்யர்கள் தேனுகனும் அவன பந்துக்களும் முடிந்து எவ்வித உபத்ரவத்திற்குமிடமில்லாத அந்தக் கானகத்தில் சென்று பயமற்றுப்பனம்பழஙகளைப் பக்ஷித்தார்கள். பசுக்களும் புல்மேய்ந்தன. கேட்டமாத்ரத்தில் புண்யத்தை விளைக்கும்படியான புகழுடையவனும் தாமரையிதழ்போன்ற கண்களுடையவனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் தமையனை பலராமனுடன் கூடித் தன்னைப் பின்பற்றி வருகின்ற இடையர்களால் துதிக்கப்பெற்றுக் கோகுலத்

1. கர்த்தபம்-கழுதை.

திற்குச் சென்றான். தலைமயிர்களில் பசுக்களின் தூட்கள் படியப்பெற்று மயில்தோகையை அணிந்து காட்டுப்புஷ்பங்களைச் சூடிப் பின்றொடர்ந்து வருகின்ற இடையர்களால் தன்புகழ் பாடப் பெற்றுக் குழலை ஊதிக்கொண்டு வருகின்ற அந்த ஸ்ரீக்ருஷ்ணனைக் கோபிகைகள் பார்க்கவேண்டுமென்னும் விருப்பமுற்ற கண்களுடையவர்களாகிக் கூட்டங்கூடி எதிர்கொண்டார்கள். இடைச்சேரியிலுள்ள கோபிமார்கள் அனைவரும் தங்கள் கண்களாகிற வண்டுகளால் ஸ்ரீக்ருஷ்ணனுடைய முகமாகிற தாமரைமலரில் தேனைப் பருகிப் பகலெல்லாம் பிரிந்திருந்தமையாலுண்டான தாபத்தைத் துறந்தார்கள். ஸ்ரீக்ருஷ்ணனும வெட்கம் புன்னகை வணக்கம் இவை அமைந்த கடைக்கண்ணோக்கங்களாகிற அந்தக்கோபிமார்களின வெகுமதியைப் பெற்றுப் பசுக்களை ஓட்டிக்கொண்டு தொழுவத்திற்குள் நுழைந்தான். யசோதையும் ரோஹிணியும தங்கள் மனவிருப்பத்திற்கும் காலத்திற்கும் தகுந்திருக்குமாறு தங்கள் பிள்ளைகளாகிய அந்த க்ருஷ்ணராமர்களுக்கு மேலான உபசாரங்களைச் செய்தார்கள். அங்கு உடம்புக்கு எண்ணெய் தேய்த்துப் பிடித்து ஸ்நானம செய்விப்பது முதலிய உபசாரங்களால் பகலெல்லாம் வெளியில் அலைந்து வந்த ஶ்ரமம முழுவதும் தீரப்பெற்று அழகிய ஆடை உடுத்துத் திவ்யமான பூமாலைகளாலும் திவ்யமான சந்தனாதிகளாலும் அலங்கரிக்கப்பெற்றுத் தாய்மார்கள் கொண்டுவந்த ருசியுள்ள அன்னத்தைப் புசித்து உபலாலனஞ் செய்யப் பெற்று மேலான படுக்கையில் படுத்து ஸுகமாகத் தூங்கினார்கள். மன்னவனே! இங்ஙனம் ப்ருந்தாவனத்தில் திரிந்துகொண்டிருக்கிற மஹானுபாவனாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் ஒருகால் பலராமனை விட்டு மற்றநண்பர்களால் சூழப்பட்டு, யமுனைக்குச்

சென்றான். பசுக்களும் அவற்றை மேய்க்கின்ற இடையர்களும் அப்பொழுது க்ரீஷ்மருதுவாகையால் கொடிதாகக் காய்கின்ற வெயிலால் பீடிக்கப்பட்டுத் தண்ணீர் தாஹம் எடுத்து அதைப் பொறுக்கமுடியாமல் காலிய மஹாநாகத்தின் விஷஸம்பந்தத்தினால் தூஷிக்கப்பட்ட அந்த யமுனையின் ஜலத்தைக் குடித்தன. அந்த விஷஜலத்தைப் பானஞ் செய்தமையால் அவையெல்லாம் மூர்ச்சித்து ப்ராணன்களை இழந்து விழுந்தன. யோகேஸ்வரர்களுக்கும் ஈஸ்வரனாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் அவையெல்லாம் அங்ஙனம் விழுந்திருப்பதைக் கண்டு அம்ருதத்தை வர்ஷிக்கின்ற தன் கண்ணோக்கத்தினால் தன்னையே நாதனாகவுடைய அவற்றையெல்லாம் பிழைப்பித்தான். அவையெல்லாம் உடனே நன்றாக ப்ரஜ்ஞை வரப்பெற்று ஜலக்கரையினின்று எழுந்து ஒன்றையொன்று பார்த்துக்கொண்டு மிகவும் வியப்புற்றன; விஷஜலத்தைக் குடித்து மரணம் அடைந்த தாங்கள் மீளவும் பிழைத்தெழுந்தது அந்த ஸ்ரீகோவிந்தனுடைய அருள்நிறைந்த கண்ணோக்கத்தின் கார்யமென்று தெரிந்துகொண்டன. பதினைந்தாவது அத்யாயம் முற்றிற்று

---

(ஸ்ரீக்ருஷ்ணன் காலியனை நிக்ரஹஞ் செய்தலும், அவன் பத்னிகள் வந்து ஸ்தோத்ரஞ் செய்து வேண்டுகையில் அவனை அனுக்ரஹித்து விடுதலும்.)

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஸ்ரீக்ருஷ்ணன் யமுனா ஜலம் காலியனென்னும் க்ருஷ்ண ஸர்ப்பத்தினால் தூஷிக்கப்பட்டிருப்பதைக் கண்டு அதைச் சுத்தப்படுத்த விரும்பி அந்த ஸர்ப்பத்தை அதினின்று துரத்தினான்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:—மிகவும் அழகாகிய யமுனையின் நடுஜலத்திற்குள் ஸ்ரீக்ருஷ்ணன்

ஸர்ப்பத்தை எங்ஙனம் நிக்ரஹித்தான்? அந்த ஸர்ப்பம் பலயுகங்களாக அந்த யமுனையில் வஸித்துக்கொண்டி டிருப்பதாகக் கேள்வி. பிறகு அந்த ஸர்ப்பம் எப்படி ஆயிற்றோ அதையும் எனக்குச் சொல்லுவீராக. ப்ராஹ்மணஶ்ரேஷ்டரே! அளவற்ற மஹிமையுடையவனும் ஸ்வதந்த்ரனுமாகிய பகவான் லீலைக்காக ஸ்ரீக்ருஷ்ணனென்னும் கோபாலனாக அவதரித்துச் செய்த கம்பீரமான சரித்ரமாகிற அம்ருதத்தை அனுபவிக்கப் பெற்றவன் எவன்தான் போதுமென்று த்ருப்தி அடைவான்? எவனும் த்ருப்தி அடையமாட்டான்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—யமுனையில் காலியனுடைய மடு ஒன்றுண்டு. அது அந்த ஸர்ப்பராஜனுடைய விஷாக்னியினால் கொதிக்கப்பெற்றிருந்தது. அந்த மடுவுக்குநேரில் ஆகாயத்தில் பறக்கும் பறவைகளுங்கூட அந்த விஷக்காற்று பட்டமாத்ரத்தினால் ப்ராணன்களை இழந்து விழுவது வழக்கம், அந்த மடுவின் கரையிலுள்ள மரம் முதலிய அசையாத ஜீவனகளும் மிருகம் முதலிய அசையுந்தன்மையுள்ள ஜீவன்களும் ஜலத்திவலைகளை ஏந்திக்கொண்டு வருகிற மடுக்காற்றினால் தீண்டப்பெற்று மாண்டுபோகின்றன. காலிய மடுவின் ப்ரபாவம் அப்படிப்பட்டது துஷ்டர்களை அடக்குவதற்காகவே அவதரித்திருக்கிற அந்த ஸ்ரீக்ருஷ்ணன் காலியமடு, காற்று பட்ட மாத்ரத்தில் நுழைந்து நிறைந்து வேலைசெய்வதான கொடுவேகமுள்ள விஷவீர்யம் அமைந்திருப்பதையும் அதன் ஸம்பந்தத்தினால் யமுனாநதி முழுவதும் பானஞ்செய்ய உபயோகப்படாமல் கெட்டிருப்பதையும் கண்டு அங்குச் சாகோபசாமாக உயர்ந்து வளர்ந்திருக்கிற ஒரு கதம்பவ்ருக்ஷத்தினமேல் ஏறி அரைநாண்மாலையை அழுந்தக்கட்டிக்கொண்டு உள்

ளங்கையினுல் புஜத்தைத் தட்டி மிகவும் உயர்ந்திருக்கின்ற அந்தக் கதம்பவ்ருக்ஷத்தினின்று காலியமடுவின் விஷஜலத்தில் குதித்தான். அந்தக்காலியஸர்ப்பதின் மடு புருஷஶ்ரேஷ்டனுகிய ஸ்ரீக்ருஷ்ணன் வேகமாகக் கிளம்பிப் பாய்ந்ததனுல் கலக்கமுற்ற ஸர்ப்பங்களின் விஷங்களால் வளர்ந்த ஜலப்ரவாஹமுடையதாகி விஷவேகத்தினுல் கொதிக்கின்ற பயங்கரமான அலைகள் கிளம்பப் பெற்று நாற்புறத்திலும் நூறுவில்லளவு தூரம் ஏறிப் பாய்ந்தது. ஆனுல் அளவற்ற பலமுடைய அந்த மஹானுபாவனுக்கு அது எவ்வளவு? பிறகு மத்தகஜத்தின் பராக்ரமம் போன்ற பராக்ரமமுடைய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் புஜதண்டங்களால் ஜலத்தை அடித்து விளையாடிக் கொண்டிருக்கையில், ஜலத்தின் கோஷத்தைக் கேட்டுக் காலியனென்னும் ஸர்ப்பராஜன் தன்னுடைய வாஸஸ்தானமாகிய மடுவை அவமதிக்கக் கண்டு அதைப் பொறுக்க முடியாமல் தன் ஸைன்யங்களோடு மேல் கிளம்பி வந்தான். ஸர்ப்பராஜனுன அந்தக் காலியன், பார்க்கப் பதினுயிரம் கண்கள் வேண்டும்படி மிகவும் அழகியனும் ஸுகுமாரனும் நீலமேகம்போல் நிர்மலனும் மார்பில் ஸ்ரீவத்ஸமென்னும் திருமறுவால் திகழ்கின்றவனும் பீதாம்பரம் உடுத்தவனும் புன்னகையினுல் அழகான முகமுடையவனும் தாமரைமலரின் உள்ளிதழ்போன்ற பாதங்களுடையவனும் நிர்ப்பயமாய் விளையாடிக்கொண்டிருப்பவனுமாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணனை மர்மஸ்தானங்களில் கடித்துத் தன் உடலினுல் சுற்றிக் கொண்டான. அங்ஙனம் அவன் காலியநாகத்தின உடலால் சுற்றப்பட்டுச் சேஷ்டை கண்ணுக்குத் தெரியாதிருப்பதைக் கண்டு அவனுடைய அன்புள்ள நண்பர்களான கோபர்கள பயத்தினுல் வருந்திச் சரீரம் நண்பர் பணம் பெண்டிர் ஸுகம் இவை யெல்லாவற்றையும்

அந்த ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் அர்ப்பணஞ் செய்திருப்ப வர்களாகையால் துக்கம் சோகம் பயம் இவைகளால் மதிமயங்கி விழுந்தார்கள். பசுக்களும் எருதுகளும் கன்றுகளும் மிகவும் வருந்திக் கதறிக்கொண்டு அந்த ஸ்ரீக்ருஷ்ணனிடத்திலேயே கண்களை நிறுத்தி அழுபவை போன்று நின்றிருந்தன. அப்பொழுது கோகுலத்தில் ஆகாயம் பூமி சரீரம் ஆகிய மூன்று இடங்களிலும் பயம் ஸமீபித்திருப்பதை அறிவிப்பவைகளும் மிக்க பயங்கரங் களுமாகிய மிகக்கொடிய மூன்றுவகை உத்பாதங்கள் உண்டாயின. நந்தன் முதலிய கோபாலர்கள் அந்த உத்பாதங்களைக் கண்டு பயந்து ஸ்ரீக்ருஷ்ணன் பல ராமனை விட்டுத் தனியே பசுமேய்க்கப் போயிருக்கிரு னென்பதையும் அறிந்து அவனுடைய மஹிமையை அறியாதவர்களாகையால் அந்த அவசகுனங்களால் அவன் மரணம் அடைந்தானென்று நினைத்து அவனிடத் திலேயே ப்ராணன்களையுடையவர்களாகையாலும் அவ னிடத்திலேயே மனமுடையவர்களாகையாலும் சோகம் பயம் இவை தலையெடுத்து வருந்திப் பசுக்கள் கன்றுக ளிடத்தில்போல மிகுந்த வாத்ஸல்யமுடையவர்களாகிச் சிறுவர் கிழவர் பெண்டிர் முதற்கொண்டு எல்லோரும் மனவருத்தத்தினால் முகம்வாடி ஸ்ரீக்ருஷ்ணனைப் பார்க் கவேண்டுமென்ற பேராவலுடன் கோகுலத்தினின்று புறப்பட்டார்கள். மதுகுலத்திற்கு அலங்காரனும் மஹானுபாவனுமாகிய பலராமன் தம்பியாகிய ஸ்ரீக்ருஷ் ணனுடைய ப்ரபாவத்தை அறிந்தவனாகையால் அவர் கள் அங்ஙனம் பயந்து புறப்படுவதைக் கண்டு சிரித்து ஒன்றும் பேசாதிருந்தான். தங்கள் அன்பனாகிய ஸ்ரீக் ருஷ்ணனைத் தேடிக்கொண்டு போகிற அந்த நந்தாதி கோபாலர்கள் பகவானுடைய பாதங்களுக்கு அஸாதா

ரண சிஹ்னங்களான த்வஜம் வஜ்ரம் முதலிய ரேகைகள் அமைந்திருக்கிற அடிவைப்புக்களால் அறிவிக்கப்பட்ட வழியைக் கண்டுபிடித்துக்கொண்டு யமுனைக்கரைக்குச் சென்றார்கள். அவர்கள் பசுக்கள் போனவழியில் மற்ற இடைப்பிள்ளைகளுடைய அடிவைப்புக்களின் இடையிடையில் தாமரை யவம் மாவெட்டி வஜ்ரம் த்வஜம் முதலிய ரேகைகளோடு கூடின ஜகந்நாதனான ஸ்ரீக்ருஷ்ணனுடைய அடிவைப்புக்களைக் கண்டுகொண்டே விரைவுடன் சென்றார்கள். அந்த நந்தாதிகள் அவ்விடம் சென்று அங்குக் காலியமடுவின நடுஜலத்தில் ஸ்ரீக்ருஷ்ணன் ஸர்ப்பத்தின உடலினால் சுற்றப்பட்டுச் சேஷ்டையற்றிருப்பதையும் மடுவின கரையில் இடையர்கள் மூர்ச்சித்திருப்பதையும் நாற்புறத்திலும் பசுக்கள் மதிமயங்கிக் கதறிக்கொண்டிருப்பதையுங்கண்டு வருந்தி மிகவும் மோஹித்தார்கள். கோபிகைகள் அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய ஸ்னேஹம் நிறைந்த புன்னகை கடைக்கண் ணோக்கங்கள் இனிய உரைகள் ஆகிய இவற்றையெல்லாம் நினைத்து மிகவும் அன்பிற்கிடமான அவன ஸர்ப்பத்தினால் பிடியுண்டிருக்கக் கண்டு மிகவும் வருந்தித் தங்கள் அனபனைப் பிரிந்தமையால் மூன்றுலோகங்களும் சூன்யமாயிருக்கக் கண்டார்கள். அவர்கள், தன்குழந்தையான க்ருஷ்ணனைப்பற்றி மிகவும் வருந்தி மடுவில் விழுமுயல்கின்ற யசோதையைப் பிடித்துத் தடுத்து அவளோடொத்த மனவருத்தமுடையவர்களாகையால் கண்ணீர் தாரைதாரையாகப் பெருகப்பெற்றுக் கோகுலத்திற்கெல்லாம் அன்பனாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய பூதனாஸம்ஹாராதி வ்ருத்தாந்தங்களைச் சொல்லிக்கொண்டு செத்தாற்போல நின்றிருந்தார்கள். க்ருஷ்ணனிடத்திலேயே ப்ராணன்களையுடைய நந்தாதிகள்

அந்த மடுவில் ப்ரவேசிக்க முயன்றிருப்பதைக் கண்டு ஸ்ரீக்ருஷ்ணனுடைய ப்ரபாவத்தை அறிந்தவனும் ஷாட்குண்ய பூர்ணனுமாகிய பலராமன் அவர்களை வேண்டாமென்று தடுத்தான். பெண்களும் அறியாத சிறுவர்களும் முதற்கொண்டு கோகுலம் முழுவதும் இங்ஙனம் தனக்காக மிகவும் துக்கித்திருப்பதைக் கண்டு மனுஷ்யர்களின் பதவியை அனுஸரித்திருக்கின்ற அந்த ஸ்ரீக்ருஷ்ணன் ஒரு முஹூர்த்தகாலம் இருந்து அப்பால் அந்த ஸர்ப்பத்தை உதறி அதன்கட்டினின்று வெளிப்பட்டு வந்தான். அந்த ஸ்ரீக்ருஷ்ணன் தன் சரீரத்தைப் பெருக்கச்செய்யக் காலியன் அதைச் சுற்றிக்கொண்டிருக்கிற தன் சரீரம் வருந்தி அங்ஙனமே அதைச் சுற்றிக்கொண்டிருக்க முடியாமல் அவனை விட்டுக் கோபமுற்றுப் படங்களை உயரத்தூக்கி மூச்செறிந்து மூக்குரந்த்ரங்களில் விஷம் நிரம்பப்பெற்று மணைபோதுபோல ஜ்வலித்துக்கொண்டு அசையாதிருக்கின்ற கண்களுடையவனும் முகத்தில் நெருப்புத்துணுக்கைகளுடையவனுமாகி அந்தப் பரமபுருஷனை வெறுமனே பார்த்துக்கொண்டிருந்தான். ஸ்ரீக்ருஷ்ணன் இரண்டு நுனிகளையுடைய நாக்கினால் இரண்டு கடைவாய்களையும் அடிக்கடி நக்கிக்கொண்டிருப்பவனும் மிகவும் பயங்கரமான விஷாக்னியால் நிறைந்த கண்களுடையவனுமாகிய அந்தக்காலியனைக் கருடன்போல நாற்புறத்திலும் விளையாடிக்கொண்டே சுற்றிச்சுற்றிவந்தான். அந்தக் காலியனும் அவனைக் கடிப்பதற்கு அவஸரம் பார்த்துக்கொண்டே அவனோடுகூடச் சுற்றிச்சுற்றிவந்தான். ஸமஸ்த லோகங்களுக்கும் ஆதிகுருவாகிய அந்த ஆதிபுருஷன் இங்ஙனம் சுற்றுவதிலேயே வீர்யமெல்லாம் ஒடுங்கப்பெற்றுத் தோள்களைத் தூக்கிக்கொண்டிருக்கிற அந்த ஸர்ப்பராஜனுடைய அகன்றவைகளான சிரங்களின்மேல் ஏறி அச்

சிரங்களிலுள்ள ரத்னஸமூஹங்களின் ஒளிகள் பட்டு மிகவும் சிவந்தபாதாரவிந்தங்களுடையவனாகி நர்த்தனஞ்செய்தான். அங்ஙனமே ஸ்ரீக்ருஷ்ணன் காளியனுச்சியில் நர்த்தனஞ்செய்ய முயன்றிருப்பதைக் கண்டு அவனுடைய பக்தர்களான கந்தர்வர்களும் ஸித்தர்களும் முனிவர்களும் சாரணர்களும் தேவதைகளும் அவரவர்களுடைய மடந்தையர்களும் ப்ரீதியினால் அந்தப் பகவானைப் பணிவதற்கு ம்ருதங்கம் பணவம் ஆனகம் முதலிய அழகுமிகுந்த பற்பல வாத்யகோஷங்களோடும் சிறந்த பாட்டுக்களோடும் புஷ்போபஹாரங்களோடும் ஸ்தோத்ரங்களோடும் விரைந்து வந்தார்கள். நூறு தலைகளுடையவனும் ஆயுளும் பலமுங் க்ஷீணிக்கப்பெற்றுச் சுழன்றுகொண்டிருப்பவனுமாகிய அந்தக் காளியனுடைய தலைகளில் எதெது தலை வணங்காமல் உயரத் தூக்கிக்கொண்டிருந்ததோ, அதையெல்லாம் துஷ்டர்களை அடக்குந்தன்மையுடைய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் பாதங்களால் மிதித்து மர்த்தனஞ்செய்தான். அப்பொழுது அந்தக் காளியநாகன் வாய்களினின்றும் மூக்குகளினின்றும் உஷ்ணமான ரக்தத்தை அமிதமாகக் கக்கிக்கொண்டே மிகவும் மூர்ச்சை அடைந்தான். இங்ஙனம் செய்யவே மீளவும் அவன் கோபாவேசமுற்றுக் கண்களால் விஷத்தைக் கக்குவதும் பெருமூச்செறிவதுமாகித் தலைகளை உயரத் தூக்குகையில், கந்தர்வாதிகளால் புஷ்பங்களை இறைத்துப் பூஜிக்கப் பட்ட ஸ்ரீக்ருஷ்ணன் அந்தந்த தலைகளையெல்லாம் வணக்கிக்கொண்டே நர்த்தனஞ் செய்து அவனைத் தண்டித்தான். அந்த ஸமயத்தில் அவன் சேஷாஸனத்தில் வீற்றிருக்கின்ற பரமபுருஷன் போலப் புலப்பட்டான். மன்னவனே! அந்தப் பகவானுடைய உத்தண்ட தாண்டவத்தினால் பிடிக்கப்பட்ட பணங்

களின் ஸமூஹமுடையவனும் சரீரமெல்லாம் முறிந்து வருந்துகின்றவனுமாகிய அக்காலியன் முகங்களால் ரக்தத்தைக் கக்கிகொண்டே அப்பொழுது அந்த ஸ்ரீக்ருஷ்ணனை ஜங்கமஸ்தாவரரூபமான ஸமஸ்த பூதங்களுக்கும் நியாமகனும் புராணபுருஷனுமாகிய ஸ்ரீமந்நாராயணனாக நினைத்து அவனையே மனத்தினால் சரணம அடைந்தான். உலகங்களெல்லாம் வயிற்றில் அடங்கப்பெற்ற அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய பெரும்பாரத்தினால் பிடிக்கப்பட்டுக் குதிகாலடிகளால் நாற்புறத்திலும் முறிக்கப்பட்டவைகளுமான குடைகள் போன்ற பணங்களையுடைய அந்தக் காலியன் வருந்துவதைக் கண்டு அவனுடைய பத்னிகள் துக்கித்து ஆடை ஆபரணம் தலைமயிர்ச்சொருக்கு முதலியவை அவிழ்ந்தலையப்பெற்று ஸ்ரீக்ருஷ்ணனிடம் ஓடிவந்தார்கள். அவர்கள் மிகவும் பயந்த மனமுடையவர்களாகிக் குழந்தைகளை முன்னிட்டுக்கொண்டு பூமியில் சரீரங்களைத் தண்டம்போல சாய்த்து ஸமஸ்த பூதங்களுக்கும் ரக்ஷகனான அந்த ஸ்ரீக்ருஷ்ணனை நமஸ்கரித்தார்கள். பிறகு பதிவ்ரதைகளான அந்நாகபத்னிகள் பர்த்தாவின அபராதத்தைப் பொறுப்பிக்க விரும்பி அஞ்சலி செய்து சரணங் கொடுப்பவனாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணனையே உபாயமாக நிச்சயித்தார்கள்.

நாகபத்னிகள் சொல்லுகிறார்கள்:— அபராதஞ்செய்த இந்நாகராஜனை நீ தண்டித்தது யுக்தமே. துஷ்டர்களைத் தண்டிக்கும்பொருட்டல்லவோ உன்னுடைய அவதாரம்? சத்ருவின் பிள்ளைகளிடத்திலும் வைஷம்யமில்லாத காட்சியுடைய நீ துஷ்டர்களைத் தண்டனை செய்யினும், உடனே அந்தத் தண்டனைக்கு ஹிதரூபமான பலனையே அறிவிக்கின்றனை. நீ சத்ருக்களென்றும்

மித்ரர்களென்றும் பேதம் பாராமல் அபராதஞ் செய்தவர்களெல்லோரையும் தண்டிக்கின்றனை. ஆகையால் நீ எல்லோரையும் ஸமமாகப் பார்க்குந் தன்மையனே. தகப்பன் பிள்ளையின ஹிதத்திற்காக அவனைச் சிக்ஷிப்பதுபோல, நீ எல்லோர்க்கும் ஹிதத்தையே விரும்பித் தண்டனை செய்கின்றனை. அது அஹிதம்போலத் தோற்றினும் உண்மையில் ஹிதமாகவேயிருக்கும். ஆகையால் நீ செய்த தண்டனை எங்கள் விஷயத்தில் அனுக்ரஹமே. நீ துஷ்டர்களைத் தண்டிப்பது அவர்களின பாபத்தைப போக்குவதற்காகவே. இந்த ஜீவனுக்கு எந்தப் பாபத்தினால் ஸர்ப்பஜன்மம் நேர்ந்ததோ அந்தப் பாபம் இப்பொழுது உனனுடைய தண்டனையால் தீர்ந்தது. ஆகையால் உன்கோபம் அனுக்ரஹமேயென்று தெரிகின்றது. எங்கள பர்த்தாவாகிய இவன் பூர்வஜனமத்தில் அஹங்காரமின்றிப் பெரியோர்களைப் பூஜித்து என்ன தவஞ் செய்தானோ? அல்லது ஸமஸ்த பூதங்களிடத்திலும் மன இரக்கமுற்று ஏதேனுமொரு தர்மத்தையாவது அனுஷ்டித்திருக்கவேண்டும். ஏனென்றால், போகமோக்ஷங்களைக் கொடுத்து எல்லோரையும் உஜ்ஜீவிக்கச்செய்கிற நீ, இவன்விஷயத்தில் ஸந்தோஷம் அடைகின்றனையல்லவா? இல்லையாயின், இவனுடைய பாபங்களெல்லாம் தீரும்படி தண்டனையென்னும் வ்யாஜத்தினால் நீ இவனை அனுக்றஹித்தமை எங்ஙனம் சேரும்? ஆகையால் 'இவன் ஜன்மாந்தரத்தில் தவம் முதலிய நற்செயல் ஏதேனும் செய்திருக்கவேண்டுமென்று ஊஹிக்கிறோம். (நீ தண்டிப்பதற்கு முன்பு மிகவுங் கொடிய ஸர்ப்பஜன்மம் பெற்ற இவன் நீ ஸந்தோஷம் அடையுமாறு என்ன தவஞ் செய்தான்?

அல்லது என்ன தர்மஞ் செய்தான்? ஒன்றும் செய்ய வில்லை.) தேவனே! இந்தக் காளியனுக்கு உனபாத தூளி பரிமபடியான யோக்யதை உண்டானது எந்தப் புண்யத்தின ப்ரபாவமோ? எங்களுக்குத் தெரியவில்லை. இவன் இந்த ஸர்ப்பஜாதியில் அப்படிப்பட்ட புண்யஞ் செய்தானென்பதற்கு இடமே இல்லை. ப்ரஹ்மாதி தேவதைகளால் விரும்பப்பட்ட பாததூளியுடைய மடந்தையர் மணியான ஸ்ரீமஹாலக்ஷ்மியும் வேறு விருப்பங்களையெல்லாம் துறந்து இந்த்ரியங்களை அடக்குகையாகிற வ்ரதத்தையுடையவளாகி உனபாத தூளியை விரும்பி வெகு காலம் தவஞ்செய்தாளல்லவா? அப்படிப்பட்ட உனபாத தூளி இவனுக்கு நேர்ந்தமையால் இவன் பூர்வஜன்மத்தில் ஏதேனும ஒரு புண்யகாமம் செய்திருக்கவேண்டுமென்று தோற்றுகிறது. உன்பாததூளியைப் பெற்ற பெரியோர்கள ஸ்வர்க்கலோக போகங்கள் பூமண்டலத்திற்கெல்லாம் ப்ரபுவாயிருக்கை ப்ரஹ்மாவின ஐஶ்வர்யம் அதலாதியான அதோலோகங்களுக்கு ப்ரபுவாயிருக்கை அணிமாதியோகஸித்திகள் கைவல்யம் ஆகிய இவற்றில் எதையும் விரும்பமாட்டார்கள். நாதனே! இந்த நாகராஜன தமோகுணம் நிறைந்த ஸர்ப்பஜன்மம் பெற்றுக் கோபத்திற்கிடமாயிருப்பினும பிறர்க்கு அரிதான உனபாததூளி தன்மேல் படப்பெற்றன. பிறர்க்குக் கிடைக்க அரிதான உனனுடைய ஸாக்ஷாத்காரமுமஇவனுக்குக் கிடைத்தது இந்த ஸம்ஸாரமாகிற சகரத்தில் சுழனறுகொண்டிருக்கும் ஜீவனுக்கு உன்னுடைய ஸாக்ஷாத்காரம் நிமெரன்று உண்டாகும். (வாத்ஸல்ய நிதியாகிய நீ யாத்ருச்சிகம் முதலிய ஸுக்ருதவிசேஷங்களாகிற வ்யாஜமாத்ரத்தைக் கொண்டு ஜீவாத்மாக்களை அனுக்ரஹிக்கிறனை. இல்லையாயின,தோஷமில்லா

தவன் ஒருவனும் அகப்படாதனைகையால் உன் க்ருபைக்கு இடமே கிடைக்காது போம்.) ஷாட்குண்ய பூர்ணனும் மஹாபுருஷனும் மஹானுபாவனும் ஸமஸ்த பூதங்களி லும அந்தர்யாமியாய் அமைந்திருப்பவனும் ஸமஸ்த பூதங்களுக்கும் ஆதாரமாயிருப்பவனும ஆதிகாரண னும் ஸர்வஸ்மாத்பரனும் பரமாத்மாவுமாகிய உனக்கு நமஸ்காரம். ப்ராணிகளுடைய அனிஷ்டங்களைப் போக் குவதற்கு உரிய அறிவும அவர்களுடைய இஷ்டங்களை நிறைவேற்றிக் கொடுப்பதற்குரிய அறிவும் ஆகிய ஜ்ஞான விஜ்ஞானங்களுக்கு நிதிபோன்றிருப்பவனும் ஸ்வரூபத் திலும் குணங்களாலும் அளவற்றவனாகையால் பரப்ர ஹ்மமென்று கூறப்படுகின்றவனும் சேராதவற்றைச் சேர்க்குந்திறமை முதலிய சக்திகள் அமைந்திருப்பவ னும் ஹேயகுணங்களற்றவனும் சேதனசேதனங்களின் விகாரங்கள் தீண்டப் பெறாதவனும் சேதனசேதனங்க ளின் மூலமாய் விகாரங்களுக்கு இடமாயிருப்பவனுமா கிய உனக்கு நமஸ்காரம். காலஸ்வரூபனும் காலத் திற்கு அந்தராத்மாவாயிருப்பவனும் நிமிஷம் முதல் ஸம்வத்ஸரம் வரையிலுள்ள காலாவயவங்களுக்கு ஸாக்ஷியாயிருப்பவனும் ப்ரபஞ்சஸ்வரூபனும் ப்ரபஞ்சத் தைப் படைக்கும நிமித்தகாரணனும் ப்ரபஞ்சத்தைப் படைப்பதற்கு வேண்டிய உபகரணம் அதிகரணம் முதலி ய ஸஹகாரி காரணங்களும் தானேயாயிருப்பவனுமாகிய உனக்கு நமஸ்காரம். ஆகாசம் முதலிய பஞ்ச பூதங்கள் சப்தம முதலிய அவற்றின் மாத்ரைகள் இந்த்ரியங்கள் ப்ராணன்கள் மனம புத்தி வாஸனை இவையெல்லாம் தானாயிருப்பவனும இவற்றிற்கு அந்தராத்மாவாயிருப்பவ னும் ஸத்த்வ ரஜஸ் தமஸ்ஸுக்களென்கிற மூன்றுகுணங் களால் விளையும் தேஹாத்மப்ரமம் முதலிய அபிமா

ணத்தினால் ஜீவாத்மாக்களுக்கு இயற்கையில் ஏற்பட்டிருப்பதான தன் அனுபவத்தை மறைக்கின்றவனுமாகிய உனக்கு நமஸ்காரம். தேசகாலவஸ்து பரிச்சேதங்களற்றவனும் விகாரங்களின்றி என்றும் ஒருவாறாயிருப்பவனும் ஸர்வஜ்ஞனும் அணுஸ்வரூபர்களான ஜீவாத்மாக்களிடத்தில் உட்புகுந்து நியமிக்கும்படி அவர்களைக் காட்டிலும் ஸூக்ஷ்மமாயிருப்பவனும் வேதங்களுக்கிணங்காதபடி பலவாறு பிதற்றுகிற மூடர்களுக்கு அவர்களின் வாதங்களுக்குத் தகுந்தபடி தோற்றுகின்றவனும் சப்தங்களால் அறிவிக்கப்படும் பொருள்கள் பொருள்களை அறிவிக்கும் சப்தங்கள் ஆகிய இவற்றின் சக்திகளுக்கு நிர்வாஹகனுமாகிய உனக்கு நமஸ்காரம். தன் ஸ்வரூப ஸ்வபாவாதிகளை அறிவதற்குச் சாஸ்த்ரத்தையே காரணமாக வுடையவனும் அந்தச் சாஸ்த்ரத்தைத் தானே வெளியிடுகின்றமையால் அதற்குக் காரணனும் அந்தச் சாஸ்த்ரத்தை வெளியிடுவதற்குரிய அறிவுடையவனும் ப்ரவ்ருத்திகர்மம் நிவ்ருத்தி கர்மம் என்கிற இருவகைக் கர்மங்களுக்கும் நிர்வாஹகனும் உபநிஷத்துக்களின் அறிவை விளைக்கின்றவனுமாகிய உனக்கு நமஸ்காரம். ஸ்ரீக்ருஷ்ணனென்னும்பெயர் பூண்டு வஸுதேவனுக்குப் பிள்ளையாய் அவதரித்தவனும் ராமனென்னும் பெயர் பூண்டு தசரதனுக்குப் பிள்ளையாய் அவதரித்தவனும் ப்ரத்யும்ன அநிருத்தாதி வ்யூஹாவதாரங்கள் செய்தவனும் தன்பக்தர்களைப் பாதுகாப்பவனுமாகிய உனக்கு நமஸ்காரம். பக்தர்களின் ஜ்ஞானத்தை விளங்கச் செய்பவனும் ஸத்த்வாதி குணமயமான தன் மாயையால் தன்னிடத்தில் பக்தியில்லாத ஆத்மாக்களின் ஜ்ஞானத்தை

மறைப்பவனும் குணபரிணாமரூபமான மனத்தின் வ்ருத்தியாகிய உபாஸனாதி ஜ்ஞானத்தினால் அறியத்தகுந்தவனும் ஸமஸ்த ஜீவாத்மாக்களுடைய அந்தக்கரணவ்ருத்திகளையெல்லாம் ஒரே தடவையில் ஸாக்ஷாத்கரிப்பவனும் தனக்கு அஸாதாரணமாயிருப்பதும் அளவற்றதும் ஸ்வபாவஸித்தமும் என்றும் குறுகாததுமான ஜ்ஞானமுடையவனுமாகிய உனக்கு நமஸ்காரம். ஹ்ருஷீகேசனே! அவ்யக்தமான விளையாடல்களுடையவனும் ஸமஸ்தமான தேவாதிபதார்த்தங்கள் அவற்றின் புத்திவ்ருத்திகள் ஆகிய இவற்றின் ஸித்திக்குக் காரணமாயிருப்பவனும் ஸம்ஸாரதாபங்களால் வருந்துகின்ற ஜீவாத்மாக்களை உஜ்ஜீவிப்பிக்கும்பொருட்டு யாத்ருச்சிகாதிஸுக்ருதங்களில் ஏதேனுமொன்றில் சிறிதாயினும் கிடைக்குமோவென்று சிந்தித்துக்கொண்டிருப்பவனும் ப்ரஹ்மதேவன் முதல் பூச்சி புழுவரையிலுள்ள ஜகத்தையெல்லாம் த்ருணமாக நினைத்துப் பேசாமல் உதாஸீனமாயிருப்பவனுமாகிய உனக்கு நமஸ்காரம். பந்த மோக்ஷங்களை உபயோகப்படுத்தும் இடம் அறிந்தவனும் (ஆச்ரிதர்களைப் பந்தத்தினின்று விடுவிப்பவனும் அல்லாதவர்களுக்கு ஸம்ஸாரபந்தத்தை மேன்மேலும் விளைத்துக்கொண்டிருப்பவனும்) புருஷார்த்தங்களை யெல்லாங்கொடுக்கும் ப்ரபுவும் ஸமஸ்த சப்தங்களுக்கும் பொருளாயிருப்பவனும் எல்லாப்பொருள்களிலும் விலக்ஷணனாயிருப்பவனும் எல்லாப்பொருள்களின் ஸத்தாதிகளுக்குக் காரணனும் எல்லாப்பொருள்களின் ஸத்தாதிகளையும் ஸாக்ஷாத்கரிப்பவனுமாகிய உனக்கு நமஸ்காரம். நீ அநாதியான காலமென்னும் சக்தியுடன் கூடி ஸங்கல்பம் தவிர மற்ற வ்யாபாரங்களெவையுமின்றி ரஜஸ்ஸு ஸத்த்வம் தமஸ்ஸு என்னுங் குணங்களால் இந்த ஜகத்

தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை நடத்திக்கொண்டு ரஜோகுணம் தமோகுணம் ரஜஸ்தமோகுணங்கள் ஆகிய இக்குணங்களை ஸ்வபாவமாகவுடைய ஜீவாத்மாக்களை அனுக்ரஹம் அமைந்த கண்ணோக்கத்தினால் அறிவுடையவர்களாகச் செய்துகொண்டு தடைபடாத விளையாடல்களையுடையவனாகி ஸங்கல்பங்களை நடத்துகின்றனை. நீ ப்ரளய தசையில் ஜகத்தாக விரியவேண்டுமென்று ஸங்கல்பித்துக்கொண்டு ஸங்கல்பத்தையொழிய வேறொரு வ்யாபாரமுமின்றிக் கர்மவாஸனைகளாகிற ஸ்வபாவங்களோடுகூடி ஜ்ஞானஸங்கோசத்தை அடைந்து அஸத்ப்ராயர்களாயிருக்கிற ஜீவாத்மாக்களுக்குக் கரணகளேபராதிகளைக் கொடுத்து ஜ்ஞானவிகாஸத்தையும் விளைத்துக் கரையேற்ற விரும்பித் தடைபடாத விளையாடல்களுடையவனாகி இந்த ஜகத்தின ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை நடத்துகின்றனை. ஸத்த்வ குணம் தலையெடுத்துச் சாந்தமாயிருக்கும் ப்ரஜைகளும் ரஜோகுணம் தலையெடுத்து அசாந்தமான ப்ரஜைகளும் தமோகுணம் தலையெடுத்து மூடங்களான ப்ரஜைகளும் உனக்குச் சரீரங்களே. ஆகையால் எல்லா ப்ரஜைகளும் உனக்கு அனுக்ரஹிக்கத் தகுந்தவைகளே. ஆயினும் ஜகத்தின் ஸ்திதியை நடத்த முயன்று ஸத்துக்களின தர்மங்களைப் பாதுகாக்கும்பொருட்டு அவதரித்திருக்கின்ற உனக்கு ஸத்த்வகுணம் தலையெடுத்துச் சாந்தமாயிருக்கும் உன சரீரங்களான ப்ரஜைகளை ரக்ஷிப்பதற்கு இஷ்டங்களாயிருக்குமல்லவா? இவன் இதுவரையில் தாமஸனாயிருந்தானாயினும் இப்பொழுது உன்னால் தண்டிக்கப்பட்டுத் தமோகுணம் நீங்கி உபசாந்தனாயிருக்கிறானாகையால் பாதுகாக்கத்தகுந்தவனே. ப்ரபுவாயிருப்பவன தன்ப்ரஜைகள் செய்த அபராதத்தை

ஒருகால் பொறுப்பது யுக்தமேயல்லவா? மற்றும், அறியாமையால் நேர்ந்த அபராதத்தை அவஶ்யம் பொறுக்கவேண்டும். ராகத்வேஷாதிகள் தீண்டப்பெருமல் சாந்தமான மனமுடையவனே! இவன் மூடன்; ஆதலால் உன்னை அறிந்தவனல்லன். இவனுடைய அபராதத்தை நீ பொறுப்பது யுக்தமே. ஷாட்குண்ய பூர்ணனே! இந்த நாகராஜன உன்னால் தண்டிக்கப்பட்டு ப்ராணன்களை இழக்கும்படியான தசையை அடைந்திருக்கிறன். ஆகையால் இவனை அனுக்ரஹிப்பாயாக. ஸாதுக்களால் தயை செய்யத்தகுந்த மடநதையர்களாகிய எங்களுக்குப் பதியாகிற ப்ராணனைக் கொடுப்பாயாக. உன் ப்ருத்யர்களாகிய நாங்கள் உன்கட்டளைப்படி நடக்க ஸித்தமாயிருக்கின்றேம. நாங்கள் எதை அனுஷ்டிக்கவேண்டுமோ, எதை ஶ்ரத்தையுடன் செய்தால் இந்தக் காலியன் இப்பொழுது நேர்ந்திருக்கின்ற மரணபயத்தினின்று விடுபடுவானே, அப்படிப்பட்ட கார்யத்தை எங்களுக்கு நியமிப்பாயாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— ஷாட்குண்ய பூர்ணனுகிய ஸ்ரீக்ருஷ்ணன இங்ஙனம் நாகபத்னிகளால் துதித்து வேண்டப்பெற்றுக் காலடிகளால் தலைகள் முறிந்து மூர்ச்சித்திருக்கின்ற காலியனை விட்டான். பிறகு காலியன மெல்ல மெல்ல இந்த்ரியங்களும் ப்ராணன்களும் தன்னிலைமையில் திரும்பிவரப்பெற்றுப் பெரிய ஆயாஸத்துடன் மூச்சுவிட்டுக்கொண்டு தைன்யத்துடன் கைகளைக்குவித்து ஸ்ரீக்ருஷ்ணனைப் பார்த்து மொழிந்தான்.

காலியன் சொல்லுகிறன்:—நாங்கள் பிறந்தது முதலாகத் துஷ்டர்களாயிருப்பவர்கள்; தாமஸர்கள்; தீர்க்கமான கோபமுடையவர்கள். நாதனே! ப்ராணிகளுக்கு இயற்கையில் ஏற்பட்ட குணம் துஷ்டபிசாசம்

போன்றது. ஆகையால் அதை அவர்களால் கடக்க முடியாது. ஜகத்காரணனே! ஸ்வபாவம் பலம் முயற்சி யின் திறமை உத்பத்திக்ஷேத்ரம் காரணம் வாஸனை உருவ நிர்மாணம் ஆகிய இவை பற்பலவாறுயிருக்கப் பெற்றதும் குணங்களால் பலவாறு படைக்கப்படுவது மாகிய இந்த் ப்ரபஞ்சங்களின் தொகுதி உன்னால் படைக்கப்பட்டது. பகவானே அதிலும் ஸர்ப்பங்கள ஜன்மத்தோடு கூடவே பெருங்கோபமுடையவை. அத் தகைய ஸர்ப்பஜாதியில் பிறந்தவர்களும் உனமாயையி னால் மதிமயக்கம்பெற்றவர்களுமாகிய நாங்கள் உன்னு டைய அனுக்ரஹம் இல்லாது போமாயின [illegible]யும் துறக்கமுடியாததாகிய அந்த உனமாயையின்கார்ய மான கோபத்தை எங்ஙனம் துறப்போம்? அத்தகைய தான உன மாயையை நாங்கள் கடப்பதற்கு நீயே கார ணன். நீ எல்லாம் அறிந்தவன்; நிக்ரஹ அனுக்ரஹங் களைச் செய்வதற்குரிய அறிவுடையவன; ஜகத்திற்கெல் லாம் நியாமகன. ஆகையால் நீ எங்களுக்கு அனுக்ர ஹத்தையாவது நிக்ரஹத்தையாவது எதைச் செய்ய வேண்டுமென்று நினைக்கின்றனையோ, அதைச் செய்வா யாக. அதை அறிவதற்கும் இங்ஙனம் செய்யென்று நியமிப்பதற்கும் நாங்கள் வல்லரல்லோம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— துஷ்டர்களை அடக்குவ தும் சிஷ்டர்களைப் பாதுகாப்பதுமாகிய இக்கார்யங்களை நிறைவேற்றும் பொருட்டுத் தன் ஸங்கல்பத்தினால் மானி டஉருவம் கொண்டிருக்கின்ற அந்த ஸ்ரீக்ருஷ்ணன் இங் ஙனம் மொழிந்த காளியனுடைய வார்த்தையைக் கேட்டு மொழிந்தான.

பகவான் சொல்லுகிறான்:— ஓ நாகராஜனே! நீ இனி இம்மடுவில் இருக்கலாகாது. நீ உன்பந்துக்களோடு

சீக்ரத்தில் ஸமுத்ரம் போய்ச் சேருவாயாக. இந்த யமுநதியைப் பசுக்களும் மனுஷ்யர்களும் அநுபவிக்குமாக. உனக்கு நான் தண்டனை செய்த இந்த வ்ருத்தாந்தத்தை எவன இரண்டு ஸந்த்யாகாலங்களிலும் நினைத்துக் கீர்த்தனஞ் செய்கிறானோ, அவன் உங்களிடத்தினின்று (ஸர்ப்பங்களிடத்தினின்று) பயத்தை அடையமாட்டான். எவன், நான் விளையாடியிடமாகிய இம்மடுவில் ஸ்நானஞ் செய்து இந்த ஜலத்தினால் தேவர்ஷி பித்ருக்களுக்குத் தர்ப்பணஞ் செய்கிறானோ; மற்றும், உபவாஸமிருந்து என்னை நினைவுடன் ஆராதிக்கிறானோ, அவன் ஸமஸ்த பாபங்களினின்றும் விடுபடுவான். நீ எவனிடத்தினின்றும் பயந்து ரமணகமென்னும் த்வீபத்தைத் துறந்து இம்மடுவுக்கு வந்தனையோ, அக்கருடன் என் பாதங்களால் அடையாளஞ் செய்யப்பெற்ற உன்னை இனிப் பக்ஷிக்கமாட்டான. ஆகையால் நீ பயமின்றி ஸமுத்ரம போவாயாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மன்னவனே! இவ்வணம் பகவானால் சொல்லப்பட்ட நாகராஜன் அந்த ஸ்ரீக்ருஷ்ணனைப் பூஜித்தான. அவனுடைய பத்னிகளும் ஆதரவுடன் பூஜித்தார்கள். அந்தக் காளியன விலையுயர்ந்த திவ்யமான ஆடைகளாலும் திவ்யமான பூமாலைகளாலும் திவ்யரத்னங்களாலும் திவ்யமான ஆபரணங்களாலும் திவ்யமான சந்தனம் குங்குமம் முதலிய பூச்சுக்களாலும பெரிய நெய்தல்மாலையாலும் ஜகந்நாதனாகிய அந்தக் கருடத்வஜனை ஆராதித்துப் ப்ரதக்ஷிணஞ் செய்து நமஸ்கரித்து அவனால் அநுமதி கொடுக்கப் பெற்றுப் பத்னிகளோடும் நண்பர்களோடும் பிள்ளைகளோடும் ஸமுத்ரத்திலுள்ள ரமணகமென்னும த்வீபத்திற்குச் சென்றான. க்ரீடைக்காக மானிட உருவங்

கொண்ட ஸ்ரீக்ருஷ்ண ரூபியான அந்தப் பகவானுடைய அனுக்ரஹத்தினால் அப்பொழுதே அந்த யமுனாநதி அம்ருதம் போன்ற ஜலமுடையதாயிற்று. பதினாறாவது அத்யாயம் முற்றிற்று.

---

{ காலியன் கருடனிடத்தில் பயந்து வந்ததற்குக் காரணமும், கருடனுக்கு ஸௌபரியின் சாபமும், ஸ்ரீக்ருஷ்ணன் கோபாலர்களைக் காட்டுத் தீயினின்று பாதுகாத்ததும். }

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:—காலியன் நாகங்களுக்கெல்லாம வாஸஸ்தானமாகிய ரமணகத்வீபத்தை ஏன துறந்து வந்தான்? அவனொருவனமாத்ரம் கருடனை விஷயத்தில என்ன அபராதஞ்செய்தானை?

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—நீண்ட புஜதண்டங்களையுடைய மஹாராஜனே! முன்காலத்தில் ஸமஸ்த ஜனங்களும் ஸர்ப்பங்கள தங்களைக் கடிக்காதிருக்க வேண்டுமென்று மாஸந்தோறும் பக்ஷ்யங்களால் அவற்றிற்கு மரத்தடியில் பலி கொடுப்பதும், அந்த ஸர்ப்பங்களெல்லாம் பர்வகாலத்தில் ஜனங்கள் தங்களுக்குக் கொடுக்கிற பலியில் தங்கள் தங்கள் பாகத்தைத் தங்கள் ரக்ஷணத்திற்காக மஹானுபாவனாகிய கருடனுக்குக் கொடுத்துக்கொண்டுவருவதும் வழக்கம். இங்ஙனம் ஸமஸ்தமான நாகங்களும கருடனுக்குப் பலி கொடுத்துக்கொண்டிருக்கையில கத்ருவின பிள்ளையாகிய இந்தக்காலியன விஷவீர்யங்களால் மதித்து அந்தக் கருடனைப பொருள் செய்யாமல் அவனுக்குக் கொடுக்கவேண்டிய பலியைத் தானே புசித்துக்கொண்டு வந்தான். மன்னவனே! பகவானுக்கு அப்பனும் மஹானுபாவனுமாகிய கருடன காலியனை செய்கிற அக்கார்யத்தைக் கேள்விப்பட்டு அவனைக் கொல்ல விரும்பி மஹாவேகத்து

டன் ஸமுத்ரத்திற்கு வந்தான். விஷத்தையே ஆயுதமாகவுடைய அந்தக் காலியன் தனனைக் குறித்து வருகின்ற கருடனை விரைவுடன் எதிர்த்துப் பலவாகிய தன் பணங்களை உயரத் தூக்கிக்கொண்டு பயங்கரமான நாக்குக்களும் வெளியில் பிதுங்கி உக்ரமாயிருக்கின்ற கண்களும் விஷப்பற்களாகிற ஆயுதங்களுமுடையவனாகி அக்கருடனைப் பற்களால் கடித்தான். மதுஸூதனன் உட்காருமாஸனமும் கொடிய பராக்ரமம் பயங்கரமான வேகம் இவைகளுடையவனுமாகிய கருடன் பெரிய கோபாவேசத்துடன் கத்ருவின் புதல்வனாகிய அந்தக் காலியனைப் பிடித்து இப்படியும் அப்படியும் உதறிப் பொன்னிறமுடைய இடது இறகினால் அடித்தான். அங்ஙனம் கருத்மானுடைய இறகினால் அடிக்கப்பட்ட காலியன் மிகவும் தழுதழுத்து அந்தக் கருடனுக்குக் கிட்ட முடியாததும் மிகவும் ஆழமானதையால் பிறர்க்கு அணுகமுடியாததுமாகிய இந்த யமுனையின் மடுவில் ப்ரவேசித்தான். ஒருகால் கருடன் பசித்து ஸௌபரிமஹர்ஷி வேண்டாமென்று தடுத்துக் கொண்டிருப்பினும் அதைக் கேளாமல் இம்மடுவில் தனக்கு இஷ்டமான பக்ஷ்யமாகிய ஒரு பெரிய மீனைப் பிடித்துக்கொண்டு போனான். தலைமையுள்ள மீனைக் கருடன் கொண்டு போகையில் மீன்களெல்லாம் மிகவும் வருந்துவதைக்கண்டு ஸௌபரி மஹர்ஷி மன இரக்கத்தினால் அங்குள்ள மத்ஸ்யாதி ஜலஜந்துக்களுக்குக் கருடனிடத்தினின்று பயமில்லாமையாகிற க்ஷேமத்தைச் செய்ய முயன்று 'கருடன் இம்மடுவில் இழிந்து மத்ஸ்யங்களைப் பக்ஷிப்பானாயின், உடனே அவன் ப்ராணன்களை இழப்பான். இது நான் நிச்சயமாகச் சொல்லுகிறேன்' என்று மொழிந்தார். சாபரூபமான அந்த ஸௌபரியின் வார்த்தை காலியனுக்கு

மாத்ரம் தெரியுமேயன்றி மற்ற ஒரு ஸர்ப்பத்திற்குத் தெரியாது. ஆகையால் கருடனிடத்தினின்றும் பயமற்ற காளியன் இம்மடுவில் நெடுங்காலமாய் வஸித்துக்கொண்டிருந்தான். பிறகு ஸ்ரீக்ருஷ்ணனால் துரத்தப்பட்டான். ஸ்ரீக்ருஷ்ணன் திவ்யமான பூமாலைகளும் சந்தனம் குங்குமம் முதலிய திவ்யமான பூச்சுக்களும் திவ்யமான ஆடைகளும் அணிந்து விலையுயர்ந்த ரத்னஸமூஹங்களால் உடம்பெல்லாம் நிரம்பி ஸ்வர்ணத்தினால் நன்கு அலங்கரித்துக்கொண்டு மடுவினின்று கரையேறி வரக்கண்டு ப்ராணன்கள் திரும்பி வரப்பெற்ற இந்த்ரியங்கள் போல இடையர்களெல்லாரும் எழுந்து பிறகு சரீமெல்லாம ஸந்தோஷம் நிரம்பப்பெற்று ப்ரேமத்துடன் அந்த ஸ்ரீக்ருஷ்ணனை அணைத்துக்கொண்டார்கள். கௌரவனே! யசோதை ரோஹிணி முதலிய கோபிகைகளும் நந்தன் முதலிய கோபாலர்களும் ஸ்ரீக்ருஷ்ணனைக் கிட்டிக் கை கால் அசைதல் முதலிய சேஷ்டைகள் உண்டாகப்பெற்று மனோரதமும் கைகூடப்பெற்றார்கள். பலராமனும ஸ்ரீக்ருஷ்ணனை ஆலிங்கனஞ் செய்து இவனுடைய ப்ரபாவமறிந்தவனாகையால் வெறுமனே சிரித்தான். பிறகு அவன் அந்த ஸ்ரீக்ருஷ்ணனை மடியில் ஏற்றிக்கொண்டு ப்ரீதியினால் அடிக்கடி அவனையே உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தான். முன்பு உலர்ந்திருந்த வ்ருக்ஷங்களும் பசுக்களும எருதுகளும் கன்றுகளும் மிகுந்த ஸந்தோஷம் அடைந்தன. மேன்மையுடைய அந்தணர்கள் தத்தம் பார்யைகளுடன் நந்தனிடம் வந்து 'காளியனால் பிடியுண்ட உன் புதல்வன் தெய்வாதீனமாய் விடுபட்டான். இது பெரிய ஆநந்தம்' என்று மொழிந்தார்கள். முதலே நஷ்டமானானென்று நிச்சயிக்கும்படியான பெரிய ஆபத்தை அடைந்த புதல்வன் மீண்டு

வரப்பெற்ற மஹா பாக்யவதியும் நன்மனமுடையவளுமாகிய யசோதை பிள்ளையை வாரியெடுத்தணைத்து மடியில் ஏற்றிக்கொண்டு ஆநந்த நீர்த்துளிகளைப் பலவாகப் பெருக்கினாள். (பிறகு அவ்விடத்திலேயே ஸூர்யன் அஸ்தமிக்கையில் ஸ்ரீக்ருஷ்ணனை பலராமனோடும் கோபாலர்களோடும் தாய் தந்தைகளோடும் அவ்விடத்திலேயே வஸித்திருந்தான்.) ராஜஸ்ரேஷ்டனே! இடையர்கள் பசுக்களுடன் பசி தாஹங்களாலும் ஸ்ரமத்தினாலும் வருந்தி அன்றிரவு முழுவதும் அந்த யமுனைக்கரையிலேயே வஸித்திருந்தார்கள். அப்பொழுது அர்த்தராத்ரியில் எல்லோரும் தூங்கிக்கொண்டிருக்கையில் காட்டில் மரங்களின் கிளைகள் ஒன்றோடொன்று உறைவதனால் உண்டான காட்டுத்தீ இடையர்களும் பசுக்களும் இறங்கியிருந்த இடம் முழுவதும் சுற்றிச் சூழ்ந்து கொளுத்தத் தொடங்கிற்று. பிறகு அக்னியினால் கொளுத்தப்பட்ட இடையர்கள் பரபரப்புடன் எழுந்து மாயையினால் மானிட உருவம் பூண்ட ஸர்வேஸ்வரனாகிய ஸ்ரீக்ருஷ்ணனைச் சரணம் அடைந்தார்கள். 'ஓ க்ருஷ்ணா! க்ருஷ்ணா! மிகுந்த மதியுடையவனே! மஹாபாக்யசாலீ! அளவற்ற பராக்ரமமுடைய பலராமனே! உங்களையே ரக்ஷகர்களாகவுடைய எங்களை இதோ காட்டுத்தீ விழுங்குகின்றது. உனதுடையவர்களும் உன் நண்பர்களுமான எங்களைக் கடக்கமுடியாத காலாக்னி போன்ற இந்தக் காட்டுத்தீயினின்று பாதுகாப்பாயாக. ப்ரபூ! எவ்விதத்திலும் பயத்திற்கிடமில்லாத உன் பாதங்களைத் துறக்க நாங்கள் வல்லரல்லோம். (நாங்கள் மரணத்தினின்று பயப்படவில்லை. உன் பாதங்களைப் பிரிந்திருப்பதற்கே பயப்படுகின்றோம்.)' என்று இங்ஙனம் முறையிட்டார்கள். ஜகதீஸ்வரனாகிய அந்த ஸ்ரீக்ருஷ்

ணன் தன்பக்தர்களான இடையர்களின் மனவருத்தத்தைக் கண்டு அளவற்ற சக்திகளுடையவனுகையால் தீவ்ரமான அந்தக் காட்டுத்தீயை அப்படியே பானஞ் செய்தான். பதினேழாவது அத்யாயம் முற்றிற்று.

## க்ரீஷ்மருது வர்ணனமும், ஸ்ரீக்ருஷ்ணராமர்கள் கோபாலர்களோடு விளையாடினவாறும், ப்ரலம்பாஸுரவதமும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—பிறகு ஸ்ரீக்ருஷ்ணன் மனக்களிப்புற்ற பந்துக்களான இடையர்கள் சூழ்ந்துவரவும் பாடவும் பெற்றுப் பசுமந்தைகளால் அழகாயிருக்கின்ற கோகுலத்திற்குள் நுழைந்தான். ஸ்ரீராமக்ருஷ்ணர்கள் இங்ஙனம் மாயையினால் கோபாலர்களென்னும் கபடவேஷம் பூண்டு விளையாடிக்கொண்டிருக்கையில், ஒருகால் ப்ராணிகளுக்கு அவ்வளவு இஷ்டமல்லாத க்ரீஷ்மருது வந்தது. ஸாக்ஷாத் பகவானுகிய ஸ்ரீக்ருஷ்ணன் தன்னுடைய அம்சமாகிய பலராமனோடு வாஸஞ் செய்யப்பெற்றமையால் எல்லா ஸம்ருத்திகளுமமைந்திருக்கிற ப்ருந்தாவனத்தின் குணங்களால் அந்த க்ரீஷ்மருதுவுங்கூட வஸந்தருதுபோலத் தோற்றிற்று. அங்குக் கர்ணகடோரமான சுவர்க்கோழிகளின் த்வனிகள் மலையருவிகளின் ஓசைகளால் மறைக்கப்பட்டிருந்தன. மற்றும் அங்கு வ்ருக்ஷங்கள் அந்த அருவிகளின் திவலைகளால் அடிக்கடி நனைந்து செழிப்புற்று நிரைநிரையாகி மிகவும் அலங்காரமாயிருந்தன. நதிகள் தாமரையோடைகள் அருவிகள் ஆகிய இவற்றின் அலைகளில் பட்டு அவற்றின் திவலைகளையும் செங்கழுநீர் தாமரை நெய்தல் முதலிய புஷ்பங்களில் பட்டு அவற்றின் தூட்களை

யும் ஏற்றுக்கொண்டு வருகிற மந்தமாருதத்தினால் வீசப் பெற்றிருப்பதும் மிகவும் பச்செனறிருக்கிற புற்கள் நிறைந்திருப்பதுமாகிய அந்த ப்ருந்தாவனத்திலுள்ள ஜந்துக்களுக்கும் வ்ருக்ஷம் கொடி செடி முதலியவற்றிற்கும் க்ரீஷ்மருதுவாலும் அந்த ருதுவிலுண்டான அக்னி ஸூர்யன் இவற்றாலும் விளையக்கூடிய உபத்ரவம் சிறிதும் உண்டாகவில்லை. ஸூர்யகிரணங்கள் விஷம்போல் கொடியவைகளாயினும் ஆழ்ந்த ஜலமுடைய பெரிய ஓடைகளின் கரைகளில் வீசுகின்ற அலைகளால் சேறுபடிக்கிடக்கிற மணற்குன்றுகளோடு கூடின அந்த ப்ருந்தாவன பூமியின் ஈரத்தையும் பசும்புற்கள் முளைத்துச் செழிப்பாயிருக்கும் நிலைமையையும் அழிப்பதற்கு வல்லவையாகவில்லை. பூ இலை காய் பழம் முதலியவை ஸம்ருத்தமாயிருக்கவும் விசித்ரமான ம்ருகங்கள் பறவைகள் இவை சப்திக்கவும் மயில்கள் வண்டுகள் இவை பாடவும் குயில்கள் ஸாரஸங்கள் இவை கூவவும் பெற்று அவ்வனம் நிரம்பவும் அழகாயிருந்தது. மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் விளையாட விரும்பிப் பலராமனுடன் குழலை மிகவும் அழகாக ஊதிக்கொண்டு இடையர்களாலும் பசுமந்தைகளாலும் சூழப்பட்டு அந்த வனத்திற்குள் நுழைந்தான். ராமன் க்ருஷ்ணன் முதலிய இடையர்கள் அனைவரும் தளிர் மயிலிறகு பூங்கொத்து பூமாலை கைரிகாதி தாதுக்கள் இவைகளை அணிந்து கூத்தாடுவதும் ஒருவர் கையை ஒருவர் பிடித்துக்கொண்டு சண்டை செய்வதும் பாடுவதுமாகி விளையாடினார்கள். ஸ்ரீக்ருஷ்ணன் கூத்தாடுகையில் சிலர் அதற்குப் பொருந்துமாறு பாடினார்கள். சிலர் உள்ளங்கை கொம்பு இவைகளால் வாத்யம் வாசித்தார்கள். சிலர் நல்லது நல்லதென்று புகழ்ந்தார்கள். நாட்யமாடுகிறவர்கள் நட்டுவ

ளைத் துதிப்பது போல, இடைப்பிள்ளைகளின் வேஷம் பூண்டு மறைந்திருக்கின்ற ராமக்ருஷ்ணர்களை அங்ஙனம் இடையர்களாகப் பிறந்திருக்கின்ற தேவதைகள் துதித்தார்கள். கன்றுகுடியின் தரித்திருகிற அந்த ராமக்ருஷ்ணர்கள் ஒருகால் சுற்றுவதும் தாண்டுவதும் தள்ளுவதும் தோள் தட்டுவதும் ஒருவரை யொருவர் பிடித்திழுப்பதும் கைச்சண்டை செய்வதுமாகி விளையாடினார்கள். மஹாராஜனே! ஒருகால் மற்ற இடையர்களைக் கூத்தாட விட்டு அந்த ராமக்ருஷ்ணர்கள் தாங்கள் பாடுவதும் வாத்யங்கள் வாசிப்பதுமாகி நல்லது நல்லதென்று சொல்லி அவர்களைப் புகழ்ந்தார்கள். ஒருகால் வில்வக்காய்களையும் ஒருகால் கும்பமரத்தின் காய்களையும் ஒருகால் முத்துக்களையும் ஒருகால் முத்துச்சிப்பிகளையும் கொண்டு விளையாடினார்கள். ஒருகால் 'ஒருவனை ஒருவன் தொடலாகாது. தொட்டால் தொடப்பட்டவன் தோற்றவன். தொட்டவன ஜயித்தவன்' என்பதாக ஏற்பாடு பண்ணிக்கொண்டு ஒருவன கையில் மற்றொருவன் அகப்படாமல் ஓடி மறைந்து விளையாடுவது, ஒருகால் ஒருவனைக் கண்கட்டி எதிரில் ஒருவனை நிறுத்தி 'இவன பேர் என்ன' என்று கேட்க 'உண்மையைச் சொன்னால் ஜயித்தவன' என்று ஏற்பாடு பண்ணிக்கொண்டு அங்ஙனம் கண் கட்டிப் பெயர் கேட்டு விளையாடுவது இவை முதலிய பற்பல விளையாடல்களை நடத்திக்கொண்டிருந்தார்கள். ஒருகால் ம்ருகங்கள்போலும், ஒருகால் பக்ஷிகள்போலும் அவ்வவற்றின் சேஷ்டைகளை அபிநயித்தார்கள். ஒருகால் தவளைகள் போலக் கிளம்பிக்கிளம்பிக் குதித்து விளையாடினார்கள். ஒருகால் ஒருவரையொருவர் பலவாறுபரிஹாஸஞ்செய்துகொண்டார்கள். ஒருகால் கொடிகளால் பல்லக்கு

போல் ஊசல்களை ஏற்படுத்தி அவற்றின்மேலேறி விளையாடினார்கள். ஒருகால் ஒருவனை அரசனாகவும் சிலரை மந்திரிகளாகவும் மற்றுஞ்சிலரை வேறு சில அதிகாரிகளாகவும் மற்றவர்களை ப்ரஜைகளாகவும் ஏற்படுத்திக்கொண்டு ராஜ்யதந்த்ரம் நடத்துவதுபோல அபிநயித்து விளையாடினார்கள். இங்ஙனம் உலகத்தில் வழங்கி வருகிற பற்பல விளையாடல்களால் அவர்கள் பொழுது போக்கிக்கொண்டு திரிந்தார்கள். அவ்வனத்தில் அந்த ராமக்ருஷ்ணர்கள் இடையர்களுடன் ஆற்றங்கரைச் செறிவுகளிலும் மலைச்சாரல்களிலும் புதர்களிலும் காடுகளிலும் ஆறுகளிலும் பசுக்களை மேய்த்துக்கொண்டிருக்கையில் ப்ரலம்பனென்னும் அஸுரன் அவர்களை வதிக்க விரும்பித் தானும் ஒரு இடையனைப்போல வேஷம் பூண்டு அவ்விடம் வந்தான். ஸர்வஜ்ஞனும ஷாட்குண்யபூர்ணனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் அவன் அஸுரனென்பதையும் அவன் தன்னைக் கொல்ல வந்திருக்கிறானென்பதையும் அறிந்தவனாயினும் அவனை அப்பொழுதே வதிக்காமல் வேறு உபாயத்தினால் அவனை வதிக்க வேண்டுமென்று நினைத்து அவனுடன ஸ்நேஹத்தையே அபிநந்தித்தான. விளையாடல்களை அறிந்த ஸ்ரீக்ருஷ்ணன் இடையர்களை அழைத்து 'ஓ இடையர்களே! நாமெல்லோரும் உருவம் வயது பலம இவற்றிற்கு உரிய படி இரண்டு வகையாகப் பிரிந்து விளையாடுவோம்' என்றான். இங்ஙனம் பகவான் சொல்லுகையில் இடையர்கள் ராமக்ருஷ்ணர்களிருவரையும் இரண்டு கூட்டங்களுக்குத் தலைவர்களாக ஏற்படுத்திக்கொண்டு க்ருஷ்ணன் பக்கத்தில் சிலரும் ராமன பக்கத்தில் சிலருமாகச் சேர்ந்து இரண்டு கூட்டமாகப் பிரிந்தார்கள். அவர்கள், ஜயித்தவன் தோற்றவன்மேல் ஏறவேண்டுமென்

றும் தோற்றவன் ஜயித்தவனை ஏற்றிக்கொண்டு போக வேண்டுமென்றும் ஏற்படுத்திக்கொண்டு பலவிளையாடல்களை நடத்தினார்கள். அந்த இடையர்கள் தோற்றவர்கள் ஜயித்தவர்களை ஏற்றிக்கொண்டுபோவதும் ஜயித்தவர்கள் தோற்றவர்மேல் ஏறிக்கொண்டுபோவதுமாகி விளையாடிக்கொண்டே பசுக்களையும் மேய்த்துக்கொண்டு க்ருஷ்ணனை முன்னிட்டுப் பாண்டீரமென்னும் ஆலமரத்தினடியில் போய்ச் சேர்ந்தார்கள். அங்குப் பலராமனபக்கத்தில் சேர்ந்த ஸ்ரீதாமாதிகள் விளையாட்டில் ஜயிக்கையில், அவர்களை ஸ்ரீக்ருஷ்ணனும் அவன் பக்கத்தில் சேர்ந்தவர்களும தூக்கிக்கொண்டு போனார்கள். அவர்களில் தோல்வியடைந்த ஸ்ரீக்ருஷ்ணன ஸ்ரீதாமனையும் பத்ரஸேனன வ்ருஷபனையும் ப்ரலம்பாஸுரன பலராமனையும் தூக்கிக்கொண்டு போனார்கள். ப்ரலம்பாஸுரன ஸ்ரீக்ருஷ்ணனைத் தூக்கமுடியாதென்று நினைத்து ஸ்ரீக்ருஷ்ணன் பக்கத்தில் சேர்ந்து ராமனால் தோல்வி அடைந்து அவனையே எடுத்துக்கொண்டு போனான். அங்ஙனம பலராமனை ஏற்றிக்கொண்டு போகிற அஸுரஸ்ரேஷ்டனாகிய அந்த ப்ரலம்பன் இறக்க வேண்டிய இடத்தையுங் கடந்து அப்புறம் வெகுவேகமாகச் சென்றான். பெரிய பர்வதம்போல் பளுவாயிருக்கின்ற பலராமனை எடுத்துக்கொண்டு போகிற அம்மஹாஸுரன தன வேகமெல்லாம் ஒடுங்கப்பெற்றுத் தனக்கு அஸாதாரணமான உருவத்தை அடைந்து ஸ்வர்ணாலங்காரங்களால் விளக்கமுற்று மின்னலும் சந்த்ரனும் அமைந்த மேகம்போல் ப்ரகாசித்தான். மிகவும் உயர்ந்து ஆகாயத்தை அளாவியிருப்பதும் ஜ்வலிக்கின்ற கண்களும் புருவ நெரிப்பில் படிந்த பயங்கரமான கோரைகளும் அக்னிபோல் ஜ்வலிக்கின்ற கேசங்களும் அமைந்து

தோள்வளை கிரீடம் குண்டலம் முதலிய ஆபரணங்களின் காந்தியால் அற்புதமாயிருப்பதுமாகிய அவ்வஸுரனுடைய உருவத்தைக் கண்டு பலராமன் சிறிது பயந்தாற்போலிருந்தான். பிறகு அவன் அஸுரனெனபதையும் அறிந்து தன் சக்தி முதலியவற்றையும் ஆராய்ந்து பயமற்றிருக்கிற அந்தப் பலராமன் கோபாவேசமுற்றுத் தெவேந்தரன் வஜ்ரத்தினால் பர்வதத்தை விரைந்தடிப்பதுபோலத் தன் பக்கத்தில் சேர்ந்த இடையர் கூட்டத்தைக் கடந்து வெகுதூரம் தூக்கிக்கொண்டு போகிற சத்ருவாகிய அவ்வஸுரனைத் தலையில் திடமான முட்டியால் அடித்தான. அவ்வஸுரன பலராமனால் அடியுண்டு உடனே தலை முறியப்பெற்று முகத்தினின்று ரக்தத்தைக் கக்கிக்கொண்டு நினைவு தப்பிப் பெருங்கோஷமிட்டு ப்ராணனகளை இழந்து, இந்த்ரனுடைய வஜ்ராயுதத்தினால் அடியுண்ட பர்வதம்போல் விழுந்தான. இடையர்களெல்லாரும் மஹாபலசாலியான பலராமனால் அவ்வஸுரன அடியுண்டு மாண்டதைக் கண்டு நல்லதுநல்லதென்று புகழ்ந்து மிகவும் வியப்புற்றார்கள். ப்ரேமத்தினால் தழதழுத்த மனமுடைய அவ்விடையர்கள் அஸுரன்கையில் அகப்பட்டுத் தப்பி மரணம் அடைந்தவன திரும்பிப் பிழைத்து வந்தாற்போலிருக்கின்ற அந்தப் பலதேவனை அணைத்துப் பலவாறு ஆசீர்வாதங்களைச் செய்து புகழத்தகுந்த மஹிமையுடைய அம்மஹானுபாவனைப் புகழ்ந்தார்கள். பாபிஷ்டனாகிய ப்ரலம்பன மாண்டு போகையில் தேவதைகள மிகவும் ஸந்தோஷம் அடைந்து பலராமனமேல பூமழை பொழிந்து நல்லது நல்லதென்று அவனைப் புகழ்ந்தார்கள். பதினெட்டாவது அத்யாயம் முற்றிற்று.

### ஸ்ரீக்ருஷ்ணன் முஞ்சாரண்யத்தில் கோபாலர்களைக் காட்டுத் தீயினின்று பாதுகாத்தல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—கோபாலர்கள் ப்ரலம்பன் மரணமடைகையிலும் விளையாட்டில் மனமிழுந்திருக்கையில் அவர்களுடைய பசுக்கள் இஷ்டப்படி மேய்ந்து கொண்டு வெகுதூரஞ் சென்று புல்மேய்வதில் விருப்பத்தினால் இஷீகாரண்யத்திற்குள் நுழைந்தன. ஆடுகள் பசுக்கள் மனுஷ்யர்கள் இவையெல்லாம் ஒருவனத்தினின்று மற்றொரு வனத்திற்குச் செல்லுவதும் அதினின்று மற்றொரு வனஞ் செல்லுவதுமாகி வெகுதூரஞ் சென்று காட்டுத்தீயினால் தபிக்கப்பட்டுக் கதறிக்கொண்டே இஷீகாரண்யத்திற்குள் நுழைந்தன. அப்பால் விளையாடிக்கொண்டிருந்த க்ருஷ்ண ராமாதி கோபாலர்கள் அப்பொழுது அவ்விடத்தில் பசுக்களைக் காணாமல் மனஇரக்கமுற்றுக் குளம்படிகளால் அவற்றின் வழியைக் கண்டுபிடிக்கலாமென்று தேடியும் புல்பூமியாகையால் குளம்படியைக் காணமுடியாதிருந்தார்கள். அந்தப்பசுக்களின் குளம்புகளாலும் பற்களாலும் துண்டிக்கப்பட்ட புற்களாலும் குளம்படிகளாலும் அடையாளஞ் செய்யப்பெற்ற பசுக்களின் வழியைக் கண்டுபிடித்துக்கொண்டு சென்று அங்ஙனம் தங்களுக்கு ஜீவனஸாதனமான பசுக்களைக் காணாமல் மனத்தில் விசாரமுற்று இஷீகாடவியில் வழிதப்பிக் கதறுகின்ற பசுமந்தைகளைக் கண்டுபிடிக்க முடியாமல் தண்ணீர்த் தாஹமும் மிகுந்து வருந்தித் தேடிப்பயனின்றித் தளர்ந்து மீண்டு வந்தார்கள். (அப்பொழுது ஸ்ரீக்ருஷ்ணன் மேகம்போல் கறுத்து மிகவும் உயர்ந்திருப்பதுமாகிய ஒரு வ்ருக்ஷத்தின்மேல் ஏறிக் கொண்டு கம்பீரமான தன் குரலால் பசுக்களின் பெயர்



2217. ஸ்ரீக்ருஷ்ணன் காட்டுத்தீயை விழுங்குதல்.

களைச் சொல்லி அழைத்தான்). அந்தப் பசுக்கள் தங்கள் பெயர்களைச் சொல்லி அழைக்கின்ற ஸ்ரீக்ருஷ்ணனுடைய குரலைக் கேட்டு மனக்களிப்புற்று ப்ரதித்வனி செய்தன. அப்பொழுது திடீரென்று பெரிய காட்டுத்தீ வனத்திலுள்ள ஜந்துக்களை யெல்லாம் அழிப்பதாகிக் காற்றினால் தூண்டப்பட்டுக் கிளர்ந்து நன்றாகப்பற்றி யெரிகின்ற கொள்ளிகளால் அங்குள்ள ஜங்கம ஸ்தாவரங்களை யெல்லாந் தொட்டுக்கொண்டு கிளம்பிற்று. கோபாலகர்கள் கோகுலத்துடன் நாற்புறத்திலும் கிளம்பி வருகின்ற காட்டுத்தீயைக் கண்டு பயந்து, மரண பயத்தினால் பிடிக்கப்பட்ட ஜனங்கள் தன்னைப் பற்றினுருடைய ஸம்ஸாரபந்தத்தைப் போக்குந்தன்மையுள்ள பகவானைச் சரணம் அடைந்து தங்கள் வருத்தத்தை விண்ணப்பஞ் செய்வதுபோலப் பலராமனோடு கூடிய ஸ்ரீக்ருஷ்ணனைச் சரணம் அடைந்து இங்ஙனம் விண்ணப்பஞ் செய்தார்கள்; 'ஓ க்ருஷ்ணா! க்ருஷ்ணா! மஹாவீர்யமுடையவனே! ஓ ராமா! மஹாபராக்ரம முடையவனே! காட்டுத்தீயினால் கொளுத்தப்படுகின்ற உன் பக்தர்களான எங்களைப் பாதுகாப்பீர்களாக. உன்னையே பந்துவாகப் பற்றினவர்கள் வருந்துவதற்கு உரியவர்களன்றல்லவா? இது நிச்சயம். தர்மஜ்ஞனே! நாங்கள் உன்னையே நாதனாக வுடையவர்கள்; உன்னையே மேலான ரக்ஷணோபாயமாக நினைத்திருப்பவர்கள். ஆகையால் எங்களை வருந்தவிட்டு நீ உபேக்ஷிக்கலாகாது' என்று முறையிட்டார்கள். ஷாட்குண்ய பூர்ணனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் பந்துக்களாகிய கோபாலர்கள் மன இரக்கத்திற்கிடமாயிருக்குமாறு மொழிந்த வசனத்தைக் கேட்டு 'ஓ கோபர்களே! பயப்பட வேண்டாம். கண்ணை மூடிக்

கொள்ளுங்கள்' என்று மொழிந்தான். கோபாலர்கள் அனைவரும் அப்படியே கண்ணை மூடிக்கொள்கையில் யோகேச்வரனாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ண பகவான் எங்கும் பரந்தெரிகின்ற பயங்கரமான காட்டுத்தீயைத் தன்முகத்தினால் பானஞ்செய்து அவர்களை அந்த ஆபத்தினின்று விடுவித்தான். பிறகு அந்தக் கோபாலர்கள் கண்களைத் திறந்து தாங்களும் தங்கள் பசுக்களும் காட்டுத்தீயினின்று விடுபட்டுப் பாண்டீர மரத்தடியில் வந்திருக்கக் கண்டு மிகவும் வியப்புற்றார்கள். அவர்கள் ஸ்ரீக்ருஷ்ணனுடைய யோகமாயையினால் அவன் ப்ரபாவத்திற்கு விஷயமாகும்படி செய்யப்பட்டு அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய யோகவீர்யத்தையும் தாங்கள் காட்டுத்தீயினின்று க்ஷேமமாய்த் திரும்பி வந்ததையும் கண்டு அவனைத் தெய்வமென்று நினைத்தார்கள். அப்பால் ஸ்ரீக்ருஷ்ணன், ஸாயங்காலமாகையில் பசுக்களையெல்லாம் ஒரு மந்தையாகச் சேர்த்துப் பலராமனுடன் குழலூதிக்கொண்டு கோபர்களால் துதிக்கப்பெற்றுக் கோகுலத்திற்குச் சென்றான். ஸ்ரீக்ருஷ்ணனைப் பிரிந்து ஒரு க்ஷணத்தைப் பல யுகங்களாகப் பாவிக்கின்ற கோபிமார்களுக்கு அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய காட்சி மஹானந்தத்தை விளைத்தது. பத்தொன்பதாவது அத்யாயம் முற்றிற்று.

வர்ஷருது சரத்ருது இவைகளின் வர்ணனை.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்—பிறகு இடையர்கள் தங்கள் வீட்டிற்குச் சென்று ராமக்ருஷ்ணர்கள் தங்களையும் பசுக்களையும் காட்டுத் தீயினின்று விடுவித்த அற்புதச் செயலையும் ப்ரலம்பாஸுரனைக் கொன்ற வருத்தாந்தத்

தையும் கோபிமார்களுக்குச் சொன்னார்கள். வயது முதிர்ந்த கோபர்களும் கோபிகைகளும் பிள்ளைகள் சொன்ன அந்த வ்ருத்தாந்தத்தைக் கேட்டு மிகவும் வியப்புற்றுத் தேவஸ்ரேஷ்டர்கள்தாமே ராமக்ருஷ்ண ரூபர்களாய்க் கோகுலத்திற்கு வந்திருக்கிறார்களென்று நினைத்தார்கள். பிறகு ஸமஸ்த ஜந்துக்களுக்கும் உத்பத்திக்கிடமாயிருப்பதும் திசைகளெல்லாம் விளங்கப் பெற்றிருப்பதும் ஆகாயத்தில் மேககர்ஜனங்கள் நிறைந்திருப்பதுமாகிய வர்ஷருது வந்தது. மின்னல்களும் இடிகளும் அமைந்த காளமேகங்களால் முழுவதும் மறைக்கப்பட்ட ஆகாயம் ப்ரக்ருதியினால் மறைக்கப்பட்ட தர்மபூத ஜ்ஞானமுடையதும் ஸத்வாதி குணங்களுக்கு உட்பட்டிருப்பதுமாகிய ஜீவாத்மஸ்வரூபம்போல் ப்ரகாசித்தது. மழைக்கு அபிமானிதேவதையாகிய ஸூர்யன் எட்டு மாதங்களாகத் தன் கிரணங்களால் பூமியினின்று இழுத்த ஜலமாகிற தனத்தை மீளவும் தகுந்த காலம் நேர்ந்திருக்கையில் தன் கிரணங்களாலேயே விடத்தொடங்கினான். மின்னல்களோடுகூடிய பெரிய மேகங்கள் கொடியகாற்றினால் அசைக்கப்பட்டு மன இரக்கமுற்றவைபோன்று ப்ராணிகளின் ஜீவனத்தை விளைக்கவல்ல ஜலத்தைப் பெய்தன. பலனை விரும்பித் தவஞ்செய்யும் புருஷனுடைய சரீரம் தவஞ்செய்யும்பொழுது இளைத்திருந்து தவத்தின் பலன் கைகூடினபின் காமபோகங்களை அனுபவிக்கையால் புஷ்டி யடைந்திருப்பதுபோல, க்ரீஷ்மருதுவினால் இளைத்திருந்த பூமி மேகங்களால் மழை பெய்து நனைக்கப்பட்டு மிகவும் செழிப்புற்றிருந்தது. கலியுகத்தில் பாபத்தினால் வேதவிருத்தங்களான பாஷண்டாகமங்களே விளங்கி வேதங்கள் விளக்கமற்றிருப்பதுபோல ராத்ரியின் ஆரம்பங்களில் இருள் மூடிக்கொண்டிருக்கையால் மின்மினிப்பூச்சிகளே விளங்கின

வன்றிச் சந்த்ரன் குரு சுக்ரன் முதலிய க்ரஹங்கள் மேகங்களால் மறைக்கப்பட்டு விளக்கமற்றிருந்தன. சிஷ்யர்கள் ஆசார்யனுடைய நித்யகர்மாநுஷ்டானத்திற்கு முன்பு பேசாமல் படித்திருந்து அவனுடைய நித்யகர்மாநுஷ்டானம் முடிந்த பின்பு அவனருளைக் கேட்டு அத்யயனஞ் செய்வதுபோலத் தவளைகள் அதற்கு முன் பேசாதிருந்து மேகத்தின் கானத்தைக் கேட்டுச் சப்தஞ் செய்தன. இந்த்ரியங்களை வெல்ல முடியாமல் அவற்றின் வழியே போகும் புருஷனுடைய விடுபணம் முதலிய ஸம்ருத்திகள் ஸத்பாத்ரங்களில் சேராமல் அதர்மமார்க்கத்தில் வளர்ந்து வருவதுபோலச் சிற்றாறுகள் மழைஜலங்களால் நிறைந்து கரை புரண்டு பாயத்தொடங்கின. பச்சை நிறமுடைய இளம்புற்களால் நிறைந்து பட்டுப்பூச்சிகளால் சிவந்து நீலவர்ணங்களான புக்களால் சேர்வையுடையதுமாகிய பூமி பல நிறமான சித்ரத்வஜபடங்களால் விளங்குகிற ராஜாக்களின் ஸைன்யசேனையை யொத்திருந்தது. கழனிகள் நெல்லு முதலிய பலன்கள் ஸம்ருத்தமாயிருக்கப்பெற்று பயிரிடுகிற குடிகளுக்கு ஸந்தோஷத்தையும், தெய்வாதீனமாப் பலன் உண்டாகிறதென்பதை அறியாமல் பிறருடைய ஸம்ருத்தியைப் பொறாத மானிடர்களுக்கு மனவருத்தத்தையும் விளைத்தன. ஜலத்திலுள்ள ப்ராணிகளும் தரையிலுள்ள ப்ராணிகளும் புதிய ஜலத்தை உபயோகப்படுத்தி, பகவானுடைய பக்தர்கள் அவனைப் பணிவதனால் அழகிய உருவம்பெறுவதுபோல, அழகிய மேனிமையைப் பெற்றார்கள். யோகம் கைகூடப்பெறாத புருஷனுடைய மனம் சப்தாதிவிஷயங்களில் விருப்பமுற்று அவற்றையே நினைத்துக் கலக்கமுற்றிருப்பதுபோல், ஸமுத்ரம் ஆற்று வெள்ளங்கள் வந்து விழப்பெற்றுப் பெருங்காற்றுகளால் அலை

களும் கிளம்பப்பெற்றுக் கலக்க முற்றிருந்தது. பகவானிடத்தில் நிலைநின்ற மனமுடைய பெரியோர்கள் ஆத்யாத்மிகம் முதலிய தாபங்களால் பீடிக்கப்பட்டும் மனம் கலங்காதிருப்பதுபோலப் பர்வதங்கள் மழைத்தாரைகளால் அடிக்கப்பட்டுஞ் சலன மற்றிருந்தன. ப்ராஹ்மணர்கள் வேதங்களை அத்யயனஞ்செய்து உருச் சொல்லாது விடுவார்களாயின் அவை சிலகாலத்தில் மறந்து போவதுபோல, வழிகள் ஜனஸஞ்சார மில்லாமையால் புல்மூடி இப்படியோ அப்படியோ என்று ஸந்தேஹத்திற்கிடமாயிருந்தன. புதிதுபுதிதாகப் புருஷர்களை அனுபவிக்க வேண்டுமென்று விரும்புகிற பெண்டிர்கள் குணமுள்ள தங்கள் கணவர்களிடத்தில் நட்பு குதிரப்பெறுமல் நிலையற்றிருப்பதுபோல, மின்னல்கள் உலகங்களுக்கெல்லாம் க்ஷேமம் விளைக்கையால் பந்துக்கள்போன்ற மேகங்களிடத்தில் நிலையற்றிருந்தன. சப்தத்தையே குணமாகவுடைய ஆகாயத்தில் [1] குணமற்ற இந்த்ரதனுஸ்ஸு, ஸத்த்வாதி குணங்களின் பரிணாமமான தேஹத்தில அக்குணங்களின் ஸம்பந்தமற்ற ஜீவன்போல் விளங்கிற்று. ஜீவன தன் ஜ்ஞானத்தினுலுண்டான தேஹாதமபரமத்தினுல் தேஹத்தைக்காட்டிலும் விலக்ஷணனுய்த் தோற்றுதிருப்பதுபோலச் சந்த்ரன தன நிலவினுல் விளக்க முற்ற மேகங்களால் மறைக்கப்பட்டு அம்மேகங்களைக் காட்டிலும் விலக்ஷணனுய்த் தோற்றவில்லை. இல்லறத்தில் இருக்கும் புருஷர்கள ஸம்ஸாரதாபங்களால வருந்திப் பகவானுடைய பக்தர்களின்ஸேவை நேரப்பெற்று ஸந்தோஷிப்பதுபோல, மேகங்கள் தோன்றக்கண்டு ஸந்தோஷம் அடையுந்தன்மையுடைய மயில்கள அப்பொழுது ஸந்தோஷம் அடைந்து நாத்தனஞ்செய்தன.

---

1. குணம் - நாணும் குணமும்.

முன்பு தவஞ்செய்யும் பொழுது தவத்தினால் வருந்தி இளைத்திருந்த புருஷர்கள் பிறகு காமபோகங்களை அனுபவித்துப் பருத்து வலுத்த மேனியுடையவர்களாகி விளங்குவதுபோல, முன்பு உலர்ந்திருந்த வ்ருக்ஷங்கள் வேர்களால் ஜலங்களை இழுத்துக் கிளை தளிர் பூ காய் பழம் முதலிய ஸம்ருத்திகள் அமையப்பெற்று விளங்கின. மன்னவனே! சிற்றின்பங்களில் விருப்பமுற்ற மூடர்கள் கார்யங்கள் ஒப்பப்பெறாத க்ருஹஸ்தாச்ரமத்தில் வஸிப்பதுபோல ஸாரஸப்பறவைகள கலங்கின ஜலமுடைய தாமரைத்தடாகங்களில் வஸித்திருந்தன. கலியுகத்தில் வேதத்தை ஒப்புக்கொள்ளாத பாஷண்டிகளின் துர்வாதங்களால் வேதமார்க்கங்கள் உடைந்தழிவதுபோல, மேகம் மழைபெய்கையில் வெள்ளம கரைபுரண்டு வருகையால் அதைப் பொருக்கமுடியாமல் அணைகட்டுகள் உடைந்துபோயின. ராஜாக்கள் புரோஹிதாதிகளால் தூண்டப்பட்டுக் காலந்தோறும் யாசகர்களின விருப்பங்களைப பெய்வதுபோல.மேகங்கள் காற்றினால் தூண்டப்பட்டு பராணிகளின் ஜீவனத்திற்கு ஆதாரமான ஜலத்தைப பெய்தன. இங்ஙனம் மழை பெய்கையால் வனம முழுவதும கர்ச்சூரிப்பழம் நாவல்பழம முதலியன பக்வமாயிருக்கப்பெற்று மிகவும் செழிப்பாயிருப்பதைக் கண்டு ஸ்ரீக்ருஷ்ணன பலராமனோடும பசுக்களோடும் பசுபாலர்களோடுங்கூட விளையாட விரும்பி அவ்வனத்திற்குள் ப்ரவேசித்தான். பசுக்கள் பெரிய மடியின பாரத்தினால் மெல்லமெல்ல நடக்குந் தன்மையுடையவைகளாயினும் ஸ்ரீக்ருஷ்ணனால் அழைக்கப்பெற்று ப்ரீதியினால் பால் பெருக்கிக்கொண்டு வேகமாக வந்தன. அவன் ஸந்தோஷமுற்ற குகைகள் முதலிய ஜந்துக்களையும செழித்துத் தேனைப்

பெருக்கிக்கொண்டிருக்கிற காட்டுவரிசைகளையும் பர்வதத்தினின்று பெருகி வருகின்ற அருவிகளையும் அவற்றின் த்வனிகளையும் ஸமீபத்திலிருக்கிற குஹைகளையும் கண்டார்கள். ஒருகால் மழைபெய்கையில் ஸ்ரீக்ருஷ்ணன் மரத்தடியிலும் குஹையிலும் ஒதுங்கிக் கிழங்கு வேர் காய் பழம் இவைகளைப் புசித்துக் களித்திருந்தான. பலராமனோடு கூடிய ஸ்ரீக்ருஷ்ணன் ஒருகால் க்ருஹத்தினின்று கொண்டுவந்த தத்யோதனத்தை ஜலக்கரையில் பாறையின்மேல் வைத்துககொண்டு கூடியிருந்து புசிக்கத் தகுந்த கோபாலர்களோடு கலந்து புசித்தான். அந்த ஸ்ரீக்ருஷ்ணன மதித்துக் கண்ணை மூடிக்கொண்டு புல்தரையில் அசைப்பிட்டுக்கொண்டிருக்கிற எருதுகளையும் கன்றுகளையும் பால்நிறைந்த மடியின்பாரத்தினால் ஓய்ந்திருக்கின்ற பசுக்களையும் ஸமஸ்த பூதங்களுக்கும் ஸந்தோஷத்தை விளைப்பதும் தன் ஸங்கல்பத்தினால் வளர்ந்திருப்பதுமாகிய வர்ஷருதுவின் சோபையையும் பார்த்து வெகுமதித்தான். அத்தகைய கோகுலத்தில் ராமக்ருஷ்ணர்கள் இங்ஙனம் வஸித்துக் கொண்டிருக்கையில் மேகங்கள் தொலைந்து ஜலமெல்லாம் தெளிந்து ஸுகமான காற்று வீசப்பெற்றதுமாகிய சரத்ருது வந்தது. யோகத்தினின்று நழுவினவர்களின் மனம் கலக்கமுற்று மீளவும் யோகாப்யாஸத்தினால் தெளிவதுபோல, முன்பு தெளிந்திருந்த ஜலங்கள் மழை பெய்தமையால் கலங்கி மீளவும் சரத்ருதுவின் ஸம்பந்தத்தினால் தெளிந்தன. ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் விளையும் பக்தி ப்ரஹ்மசாரி க்ருஹஸ்தன் வானபரஸ்தன் ஸந்யாஸி என்கிற நான்கு ஆஸ்ரமஸ்தர்களுடைய தோஷங்களையும் போக்குவதுபோல, சரத்ருது ஆகாயத்தில் மூடிக்கொண்டிருந்த மேகத்தையும் தேஜஸ்ஸு ஜலம்

காற்று இப்பூதங்களின் ஒன்றோடொன்றுக் குண்டான சேர்த்தியையும் பூமியின் சேற்றையும் ஜலங்களின் கலங்கலையும் போக்கிற்று. மேகங்கள் தங்கள் ஸர்வஸ்வமாகிய ஜலத்தைத் துறந்து வெளுத்த ஒளியுடையவைகளாகிப் பலவான த்யானிக்குந்தன்மையுடைய பெரியோர்கள் பெண்டிர் பணம் பிள்ளை இவற்றில் விருப்பத்தைத் துறந்து ராகத்வேஷாதிகள் கழிந்து பாபங்களற்று விளங்குவதுபோல் விளங்கின. ஜ்ஞானிகள் சிலர்க்கு ஜ்ஞானோபதேசஞ்செய்து சிலர்க்குச் செய்யாமல் மறுப்பது போலப் பர்வதங்கள் சிலவிடங்களில் நிர்மலமான ஜலத்தைப் பெருக்கிச் சிலவிடங்களில் ஜலத்தைப் பெருக்காதிருந்தன. பிள்ளை பெண்டிர் முதலிய குடும்பத்தைப் போஷிப்பதில் ஸக்தியுற்ற மூடர்கள் தங்கள் வாழ்நாள் கழிவதை அறியாதிருப்பது போல, அற்பஜலத்தில் இருக்கின்ற மீன்கள் நாள்தோறும் ஜலம் குறைவதை அறியாதிருந்தன. இந்த்ரியங்களை வெல்ல முடியாமல் அவற்றின் ஸுகங்களை விரும்புகின்றவனும் தரித்ரனும் பிள்ளை பெண் மனைவி முதலிய பெருங்குடும்ப முடையவனும் ஸுகமில்லாத மனக்களிப்பற்றவனுமாகிய புருஷன் ஆத்யாத்மிகம் முதலிய தாபங்களை அனுபவிப்பதுபோல, அற்பமான ஜலத்தில் ஸஞ்சரிக்கின்ற ஜலஜந்துக்கள் சரத்ருதுவில் ஸூர்யகிரணங்களால் விளையும் தாபத்தை அடைந்தன. ஜ்ஞானிகள் தேஹத்திலும் தேஹத்தைத் தொடர்ந்த மற்றவைகளிடத்திலும் அஹங்காரமமகாரங்களை மெல்லமெல்லத் துறப்பதுபோலத் தரைகள் சேற்றையும் கொடிகள் அபக்வதசையையும் துறந்தன. பரமபுருஷனுடைய திவ்யமங்கள விக்ரஹத்தை த்யானிக்கும் முனிவன் அன்னபானாதிகளின் உபயோகம் நீங்கித் தேஹம் கழியத் தொடங்குகையிலும் அசையாதிருப்பதுபோலச்

சரத்ருது வந்திருக்கையில் ஸமுத்ரஜலம் அசையாமல் கோஷமற்றிருந்தது. யோகிகள் ப்ராணன்கள் மூலமாய் நழுவுகின்ற ஜ்ஞானத்தை அந்த ப்ராணனகளைத் தடுத்து நிறுத்திக் கொள்வதுபோலப், பயிரிடுங் குடிகள் பெருகிப்போகின்ற ஜலத்தைத் திடமான அணைக் கட்டுக்களால் கழனிகளுக்காக நிறைத்து வைத்துக் கொண்டார்கள். (கழனிகளினின்று பெருகிப்போகிற ஜலத்தைத் திடமான அணைக்கட்டுக்களால் நிறுத்திக் கொண்டார்கள்). தேஹாத்மாபிமானத்தினால் உண்டாகும் வருத்தத்தைத் தேஹாத்மாக்களின் உண்மையைப் பற்றின அறிவு போக்குவது போலவும், கோபஸ்த்ரீகளின் மனமத தாபத்தை ஸ்ரீக்ருஷ்ணன் போக்குவதுபோலவும், ப்ராணிகளுக்குச் சரத்காலத்து ஸூர்யனுடைய கிரணங்களால் உண்டாகும் தாபத்தைச் சந்த்ரன் போக்கினன். ஆகாயம் சரத்ருதுவினால் மேகங்களின் மூடலின்றி நக்ஷத்ரங்களெல்லாம் நிர்மலமாய் விளங்கப் பெற்று, ஸத்வகுணம் தலையெடுத்து ரஜஸ்தமோகுணங்கள் தொலைந்து வேதங்களால் நிரூபிக்கப்படுகிற[1] அர்த்தபஞ்சகம் தெளிவாய்த் தோற்றப்பெற்ற மனம்போல் ப்ரகாசித்தது. ஆகாயத்தில் பரிபூர்ணமான மண்டலமுடைய சந்த்ரன் நக்ஷத்ரங்களால் சூழப்பட்டுப் பூமியில் யாதவர்களுக்கு ப்ரபுவாகிய ஸ்ரீக்ருஷ்ணன் வ்ருஷ்ணி ஸைன்யங்களால் சூழப்பட்டு விளங்குவதுபோல விளங்கினன். சீதம் உஷ்ணம் இவை ஸமமாயிருக்கப்பெற்று நிரம்பவும் புஷ்பித்திருக்கிற வனத்தினின்று வருகின்ற காற்றை ஜனங்கள் அனுபவித்துத் தாபத்தைத் துறந்தார்கள். ஸ்ரீக்ருஷ்ணனால் மனம் பறியுண்ட கோபிமார்களொழிய மற்றவர்கள் அந்தக் காற்றை அனுபவித்துத்

1. ஸ்வஸ்வரூப பரஸ்வரூப புருஷார்த்தஸ்வரூப உபாயஸ்வரூப விரோதிஸ்வரூபங்களாகிற ஐந்து அர்த்தங்கள்.

தங்கள் தாபம் வளரப் பெற்றார்களேயன்றிச் சிறிதும் தீரப்பெறவில்லை. சரத்ருது வந்திருக்கையில் பசுக்கள் ம்ருகங்கள் பக்ஷிகள் மடந்தையர்கள் ஆகிய இவையெல்லாம் தங்கள் தங்கள் அன்பர்களால் தொடரப்பெற்றுப் பகவதாராதனரூபமான செயல்கள் தர்ம அர்த்த காமாதிபலன்களால் தொடரப்பெற்று ஸமஸ்த போகங்களையும் உட்கொண்டிருப்பதுபோலக் கர்ப்பந்தரித்தன. திருடர்கள் புலி ஸிம்ஹம் முதலியவை தவிர மற்ற ஜனங்களெல்லாம் ராஜாவைக் கண்டு நிர்ப்பயமாய் ஸந்தோஷிப்பதுபோல, நெய்தல் முதலிய சில புஷ்பங்கள் தவிர ஜலத்தில் உண்டாகிற தாமரை முதலிய மற்ற புஷ்பங்களெல்லாம் ஸூர்யனைக் கண்டு ஸந்தோஷம் அடைந்தன. ஸமஸ்த தான்யங்களும் நிறைந்திருக்கின்ற பூமி, பட்டணங்களிலும் க்ராமங்களிலும் புதிய பண்டங்களுக்கு ஸம்ஸ்காரமாக நடத்துகிற ஆக்ரயணமென்னும் யாகங்களாலும் இந்த்ரியங்களுக்கு ஸந்தோஷத்தை விளைவிக்கிற மற்றும் பல மஹோத்ஸவங்களாலும் விளக்கமுற்றிருந்தது; பரம புருஷனுடைய அவதாரங்களான ராமக்ருஷ்ணர்களால் மிகவும் விளக்கமுற்றிருந்தது. தவத்தில் ஸித்தி பெற்றவர்கள் அதன் பலனை அனுபவிக்குங்காலம் வரப்பெற்று இவ்வுலகத்தினின்று புறப்பட்டுத் தங்கள் தவத்தின் பலனான போகங்களை அனுபவிப்பதுபோல, க்ரயவிக்ரய வ்யாபாரஞ் செய்கிறவர்த்தகர்களும் க்ராமைகராத்ரமாய்த் திரிகிற ஸந்யாஸிகளும் சத்ருக்களின்மேல் படையெடுக்க விரும்பும் மன்னவர்களும் தீர்த்தயாத்ரை செய்பவர்களும் வர்ஷாகாலத்தினால் தடைபட்டிருந்து சரத்ருது வருகையில் புறப்பட்டுத் தங்கள் ப்ரயோஜனங்களைப் பெற்றார்கள். இருபதாவது அத்யாயம் முற்றிற்று.

ஸ்ரீக்ருஷ்ணன் வேணுகானஞ் செய்தலும், கோபிகைகள் அதைக் கேட்டுக் காமவிகாரங்கொண்டு ஒருவர்க்கொருவர் பேசிக் கொள்ளுதலும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஸ்ரீக்ருஷ்ணன் கோக்களோடும் கோபாலர்களோடுங்கூடி இவ்வமை சரத்ருதுவால் தெளிந்த ஜலமுடையதும் தாமரைத் தடாகங்களில் பட்டு வருகையால் நல்ல பரிமளமுடைய காற்றினால் வீசப்பெற்றதுமாகிய வனத்திற்குள் ப்ரவேசித்தான். யாதவர்களுக்கு ப்ரபுவாகிய ஸ்ரீக்ருஷ்ணன காடுகளெல்லாம் வரிசைவரிசையாய்ப் புஷ்பித்திருக்கப்பெற்றதும் மதுபானத்தினால் மதித்திருக்கின்ற வண்டுகளும் மற்றும் பல பறவைகளும இனமினமாய்க் கூவப்பெற்ற தாமரைத் தடாகங்களும ஆறுகளும பர்வதங்களும் அமைந்து ரமணீயமாயிருபபதுமாகிய வனத்திற்குள கோபாலர்களோடும் பலராமனோடும ப்ரவேசித்துப் பசுக்களை மேய்த்துக்கொண்டு வேணுகானஞ் செய்தான. இடைச்சேரியிலுள்ள சில கோபிமார்கள் மனமதவிகாரத்தை விளைப்பதாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய வேணுகானத்தைக் கேட்டுத் தங்கள ஸகிகளுக்கு வர்ணிக்கத்தொடங்கினார்கள். ஸ்ரீக்ருஷ்ணன் வேணுகானஞ்செய்யுஞ் செயலை வர்ணிக்கத் தொடங்கின கோபிகைகள் அவனுடைய சேஷ்டைகளை நினைத்துக் காமவிகாரவேகத்தினால் மனவ்யாகுலமுற்று அதை வர்ணிக்க முடியாமலே இருந்தார்கள். திறமையுடைய கூத்தாடுகிறவன் தன்னுருவம் தெரியாதபடி வேஷம்பூண்டு வருவதுபோல் கோபாலவேஷத்தினால் தனனுடைய அஸாதாரணஸ்வரூபத்தை மறைத்துக்கொண்டிருக்கிற ஸ்ரீக்ருஷ்ணன சிரஸ்ஸில் மயில்தோகையாகிற அலங்காரத்தையும் காதுகளில் கர்ணிகாரபுஷ்பத்தையும் அரையில் பொன்னிறமுள்ள

அழகான ஆடையையும் மார்பில் வைஜயந்தியென்னும் பூமாலையையும் தரித்து நடஸ்ரேஷ்டனுடைய வேஷம் போன்ற வேஷமுடையவனாகி வேணுவின் த்வாரங்களைத் தன்னுடைய அதரத்தின அம்ருதத்தினால் நிறைத்துக்கொண்டு தன்னைத் தொடர்ந்துவருகின்ற கோபாலர்களால் பாடப்பட்ட புகழுடையவனாகித் தன அடிவைப்புக்களால் அலங்கரிக்கப்பட்டு அழகாயிருக்கின்ற ப்ருந்தாவனத்திற்குள் நுழைந்தான். இங்ஙனம் ஸமஸ்தப்ராணிகளின் மனத்திற்கும் இனிதாயிருக்கும்படி பாடுகின்ற ஸ்ரீக்ருஷ்ணனுடைய வேணுகானத்தைக் கோபிகைகள் அனைவரும் கேட்டு அவனுடைய சேஷ்டைகளை ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்டு புத்தியில் ஸந்தானஞ் செய்கின்ற அந்த ஸ்ரீக்ருஷ்ணனை அணைத்து மனக்களிப்புற்றிருந்தார்கள்.

கோபிகைகள் சொல்லுகிறார்கள்:—தோழிகளே! நந்தகுமாரர்களான ராமக்ருஷ்ணர்கள் நண்பர்களான கோபாலர்களோடு பசுக்களை மேய்த்துக்கொண்டு போகும்பொழுது வேணுவோடு கூடியதும் காண்போர்களுக்கும் மிகவும் ப்ரீதியை விளைப்பதும் அநுராகம் பெருகுகின்ற கடைக்கண்ணோக்கங்கள் அமைந்ததுமாகிய அவர்கள் முகத்தைக் கண்டனுபவிப்பார்களாயின் அதுவே கண்படைத்தவர்களின் கண்களுக்கு ப்ரயோஜனமன்றி மற்றொருப்ரயோஜனம் இருப்பதாக நாங்கள் அறியோம். மாந்தளிர்கள் மயில்தோகைகள் பூங்கொத்துகள் நெய்தல்பூ தாமரைப்பூ இவற்றின் மாலைகளால் இடையிடையில் கலந்திருக்கின்ற ஆடைகளை உடுத்து விசித்ரமான வேஷம் பூண்டிருக்கிற அந்த ராமக்ருஷ்ணர்கள் ஒருகால் கோபாலர்களின் இடையில் பாடிக்கொண்டு ரங்கஸ்தலத்தின் மத்தியில்

பாடுகிற நடஸ்ரேஷ்டர்கள்போல் விளங்கினார்கள். கோபிமார்களே! ஸ்ரீக்ருஷ்ணனுடைய கையில் இருக்கின்ற இந்த வேணு என்ன புண்யம்செய்ததோ! ஏனென்ருல், கோபிகைகளான நமக்குங்கூட கிடைக்க அரிதான ஸ்ரீக்ருஷ்ணனுடைய அதரத்தின் அம்ருதத்தைத் தானே அனுபவிக்கின்றதல்லவா? அது அனுபவித்து மிகுந்த அதர அம்ருத ரஸத்தை நதிகளும் வ்ருக்ஷங்களும் அனுபவிக்கின்றன. அவற்றுள் நதிகள் மலர்ந்திருக்கின்ற தாமரைமலர்களின் வ்யாஜத்தினுல் மயிர்க்கூச்சம் உண்டாயிருக்கப் பெற்றவைபோலத் தோற்றுகின்றன. வ்ருக்ஷங்கள் தேன்களின் வ்யாஜத்தினுல் ஆநந்த நீர் பெருக்குகின்றவைபோலத் தோற்றுகின்றன. தோழீ! இந்த ப்ருந்தாவனம் பூமண்டலத்திற்கெல்லாம் பெரிய புகழை விளைக்கின்றது. ஏனென்ருல், இது தேவகியின் புதல்வனுகிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய பாதாரவிந்தங்களின் ஸ்பர்சத்தினுல் மிகுந்த சோபை உண்டாகப் பெற்றிருக்கின்றது. மற்றும், இதில் பசுக்களை மேய்த்துக்கொண்டு உலாவுகின்ற அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய வேணுகானத்தைக் கேட்டு மயில்கள் மெதுவாகக் கர்ஜனை செய்கின்ற நீலமேகமென்று பிரமித்து மகிழ்ந்து நர்த்தனஞ் செய்யத் தாழ்வரைகளில் இருக்கின்ற மற்ற ஜந்துக்களெல்லாம் ஸ்ரீக்ருஷ்ணனுடைய வேணுகானத்தைக் கேட்டு அதற்குப் பொருந்துமாறு ந்ருத்தனஞ் செய்கின்ற மயில்களையும் கண்டு தத்தஞ் செயல்களையெல்லாம் துறந்து பேசாதிருக்கின்றன. இந்தப் பூலோகம் தவிர மற்றலோகங்களில் எங்கேனும் இத்தகைய விசேஷம் உண்டோ? திர்யக்ஜாதியில் பிறந்து அழகென்றும் குரூபியென்றும் அறியும் விவேகமற்ற இந்த மான்பேடுகளுங்கூட மிகுந்த பாக்யமுடையவைகள். ஏனென்ருல்,

இவை வேணுகானத்தைக் கேட்டுத் தங்கள் கணவர்களாகிய க்ருஷ்ணஸார ம்ருகங்களுடன் அருகாமையில் வந்து மயில்தோகை முதலியவற்றால் விசித்ரமான வேஷம் பூண்டிருக்கின்ற நந்தகுமாரனுக்கு ப்ரீதியமைந்த கண்ணோக்கங்களால் வெகுமதி செய்கின்றன. (அப்பர்களான நங்கணவர்களோவென்றால் தங்கள் எதிரில் அங்ஙனம் நாம் கடைக்கண்ணோக்கங்களால் ஸ்ரீக்ருஷ்ணனை வெகுமதிக்கப் பொறுக்கமாட்டோமென்கிறார்களே. இவை மதுரமான ஸ்ரீக்ருஷ்ணனுடைய வேணுகானத்தை இஷ்டப்படி கேட்பதும் அழகிய கண்ணோக்கங்களால் அவனை வெகுமதிப்பதும் செய்ய நேரப்பெற்றமை பாக்யமஹிமையேயல்லவா! மற்றும் அதற்குத் தங்கள் கணவர்களும் பொறாமையின்றி உதவியாயிருக்கப்பெற்றமையாகிய பாக்யமஹிமையைப்பற்றி என்னென்று சொல்லுவேன்? ஆகாயத்தில் விமானத்தின்மேல் ஏறி ஸஞ்சரிக்கின்ற தெய்வமடந்தையர்கள் மடந்தையர்களுக்கு ஸந்தோஷத்தை விளைக்கவல்ல உருவமும் ஸ்வபாவமும் உடைய ஸ்ரீக்ருஷ்ணனைக் கண்டும் அவன் வாசிக்கிற அழகான வேணுகானத்தைக் கேட்டும் மன்மதனால் தைர்யம் பறியுண்டு தலைச்சொருக்குகளினின்று புஷ்பங்கள் நழுவவும் அரையாடையின் முடிச்சு அவிழவும் பெற்று மோஹித்தார்கள். பசுக்களும் ஸ்ரீக்ருஷ்ணனைக் கண்ணால் கண்டு அவனை மனத்தினால் அணைத்துக் கண்ணீர் பெருகப்பெற்று அவனுடைய முகத்தினின்று கிளம்பி வருகின்ற வேணுகானமாகிற அம்ருதத்தை நிரித்துக்கொண்டிருக்கின்ற காதுகளாகிற தொன்னைகளால் பானஞ்செய்துகொண்டு பேசாதிருந்தன. தாய் முலையை ஊட்டத் தொடங்கின கன்றுகளுங்கூட ஊட்டுவதை மறந்து அந்த ஸ்ரீக்ருஷ்ணனைக் கண்டு அவனு

டைய வேணுகானமாகிற அம்ருதத்தை செரிக்கப்பட்ட காதுகளாகிற தொன்னைகளால் பருகிக்கொண்டு அவனை மனத்தினால் அணைத்துக் கண்களினின்று ஆநந்த நீர் பெருகப்பெற்றுத் தாய்முலையினின்று தங்கள் வாயில் பெருகி விழுகின்ற பாலைப்பருகவும் மறந்து அந்தப்பால் முழுவதும் அப்படியே வழியப்பெற்றுப் பேசாதிருந்தன. அம்மா! இவ்வனத்திலுள்ள பக்ஷிகள் பெரும்பாலும் முனிவர்களாயிருக்க வேண்டுமென்று தோற்றுகிறது. ஏனென்றால், இந்தப்பக்ஷிகள் அழகிய தளிர்கள் அமைந்த வ்ருக்ஷங்களின கிளைகள்மேல் ஏறி உட்கார்ந்து தாங்கள் புசிக்கவேண்டிய பழம் முதலியவற்றையும் துறந்து ஸ்ரீ க்ருஷ்ணனையே பார்த்துக்கொண்டிருந்து அவன் பாடுகிற அழகிய வேணுகானத்தை ஆநந்தத்தினால் கண்களை மூடிக்கொண்டு வேறொரு சப்தமும் செய்யாமல் ஊக்கத்துடன் கேட்டுக் கொண்டிருக்கின்றன. அங்ஙனமே அறிவற்ற நதிகளுங்கூட ஸ்ரீ க்ருஷ்ணனுடைய அத்தகையதான வேணுகானத்தைக் கேட்டு நீர்ச்சுழிகளால் சுழன்று மூர்ச்சித்தாற்போலிருக்கின்றமையால் அறிவிக்கப்பட்ட மனமதவிகாரத்தினால் வேகம் அடங்கப்பெற்று அலைகளாகிற புஜங்களால் தாமரை மலர்களை உபஹாரமாகக் கொண்டு ஆலிங்கனத்தால் மறைந்திருக்கும்படி அவனுடைய பாதாரவிந்தங்களைப் பிடித்துக்கொள்கின்றன. யமுனையின கரையில் வெயிலில் பலராமனோடும் கோபாலர்களோடுங்கூடி இடைச்சேரியிலுள்ள பசுக்களையெல்லாம் மேய்த்துக்கொண்டு அவற்றின் பின்னே வேணுகானம் செய்கின்ற ஸ்ரீ க்ருஷ்ணனைக்கண்டு மேகம் கிளம்பி ப்ரீதியினால் வளர்ந்து உலகங்களின வருத்தங்களைப் போக்குகையாலும் நீலநிறத்தினாலும தனக்கு நண்பனாகிய அந்த ஸ்ரீ க்ருஷ்ணன

மேற் பூமழைகளைப் பொழிந்து தனவடிவத்தினுல் குடையும் பிடித்தது. வேடச்சிகள் மிகுந்த புண்ணியஞ் செய்தவர்கள் (பாக்யம் நிறைந்தவர்கள்); ஏனென்ருல், முனிவர்களால் மிகுதியும் பாடப்படுகின்ற பெருமையுடைய ஸ்ரீக்ருஷ்ணனுடைய அனபிற்கிடமான ஸ்ரீமஹாலக்ஷ்மியின ஸ்தனங்களில் அலங்காரமாக அணியப்பட்டதும் அவற்றினின்று அவனபாதாரவிநதங்களில் படிந்து அவற்றின செவவியால் மிகுநத அழகுடையதும் அவன் வனத்தில் ஸஞ்சரிக்கும்பொழுது அப்பாதாரவிநதங்களினின்று பூமியில் ஆங்காங்கு படிநதிருபபதுமாகிய குங்குமத்தைக் கண்டமாத்திரத்தில் காமவேதனை தலையெடுக்கப்பெற்று அநதக் குங்குமத்தை வெழித்தெடுத்து முகங்களிலும் ஸ்தனங்களிலும பூசிக்கொண்டு காமவேதனையைத் துறநதார்கள். ஓ அபலைகளே! இந்தப்பர்வதம ஸ்ரீக்ருஷ்ணனுடைய தாஸர்களில சிறநதது. ஆ! ஸ்தாவரங்களுக்குங்கூட ஸ்ரீக்ருஷ்ண தாஸ்யத்தில் உண்டாயிருக்கும பரீதியைக் கண்டீர்களா! இநதப பர்வதம் ராமக்ருஷ்ணர்களின பாதாரவிநதஙகள் தனமேல் படப்பெற்று மிகவும ஸநதோஷம அடைநது பசுக்களோடும் நண்பாகூட்டங்களோடுங்கூடிய அநத ராமக்ருஷ்ணர்களுக்கு ருசியுள்ள ஜலஙகளாலும நல்ல புற்களாலும் குஹைகளாலும கிழங்குவோ இவைகளாலும அவரவர்களுக்குத் தகுநதபடி வெகுமதி செய்கின்றது. தோழிகளே! இடையர்களோடுகூட வனங்கள்தோறும் பசுக்களை மேய்த்துக்கொண்டு ஸஞ்சரிப்பவர்களும் சிரஸ்ஸில் அணைக்கயிறுகளையும தோள்களில் தலைக்கயிறுகளையும தரிதது இடையர்களின அடையாளம் விளங்கப் பெற்றவர்களுமாகிய அநத ராமக்ருஷ்ணர்கள் அவ்யக்த மதுரமான சப்தங்கள் அமைநதிருக்கும்படி ஊதுகின்ற

அழகிய குழலோசையைக் கேட்டு ஜங்கமங்கள் அசையாதிருக்கின்றன; ஸ்தாவரங்கள் மயிர்க்கூச்சம் உண்டாகப்பெறுகின்றன. இதென்ன விசித்ரம்! கண்டீர்களா!

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—கோபிகைகள் ப்ருந்தாவனத்தில் ஸஞ்சரிக்கின்ற ஸ்ரீக்ருஷ்ணனுடைய இந்தவைய லீலைகளையும் மற்றும் பலவகையான லீலைகளையும் வர்ணித்து ஸ்ரீக்ருஷ்ணனுடைய சிந்தையே தலையெடுத்திருந்தார்கள். இருபத்தொன்றாவது அத்யாயம் முற்றிற்று.

## கோபீ வஸ்த்ராபஹார வ்ருத்தாந்தம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஹேமந்தருதுவில் முதல் மாதமாகிய மார்கழி மாதத்தில் நந்தகோகுலத்திலுள்ள கோபகன்னிகைகள் அனைவரும் பரிசுத்தமான ஆஹாரத்தைப் புசித்துக்கொண்டு காத்யாயனியின் ஆராதனரூபமான வ்ரதத்தை ஒருமாதம்வரையில் அனுஷ்டித்தார்கள். அக்கன்னிகைகள் அருணோதயவேளையில் யமுனாஜலத்தில் ஸ்னானஞ்செய்து ஜலக்கரையில் மணலால் காத்யாயனியின் ப்ரதிமையை இயற்றி நல்ல மணமுள்ள கந்தங்களாலும் அத்தகைய பூமாலைகளாலும் பலவகையான உபஹாரங்களாலும் தூபதீபங்களாலும் தளிர்களாலும் பழங்களாலும அக்ஷதைகளாலும் அந்தக் காத்யாயனீதேவியை நன்றாகப் பூஜித்தார்கள். 'காத்யாயனி! மிகுதியும் ஆச்சர்யமான சக்தியுடையவளே! தனனுடைய ஆராதனரூபமான மஹாயோகத்தை நிறைவேற்றுந்தன்மையளே! தன்னை ஆராதிப்பவாகள் விரும்பும் பலனைக் கொடுக்குந் திறமையுடையவளே! தேவீ! நந்தகோபகுமாரனாகிய ஸ்ரீக்ருஷ்ணனை

எனக்குக் கணவனாகச் செய்யவேண்டும். உனக்கு நமஸ்காரம்' என்று இம்மந்த்ரத்தை ஜபித்துக்கொண்டு அவர்கள் காத்யாயனிக்குப் பூஜை செய்தார்கள். அந்தக் கோபகன்னிகைகள் இங்ஙனம் ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் மனஞ் செல்லப்பெற்று 'நந்தகுமாரன் எங்களுக்குப் பதியாகவேண்டும். இங்ஙனம் நீ அருள்புரியவேண்டும்' என்று பத்ரகாளியை ஆராதித்துக்கொண்டு ஒரு மாதம் முழுவதும் வ்ரதத்தை அனுஷ்டித்தார்கள். அந்த இடைக்கன்னிகைகள் தினந்தோறும் விடியற்காலத்தில் எழுந்து ஒருவரையொருவர் பெயரைச் சொல்லி அழைத்தெழுப்பி ஒருவரோடொருவர் கைகோர்த்து ஸ்ரீக்ருஷ்ணனை உரக்கப் பாடிக்கொண்டு யமுனையில் ஸ்னானஞ்செய்யப் போவது வழக்கம். இப்படி நடக்கையில் ஒருகால் யமுனாநதிக்கு வந்து முன்போலவே கரையில் வஸ்த்ரங்களை அவிழ்த்துவைத்து ஜலத்தில் இறங்கி ஸந்தோஷத்துடன் ஸ்ரீக்ருஷ்ணனைப் பாடிக்கொண்டு விளையாடினார்கள். அப்பொழுது யோகீஸ்வரர்களுக்கும் ஈஸ்வரனாகிய ஸ்ரீக்ருஷ்ணபகவான் அவர்கள் செய்யும் வ்ரதத்தையும் விளையாடலையும் அறிந்து அவர்களின் வ்ரதத்தை நிறைவேற்ற விரும்பி நண்பர்களுடன் அவ்விடம் வந்து அவர்கள் கரையில் வைத்திருந்த வஸ்த்ரங்களை எடுத்துக்கொண்டு விரைவுடன் சென்று கதம்ப மரத்தின்மேல் ஏறிக்கொண்டு சிரிக்கின்ற இடைப்பிள்ளைகளுடன் தானும் சிரித்துக்கொண்டு பரிஹாஸமாக இங்ஙனம் மொழிந்தான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:— பெண்மணிகளே! நீங்கள் இவ்விடம் வந்து உங்களிஷ்டப்படி தங்கள் தங்கள் வஸ்த்ரங்களைப் பெற்றுக்கொண்டு போவீர்களாக. நான் உண்மையாகச் சொல்லுகிறேன்; பரிஹாஸமன்று.



2234. கோபிவஸ்த்ராபஹாரம்.

நீங்கள் வ்ரதத்தினால் இளைத்திருக்கின்றீர்கள். ஆகையால் உங்களைப் பரிஹாஸம் செய்யமாட்டேன். நான் ஒருநாளும் பொய் சொன்னதே இல்லை. அது இவர்களுக்குத் தெரியும். அழகிய இடையுடையவர்களே! நீங்கள் தனித்தனியேயாவது வந்து வாங்கிக் கொள்ளுங்கள். அல்லது, எல்லோரும் ஒன்று சேர்ந்தாவது வந்து வாங்கிக் கொள்ளுங்கள்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அந்த ஸ்ரீக்ருஷ்ணன் அங்ஙனம் பரிஹாஸஞ்செய்வதைக் கண்டு ப்ரீதி நிறைந்திருக்கின்ற கோபிகைகள் ஒருவரையொருவர் பார்த்து வெட்கமுற்றுச் சிரித்துக் குளத்தினின்று வெளிப்புறப்படாமலே யிருந்தார்கள். ஸ்ரீக்ருஷ்ணன் இங்ஙனம் சொல்லுகையில் குளிர்ந்தஜலத்தில் கழுத்துவரையில் அமிழ்ந்து குளிரால் நடுக்க முற்றிருக்கின்ற அவ்விடைப் பெண்கள் அவனுடைய பரிஹாஸவாக்யத்தினால் இழுக்கப்பட்ட மனமுடையவர்களாகி அவனைக் குறித்து இங்ஙனம் மொழிந்தார்கள்.

கோபிகைகள் சொல்லுகிறார்கள்:—இடைச்சேரியிலுள்ள அனைவராலும் புகழத்தகுந்தவனும நந்தகோபகுமாரனுமாகிய நீ நாங்கள் அனுஷ்டித்த வ்ரதத்தினால் எங்களுக்கு அனபாயகனாகப்போகிறாயென்பது தெரியும். ஆயினும் இப்பொழுதே நீ அநீதி செய்யத்தொடங்காதே. நாங்கள் குளிரால் நடுக்க முற்றிருக்கிறோம். ஆகையால் எங்கள் வஸ்த்ரங்களைக் கொடுப்பாயாக. நீ நந்தகோபகுமாரனாயிருந்து இங்ஙனம் ந்யாயந்தவறுவது யுக்தமன்று. மற்றும், நீ கோகுலத்திலுள்ளவர்கள் அனைவர்க்கும் புகழத்தகுந்தவன. இப்படி அந்யாயஞ் செய்து உன்புகழைப் போக்கடித்துக் கொள்ளாதே. நீ எங்களன்பிற்கிடமாயிருந்தும் குளிரில் வருந்துகிற

எங்களை மேன்மேலும் வருத்துவது உனக்குத் தகுமா? ஆகையால் அந்யாயஞ் செய்யாமல் எங்கள் வஸ்த்ரங்களைக் கொடுப்பாயாக. கரியனே! அழகனே! நாங்கள் உன்னடிமைகள். இதுவொன்று தவிர மற்ற நீ சொன்னதையெல்லாம் செய்ய ஸித்தமாயிருக்கின்றோம். தர்மஜ்ஞனே! (பஹிரங்கமான இடத்தில் அரையிலாடையில்லாத பெண்களைப் பார்க்கலாகாதென்கிற தர்மம் உனக்குத் தெரியாதோ?) நீ எங்கள் வஸ்த்ரங்களைக் கொடாது போவாயாயின், நாங்கள் இதை ராஜனுக்குச் சொல்லுவோம்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—பரிசுத்தமான புன்னகையுடையவர்களே! நீங்கள் எனக்கு அடிமையாயிருப்பதும் நான் சொன்னபடி செய்வதும் உண்மையாயின் நீங்கள் இவ்விடம் வந்து தங்கள் தங்கள் வஸ்த்ரங்களைப் பெற்றுக்கொள்வீர்களாக. ப்ரபு சொன்னவற்றில் அடியவர்கள் தங்களுக்கிஷ்டமான சிலவற்றையே செய்யவேண்டுமென்னும் நியதி இல்லை. அவனுக்கு இஷ்டமானவற்றையெல்லாம் செய்யவேண்டிய அவச்யமே.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அழகிய அங்கமுடைய அப்பெண்மணிகள் அனைவரும் ஸ்வாமியின் இஷ்டத்தை அடிமைகள் செய்யவேண்டியது யுக்தமேயென்று அபிப்ராயப்பட்டுக் குளிரால் நடுக்கமுற்று யமுனையின் மடுவினின்று கரையேறி வந்தார்கள். பிறகு பகவான் பால்யத்திற்கும் யௌவனத்திற்கும் இடையிலிருக்கின்ற அந்தக் கோபகன்னிகைகளைக் கண்டு தான் சொன்னதை அதிலங்கனஞ் செய்யாமல் சொன்னபடி செய்த கன்னியர்கையினால் அருள் புரிந்து வஸ்த்ரங்களையெல்லாம் மரத்தின் கிளையடியில் வைத்து ப்ரீதியுடன் புன்னகை செய்துகொண்டு அவர்களை நோக்கி இங்ஙனம் மொழிந்தான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—வ்ரதத்தை அனுஷ்டித்துக்கொண்டிருக்கிற நீங்கள் அரையில் ஆடையின்றி ஜலத்தில ஸ்நானஞ்செய்ய இழிந்தமையால் தேவதையிடத்தில் அபராதப்பட்டீர்கள். அந்தப் பாபந் தீரும் பொருட்டுத் தலையில் அஞ்சலிசெய்து நமஸ்கரித்து வஸ்த்ரங்களை வாங்கிக்கொள்வீர்களாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் தர்மம் அமைந்திருக்கும்படி இங்ஙனம் மொழிந்த வசனத்தைக் கேட்டுக் கோபகன்னிகைகள் ஒரு கையால் அல்குலை மறைத்துக்கொண்டு ஒருகையால் நமஸ்காரஞ்செய்தார்கள். பகவான் அவர்களை நோக்கி மீளவும் தர்மம் அமைந்திருக்கிற இவ்வசனத்தை மொழிந்தான்.

பகவான சொல்லுகிறான்:—எவன் தேவஶ்ரேஷ்டனாகிய அச்சுதனை ஒற்றைக்கையால் நமஸ்கரிக்கிறானோ, அவனுக்கு அவன்கையை வெட்டுவதே தண்டனையென்று வேதங்களை உணர்ந்த பெரியோர்கள் சொல்லுகிறார்கள். ஆகையால் மனுஷ்யன் ஸ்வாமியை இரண்டு கைகளாலும் நமஸ்கரிக்கவேண்டும். நீங்களும் அப்படியே இரண்டுகைகளாலும் நமஸ்கரிப்பீர்களாயின் அது எனக்கு மிகவும் ப்ரியமாயிருக்கும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் அச்சுதனால் மொழியப்பெற்ற அந்த இடைப்பெண்கள் அரையில் ஆடையின்றி ஸ்நானஞ்செய்தமை வ்ரதத்திற்குக் கேடுதியென்று நினைத்து அந்தவ்ரதம் கெடுதியில்லாமல் நிறைவேறவேண்டுமென்று விரும்பி அந்த வ்ரதத்தையும் அதைப்போன்ற மற்ற தர்மங்களையும ஸாக்ஷாத்கரிப்பவனும் அவற்றிற்கு [1]வைகுண்யத்தை விளக்கும்பாபத்தி

1. வைகுண்யம்—குணக்குறைவு.

ணின்று விடுவிப்பவனுயாகிய அந்த அச்சுதனை இரண்டு கைகளாலும் அஞ்சலி செய்து நமஸ்கரித்தார்கள். யௌவனப பருவமுடையவனும் மன இரக்கமுடையவனு மாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் அங்ஙனம் நமஸ்காரஞ் செய்த அவர்களைக்கண்டு அதனால்ஸந்தோஷம் அடைந்து அவர்களுடைய வஸ்த்ரங்களை அவர்களுக்குக் கொடுத்தான். அந்தக் கோபகன்னிகைகள் இங்ஙனம் ஸ்ரீக்ருஷ்ணனால் வஞ்சனை செய்து இரண்டு கைகளாலும் நமஸ்காரஞ் செய்யும்படி நிர்ப்பந்தித்து வெட்கத்தினின்று விடுவித்துப் பரிஹாஸஞ் செய்து பொம்மைபோல ஆட்டுவித்து வஸ்த்ரங்களையும் பறித்து இவையெல்லாம் செய்யப் பெற்றவர்களாயினும் தங்கள் அன்பிற்கிடமான அவனுடைய ஸங்கத்தினால் ஸந்தோஷம் அடைந்து தோஷங்களையெல்லாம் மறந்து அவன்மேல் சிறிதும் அஸூயைப்படாதிருந்தார்கள். பிறகு அக்குமாரிகள் தங்கள்தங்கள் வஸ்த்ரங்களை உடுத்துக்கொண்டு மிகவும் அன்பனுகிய அவனுடைய ஸஹவாஸத்தினால் அவனுக்கு உட்பட்டு அவனால் மனம் பறியுண்டு அவன்மேல் வெட்கத்துடன பரவுகின்ற கண்ணோக்க முடையவர்களாகி அவ்விடத்தினின்று போகாமல் நின்றிருந்தார்கள். ஷாட்குண்யபூர்ணனுகிய ஸ்ரீக்ருஷ்ணன் தனபாதாரவிந்தங்களின் ஸ்பர்சத்தில் (தன்னுடன்கலந்து விளையாடுவதில்) விருப்பமுற்று அவ்விருப்பம் நிறைவேறும்பொருட்டு வ்ரதத்தை அனுஷ்டித்த கோபகன்னிகைகளின் அபிப்ராயத்தை அறிந்து அபலைகளான அவர்களைக் குறித்து இங்ஙனம் மொழிந்தான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:— நல்லியற்கையுடையவர்களே! என்னுடன் கலந்து விளையாடுகையாகிற என்

பூஜையில் நீங்கள் அபிப்ராயங்கொண்டிருப்பது எனக்குத் தெரியும். அதை நான் அனுமதியுஞ் செய்தேன். அது உண்மையாகவே நிறைவேறும். என்னிடத்தில் மனப்பற்றுடைய உங்களுக்கு என்னிடத்தில் உண்டாயிருக்கும் காமம் கேவலமான விஷயபோகத்தோடு போய் முடியாது; மோக்ஷத்தையும் விளைத்தே தீரும். நன்றாகப் புழுக்கி வறுத்து இடிக்கப்பட்ட அவல்கள் விதைக்கு உபயோகப்படமாட்டாவல்லவா? அங்ஙனமே ஸம்ஸாரமாகிற விதை வீர்யமற்று மீளவும் ஸம்ஸாரமாகிற முளையை விளைக்கவல்லதன்று. பெண்களே! ஆகையால் நீங்கள் உங்கள்மனோரதம் கைகூடப்பெற்றுக் கோகுலத்திற்குப் போவீர்களாக. நல்லியற்கையுடையீர்களே! நீங்கள் என்னோடு கலந்து விளையாடுகையாகிற ப்ரயோஜனத்தை உத்தேசித்தல்லவோ காத்யாயனி பூஜையென்னும் ஆராதனத்தை அனுஷ்டித்தீர்கள். அப்படியே நீங்கள் இதோ வரப்போகிற சரத்காலராத்ரிகளில் என்னுடன்கூடி விளையாடப்போகிறீர்கள். ஆகையால் உங்கள் மனோரதம ஸித்தித்துவிட்டது. நீங்கள் இப்பொழுது கோகுலம் போய்ச் சேருவீர்களாக.

ஸ்ரீ சுகர் சொல்லுகிறார்:—பகவானால் இங்ஙனம் கட்டளையிடப்பெற்ற கோபகன்னிகைகள் தங்கள் மனோரதம் கைகூடப்பெற்று அவனுடைய பாதாரவிந்தங்களையே த்யானித்துக்கொண்டு அவனை விட்டுப்பிரியமுடியாமல் மனவருத்தத்துடன் கோகுலம் போய்ச்சேர்ந்தார்கள். அப்பால் ஒருகாலத்தில் ஸ்ரீக்ருஷ்ணன் கோபாலர்களால் சூழப்பட்டுத் தமையனான பலராமனுடன் கூடிப் பசுக்களை மேய்த்துக்கொண்டே ப்ருந்தாவனத்தினின்று வெகுதூரஞ்சென்றான். அப்போது க்ரீஷ்மருது வந்தது. அதனால் வெயில் மிகவும் கொடிதாகக் காய்ந்

துகொண்டிருந்தது. அப்படிப்பட்ட அந்த வெயிலில் பசுக்களை மேய்த்துக்கொண்டுபோகின்ற நந்தகுமாரன் தமது நிழல்களால் தனக்குக் குடைபோன்றிருக்கின்ற வ்ருக்ஷங்களைப் பார்த்துக் கோபாலர்களைக் குறித்து மேல்வருமாறு கூறினான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:— அட! ஸ்தோகக்ருஷ்ண! அம்சு! ஸ்ரீதாமா! ஸுபலா! அர்ஜுனு! விசாலா! ருஷபா! தேஜஸ்வி! தேவப்ரஸ்தா! வரூதபா! மிகுந்த பாக்யமுடைய இந்த வ்ருக்ஷங்களைக் கண்டீர்களா? இவை பிறர்க்காகவே பிழைத்திருக்கின்றன. இவற்றிற்குத் தங்களுக்கென்று ஒரு ப்ரயோஜனமும் இல்லையல்லவா? இவை காற்று மழை வெயில் பனி இவற்றையெல்லாம் தாங்கள் பொறுத்துக்கொண்டு நமக்கு அவற்றையெல்லாம் தடுத்து ஸுகங்கொடுக்கின்றன. ஆ! ஸமஸ்த ப்ராணிகளுக்கும் ஜீவனத்தைக் கொடுத்து உபகரிக்கின்ற இவற்றின் ஜன்மம் மேலானது. ஸாதுக்களிடஞ் சென்ற யாசகர்கள்போல இவற்றினிடம் வந்தயாசகர்கள் ஒருகாலும் தங்கள் ப்ரயோஜனம் கைகூடாமல் திரும்பிப் போகமாட்டார்களல்லவா? ஸாதுக்களைப் போல இவை தங்களிடத்தில் உள்ளவற்றை வேண்டினவர்களுக்கு இல்லையென்று சொல்லிப் போகவிடமாட்டாவல்லவா? தங்கள் ஸொத்தையெல்லாம் பறித்துக் கொண்டு போயினும் ஏன இப்படி செய்கிறீர்களென்று கேட்கவுங்கூட மாட்டாவல்லவா? இலை பூ காய் பழம் நிழல் வேர் பட்டை கட்டை வாஸனை சாறு நீறு தணல் தளிர் முளை இவை முதலியவற்றால் இவை ப்ராணிகளின விருப்பங்களை நிறைவேற்றுகின்றனவல்லவா? விசித்ரமான பல தேஹங்களையுடைய ப்ராணிகள் ப்ராணன் பணம் புத்தி வாக்கு இவற்றினால் தம்மைப் போலவே

விசித்திரமான பல தேஹங்களையுடைய மற்ற ப்ராணிகளுக்கு நன்மையைச் செய்வார்களாயின், இவ்வளவே அவர்கள் ஜன்மம் பெற்றதற்குப் பயன். ப்ராணுதிகளால் பிறர்க்கு உபகரிப்பார்களாயின அப்பொழுதே அவர்கள் ஜன்மம் ஸபலமாமன்றி மற்றப்படி ஸபலமாகாது.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஸ்ரீக்ருஷ்ணன் இங்ஙனம் புகழ்ந்துகொண்டே தளிர் பூங்கொத்து காய் பழம் இலை இவற்றின் ஸமூஹங்களால் கிளைகள் வணங்கித் தழைந்திருக்கின்ற வ்ருக்ஷங்களின நடுவில நுழைந்து யமுனைக்குச் சென்றான. மன்னவனே! அங்குச் சென்று கோபாலர்கள் அனைவரும் குளிர்ந்து தெளிந்து ருசியுள்ளதுமான அந்த யமுனையின ஜலத்தைப் பசுக்களுக்குக் காட்டிப் பிறகு தாங்களும் ருசியுள்ள அந்த ஜலத்தைப் பானஞ்செய்தார்கள். ராஜனே! பிறகு அந்த இடையர்கள் யமுனைக்கரையிலுள்ள வனத்தில் பசுக்களை மேய்த்துக்கொண்டிருக்கையில் பசியினால் பீடிக்கப்பட்டு ஸ்ரீக்ருஷ்ணராமர்களிடம் வந்து இங்ஙனம மொழிந்தார்கள். இருபத்திரண்டாவது அத்யாயம் முற்றிற்று.

{ ஸ்ரீக்ருஷ்ணன் கோபாலர்களைக் கொண்டு அன்னம் வேண்டுகிற வ்யாஜத்தினால் ப்ரஹ்மணபத்னிகளை அனுக்ரஹித்து யாகத்தில் தீக்ஷித்துக்கொண்டிருக்கிற ப்ராஹ்மணர்களுக்கு அனுதாபத்தை விளைத்தல். }

கோபர்கள் சொல்லுகிறார்கள்:—ராமா! ராமா! மிகுந்த வீர்யமுடையவனே! க்ருஷ்ணா! துஷ்டர்களை அழிக்குந்தன்மையனே! இந்தப் பசி எங்களை வருத்துகின்றது. அதை அடக்கும் வழி தேடுவீர்களாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—தேவகிக்குப் பிள்ளையாகப் பிறந்து மனுஷ்யனாய் நடனஞ்செய்துகொண்டிருப்பினும் ஷாட்குண்யபூர்ணனாகிய தன்னிலைமை மேன்மேலும் விளங்கப்பெற்றிருக்கின்ற ஸ்ரீக்ருஷ்ணன் இங்ஙனம் கோபாலர்களால் விண்ணப்பஞ்செய்யப்பெற்றுத் தன்னிடத்தில் மிகுந்த பக்தியுடைய ப்ராஹ்மணபத்னிகளை அனுக்ரஹிக்க முயன்று அந்தக் கோபாலர்களை நோக்கி இங்ஙனம் மொழிந்தான். வேதங்களை ஓதி உணர்ந்து உபதேசிக்குந் திறமையுடையவர்களான ப்ராஹ்மணர்கள் ஸ்வர்க்கத்தை விரும்பித் தேவதைகளின ஆராதனரூபமான ஆங்கிரஸமென்னும் ஸத்ரயாகத்தை அனுஷ்டிக்கிறார்கள். அவ்விடம் போவீர்களாக. கோபர்களே! அங்குப் போய் மஹானுபாவனும் நம்மண்ணனுமாகிய பலராமனுடைய பெயரையும் என்னுடைய பெயரையும் சொல்லி எங்களால் அனுபபபட்டோமென்பதை அறிவித்து அனனம் வேண்டுவீர்களாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் பகவானால் ஆஜ்ஞை இடப்பெற்ற அநதக் கோபாலாகள் அப்படியே சென்று இரண்டுகைகளையும குவித்துப் பூமியில் தண்டம்போல் விழுந்து ப்ராஹ்மணர்களை நமஸ்கரித்து அன்னம் வேண்டினார்கள்.

கோபாலர்கள் சொல்லுகிறார்கள் —ஓ ப்ராஹ்மணர்களே! நாங்கள் சொல்லுவதைக் கேட்பீர்களாக. நாங்கள் ஸ்ரீக்ருஷ்ணனுடைய கட்டளைப்படி நடக்குந்தன்மையரான கோபாலர்கள். உங்களுக்கு க்ஷேமம் உண்டாகுக. நாங்கள் இப்பொழுது அந்த ஸ்ரீக்ருஷ்ணனாலும் அவனுடைய தமையனாகிய பலராமனாலும் அனுப்பப்பட்டு வந்திருக்கின்றோம். அதை அறிவீர்களாக. இதோ

ஸமீபத்திலேயே பசுக்களை மேய்த்துக்கொண்டிருக்கிற அந்த ராமக்ருஷ்ணர்கள் பசியினால் பீடிக்கப்பட்டு உங்களிடத்தினின்று அன்னத்தை விரும்புகிறார்கள். ப்ராஹ்மணர்களே! தர்மத்தை உணர்ந்தவர்களில் சிறந்தவர்களே! இந்தவிஷயத்தில் உங்களுக்கு ஶ்ரத்தை இருக்குமாயின், வேண்டுகிற அந்த ராமக்ருஷ்ணர்களுக்கு அன்னங் கொடுப்பீர்களாக. தீக்ஷிதனுடைய அன்னத்தைப் புசிக்கலாகாதேயென்று சங்கிக்கவேண்டாம். தீக்ஷை முதற்கொண்டு பசுஹிம்ஸைக்குமுன்வரையிலும்ஸௌத்ராமணியிலுந்தான் யஜமானனுடைய அன்னத்தைப் புசித்தால்தோஷமேயொழியப் பசுஹிம்ஸைக்கு மேலும் ஸௌத்ராமணி யொழிந்த மற்றதிலும் யஜமானனுடைய அன்னத்தைப் பசியுள்ளவன் புசிப்பானாயின் தோஷம் கிடையாது. ஆகையால் எங்களுக்கு அன்னங் கொடுப்பீர்களாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அற்பமான பலனை ஆசைப்பட்டுப் பெரிய கார்யஞ் செய்பவர்களும் மூடர்களும் தங்களை வ்ருத்தர்களாக நினைத்துக்கொண்டிருப்பவர்களுமாகிய அந்த ப்ராஹ்மணர்கள் மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன கோபாலர்கள்மூலமாய் அன்னம் வேண்டின வேண்டுகோளைக் கேட்டும கேளாதவர்கள் போலவே இருந்துவிட்டார்கள். தேசம் காலம் பலவகையான த்ரவ்யம் மந்த்ரம் தந்த்ரம் ருத்விக்குகள் அக்னிகள் தேவதை யஜமானன யாகம் தர்மம் ஆகிய இவையெல்லாம் எவனுடைய உருவங்களோ அப்படிப்பட்டவனும் ஒன்றான பரப்ராஹ்மமும் ஷாட்குண்யபூர்ணனும் இந்த்ரியங்களால் விளையும் அறிவுகளுக்கு விஷயமாகாதவனுமாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணனைக் கர்மவிசாரத்திற்குரிய அற்பமதியுடையவர்களும் மரணம் அடையுந்தன்மையதான

தேஹத்தை ஆத்மாவென்று ப்ரமித்திருப்பவர்களுமா மாகிய அவ்வந்தணர்கள் ஸாதாரணமான ஒருமனுஷ்ய னெனவே நினைத்தார்கள். சத்ருக்களை அழிக்குந்திறமை யுடைய மஹாராஜனே! அவ்வந்தணர்கள் அன்னம் கொடுக்கிறோமென்றாவது கொடுக்கமாட்டோமென்றா வது ஒன்றும் பேசாதிருக்கையில கோபர்கள் அன்னங் கிடைக்குமென்கிறஆசையற்று ஸ்ரீக்ருஷ்ணராமர்களிடம் திரும்பி வந்து அதை அப்படியே சொன்னார்கள். ஜகத் திற்கெல்லாம் ஈஸ்வரனும் மஹானுபாவனுமாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணபகவான அதைக் கேட்டுச் சிரித்துக் 'கார் யம் கைகூடவேண்டுமென்று விரும்புகிறவர்கள் ப்ரயத் னம் வீணானதைப் பற்றி வெறுக்கலாகாது. யாசிக்கப் போனால் அவமதி வருவது ஸித்தமே' என்கிற லோக ந்யாயத்தை அறிவிப்பவன்போல் மீளவுங் கோபர்களைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தான.

ஸ்ரீபகவான சொல்லுகிறான்:—நான் தமையனாகிய பலராமனுடன் வந்திருப்பதை ப்ராஹ்மணபத்னிகளுக்கு அறிவியுங்கள். என்னிடத்தில் மிகுந்த நட்புடையவர்க ளும் புத்தியினால் என்னிடத்தில் வாஸஞ்செய்பவர்களு மாகிய அவர்கள் உங்களுக்கு வேண்டியவளவு அன்னம் கொடுப்பார்கள்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— அந்தக் கோபர்கள் அங் ஙனமே சென்று பத்னீசாலையில் நன்கு அலங்கரித்துக் கொண்டு உட்கார்ந்திருக்கின்ற ப்ராஹ்மணபத்னிகளைக் கண்டு நமஸ்கரித்து வணக்கத்துடன இங்ஙனம மொழிந் தார்கள்.

கோபர்கள் சொல்லுகிறார்கள்:—ப்ராஹ்மணபத்னி களாகிய உங்களுக்கு நமஸ்காரம். நாங்கள் சொல்லும்

வார்த்தையைக் கேட்பீர்களாக. இவ்விடத்திற்கு அருகாமையில் மாடுமேய்த்துக்கொண்டிருக்கிற ஸ்ரீக்ருஷ்ணனால் அனுப்பப்பட்டு நாங்கள் இவ்விடம் வந்திருக்கிறோம். பலராமனோடுகூடிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன கோபாலர்களுடன் பசுக்களை மேய்த்துக்கொண்டு வெகுதூரம் வந்தான. பசியினால் வருந்துகின்ற அவனுக்கும் அவனுடன் வந்தவர்களுக்கும் அன்னம் கொடுப்பீர்களாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய கதைகளைக் கேட்டதனால் மனம பறியுண்டு அவனைப் பார்க்கவேண்டுமென்று எப்பொழுதும் போராவலுற்றிருக்கிற அந்த ப்ராஹ்மணபத்னிகள் அவன் வநதிருபபதாகக் கேட்டுப் புறப்பட்டுப்போவதில் பரபரபபுற்றாகள். அவர்கள பக்ஷயம் போஜ்யம லேஹ்யம் பேயமென்று நானகு வகைப்படடிருபபதும பலகுணங்கள் அமைந்திருப்பதுமாகிய அன்னத்தைப் பாத்ரங்களில் எடுத்துக்கொண்டு ஆறுகள் ஸமுத்ரத்தைக் குறித்துப் போவது போல எல்லோரும் தங்கள் அனபனாகிய ஸ்ரீக்ருஷ்ணனைக் குறித்துச் சென்றார்கள். அவாகள் வெகுகாலமாய் ஸ்ரீக்ருஷ்ணனுடைய குணங்களைக் கேட்டு அவனிடத்தில் நிலைநின்ற மனமுடையவர்களாகையால் கணவன் தந்தை உடன் பிறந்தவன மற்றுமுள்ள பந்துக்கள் இவர்களால தடுக்கப்பட்டும அவர்களைப் பொருள் செய்யாமல் புறப்பட்டுப் போனார்கள். அப்பெண்மணிகள் யமுனைக்கரையில் அசோக வ்ருக்ஷங்களின் புதிய தளிர்களால அலங்கரிக்கப்பட்டதுபோன்றிருக்கிற உபவனத்தில் கோபர்களால் சூழப்பட்டுத் தமையனும் தானுமாய் உலாவிக்கொண்டிருப்பவனும் கறுத்துப் பொன்னிறமான பீதாம்பரம்உடுத்துக்காட்டிலுள்ள புஷ்பங்களால் தொடுத்த பூமாலை மயில்தோகை கைரிகதாதுக்கள்

தளிர்கள் இவற்றால் அலங்கரித்துக்கொண்டு நடனைப்போல் வேஷம் பூண்டிருப்பவனும் தன்னைத்தொடர்ந்திருக்கின்ற ஒரு கோபகுமாரனுடைய தோளின்மேல் ஒரு கையை வைத்துக்கொண்டு மற்றொரு கையினால் தாமரைமலரைச் சுழற்றிக்கொண்டிருப்பவனும் காதுகளில் செய்தல்புஷ்பங்களைத் தரித்திருப்பவனும் கபோலங்களில் முனனெற்றிமயிர்கள் தொங்கப்பெற்று புன்னகையினால் விளங்குகின்ற தாமரைமலரை நிகர்த்த முகமுடையவனுமாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணனைக் கண்டார்கள். ஸ்ரீக்ருஷ்ணனுடைய மேன்மைகளைப் பலகாலும் கேட்டிருந்தமையால் காதுக்கு ஆபரணங்கள்போன்ற அம்மேன்மைகளால் அவனிடத்தில் ஆழ்ந்த மனமுடைய அந்த ப்ராஹ்மணபத்னிகள் அவனை அப்பொழுது கண்களால் மனத்தில் தேக்கிக்கொண்டு பண்டிதர்கள் பரமாத்மாவை தயானத்தினால் ஹ்ருதயத்தில் ஸாக்ஷாத்கரித்து வருத்தங்களைத் துறப்பதுபோல, அவனை நெடுநேரம் மனத்தினால் அணைத்து வருத்தங்களைத் துறந்தார்கள். ஸர்வஜ்ஞனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் எல்லா ஆசைகளையும் துறந்து தன்னைப் பார்க்கவேண்டுமெனனும் விருப்பத்தினால் வந்திருக்கின்ற அந்த ப்ராஹ்மண பத்னிகளைக் கண்டு அவர்கள் கருத்தையும் அறிந்து சிரித்தமுகமுடையவனாகி இங்ஙனம் மொழிந்தான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—மிகுந்த பாக்யவதிகளே! உங்களுக்கு நல்வரவா? உட்காருங்கள். உங்களுக்கு நான் என்ன செய்யவேண்டும்? என்னால் ஆகவேண்டிய கார்யம் ஏதேனும் உளதாயின அதைச் சொல்வீர்களாக. அதை நான் அவஶ்யம் செய்து முடிக்கிறேன். நீங்கள் என்னைப் பார்க்கவேண்டுமென்னும் விருப்பத்தினால் வந்தீர்களென்பது உங்களுக்கு உரியதே. ஏனென்றால்,

ப்ராஹ்மணபத்னிகளே! ஹிதாஹிதங்களைப் பற்றின விவேகமுடையவர்களும் தங்கள் ப்ரயோஜனத்தை அறிந்தவர்களுமாகிய ஜனங்கள் தன்னைக்காட்டிலும் அன்பிற்கிடமான என்னிடத்திலேயே ஒரு பலனையும் விரும்பாமல் என்றும மாறாத பக்தியைச் செய்கிறார்கள். நீங்களும அப்படியே என்னிடத்தில் பக்தி உண்டாகப் பெற்றவர்களாகையால், நீங்கள் எனனைப் பார்க்கவிருமபி வநதது யுக்தமே. ப்ராணன் புத்தி மனம் ஜீவன் தேஹம் பெண்டிர் பிள்ளை பணம் இவை முதலியவையெல்லாம் எவனுடைய ஸம்பந்தத்தினால் ப்ரீதிக்கிடமாகின்றனவோ; அப்படிப்பட்ட எனனைக்காட்டிலும் மற்ற எவன்தான் அனபனாவான்? நீங்கள எதை உத்தேசித்து வந்தீர்களோ, அநத ப்ரயோஜனம் உங்களுக்குக் கைகூடிற்றாகையால நீங்கள் மீண்டு யஜ்ஞபூமிக்குப் போவீர்களாக. இல்லறத்தில் ஊக்கமுடைய அந்தணர்களாகிய உங்கள் பர்த்தாககள் உங்களைக் கொண்டே யாகத்தை முடிக்க வேண்டியவர்களாயிருக்கிறார்கள. ஆகையால் நீங்கள் போய்ச் சேருவீர்களாக.

ப்ராஹ்மணபத்னிகள் சொல்லுகிறார்கள்:—ப்ரபூ! நீ இப்படி மனஇரக்கமில்லாமல் கொடுமையாகச் சொல்லுவது யுக்தமன்று. 'என்னிடத்தில் பக்தியுடையவர்கள எனக்கு மிகவும அனபிற்கிடமாயிருப்பார்கள்' என்றும், 'என்னுடைய பக்தன் எப்பொழுதும் அழியமாட்டான' என்றும் 'எனனை அடைநதவர்கள் எனனை விட்டு மீள மாட்டார்கள்' என்றும் நீ மொழிந்த வசனங்களை உண்மை செயவாயாக. நாங்களோவென்றால ஸமஸ்தபந்துக்களையும கடந்து உன்காலால் உதைத்துத் தள்ளப்பட்ட துளஸிமாலையைத் தலைமயிர்களால் தரிககவிரும்பி உன் பாதமூலத்திற்கு வந்தோம். எங்கள்கணவர்களா

வது தாய்தந்தைகளாவது பிள்ளைகளாவது உடன்பிறந்தவர்களாவது மற்ற பந்துக்களாவது நண்பர்களாவது எங்களை அங்கீகரிக்கமாட்டார்கள். மற்றவர்கள் எங்ஙனம் அங்கீகரிக்கப்போகிறார்கள்? சத்ருக்களை அழிப்பவனே! ஆகையால் உன்பாதாரவிந்தங்களில் ஆத்மஸமர்ப்பணஞ் செய்திருக்கிற எங்களுக்கு வேறுகதி கிடையாது. ஆகையால் நீயே எங்கள் விருப்பத்தை நிறைவேற்றுவாயாக.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—உங்கள் பர்த்தாக்களாவது தாய்தந்தைகள் ப்ராதாக்கள் பிள்ளைகள் முதலியவர்களாவது மற்ற உலகத்தவர்களாவது உங்கள்மேல் குற்றங்கொள்ளமாட்டார்கள். என்னை முதலாகவுடைய தேவதைகளுங்கூட உங்கள்மேல் குற்றங்கொள்ளமாட்டார்கள். குற்றங்கொள்ளாமைமாத்ரமேயன்றி உங்கள்செயலைப் புகழவும் புகழ்வார்கள். ப்ராணிகள் தேஹம் படைத்தது சப்தாதிவிஷயஸுகங்களை அனுபவிப்பதற்காகவன்று; என்னிடத்தில் பக்திசெய்வதற்காகவே. என்னிடத்தில் பக்தி உண்டாகப்பெறுகையே ஜன்மம் படைத்ததற்குப் பலனன்றி மற்றொன்றுமன்று. மற்றும், ப்ராணிகள் என்னோடு கலந்திருப்பது தற்காலத்தில் ப்ரீதியை விளைக்குமேயன்றிக் காலாந்தரத்திலும் தொடர்ந்து நிலைநின்றிருக்கும்படியான ப்ரீதியை விளைக்காது. பிரிந்திருப்பது காலாந்தரத்திலும் ப்ரீதியைத் தொடர்ந்துவருமாறு வளர்க்கும். ஆகையால் நீங்கள் கண்மறைவிலும் என்னிடத்தில் மனத்தை நிலைநிறுத்திக்கொண்டிருப்பீர்களாயின் சீக்ரத்தில் என்னை அடைவீர்கள். (என்னைக் காதால் கேட்பது கண்ணால் காண்பது மனத்தினால் த்யானிப்பது வாயால் சொல்லுவது இவைகளால் என்னிடத்தில் எவ்வளவு ப்ரீதி ,



2218. ஸ்ரீக்ருஷ்ணன் ப்ராஹ்மண பத்நிகளை அநுக்ரஹித்தல்.

டாகுமோ, அவ்வளவு ப்ரீதி என்னோடு கலந்திருப்பதனால் உண்டாகாது. ஆகையால் நீங்கள் உங்கள் க்ருஹத்திற்குத் திரும்பிப்போவீர்களாக).

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—பகவானால் இங்ஙனம் மொழியப்பட்ட அந்த ப்ராஹ்மணபத்னிகள் மீண்டு யஜ்ஞபூமிக்குப் போனார்கள். அந்த ப்ராஹ்மணர்களும் தங்கள் பார்யைகளிடத்தில் அஸூயையின்றி அவர்களைக்கொண்டு யாகத்தை முடித்தார்கள். அந்த ப்ராஹ்மணபத்னிகளில் ஒருத்தி தன்பர்த்தாவினால் தடுக்கப்பட்டுத் தான் கேட்டபடி பகவானை மனத்தினால் அணைத்துப் பூர்வஜன்மகர்மத்தினால் ஏற்பட்டதாகிய சரீரத்தைத் துறந்தாள். ப்ரபுவும் ஷாட்குண்யபூர்ணனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணனும் நானகுவகையான அந்த அன்னத்தைக்கொண்டே கோபாலர்களையும் புசிப்பித்துத் தானும் புசித்தான். லீலையினால் மானிடஉருவங்கொண்ட ஸ்ரீக்ருஷ்ணன மனுஷ்யலோகத்தின் தன்மையை அனுஸரித்து உருவம் வாக்கு செயல் இவைகளால் கோக்களையும் கோபர்களையும் கோபிமார்களையும் களிப்புறச்செய்துகொண்டு அவற்றின இடையில் க்ரீடித்துக்கொண்டிருந்தான். பிறகு ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் அபராதப்பட்ட அவ்வந்தணர்கள் மனுஷ்யலோகத்தை அனுஸரித்திருக்கின்ற ஒன்றான ஸர்வேஶ்வரர்களான ராமக்ருஷ்ணர்களுடைய வேண்டுகோளை வீண்செய்தோமேயென்று அதை நினைத்துக்கொண்டு பரிதபித்தார்கள். ஸ்த்ரீகளுக்கு ஸ்ரீ க்ருஷ்ணனிடத்தில் லோகவிலக்ஷணமான பக்தி உண்டாயிருப்பதையும் தங்களுக்கு அது நேராதிருப்பதையும் பார்த்துப் பரிதபித்துத் தங்களை நிந்தித்தார்கள். 'பூப்புரிபூட்டின நம் ஜன்மத்தைச் சுடவேண்டும். நம் வ்ருத்தத்தையும் சுடவேண்டும். நம் வ்ரதத்

யும் சுடவேண்டும். பலவற்றையும் ஆராய்ந்தறிந்த நம் மறிவையும் சுடவேண்டும். நங்குலத்தையும் சுடவேண்டும். யஜ்ஞாதி கர்மங்களில் நமக்குள்ள திறமையையும் சுடவேண்டும். ஏனென்றால், இவையெல்லாம் அமைந்திருந்தும் நாம். பகவானிடத்தில் விமுகர்களாயிருக்கின்றோமல்லவா? ப்ராணனில்லாத தேஹத்தைச் சுடவேண்டுமல்லவா? பிறவி முதலியவற்றிற்குப் பக்தியல்லவோ ப்ராணன். பக்தியில்லாத இவற்றைச் சுடவேண்டியது யுக்தமே. பகவானுடைய மாயை யோகிகளுக்குங்கூட மதிமயக்கத்தை விளைக்குந்தன்மையுடையது. இது நிச்சயம். ஏனென்றால், நாம் ப்ராஹ்மணாகள்; அதிலும் ப்ராணிகளுக்கு ஹிதோபதேசஞ் செய்யுங்குருக்களாயிருக்கின்றோம். ஆயினும் ஸ்வப்ரயோஜனத்தில் மதிமயங்குகிறோமல்லவா? ஆ! என்ன ஆச்சர்யம்! ஜகத்திற்கெல்லாம் குருவாகிய ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் ஸ்த்ரீகளுக்குங்கூடப் பக்தி உண்டாயிருக்கின்றது; பாருங்கள். இவர்களுக்கு அந்தப்பக்தி ம்ருத்யுவென்னும் பெயருடைய ஸம்ஸாரமாகிற பாசத்தை அறுத்துவிட்டது. இவர்களுக்கு உபநயனம் முதலிய ப்ராஹ்மணஸம்ஸ்காரமும் கிடையாது. குருகுலவாஸமும் கிடையாது. தவமும் கிடையாது. தேஹத்தைக்காட்டிலும் விலக்ஷணனான ஆத்மாவைப் பற்றின விசாரமும் கிடையாது. ஸ்னானாதிகளால் விளையும் சுத்தியும் கிடையாது. சுபமான கர்மங்களும் கிடையாது. ஆயினும் யோகேஶ்வரர்களுக்கும் ஈஶ்வரனும் உத்தமஶ்லோகனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் திடமான பக்தி உண்டாயிருக்கின்றது. நாம ஸம்ஸ்காரம் முதலியவற்றெல்லாம் அமைந்திருப்பினும், நமக்கு ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் சிறிதும் பக்தி உண்டாகவில்லை. நாம் க்ருஹஸ்தாஶ்ரமவ்யாபாரங்களால் மன ஆக்கமற்று

நம்முடைய ஹிதத்தில் மதிமயங்கியிருக்கிறோம். ஸத் புருஷர்களுக்குக் கதியாகிய ஸ்ரீக்ருஷ்ணன் கோபர் களின வாக்யங்களால் அத்தகைய நமக்குத் தன் ஸ்வரூ பத்தை நினைவுமூட்டினான். ஆ! இது நிச்சயம். இல் லாத பக்ஷத்தில் அவாப்த ஸமஸ்தகாமனும் கைவல்யம் முதலிய புருஷார்த்தங்களை யெல்லாம் நிறைவேற்றிக் கொடுப்பவனும் ஸர்வநியாமகனுமாகிய அந்த ஸ்ரீக்ரு ஷ்ணனுக்குத் தன் நியமனத்திற்கு உட்பட்டவர்களாகிய நம்மால் என்ன ப்ரயோஜனம் கைகூடவேண்டும்? இது மனுஷ்யர்களின் நன்மையை அனுஸரித்துச் செய்த கார்யமேயன்றி உண்மையன்று. ஸ்ரீமஹாலக்ஷ்மி மற்றவர் களையெல்லாம் துறந்து இவனுடைய பாதாரவிந்தங்களை ஸ்பர்சிக்க வேண்டுமென்னும் விருப்பத்தினால் நிலையற்ற வளென்கிற தன்தோஷத்தையும் போக்கிக்கொண்டு ஸர்வகாலமும் இவனைப் பணிகின்றாள். அவன் நிறை வாளனென்பதைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? இத் தகையனாகிய அவன் வேண்டினது, தன்னுடைய அவ தார வ்ருத்தாந்தத்தைக் கேளாதவர்களுக்குத் தன் மஹிமை தெரியாதிருக்கும்படி அதை மறைப்பதற்காக வேயன்றி வேறில்லை. எவன் தேசம காலம் சருபுரோ டாசம் முதலிய பலவகையான வஸ்துக்கள் மந்த்ரம் தந்த்ரம் ருத்விக்குகள் அக்னிகள் தேவதை யஜமானன் யாகம் யாகத்தினால் விளையும் தர்மம் ஆகிய இவையெல் லாம தானேயாயிருக்கின்றானோ, அத்தகையனும் யோ கேஶ்வரர்களுக்கும் ஈஶ்வரனும் ஷாட்குண்யபூர்ணனு மாகிய ஸாக்ஷாத் விஷ்ணுவே யாதவர்களினிடையில் வந் தவதரித்திருக்கிறானென்று நாம் கேள்விப்பட்டிருந்தும் மூடர்களாகையால் அறியவில்லை. ஆ! நாம் மிகுந்த பாக்யசாலிகள். ஏனென்றால் நமக்கு இப்படிப்பட்ட

பெண்டிர்கள் சேர்ந்தார்களல்லவா! நமக்கு இவர்களுடைய பக்தியினாலல்லவோ ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் மாறாத மதி உண்டாயிற்று. நாம் எவனுடைய மாயையினால் மதிமயங்கிக் கர்மமார்க்கங்களில் சுழன்றுகொண்டிருக்கிறோமோ, அத்தகையனும் ஷாட்குண்யபூர்ணனும் எங்கும் தடைபடாத மதியுடையவனுமாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணனுக்கு நமஸ்காரம். தன் மாயையினால் மதிமயக்கித் தன் மஹிமையை அறியாத நம்முடைய அபராதத்தை அந்த ஆதிபுருஷன பொறுத்தருள்வானாக' என்று தமக்குள் நினைத்து வருந்தினார்கள். இங்ஙனம் ஸ்ரீ க்ருஷ்ணனிடத்தில் அபராதப்பட்ட அவ்வந்தணர்கள் தம்முடைய அபராதத்தை நினைத்து ஸ்ரீ க்ருஷ்ணனை நேரிலபோய்ப் பார்க்கவேண்டுமென்னும் விருப்பமுடையவர்களாயினும் கம்ஸனிடத்தில பயந்து தங்கள் ஸ்தானத்தினின்று அசையாமலே இருந்துவிட்டார்கள்.
இருபத்து மூன்றாவது அத்யாயம் முற்றிற்று.

ஸ்ரீ க்ருஷ்ணன் இந்த்ரயாகத்தைத் தடுத்துக் கோவர்த்தன பர்வதத்திற்குப் பூஜை செய்யும்படி நியமித்தல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—பலராமனுடன் அந்த ப்ருந்தாவனத்திலேயே வஸித்துக்கொண்டிருக்கிற ஸ்ரீக்ருஷ்ணபகவான இந்த்ரயாகத்திற்காக முயற்சி செய்கின்ற கோபாலர்களைக் கண்டான். எல்லார்க்கும் அந்தராத்மாவாயிருப்பவனும் ஸர்வஜ்ஞனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் அவர்கள்செய்யும் முயற்சி இன்னதற்காகவென்பதை அறிந்தவனாயினும் அறியாதவனபோல் வணக்கத்துடன் நந்தன் முதலிய வ்ருத்தர்களைப் பார்த்து இங்ஙனம்

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—தந்தையே! உங்களுக்கு இப்பொழுது என்ன பரபரப்பு உண்டாயிருக்கின்றது? இதை எனக்குச் சொல்வீர்களாக. இது யாகமாயின் இதற்கு என்னபலன்? இது யாரை உத்தேசித்தது? இதற்கு ஸாதனம யாது? தந்தையே! எனக்கு இதைக் கேட்கவேண்டுமென்று பெரியவிருப்பம் உண்டாயிருக்கின்றது. ஆகையால் இதை எனக்குச் சொல்வாயாக. எல்லா ஆத்மாக்களையும் தங்களோடு துல்யமாகப் பார்க்குந் தன்மையுடைய பெரியோர்களுக்கு மறைத்துவைக்கும்படியான கார்யம் எதுவுமே இராதல்லவா? தன்தேஹத்திலும் பிறர்தேஹங்களிலும் ஆத்மாவென்னும ப்ரமமின்றித் தேஹாத்மாக்களின் ஸ்வரூபத்தை உள்ளபடி அறிந்தவர்களும சத்ரு மித்ரன் உதாஸீனன் என்னும் பேதமில்லாதவர்களுமான பெரியோர்களுக்கு எதுதான் மறைக்கத்தக்கது? எதுவுமேயன்று. சத்ரு மித்ரன் என்னும் பேதபுத்தியுள்ளவர்களுக்கும் சத்ருவைப்போல உதாஸீனனும் துறக்கத்தகுந்தவனே. ஸ்னேஹிதனேவென்றால் தன்னைப்போலவே பார்க்கத்தகுந்தவனென்று சொல்லுகிறார்கள். ஆகையால் ஸ்னேஹிதனாகிய நான் ரஹஸ்யத்தையும் கேட்கத்தகுந்தவனே. இவ்வுலகத்தில் அறிவுள்ள ஜனங்கள் கார்யங்களை நண்பர்களுடன் அடிக்கடி கலந்தாலோசித்தே நடத்துகிறார்கள். நண்பர்களுடன் கலந்தாராய்ந்தறிந்து செய்பவர்களுக்குக் கார்யம் ஸித்திப்பது போல அவர்களுடன் கலந்தாராயாமல் செய்கிறவனுக்குக் கார்யம் ஸித்திக்காது. ஆகையால நண்பர்களுடன் கலந்து சாஸ்த்ரவிதியின்படி ஆராய்ந்தறிந்துகொண்டு செய்கிறீர்களா? அல்லது உலக வழக்கத்தின்படி நண்மூடத்தனமாகவே செய்கிறீர்களா? இதைக் கேட்கிற எனக்கு நன்றாகச் சொல்லவேண்டும்.

நந்தகோபன் சொல்லுகிறான்:—மஹானுபாவனாகிய இந்த்ரன் நமக்கு மழைபெய்யும் தேவதை. மேகங்கள் அவ்விந்த்ரனுக்குச் சரீரம்போன்றவை. அம்மேகங்கள் பூதங்களுக்கு ப்ராணாதாரமாயிருப்பதும் அவற்றிற்குப் புஷ்டியை விளைப்பதுமாகிய ஜலத்தைப் பெய்கின்றன. அப்பா! மேகங்களுக்கு ப்ரபுவும் நியாமகனுமாகிய அவ்விந்த்ரனை அவன் பெய்த ஜலத்தினால் விளைகின்ற பல வகையான வஸ்துக்களைக் கொண்டு யாகங்களால் நாமும் மற்றவர்களும் ஆராதிப்பது வழக்கம். இங்ஙனம் தர்மம் அர்த்தம் காமம் என்கிற பலன்கள் கைகூடும் பொருட்டு அவ்விந்த்ரனை ஆராதித்து அந்த யாகத்தில் மிகுந்த வஸ்துக்களைக் கொண்டு ஜீவிக்கிறார்கள். ப்ராணிகளுக்குத் தர்ம அர்த்த காமங்களை விளைப்பவர்களுக்குள் பர்ஜன்யனென்கிற இந்த்ரனே மழை முதலியவற்றின் மூலமாய் பலன்களைக் கைகூடுவிக்கிறான். பெரியோர்கள் பரம்பரையாக அனுஷ்டித்துக்கொண்டு வருகிற இந்தத் தர்மத்தை எவன் காமத்தினாலாவது லோபத்தினாலாவது பயத்தினாலாவது த்வேஷத்தினாலாவது அனுஷ்டிக்காமல் துறக்கிறானோ, அவன் ஸுகத்தை அடையமாட்டான்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஸ்ரீக்ருஷ்ணன் நந்தகோபனும் மற்றகோபாலர்களும் இங்ஙனம் சொல்லுகிற சொல்லைக்கேட்டு இந்த்ரனுக்குக் கோபத்தை விளைத்து அதன் மூலமாய் அவன் கர்வத்தை அழிக்கவிரும்பித் தந்தையாகிய நந்தகோபனைப் பார்த்து மொழிந்தான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—ஸமஸ்த ஜந்துவும் தன் கர்மத்தினால் பிறக்கின்றது; கர்மத்தினாலேயே அழிகின்றது. இஹலோகஸுகம் துக்கம் பயம் பரலோகஸுகம் இவற்றையும் கர்மத்தினாலேயே அடைகின்றது.

கர்மஞ் செய்கிறவனுக்குப் பலன் கொடுக்குந் தேவதையாகிய ஈஸ்வரன் உளனாயின், அவனும் தன்னுடைய ஆராதன ரூபமான கர்மங்களைச் செய்கிறவர்களுக்கே பலன்கொடுப்பானன்றி அத்தகைய கர்மங்கள் செய்யாதவனுக்கு அவன் பலன் கொடுக்கவல்லனாகமாட்டான். ஆகையால் தங்கள் புண்யபாபகர்மங்களுக்குத் தகுந்தபடி ஸுக துக்கங்களை அனுபவிக்கிற ப்ராணிகளுக்கு இந்த்ரனால் ஆகவேண்டிய ப்ரயோஜனம் என்ன இருக்கிறது? ப்ராணிகள் தங்கள் கர்மங்களுக்கு உரியபடி பலன்களை அனுபவிக்கிறார்களாயினும் அவரவர்கர்மங்களால் நிக்ரஹாநுக்ரஹங்களையுடைய ஈஸ்வரனல்லவோ பலன் கொடுப்பவனென்னில், இந்த்ரன் ஈஸ்வரனோ? ப்ராணிகள் ராஜஸம் முதலிய தங்கள் ஸ்வபாவத்திற்குத் தகுந்தபடி செய்கிற கர்மங்களால் விளையும் பலன்களை வேறாக மாற்றவல்லனோ? இங்ஙனம் அஸமர்த்தனாகிய இந்த்ரனால் நமக்கு ஆகவேண்டியது என்ன இருக்கிறது? இவ்வுலகத்திலுள்ள ஜந்துக்களெல்லாம் தங்கள் ஸ்வபாவத்திற்கு உட்பட்டு ஸ்வபாவத்தைத் தொடர்ந்து நடக்கின்றன. தேவதைகள் அஸுரர்கள் மனுஷ்யர்கள் இவர்களோடு கூடிய ஜகத்தெல்லாம் ஸ்வபாவத்தில் நிலைநின்றிருக்கின்றது. ஸ்வபாவத்திற்கு உட்படாத ஜந்து எதுவுமே இல்லை. ஜந்துக்கள் தங்கள் ஸ்வபாவத்திற்குரிய கர்மத்தினால் பலவகையான தேஹங்களைப் பெறுவதும் துறப்பதுமாயிருக்கின்றன. சத்ரு மித்ர உதாஸீனர் என்கிற பேதமும் கர்மத்தினால் உண்டாகிறதுதான். இந்த்ராதிகளிடத்திலுள்ள ஐஸ்வர்யமும் கௌரவமும் கர்மத்திற்கு உட்பட்டதே. ஆகையால் ஸ்வபாவத்திற்கு உட்பட்ட புருஷன் தன்ஸ்வபாவத்திற்கு உரிய கர்மத்தைச்செய்துகொண்டு கர்மத்தையே வெகுமதிக்கவேண்

டும். புருஷன் எதனால் ஸுகமாக ஜீவிக்கிறானோ, அவனுக்கு அதுவே தெய்வமாம். எவன் தான் வேறொரு வஸ்துவைக்கொண்டு ஜீவித்து வேறொரு வஸ்துவைத் தொடர்கின்றானோ, அவன் அதனால க்ஷேமத்தை அடையமாட்டான. கணவனைத் துறந்து கள்ள புருஷனைத் தொடரும் மாது அவனிடத்தினின்று க்ஷேமம் பெறுவாளோ? ப்ராஹ்மணன் வேதத்தினால் ஜீவிக்க வேண்டும். க்ஷத்ரியன் பூமியின் ரக்ஷணத்தினால் ஜீவிக்க வேண்டும். வைஸ்யன் வார்த்தையினால ஜீவிக்கவேண்டும். சூத்ரன், ப்ராஹ்மணன் முதலிய மூன்று வர்ணத்தவர்களுக்கும் சுஸ்ரூஷை செய்து ஜீவிக்கவேண்டும். வேறு வர்ணத்தவர்களும் தங்களுக்கு ஏற்பட்ட வ்ருத்தி நேராத பக்ஷத்தில் வார்த்தையினால் ஜீவிக்கலாம். அந்த வார்த்தை க்ருஷியென்றும் வர்த்தகமென்றும கோரக்ஷணமென்றும் வட்டி ஜீவனமென்றும் நான்குவகைப் பட்டிருக்குமென்று சொல்லுகிறார்கள். அவற்றில் நாம் எப்பொழுதும் கோரக்ஷணத்தினால் ஜீவிப்பவர்கள். ஸத்த்வம் ரஜஸ்ஸு தமஸ்ஸு என்னும் இம்மூன்று குணங்கள் ஜகத்தின் ஸ்திதி உத்பத்தி ஸம்ஹாரம் இவற்றிற்குக் காரணங்கள். அவற்றில் ரஜோ குணத்தினால் தூண்டப்பட்டு ஸ்த்ரீபுருஷர்கள் ஒருவரோடொருவர் கலக்கையால் ஜகத்து உண்டாகின்றது. மேகங்கள் ரஜோகுணத்தினால் தூண்டப்பட்டு நதி ஸமுத்ரம் பர்வதம் முதலிய எல்லா இடங்களிலும் மழை பெய்கின்றன. இப்படியிருக்க மஹேந்த்ரனால் என்ன செய்யமுடியும்? அவன் எந்தக் கெடுதியையாவது எந்த நன்மையையாவது ஒன்றும் செய்யவல்லனல்லன். நமக்குப் பட்டணங்களாவது தேசங்களாவது க்ராமங்களாவது வீடுகளாவது எவையும் கிடையாது. நாம் வனத்தையே

இருப்பிடமாக வுடையவர்கள்; காடுகளிலும் பர்வதங்களிலும் வாஸஞ்செய்பவர்கள். ஆகையால் நம்பிழைப்பிற்குக் காரணங்களான பசுக்களுக்கும் ப்ராஹ்மணர்களுக்கும் கோவர்த்தன பர்வதத்திற்கும் ஸந்தோஷத்தை விளைக்க வல்ல யாகத்தைத் தொடங்குவீர்களாக. இந்த்ர யாகத்திற்காகச் சேர்த்துவைத்திருக்கின்ற ஸாமக்ரிகளைக் கொண்டே இந்த யாகத்தை நடத்துவீர்களாக. பாயஸம் முதல் பருப்புவரையிலுள்ள பலவகையான [1] பாகங்களை யெல்லாம் பக்வஞ் செய்வீர்களாக. அப்பம் வடை முறுக்கு முதலிய பண்யாரங்களையும் பண்ணுவீர்களாக. இடைச்சேரியிலுள்ள பாலை யெல்லாம் கறந்து சேர்த்துவைப்பீர்களாக. வேதங்களையோதி யுணர்ந்து உபதேசிக்குந் திறமை யுடையவர்களான அந்தணர்கள் அக்னிகளில் நன்கு ஹோமஞ் செய்வார்களாக. நீங்கள் அந்த ப்ராஹ்மணர்களுக்குப் பலகுணங்கள் அமைந்த அன்னத்தையும் பசுக்களையும் தக்ஷிணைகளையும் கொடுப்பீர்களாக. மற்றுமுள்ள நாய் சண்டாளர் பதிதர் இவர்களுக்கும் உரியபடி அன்னங் கொடுக்கவேண்டும். பசுக்களுக்குப் புல்லை வேண்டிய வளவும் கொடுத்துக் கோவர்த்தன பர்வதத்திற்கும் பலி கொடுக்கவேண்டும். பிறகு நல்ல வஸ்த்ரங்களை உடுத்து நன்கு அலங்கரித்துக்கொண்டு நன்றாகப் புசித்துச் சந்தனம் குங்குமக்குழம்பு முதலிய நல்ல பூச்சுக்களையும் பூசிக்கொண்டு பசுக்கள் ப்ராஹ்மணர்கள் அக்னி பர்வதம் இவற்றை ப்ரதக்ஷிணமும் செய்வீர்களாக. இங்ஙனம் செய்வதே எனக்கு ஸம்மதம். அண்ணா! இது ருசிக்குமாயின் நடத்துவீர்களாக. இப்பொழுது நான் சொன்ன இந்தயாகம் பசுக்களுக்கும் ப்ராஹ்மணர்களுக்கும் பர்வதத்திற்கும் எனக்கும் மிகவும் ப்ரியமானது.

---

1. பாகம்-சமையல், இங்குச சமைக்கவேண்டிய வஸ்துவைச சொல்லுகிறது.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—காலஸ்வரூபனாகிய பகவான் இந்த்ரனுடைய கொழுப்பை அழிக்க விரும்பி மொழிந்த இவ்வுரையை நந்தாதிகள் கேட்டு அவனுடைய அபிப்ராயத்தை அறியாதவர்களாயினும் அதை நல்லதென்று அப்படியே ஒப்புக்கொண்டார்கள். மதுஸூதனனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் எப்படி மொழிந்தானோ அப்படியே எல்லாவற்றையும் நடத்தினார்கள். அந்த நந்தாதிகள் மிகுந்த ஆதரவுடன் புண்யாஹவாசனஞ் செய்வித்து இந்த்ரயாகத்திற்காகச் சேர்த்து வைத்த அந்த வஸ்துக்களைக் கொண்டே பர்வதத்தையும் ப்ராஹ்மணர்களையும் உத்தேசித்து எல்லாப் பலிகளையும் கொடுத்துப் பசுக்களுக்கு வேண்டியவளவு புல் விட்டுப் பசுமந்தைகளை முன்னிட்டுக் கொண்டு பர்வதத்தை ப்ரதக்ஷிணஞ் செய்தார்கள். நந்தன் முதலிய அந்தக் கோபாலர்களும் கோபிமார்களும் நன்கு அலங்கரித்து எருதுகள் பூட்டின வண்டிகளின்மேல் ஏறி ப்ராஹ்மணர்களால் ஆசீர்வாதஞ் செய்யப்பெற்று ஸ்ரீக்ருஷ்ணனுடைய விசேஷ சேஷ்டிதங்களைப் பாடிக்கொண்டு பர்வதத்தை ப்ரதக்ஷிணஞ் செய்தார்கள். ஸ்ரீக்ருஷ்ணனோவென்றால் 'அசேதனமான பர்வதம் பலியை எங்ஙனம் பெற்றுக்கொள்ளும்? எப்படித்தான் நம்மை அனுக்ரஹிக்கும்?' என்ற நந்தாதிகளின் ஸந்தேஹத்தையெல்லாம் போக்கி அவர்களுக்கு நம்பிக்கையை விளைக்கும் பொருட்டு வேறொரு உருவத்தை ஏற்றுக்கொண்டு பெருஞ் சரீரமுடையவனாகிப் பர்வதத்தின் நுனியில் இருந்து நான் பர்வதமென்று சொல்லிப் பலியைப் புசித்தான். மற்றும் கோபர்களின் இடையில் இருந்து 'ஓ கோபர்களே! பாருங்கள். இந்தப் பர்வதம் உருவத்துடன் தோன்றி நமக்கு அனுக்ரஹஞ் செய்தது. நினைத்தபடி வடிவங்கொள்ளவல்ல இப்பர்வதம் தன்னை

அவமதிக்கின்ற வனவாஸிகளான மனுஷ்யர்களை வதித்துவிடும். ஆகையால் நாம் இதை அவமதிக்காமல் நமக்கும் பசுக்களுக்கும் க்ஷேமத்தின் பொருட்டு இந்தப் பர்வதத்திற்கு நமஸ்காரஞ் செய்வோம்' என்று மொழிந்து கோபர்களுடன் பெருஞ்சரீரமுடைய பர்வத ஸ்வரூபியான தனக்குத் தானே நமஸ்காரம் செய்தான். இடையர்கள் வாஸுதேவனால் தூண்டப்பட்டுக் கோவர்த்தன பர்வதத்தையும் பசுக்களையும் ப்ராஹ்மணர்களையும் குறித்து விதிப்படி யாகஞ் செய்து ஸ்ரீக்ருஷ்ணனுடன் கூடிக் கோகுலத்திற்குப் போனார்கள். இருபத்து நான்காவது அத்யாயம் முற்றிற்று.

இந்த்ரன் தன்னுடைய பாகம் தடைபட்டமையால் கோபித்துக் கோகுலத்தை அழிக்க விரும்பி மழை பெய்கையில ஸ்ரீக்ருஷ்ணன கோவர்த்தன பர்வதத்தைக் குடையாகத் தாங்கிக் கோகுலத்தைப் பாதுகாத்தல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மன்னவனே! அப்பொழுது தேவேந்த்ரன அப்பூஜையை ஸ்ரீக்ருஷ்ணன் தடுத்ததை அறிந்து ஸ்ரீக்ருஷ்ணனையே நாதர்களாகவுடைய கோபர்களின்மேல் கோபித்துக்கொண்டு உலகங்களை அழிக்குந்தன்மையுடையவைகளான ஸாம்வர்த்தக மெனனும் மேகங்களுடைய கூட்டத்தைத் தூண்டினான். மற்றும் அவ்விந்த்ரன் அம்மேகங்களைக் குறித்து மேல்வருமாறு கூறினான்.

இந்த்ரன் சொல்லுகிறான்:—காட்டில் வாஸஞ் செய்பவர்களான இடையர்களுக்குச் செல்வப் பெருக்கினு

லுண்டான கொழுப்பின் பெருமை மிகவும் அற்புதமாயிருக்கின்றது. ஏனென்றால், அவர்கள் மரணம் அடையுந்தன்மையுள்ள மானிடப் பெய்யலாகிய க்ருஷ்ணனை அவலம்பமாகக் கொண்டு தேவனாகிய என்னை அவமதித்து என்யாகத்தைப் பங்கஞ் செய்தார்களல்லவா? விவேகமுடையவர்கள் ஆத்மவித்யையையுந் துறந்து உறுதியுள்ளவைகளும் ஓடங்கள்போன்றவைகளும் என்னுடைய ஆராதன ரூபங்களுமான கர்மங்களாகிற யாகங்களால் ஸம்ஸாரமாகிற ஸாகரத்தைத் தாண்டவிரும்புகிறார்கள். (மோக்ஷங் கொடுப்பவனும் நானே. அதற்கு உபாயமும் என்னைக் குறித்துச் செய்யும் யாகமே.) இப்படியிருக்க, வீணாகவாயாடுந்தன்மையனும் மூர்க்கனும வணக்கமற்றவனும் தன்னைத் தானே பண்டிதனாக நினைத்துக் கொண்டிருப்பவனும என்னுடைய நிக்ரஹத்தினால மரணம் அடையப்போகிறவனும் ஸாதாரண மனுஷ்யனுமாகிய க்ருஷ்ணனை அவலம்பமாகக் கொண்டு இந்த இடையர்கள் எனக்கு அனிஷ்டஞ் செய்தார்கள். செல்வத்தினால் செருக்குற்றவர்களும் க்ருஷ்ணனால் வளர்க்கப்பட்ட தேஹமுடையவர்களுமான இந்த இடையர்களின் செல்வப்பெருக்கினாலுண்டான கொழுப்பின மிகுதியை உதறிவிடுவீர்களாக. மற்றும, பசுக்களை அழிப்பீர்களாக. நானும ஐராவதமென்கிற என்னுடைய நாகத்தின்மேல் ஏறிக்கொண்டு மிகுந்த வேகமுடை மருததுக்களின் கூட்டங்களோடு கூடி நந்தன முதலிய கோபர்களைக் கொல்லுவதற்காக உங்கள் பின்னேறி புறப்பட்டு வருகின்றேன.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் தேவேந்திரனால் ஆஜ்ஞை செய்யப்பட்ட மேகங்கள கட்டுத்தறியினின்று அவிழ்த்து விடப்பெற்று வந்து பலமுள்ளவளவு விடா

மழைகளைப் பெய்து நந்தகோகுலத்தைப் பீடித்தன. அம்மேகங்கள் மின்னி இடித்துப் பெருங்காற்றுக்களால் தூண்டப்பட்டுக் கல்மழைகளைப் பெய்தன. மற்றும், அவை ஸ்தம்பங்கள்போலப் பருத்திருக்கின்ற மழைத் தாரைகளை ஓயாமல் பெய்துகொண்டிருக்கையில், மேடும்பள்ளமுமாயிருந்த பூமிமுழுவதும் ஜலப்ரவாஹங் களால் சூழப்பட்டு ஒரே வெள்ளமாகிக் கண்ணுக்குப் புலப்படவேயில்லை. பெரிய விடாமழையினாலும் பெருங் காற்றினாலும் பசுக்கள் நடுக்கமுற்றன. இடையர்களும் இடைச்சிகளும் குளிரினால் வருந்திக் கோவிந்தனைச் சரணம் அடைந்தார்கள். அவர்கள் தலைகளையும் குழந் தைகளையும் உடம்பினால் மறைத்துக்கொண்டு நடுக்க முற்று ஸ்ரீக்ருஷ்ணபகவானுடைய பாதமூலத்திற்கு வந்து 'க்ருஷ்ண! க்ருஷ்ண! ப்ரஜைகளைப் பாதுகாப்பதற்கு வேண்டிய ஜ்ஞானம் சக்தி முதலிய குணங்கள் அமைந் திருக்கையாகிற பெருமபாக்ய முடையவனே! பக்தர் களின தோஷத்தையே குணமாகக் கொள்ளுந்தன்மை யனே! உன்னையே நாதனாகவுடைய கோகுலத்தைக் கோபமுற்றிருக்கின்ற பர்ஜந்ய தேவனிடத்தினின்று பாதுகாக்கவேண்டும்' என்று முறையிட்டுக்கொண்டு சரணம் அடைந்தார்கள். கோகுலமெல்லாம் உரத்துப் பெய்கின்ற கல்மழையினால் பீடிக்கப்பட்டுக் குளிரினால் வருந்தி ஒன்றுந் தெரியாமல் மோஹித்துக் கிடப்பதைக் கண்டு ஸ்ரீக்ருஷ்ணன் ஷாட்குண்ய பூர்ணனாகையால் 'இது இந்த்ரன கோபித்துச் செய்த கார்யம்' என்று தெரிந்துகொண்டான். அந்தப் பகவான் தனக்குள் 'இப்பொழுது வர்ஷருதுவுக்கு ப்ரஸக்தி இல்லை. அது கழிந்து வெகு நாளாய்விட்டது. இப்பொழுது பெருங் காற்றுடன் கொடிய கல்மழை பெய்கின்றது. நாம் இந்த்ரனுடைய யாகத்தைத் தடுக்கையில் அவன் கோப

மூற்று நம்மை அழிப்பதற்காக இங்ஙனம் கொடிய மழைபெய்கின்றான். அதற்கு நான் என்னுடைய ஸாமர்த்யத்தினால் பரிஹாரஞ் செய்கிறேன். மூடத்தனத்தினால் தானே உலகங்களுக்கெல்லாம் ஸ்வதந்த்ரப்ரபுவாக நினைத்துக்கொண்டிருக்கிற இவ்விந்த்ரனுக்கு ஐஸ்வர்யத்தினாலுண்டாயிருக்குங் கொழுப்பாகிற தமோகுணத்தை இப்பொழுது பறித்து விடுகிறேன். என்னிடத்தில் நிலைநின்ற மனமுடையவர்களும் ஸத்வகுணம் தலையெடுக்கப் பெற்றவர்களுமாகிய தேவர்களுக்கு 'நாம் ஸ்வதந்த்ர ப்ரபுக்கள்' என்னும் கர்வம் எப்பொழுதும் உண்டாகாது. ஆயினும் ப்ரக்ருதி ஸம்பந்தத்தின் கொடுமையால் ஒருகால் அந்தக் கர்வம் உண்டாகுமாயின், அவர்களுடைய அக்கர்வத்தை நான் பங்கப்படுத்துவது அவர்களுக்குச் சாந்தியின் பொருட்டே ஆகும். நான் உபேந்த்ராதிரூபனாய் அவதரித்துத் தேவதைகளை ரக்ஷித்துக் கொண்டிருப்பினும் அவர்கள் வீண்கர்வம் கொண்டவர்களாயின் அதை அழித்துச் சாந்தியை விளைப்பதற்காக நான் முயற்சிசெய்வது எனக்கு யுக்தமே. ஆகையால் என்னைச் சரணம் அடைந்திருப்பதும் என்னையே சரண்யனாகப் பற்றியிருப்பதுமாகிய கோகுலத்தை நான் என்னுடைய ஸாமர்த்யத்தினால் பாதுகாக்க வேண்டும். சரணமடைந்தவர்களைப் பாதுகாப்பதும் என் பக்தர்கள் வீண்கர்வப்படுவார்களாயின் அவர்களுக்குக் கர்வபங்கஞ் செய்வதுமாகிய இந்த வ்ரதத்தை நான் ஏற்றுக்கொண்டிருப்பவனல்லவா?' என்று மொழிந்து ஒற்றைக்கையினால் கோவர்த்தனபர்வதத்தைப் பிடுங்கி ஏழுவயதுள்ள அந்த ஸ்ரீக்ருஷ்ணன் நாய்க்குடையைப்போல அவலீலையாகப் பிடித்தான். பிறகு அந்த ஸ்ரீக்ருஷ்ண பகவான் கோபர்களைப் பார்த்து

'அம்மா! அண்ணா! கோபர்களே! நீங்கள் பசுமந்தைகளுடன் பர்வதத்தைப் பிடுங்கின இந்தப் பள்ளத்தில் ஸுகமாக நுழைந்திருப்பீர்களாக. என்கையினின்று பர்வதம் விழுமோ என்னவோ என்று நீங்கள் பயப்படவேண்டியதில்லை. காற்று மழையைப்பற்றியும் நீங்கள் பயப்படவேண்டியதில்லை. அதினின்று உங்களைப் பாதுகாப்பதற்கு உபாயஞ் செய்துவிட்டேன்' என்று மொழிந்தான். கோபர்கள் அனைவரும் ஸ்ரீக்ருஷ்ணனால் ஆஶ்வாஸப்படுத்தப்பட்ட மனமுடையவர்களாகிப் பசுமந்தைகளோடும் பிள்ளை பேரன் முதலிய ப்ரஜைகளோடும் ப்ருத்யர்களோடும் புரோஹிதர் முதலியவர்களோடும் கூடி நெருக்கமில்லாமல் ஸுகமாக அந்தப் பர்வதத்தின் கீழ்ப்பள்ளத்தில் ஓதுங்கினார்கள். கோபர்கள் எல்லாரும் பசிதாஹங்களால் விளையும்வருத்தத்தையும் ஸுகாபேக்ஷையையும் துறந்து அந்த ஸ்ரீக்ருஷ்ணனையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். அந்த ஸ்ரீக்ருஷ்ணனும் அங்ஙனம் அவர்களால் பார்க்கப்பட்டவனாகி ஏழு நாள் வரையில் அந்தக் கோவர்த்தன பர்வதத்தை இடக்கைச் சுண்டுவிரலின் நகத்து நுனியால் தரித்துக்கொண்டிருந்தான். பர்வதத்தைப் பெயர்த்தெடுத்துத் தரிக்கும்பொழுது எவ்விடத்தில் அடிவைத்தானோ அவ்விடத்தினின்று ஓரடியுங் கூட அசையவில்லை; அவ்விடத்திலேயே நின்றிருந்தான். பிறகு தேவேந்த்ரன் ஸ்ரீக்ருஷ்ணனுடைய அந்தத் திறமையின ப்ரபாவத்தைக் கண்டு மிகவும் வியப்புற்றுந் தன் ஸங்கல்பம் கைகூடப்பெறாமல் கர்வத்தைத் துறந்து மேகங்களைத் தடுத்தான். பிறகு கோவர்த்தன பர்வதத்தைத் தரித்துக்கொண்டிருக்கிற ஸ்ரீக்ருஷ்ணன், காற்றும் மழையும் நின்று மேகங்களெல்லாம் தொலைந்து ஸூர்யனும் விளக்கமுற்று ஆகாயம்

நிர்மலமாயிருக்கக் கண்டு கோபர்களைப் பார்த்து மொழிந்தான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—கோபர்களே! நீங்கள் ஸ்த்ரீகளோடும் கோதனங்களோடும் குழந்தைகளோடுங்கூடி வெளியே போவீர்களாக. பயத்தைத் துறப்பீர்களாக. காற்றுமழை ஓய்ந்துவிட்டது. நதிகளும் ஜலப்ரவாஹமும் குறையப்பெற்றன.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் பகவான் மொழிகையில் ஸ்த்ரீகள் சிறுவர்கள் கிழவர்கள் வயதுள்ளவர்கள் ஆகிய கோபர்கள் அனைவரும் தங்கள் தங்கள் கோதனங்களுடன் கருவிகளையெல்லாம் வண்டிகளின்மேல் ஏற்றிக்கொண்டு மெல்லமெல்ல வெளிக் கிளம்பிச் சென்றார்கள். ஸ்ரீக்ருஷ்ணபகவானும் ஸமஸ்த பூதங்களும் பார்த்துக்கொண்டிருக்கையில் அவலீலையாக அப்தப் பர்வதத்தை அது இருந்த இடத்தில் முன்போலவே ஸ்தாபித்தான். வனவாஸிகளான அந்தக் கோபர்கள் ப்ரேமவேகத்தினால் அந்த ஸ்ரீக்ருஷ்ணனைக்கிட்டி உரியபடி அணைப்பது முதலியன செய்து ஸந்தோஷம் அடைந்தார்கள். அங்ஙனமே கோபிமார்களும் ஸ்னேஹமும் விளங்குமாறு ஸந்தோஷத்துடன் அவனைத் தயிர் அக்ஷதை முதலியவைகளால் பூஜித்து மேலான ஆசீர்வாதங்களையும் செய்தார்கள். யசோதை ரோஹிணி நந்தன பலிஷ்டர்களில் சிறந்த பலராமன் ஆகிய இவர்கள் ஸ்னேஹத்தினால் மனங்கலங்கப்பெற்று ஸ்ரீக்ருஷ்ணனை அணைத்துக்கொண்டு ஆசீர்வாதங்களைச் செய்தார்கள். மன்னவனே! ஆகாயத்தில் தேவக் கூட்டங்களும் ஸாத்யர் ஸித்தர கந்தர்வர் சாரணர் இவர்களும் ஸ்தோத்ரங்கள செய்து எல்லாரும் புஷ்ப வர்ஷங்களைப் பெய்தார்கள். நரேந்த்ரனே! சங்கு

துந்துபி முதலிய வாத்யங்கள் ஆகாயத்தில் தேவதைகளால் வாதிக்கப்பட்டு முழங்கின. மேன்மையுடைய தும்புரு முதலிய கந்தர்வர்கள் பாடினார்கள். ராஜனே! அப்பால் ஸ்ரீக்ருஷ்ணன் தன்னிடத்தில் மிகுந்த அனுராகமுடைய கோபாலர்களோடும் பலராமனோடுங்கூடித் தன்னுடைய கோகுலத்திற்குப் போனான். கோபிமார்களும் அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய அத்தகைய அமானுஷசரித்ரங்களைப் பாடிக்கொண்டு அவன் மனத்திற்கினியர்களாகி மனக்களிப்புடன் கோகுலம் போய்ச் சேர்ந்தார்கள். இருபத்தைந்தாவது அத்யாயம் முற்றிற்று.

கோபிமார்கள் ஸ்ரீக்ருஷ்ணனுடைய அமானுஷ சரித்ரங்களைப்பற்றிச் சங்கிக்க நந்தன் கர்க்கருடைய வசனங்களைச் சொல்லி அவர்களைத் தெளிவித்தல் 

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— அந்தக் கோபர்கள் ஸ்ரீக்ருஷ்ணனுடைய இத்தகைய பற்பல அற்புத சரித்ரங்களை நினைத்து அவனுடைய மஹிமையை உள்ளபடி அறியாதவர்களாகையால் வியப்புற்று நந்தனிடம் வந்து மொழிந்தார்கள்.

கோபர்கள் சொல்லுகிறார்கள்:—இப்பாலகன் செய்கிற இத்தகைய பல செயல்களும் மிகவும் அற்புதங்களாயிருக்கின்றன. ஆகையால் க்ராம்யர்களான (ஒன்றுமறியாத மூடர்களான) கோபர்களிடத்தில் இவன் தனக்கு ஜுகுப்ஸிதமான ஜன்மம் பெறுதற்கு எங்ஙனம் உரியவனுவான்? ஏழு வயதுள்ள பாலனாகிய இந்த ஸ்ரீக்ருஷ்ணன் மத்தகஜம் துதிக்கையால் தாமரைமலரைத் தரிப்பதுபோல இப்பெருமலையை ஒற்றைக் கையினால் எப்படித் தரித்துக் கொண்டிருந்தான்? மற்றும், இவன் கண்ணைத் திறக்கவும் முடியாத இளங்குழந்தையாயிருக்கும் பொழுது சரீரத்தின் யௌவன வயதைக் காலம் அனு

யாஸமாகப் பறிப்பதுபோல இருக்க பலமுடைய பூதனை யின் ஸ்தன்யத்தை ப்ராணனகளோடு பானஞ் செய் தானே. அது எப்படி? மற்றும், இவன் மூன்றுமாதக் குழந்தையாயிருக்கும்பொழுது வண்டியின்கீழ் படுத்துக் காலைக் குறுக்கும் மேலுமாய் உதைத்து அழுதுகொண் டிருக்கையில் அச்சகடம் இவனுடைய நுனிக்காலால் அடியுண்டு தலைகீழாய் விழுந்ததே. அது எப்படி? இவன் ஒருவயது குழந்தையாயிருக்கும்பொழுது பூமி யில் உட்கார்ந்திருக்கையில் த்ருணாவர்த்தனென்னும் அஸுரன் இவனை ஆகாசமார்க்கத்தினால் எடுத்துக் கொண்டு போகையில் அவனை இவன் கழுத்தில் பிடித் துக்கொண்டு வருத்திக் கொன்றுவிட்டானே. இது எப்படி? ஒருகால் இவன் வெண்ணெய் திருடினனென்று இவனுடைய தாய் கோபித்து இவனை உரலோடிணைத் துக் கட்டிவைக்கையில் அவ்வுரலை இழுத்துக்கொண்டே கைகளால்தவழ்ந்து மருதமரங்களினிடையில் நுழைந்து அம்மரங்களை வேருடன் விழத்தள்ளினனே. இது எப் படி? இவன் பலராமனோடும் மற்ற இடைப்பிள்ளைக ளோடுங் கூடி வனத்தில் கன்றுகளை மேய்த்துக்கொண் டிருக்கையில தன்னைக் கொல்லவேண்டுமென்று விரும்பி வந்த பகாஸுரனைக் கைகளால் வாயில் பிடித்துக் கொண்டு கிழித்துவிட்டானே. இது எப்படி? மற்றும் இவன் தன்னைக் கொல்லவேண்டுமென்று கன்றினுரு வங்கொண்டு கன்றுகளோடு கன்றாய் மறைந்து வந்த வத்ஸாஸுரனைக் கொன்று அவனுடைய தேஹத்தை அவலீலையாக விளாமரத்தின்மேல் வீசியெறிந்து விளாம பழங்களையும் விழத்தள்ளினன் மற்றும் இவன் பலராம னோடுகூடச் சென்று ராஸபாஸுரனையும் அவன் பந்துக் களையும் கொன்று நன்கு பழுத்தபழங்கள் நிறைந்த பனங் காட்டை எல்லோரும் நிர்ப்பயமாய் நுழைந்து அனுப

விக்கும்படி க்ஷேமப்படுத்தினனே. இது எப்படி? மிகுந்த பலசாலியான பலராமனைக்கொண்டு கொடியனாகிய ப்ரலம்பாஸுரனைக் கொல்வித்துத் தான் கோகுலத்துப் பசுக்களையும் கோபர்களையும் காட்டுத்தீயினின்று விடுவித்தானே. இது எப்படி? மற்றும் இவன மிகவும் கொடிய விஷமுடைய ஸர்ப்பஸ்ரேஷ்டனை காளியனைச் சிக்ஷித்துக் கர்வம் தொலைந்த அக்காளியனை மடுவினின்று பலாத்காரமாகத் துரத்தி யமுனையை விஷமும் மந்தமின்றிப் பரிசுத்தமான ஜலமுடையதாகச் செய்தானே. இது எப்படி? ஓ நந்தனே! உன் பிள்ளையாகிய இந்த ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் இடைச்சேரியிலுள்ள எங்கள் எல்லார்க்கும் அநுராகம் துறக்கமுடியாததாயிருக்கின்றது. அவனுக்கும் எங்களிடத்தில் பிறந்தநாள் முதல் ப்ரீதி மாறாது வளர்ந்துவருகின்றது. எபபடி? ஏழு வயதுள்ள இப்பாலகன் எங்கே? பெரிய மலையைக் கையினால் தாங்குவது எங்கே? கோகுலநாதனே! ஆகையால் உன் புதல்வனாகிய இந்த ஸ்ரீக்ருஷ்ணன் ஸர்வசக்தியும் ஸர்வஜ்ஞனும் ஸர்வாந்தராத்மாவுமாகிய பரமபுருஷனாயிருக்கவேண்டுமென்று நாங்கள் சங்கிக்கிறோம். இல்லையாயின், இவையெல்லாம எங்ஙனம் சேரும்.

நந்தன் சொல்லுகிறான்:—ஓ கோபர்களே! இக்குமாரனைப் பற்றிக் கர்க்கர் என்ன மொழிந்தாரோ அதைச் சொல்லுகிறேன், கேட்பீர்களாக. உங்களுக்கு இக்குழந்தைவிஷயத்தில் ஸந்தேஹம் தொலையுமாக. 'இவன யுகங்கள்தோறும் திருவுருவங்களைக் கொள்கின்றான. இந்த உனபுதல்வன கீழ்மூன்று யுகங்களில் வெளுப்பு சிவப்பு மஞ்சள் என்கிற மூன்று நிறங்களை ஏற்றுக்கொண்டிருந்தான். இப்பொழுது கறுப்பு நிறத்தை ஏற்றுக்கொண்டிருக்கின்றான். ஆகையால் இவன ஸ்ரீ

க்ருஷ்ணனென்று பெயர் பெறுவான். பெருஞ் செல்வமுடைய இக்குமாரன் வஸுதேவனுகிய உனக்கு முன்பு ஒருகால் பிள்ளையாகப் பிறந்தானுகையால் அறிஞர்கள் இவனை வாஸுதேவனென்று சொல்லுகிறார்கள். உன் புதல்வனுகிய இவனுக்குக் குணங்களுக்கும் செயல்களுக்கும் உரிய பல நாமங்களும் உருவங்களும் உண்டு. அவற்றையெல்லாம் என்னைப்போன்றவர்கள் அறிவார்களேயன்றி மற்ற ஜனங்கள் அறியமாட்டார்கள். கோபர்களையும் கோகுலத்தையும் மனக்களிப்புறச் செய்யுந்தன்மையுடைய இப்புதல்வன் உங்களுக்கு இஹலோகத்து நன்மைகளையும் பரலோகத்து நன்மைகளையும் விளைக்கப்போகிறான். நீங்கள் இவனுல் எல்லா வருத்தங்களையும் சீக்ரத்தில் தாண்டப் போகிறீர்கள். கோகுலத்திற்கு நாதனே! முன்பு ஜகத்தெல்லாம் அராஜகமாய்த் துஷ்டர்களால் பீடிக்கப்பட்டிருக்கையில் தர்மத்தைத் தொடர்ந்து நடக்கும் ஸாதுக்கள் உன் பிள்ளையாகிய இவனுல் பாதுகாக்கப்பட்டு வளர்ந்து அந்தத் துஷ்டர்களை வென்றார்கள். மிகுந்த பாக்யமுடையவனே? மனுஷ்யர்களில் எவரேனும் இந்த உன்பிள்ளையிடத்தில் ப்ரீதி செய்வார்களாயின், விஷ்ணுவின் பக்ஷத்தில் சேர்ந்தவர்களை அஸுரர்கள் பாதிக்கமுடியாதிருப்பதுபோல, அவர்களைச் சத்ருக்கள் பரிபவிக்கமாட்டார்கள். நந்தா! இந்த உன்பிள்ளை குணங்களாலும் செல்வத்தினுலும் கீர்த்தியினுலும் ப்ரபாவத்தினுலும் ஸ்ரீமந்நாராயணனேடொத்தவன். ஆகையால் அவன் செயல்களைப்பற்றி ஆச்சர்யப்பட வேண்டியதில்லை' என்று எனக்குக் கர்க்க முனிவர் ஸ்பஷ்டமாக உண்மையை மொழிந்து தன் க்ருஹத்திற்குப் போகையில், எப்படிப்பட்ட கார்யத்தையும் அனுயாஸமாகச் செய்து முடிக்



2269. கோவர்த்தனோத்தாரணம்.

குந் திறமையுடைய ஸ்ரீக்ருஷ்ணனை நான் அதுமுதல் ஒன்றான ஸ்ரீமந்நாராயணனாகவே நினைத்துக்கொண்டிருக்கிறேன்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் கர்க்க முனிவர் மொழிந்ததாகச் சொன்ன நந்தனுடைய வசனத்தைக் கோகுலவாஸிகள் கேட்டு ஆச்சர்யமுற்று ஸந்தோஷம் அடைந்து நந்தனையும் ஸ்ரீக்ருஷ்ணனையும் பூஜித்தார்கள். தன் யாகத்திற்கு விக்னஞ் செய்தானென்னுங் கோபத்தினால் இந்த்ரன் மழை பெய்கையில் தன்னையே ரக்ஷகனாகவுடையதும் தன்னையொழிய வேறு ரக்ஷணோபாயத்தை அறியாததுமாகிய கோகுலத்திலுள்ள சிறுவர்களும் பசுக்களும் ஸ்த்ரீகளும் வருந்துவதைக் கண்டு மனஇரக்கமுற்றுத் தன்மஹிமையை வெளியிட முயன்று சிரித்துக்கொண்டே தான் சிறுவனாயினும்கோவர்த்தன கிரியை விளையாட்டிற்காக நாய்க்குடையைப் பிடுங்குவது போல ஒற்றைக் கையினால் பிடுங்கித் தரித்துக் கோகுலத்தையெல்லாம் பாதுகாத்து மஹேந்த்ரனுடைய கொழுப்பை அடக்கினவனும் பசுக்களுக்கு இந்த்ரனுமாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் நமக்கு ப்ரியனாயிருப்பானாக.

இருபத்தாறாவது அத்யாயம் முற்றிற்று.

இந்த்ரன் ஸ்ரீக்ருஷ்ணனுடைய வைபவத்தைக் கண்டு காமதேனுவுடன் வந்து கோவிந்தபட்டாபிஷேகஞ் செய்தல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— ஸ்ரீக்ருஷ்ணன் கோவர்த்தன பர்வதத்தை எடுத்துத் தரித்துக் கோகுலத்தை விடாமழையினின்று பாதுகாக்கையில் இந்த்ரனும் காமதேனுவும் ஸ்வர்க்கலோகத்தினின்று புறப்பட்டு வந்தார்கள். இந்த்ரன் தான் அபராதஞ் செய்தமையால் வெட்க

முற்று ஏகாந்தத்தில் ஸ்ரீக்ருஷ்ணனைக் கிட்டி ஸூர்யனுடைய ஒளிபோன்ற ஒளியுடைய கிரீடத்தினால் இந்த ஸ்ரீக்ருஷ்ணனைப் பாதங்களில் ஸ்பர்சித்தான். அமிதப்ரபாவமுடையவனாகிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய வைபவத்தைக் கேட்டிருந்த தேவேந்த்ரன் அவ்வைபவத்தை நேரில் கண்டனுபவித்தானாகையால் மூன்று லோகங்களுக்குந் தானே ஸ்வதந்த்ர ப்ரபுவென்னும் கர்வம் அழியப்பெற்றுக் கைகளைக் குவித்துக்கொண்டு இங்ஙனம் மொழிந்தான்.

இந்த்ரன் சொல்லுகிறான்:— உன்னுடைய வாஸஸ்தானமாகிய பரமபதம் சுத்தஸத்த்வமயமானது; ரஜஸ்தமஸ்ஸுக்கள் தீண்டப்பெறாதது. ராகத்வேஷாதிகளின் ஸம்பந்தமற்றது; கேவலம் உன்னுடைய உபாஸன ரூபமான தவத்தினால் அடையத்தகுந்தது. உன் ஸங்கல்ப மாத்ரத்தினால் ஏற்பட்டதும் ஸத்த்வாதி குணங்களின பரிணாமமாகிய இந்த ஸம்ஸாரமும் அதன் மூலமாய வருவதும் சரீரஸம்பந்தத்திற்குக் காரணமுமாகிய கர்மானுபந்தமும் உன் வாஸஸ்தானமாகிய அந்தப் பரமபதத்தில் கிடையாது. ஸர்வேச்வரனே! அந்தச் சரீரஸம்பந்தத்தினால் விளைபவைகளும் மீளவும் மற்றொரு சரீரஸம்பந்தத்திற்குக் காரணமாயிருப்பவைகளுமான ராகாதிகள் உனக்கு ஏது? கிடையாது. அவை தேஹாத்மப்ரமமுடையவர்களுக்கு அடையாளமாயிருக்கும் பதார்த்தங்களல்லவா? ராகாதிகளல்லவோ ப்ராணிகளின் தேஹாத்மப்ரமரூபமான அஜ்ஞானம் வெளியாகிறது. ஆகையால் ஸர்வஜ்ஞனாகிய உனக்குக் கிடையாது. ஷாட்குண்யபூர்ணனே! ஆயினும் நீ தர்மத்தை நிலைநிறுத்துவதற்காகவும் துஷ்டர்களை நிக்ரஹிப்பதற்காகவும் தண்டனை விதிக்கும் அதிகாரத்தை

ஏற்றுக்கொள்கின்றனையன்றி ராகாதிகளாலன்று. நீ ஸமஸ்தலோகங்களுக்கும் தந்தை; ஹிதோபதேசஞ் செய்பவன்; கடக்க முடியாத நியாமகன; உரிய காலங்களில் அவரவர்க்குத் தகுந்தபடி தண்டனை செய்பவன். ஆகையால் நீ தம்மையே ஜகத்திற்கெல்லாம் ஸ்வதந்த்ர ப்ரபுவாக அபிமானித்துக்கொண்டிருக்கின்ற என்னைப் போன்றவர்களுடைய கர்வத்தை உதறிக்கொண்டு எங்கள் ஹிதத்திற்காகவே உன் ஸங்கல்பமாத்ரத்தினால் அப்ராக்ருதமான திவ்யமங்கள விக்ரஹங்களை ஏற்றுக்கொண்டு நடையாடுகின்றனை. என்னைப்போன்ற அறிவில்லாத மூடர்கள் எவரெவர் தம்மை ஜகத்திற்கெல்லாம் ஸ்வதந்த்ரப்ரபுக்களாக அபிமானித்திருக்கிறார்களோ, அவர்கள் உரியகாலத்தில் தண்டனை செய்கையால் பயங்கரனாயிருக்கின்ற உன்னைக் கண்டு தாங்களே ஜகத்திற்கெல்லாம் ப்ரபுக்களென்கிற துரபிமானத்தை விரைவில் துறந்து கர்வமும் தொலையப்பெற்றுப் பெரியோர்களின் மார்க்கத்தைத் தொடர்ந்து நடக்கின்றார்கள். ஆகையால் உன்னுடைய நடையாட்டமுங்கூடத் துஷ்டர்களுக்குச் சிக்ஷையே. நான் இந்த்ராதிபத்யத்தினால் மதந் தலைகொண்டு வழிதப்பி உன்ப்ரபாவத்தை அறியாமல் உன்விஷயத்தில் அபராதப்பட்டேன். இத்தகைய நீ என்னுடைய அவ்வபராதத்தைப் பொறுத்தருள்வாயாக. நிக்ரஹம் செய்யவும் அனுக்ரஹஞ் செய்யவும் வல்லவனே! மதிகேடனாகிய எனக்கு ஸர்வேஶ்வரனான உன் விஷயத்தில் மீளவும் இப்படிப்பட்ட துர்ப்புத்தி உண்டாகாதிருக்கும்படி அருள்புரிவாயாக. இந்த்ரியங்களால் விளையும் அறிவுகளுக்கு விஷயமாகாதவனே! தேவா! பூமிக்குப் பெரும்பாரமான பிறவியுடையவர்களும் பற்பல ஸைன்யங்களுக்கு ப்ரபுக்களுமான மன்ன

வர்களுக்குத் தண்டனை விதித்து அவ்வழியால் அவர்களுக்கு ஸம்ஸாரபந்தத்தை அறுத்து மோக்ஷங்கொடுப்பதற்காகவும் உன்பாதாரவிந்தங்களைத் தொடர்ந்து பணியும் பெரியோர்களுக்கு உன் பணிவிடையை மேன்மேலும் வளர்த்திக் கொடுப்பதற்காகவும் நீ இவ்வுலகத்தில் அவதரிக்கின்றனை. நீ ஷாட்குண்யபூர்ணன; சரணமென்ற சப்தஞ் சொன்ன மாத்ரத்தில் அவன் செய்த அபராதங்களையெல்லாம் மறந்து அவனை அனுக்ரஹிப்பதில் தாழ்ந்த மனமுடையவனே! வஸுதேவனுக்குப் பிள்ளையாய் வந்தவதரித்தவனே! ஜகத்திற்கெல்லாம் க்ஷேமஞ் செய்பவனே! பக்தர்களைப் பாதுகாப்பவனே! பரம புருஷனே! ஸ்ரீக்ருஷ்ணா! உனக்கு நமஸ்காரம். கேவலம் ஸங்கல்பத்தினால் திவ்யமங்கள விக்ரஹத்தை ஏற்றுக்கொள்பவனே! மலர்தல் குவிதல் முதலிய விகாரங்களற்ற ஜ்ஞானத்தையே வடிவாகவுடையவனே! எல்லாப் பொருள்களும் தானேயாயிருப்பவனே! எல்லாப் பொருள்களுக்கும் காரணனே! ஸமஸ்த பூதங்களுக்கும் அந்தராத்மாவாயிருப்பவனே! உனக்கு நமஸ்காரம். என்னைக் குறித்து இடையர்கள் செய்யும் யாகத்தை நீ தடுக்கையில், தேஹாத்மாபிமானமுடையனான நடுங்கோபமுடையவனாகி ஷாட்குண்யபூர்ணனாகிய உன்னால் பாதுகாக்கப்பட்ட கோகுலத்தை அழிக்கும் பொருட்டு விடாமழைகளையும் பெருங் காற்றையும் விளைத்து இங்ஙனம் செய்யத்தகாத கார்யம் செய்தேன். ஆயினும் என்னுடைய முயற்சியை வீணாக்கி என கர்வத்தைப் போக்கி என்னை அனுக்ரஹித்தனை. இப்பொழுது நான நியாமகனும் தேஹாத்மாபிமானம் முதலிய துர்க்குணங்களைப் போக்கி ஹிதஞ்செய்யும் ஆசார்யனும் ஸர்வாந்தராத்மாவுமாகிய உன்னைச் சர

ணம் அடைந்தேன். இப்பொழுதுள்ள என்மன நிலைமை அந்தராத்மாவாகிய உனக்கே தெரிந்திருக்கும். நான் சொல்லவேண்டியதில்லை.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம தேவேந்த்ரனால் மொழியப்பட்ட ஸ்ரீக்ருஷ்ணபகவான சிரித்துக்கொண்டே மேககர்ஜனமபோல் கம்பீரமான வாக்கினால் அவ்விந்த்ரனைக் குறித்து மேல்வருமாறு கூறினான்

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—தேவேந்த்ரனே! ஐஶ்வர்யத்தினால மிகவும் மதித்திருந்த உனக்கு என்னைப் பற்றின நினைவை உண்டாக்கி உன்னை அனுக்ரஹிக்கும் பொருட்டு நான உனயாகத்தைப் பங்கஞ் செய்தேன். ஜனங்கள ஐஶ்வர்யத்தினாலும் செல்வப்பெருக்கினாலுண்டான மதத்தினாலும் விவேகமற்று அபராதஞ் செய்தவர்களைத் தண்டிக்குந்தன்மையனான என்னைப் பார்க்கிறதேயில்லை. ஆகையால் எவனை நான் அனுக்ரஹிக்க விருப்புகிறேனோ, அவனைச் செல்வத்தினின்று நழுவச் செய்கிறேன. ஓ இந்த்ரனே! உங்களுக்கு இனி க்ஷேமம் உண்டாகும். ஆனால் என்னுடைய கட்டளையைத் தவறாமல் நடத்தவேண்டும். அதாவது நீங்கள் அவிநயம் செய்யாமல் கர்வத்தைத் துறந்து மனவூக்கத்துடன உங்கள் அதிகாரத்தில் நிலைநின்றிருக்கையேயாம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அப்பால் அவரவர் விரும்பும் விருப்பங்களையெல்லாம் நிறைவேற்றிக்கொடுப்பதில் ஊக்கமுற்ற சிறந்த மனமுடைய காமதேனு தன் ஸந்ததிகளுடன வந்து கோபால உருவங்கொண்ட ஸாக்ஷாத் பரம புருஷனாகிய ஸ்ரீக்ருஷ்ணனை நமஸ்கரித்து மொழிந்தது.

காமதேனு சொல்லுகிறது:—க்ருஷ்ண! க்ருஷ்ண! ஜகத்திற்கெல்லாம் அந்தராத்மாவாயிருப்பவனே! ஜகத்

காரணனே! அளவிறந்த கல்யாண குணங்களுடையவனே! யோகேஶ்வரர்களுக்கும் ஈஶ்வரனே! நாங்கள் உலகங்களுக்கெல்லாம் நாதனாகிய உன்னால் ஸநாதனுடையவர்களாகச் செய்யப்பட்டோம். தன்னுடையவர்களைக் கைவிடாது ரக்ஷிக்கையாகிற உன் தன்மை எங்களிடத்தில் வெளியாயிற்று. நீயே எங்களுக்கு மேலான தெய்வம். ஜகத்திற்கெல்லாம் நாதனே! பசுக்களுக்கும் ப்ராஹ்மணர்களுக்கும் தேவதைகளுக்கும் ஸாதுக்களுக்கும் க்ஷேமத்தின்பொருட்டு நீயே இந்த்ரனாயிருப்பாயாக. அவதாரங்களுக்கு அதிகாரங் கொடுப்பவனாகிய ப்ரஹ்மதேவனால் தூண்டப்பட்ட நாங்கள் உன்னையே இந்த்ரனாக அபிஷேகஞ் செய்யப்போகிறோம். ஸர்வஜகத்ஸ்வரூபனே! நீ பூமியின் பாரத்தை நீக்கும் பொருட்டு அவதரித்த பரமபுருஷனல்லவோ. ஆகையால் நீயே இந்த்ரனாயிருப்பதற்குரியவனன்றி மற்றவருமல்லர்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் காமதேனு ஸ்ரீக்ருஷ்ணனை ப்ரார்த்தித்துத் தன் பால்களால் அபிஷேகஞ் செய்தது. அங்ஙனமே இந்த்ரனும் அதிதி முதலிய தேவமாதாக்களால் தூண்டப்பட்டுத் தேவதைகளோடும் ரிஷிகளோடுங்கூடி ஐராவதத்தின் துதிக்கையால் கொண்டு வரப்பட்ட ஆகாசகங்கையின் ஜலங்களால் ஸ்ரீக்ருஷ்ணனுக்கு அபிஷேகஞ்செய்து கோவிந்தனென்று பெயரும் இட்டான். அவ்விடம் வந்திருந்த தும்புரு நாரதர் முதலியவர்களும் கந்தர்வர் வித்யாதரர் ஸித்தர் சாரணர் இவர்களும் உலகங்களின் பாபங்களைப் போக்கவல்லதாகிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய புகழைப் பாடினார்கள். அரம்பை முதலிய தெய்வமடந்தையர்கள் ஸந்தோஷமுற்று நன்றாக ஆடினார்கள். தேவக்கூட்டங்

களில் தலைமையுள்ள தேவர்கள் அவனை ஸ்தோத்ரஞ் செய்தார்கள்; மற்றும், அவனமேல் நாற்புறத்திலும் பூமழை பொழிந்தார்கள். மூன்று லோகங்களும் மிகுந்த ஆநந்தம் அடைந்தன. பசுக்கள் பூமியைப் பால்களால் நனைத்தன. ஆறுகள் பால் தயிர் முதலிய பல ரஸங்களைப் பெருக்கின. வ்ருக்ஷங்கள் தேன்களைப் பெருக்கின. பர்வதங்களில் ஓஷதிகள் உழுது பயிரிடாமல் தானே வளர்ந்தன. மற்றும், பர்வதங்கள் மேலான ரத்னங்களை வெளித் தோன்றும்படி தரித்தன. ஸ்ரீக்ருஷ்ணன் அபிஷேகஞ்செய்யப்பெற்று இந்தரனுயிருக்கையில் கொடுந்தன்மையுடையவைகளான இவ்வுலகத்திலுள்ள ப்ராணிகள் அனைத்தும் வைரமற்றிருந்தன. அந்தத் தேவேந்த்ரன் இங்ஙனம் பசுக்களுக்கும் கோகுலத்திற்கும் ப்ரபுவாகிய ஸ்ரீக்ருஷ்ணனுக்குக் கோவிந்தாபிஷேகஞ்செய்து அவனால் அனுமதி கொடுக்கப்பெற்றுத் தேவாதிகளுடன் ஸ்வர்க்கலோகம் போய்ச்சேர்ந்தான. இருபத்தேழாவது அத்யாயம் முற்றிற்று.

ஸ்ரீக்ருஷ்ணன் வருணலோகத்தினின்று நந்தனைத் திருப்பிக்கொண்டு வருதலும், வருணன் ஸ்ரீக்ருஷ்ணனை ஸ்தோத்ரஞ் செய்தலும், ஸ்ரீக்ருஷ்ணன் கோபர்களுக்குத் தன்வைகுண்டலோகத்தைக் காட்டுதலும்

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஒருகால் நந்தன் ஏகாதசியினன்று ஆஹாரம் புசியாதிருந்து பரமபுருஷனை நன்றாக ஆராதித்து மற்றைநாள் த்வாதசி ஒருகலையளவு மாத்ரமே மிகுந்திருக்கையால் அதற்குள்பாரணைசெய்ய வேண்டுமென்னும் ஆவலால் ஆஸுரவேளையான அர்த்த

ராத்ரியில் எழுந்து பொழுது தெரியாமல் அப்பொழுதே ஸ்னானஞ் செய்வதற்காக யமுனையின் ஜலத்தில் இழிந்தான். அங்ஙனம் ராத்ரியில் நீராடவிழிந்த அந்நந்தனை வருணனுடைய ப்ருத்யனாகிய ஓரஸுரன் பிடித்துவருணனண்டைக்குக் கொண்டுபோய்ச் சேர்த்தான். அப்பால் பொழுது விடிகையில் கோபர்கள் நந்தனைக் காணாமல் 'க்ருஷ்ணா! ராமா!' என்று முறையிட்டார்கள். அப்பொழுது ஸ்ரீக்ருஷ்ணபகவான் அவர்கள் முறையிடுவதைக் கேட்டுத் தந்தையாகிய நந்தனை வருணன் கொண்டுபோனானென்பதையும் அறிந்து தன்னுடையவர்க்கு அபயங்கொடுப்பவனும் ஸமர்த்தனுமாகையால் அவ்வருணனிடஞ் சென்றான். லோகபாலனாகிய அவ்வருணனும் இருடீகேசனாகிய பரமபுருஷன் தன்னிடம் வந்திருப்பதைக் கண்டு அவனுடைய காட்சியே பெரிய உத்ஸவமாகப்பெற்றுப் பூஜைக்கு வேண்டிய கருவிகளை அமிதமாகக் கொண்டுவந்து அவனைப் பூஜித்து இங்ஙனம் மொழிந்தான்.

வருணன் சொல்லுகிறான்:—ப்ரபூ! இப்பொழுது நான் தேஹந்தரித்தவனானேன். தேஹம்படைத்தமைக்குப் பயன் உன்னைக்கண்டு பூஜிக்கையேயல்லவா? ஆகையால் இப்பொழுதுதான் நான் தேஹம் படைத்தமைக்குப் பயன் பெற்றேன். மற்றும், இப்பொழுதுதான் எனக்குப் புருஷார்த்தம் கைகூடிற்று. நான் ரத்னங்களுக்கு விளைநிலமாகிய ஸமுத்ரத்திற்கு நாதனாயிருந்தும் இதற்கு முன்பு நான் இத்தகைய பயனபெறவில்லை. உன்னைக் கண்டமையால இப்பொழுது என்கண்கள் பயனபெற்றன. என்னுடைய வாக்கும் உன்னைப் புகழ்கையால் இப்பொழுது பயன்பெற்றது. ப்ரபூ! ஷாட்குண்யபூர்ணனே! உன்பாதங்களைப் பணிந்தவர்கள் பலரும்

ஸம்ஸாரமார்க்கத்தின் அக்கரையாகிய உன்னை அடைந் தார்கள். உன்னுடைய காட்சியைப் பெற்ற நான் இந்த ஸம்ஸாரத்தினின்று விடுபட்டு உன்னைப் பெறுவேனென் பதைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? ஷாட்குண்யபூர் ணனும் ஸ்வரூபத்தினாலும் குணங்களாலும் அளவற்ற பெருமையுடையவனும் உலகத்திலுள்ள எல்லாப்பொருள் களிலும் உள்புகுந்து அவற்றின் குணங்கள் தனமேல் தீண்டப்பெறுமல் அவற்றை நியமித்துத் தரித்துக் கொண்டிருப்பவனுமாகிய உனக்கு நமஸ்காரம். ஜீவ லோகத்தின் ஜ்ஞானத்தைப் பலவாறு மாற்றுந் தன்மை யுடைய மாயையின் பெயருங்கூட உன்னிடத்தில் செவிப் படாது. இனி அதன்காரியம் உனனிடத்தில் புலப்படா தெனபதைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? மற்றும், நீ தன ஸங்கல்பத்தினுல் ஏற்றுக்கொண்ட அப்ராக்ருத மான திவ்யமங்கள விக்ரஹமுடையவன். இத்தகைய உனக்கு நமஸ்காரம். என பணியாளன் கார்யஞ்செய்யும் முறை அறியாத மூடனுகையால் உன் தந்தையென் பதை அறியாமல் இவனைக் கொண்டுவநது விட்டான். இவன் உன் ப்ரபாவத்தை அறியான. நிக்ரஹஞ்செய்ய வும் அனுக்ரஹஞ் செய்யவும் வல்லவனே! நீ இதைப் பொறுததருள்வாயாக. உன் தந்தையாகிய இந்நந்தனைக் கொண்டுவநதமையால் எவர்க்கும் கிடைக்க அரிதான உனகாட்சி எனக்கு நேரிட்டது. என ப்ருத்யன் செய்த அபராதமும பெரிய நன்மையின்பொருட்டே ஆயிற்று. கோவிந்தனே! தநதையிடத்தில் பேரனபுடையவனே! உன தநதை இதோ இருக்கின்றுன். இவனை அழைத் துககொண்டு போவாயாக. ப்ரபூ! உன் ப்ரஜைகளாகிய நாங்கள் அபராதஞ் செய்திருப்பினும் அனுக்ரஹிக்கத் தகுந்தவர்களே.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஸர்வலோகேஶ்வரனான ஸ்ரீக்ருஷ்ணபகவான் இங்ஙனம் வருணனால் அருள்புரியும்படி வேண்டப்பட்டுத் தன் தந்தையை அழைத்துக்கொண்டு பந்துக்களுக்கு ஸந்தோஷத்தை விளைப்பவனாகித் திரும்பிவந்து சேர்ந்தான. நந்தகோபனென்றால் தான என்றும் காணாத வருணனுடைய பெரிய ஐஶ்வர்யத்தையும் அந்த வருணாதிகள் ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில வணக்கத்துடன இருப்பதையும் கண்டு மிகவும வியப்புற்று அதைத் தன பந்துக்களுக்குச் சொன்னான. மன்னவனே! பிறகு அந்நந்தனுடைய பந்துக்களான கோபர்கள் அந்த ஸ்ரீக்ருஷ்ணனை ஸாக்ஷாத் பரமபுருஷனாக நினைத்து ஆவலுற்ற மதியுடையவர்களாகி 'ஸர்வேஶ்வரனாகிய இந்த ஸ்ரீக்ருஷ்ணன இந்த்ரியங்களுக்கு விஷயமாகாத தன ஸ்வரூப ரூப குண விபூதிகளின் நிலைமையை நமக்குக் காண்பிப்பானா?' என்று நினைத்தார்கள். எல்லாவற்றையும் அறியுந்திறமையுடைய ஸ்ரீக்ருஷ்ணன தன்னுடையவர்களான கோபர்கள் இங்ஙனம் நினைப்பதைத் தானே அறிந்துகொண்டு அவர்களுடைய மனோரதம் ஸித்திக்கும்பொருட்டு மன இரக்கத்துடன தனக்குள் இங்ஙனம் சிந்தித்தான. 'கோபஜன்மம் பெற்ற இந்த ஜனங்கள் இவ்வுலகத்தில அவித்யை காமம கர்மம் இவைகளால் மேன்மையும தாழ்மையும நடுத்தன்மையுமான தேவர் திர்யக்கு மனுஷ்யர் முதலிய தேஹங்களில் நுழைகையாகிற கதிகளில் சுழன்றுகொண்டு என்னுடைய அஸாதாரணமான நிலைமையை அறிகிறதில்லை. இது என்ன வருத்தம்! ஆகையால் இவர்களுக்கு நானே இரங்கவேண்டும்' என்று சிந்தித்துப் பேரருளாளனும் ஜ்ஞானாதிகுணஸாகரனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் விகாரமற்றதும் என்றுமழியாமல் அனா

வற்ற ஞானத்திற்கு ஆதாரமாயிருப்பதும் அத்தகைய ஞானமே வடிவாயிருப்பதும் தேசகாலவஸ்து பரிச்சேதங்களற்றதும் அளவற்ற பெருமையுடையதும் ஸ்வயம்ப்ரகாசமும் ஆநியந்தங்களற்றதுமாகிய தன்ஸ்வரூபத்தையும் அத்தகையதும் ப்ரக்ருதிமண்டலத்திற்கு அப்புறத்திலிருப்பதும் ஸமாதியில் நிலைநின்ற முனிவர்களால் ஸத்த்வரஜஸ்தமஸ்ஸுக்களென்கிற மூன்று குணங்களே வடிவமாகப்பெற்ற ப்ரக்ருதிஸம்பந்தம் கழிந்தபினபு காணத்தக்கதுமாகிய தன்வாஸஸ்தானமான பரமபதமென்னும் வைகுண்டலோகத்தையும் அவர்களுக்குக் காட்டினான். முனபு அக்ரூரர் எவ்விடத்தில் இழிந்து ஸ்னானஞ் செய்யும்பொழுது ப்ரஹ்மலோகத்தைக் கண்டாரோ அந்த ப்ரஹ்மஹ்ரதத்தில் ஸ்ரீக்ருஷ்ணனால் அவர்கள் கொண்டுபோய் ஸ்னானஞ் செய்விக்கப்பெற்று அதினின்று கரையேறி (அவ்வளவில் ஸமாதிநிஷ்டர்களாகி) ப்ரஹ்மலோகத்தைக் கண்டார்கள். நந்தன் முதலிய அந்தக் கோபர்கள் ப்ரஹ்மலோகத்தைக் கண்டு மிகவும் ஆநந்தஸாகரத்தில் முழுகி ஸ்ரீக்ருஷ்ணனை நன்றாகத் துதித்து வெகுமதித்து மிக்க வியப்புற்றார்கள். இருபத்தெட்டாவது அத்யாயம் முற்றிற்று.

ஸ்ரீக்ருஷ்ணன் கோபிகைகளுடன் விளையாட விரும்பி வேணுகானஞ்செய்ய அதைக்கேட்டுக் கோபிகைகள் அவ்விடம் போய் அவனுடன் கலந்து விளையாடுதல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—பிறகு ஸ்ரீக்ருஷ்ணபகவான் சரத்ருது வந்திருக்கையில் மல்லிப்பூக்கள் மலர்ந்து அழகாயிருக்கின்ற அக்காலத்துராத்ரிகளைக் கண்டு கேவலம் தன ஸங்கல்பத்தையே காரணமாகக்கொண்டு கோபிமார்களுக்குத் தான் முன்பு சொன்னவண்ணமே அவர்

களுடன் கலந்து விளையாட மனங்கொண்டான். அப்பொழுது அச்சரத்காலத்து சந்த்ரன் நெடுங்காலம் தேசாந்தரஞ் சென்று திரும்பி வந்து காட்சி கொடுக்கின்ற காதலன் தன்காதலியின் முகத்தைக் குங்குமத்தினால் பூசுவதுபோலக் கிழக்குதிக்கின் முகத்தை மிகவும் இனியவைகளான தன் கிரணங்களாகிற கைகளால் உதயராகமாகிற குங்குமத்தினால் பூசுகின்றவனும் ஓஷதிகளுக்கும் மனுஷ்யர்களுக்கும் உள்ள வருத்தங்களைப் போக்குகின்றவனுமாகி உதித்தான். ஸ்ரீக்ருஷ்ணன் பரிபூர்ணமண்டலத்துடன் உதித்திருப்பவனும் குங்குமம்போலச் சிவந்திருப்பவனும் குங்குமத்தினால் சிவந்த மாதரார்முகம்போலத் திகழ்கின்றவனுமாகிய சந்த்ரனையும் அந்தச் சந்த்ரனுடைய இனிய கிரணங்கள் படிந்து ரமணீயமாயிருக்கின்ற வனத்தையும் கண்டு அவ்யக்த மதுரமாயிருக்குமாறும் கோபஸ்த்ரீகளின் மனத்தைப் பறிக்குமாறும் வேணுகானஞ் செய்தான். கோபஸ்த்ரீகள் மன்மதவிகாரத்தை விளைக்கின்ற அவ்வேணுகானத்தைக் கேட்டு ஸ்ரீக்ருஷ்ணனால் இழுக்கப்பட்ட மனமுடையவர்களாகி ஒருவர் முயற்சி மற்றொருவர்க்குத் தெரியாதபடி விரைந்து நடக்கையால் குண்டலங்கள் அசையப் பெற்றுத் தங்கள் மனத்திற்கினியனாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் எவ்விடத்தில் இருக்கிறானோ அவ்விடம் வந்து சேர்ந்தார்கள். சில கோபிமார்கள் பால் கறந்துகொண்டேயிருக்கையில் வேணுகானங் கேட்டவுடனே பேராவலுற்றுப் பால் கறப்பதைத் துறந்து போனார்கள். வேறுசிலர் பாலைக்காய்ச்சுவதற்காக அடுப்பேறவைத்து அது பொங்கிவழியுமென்பதைப் பொருள் செய்யாமலே அதை விட்டுப் போனார்கள். வேறு சிலர் அடுப்பில் பக்வமான கோதுமைக்

கஞ்சியை இறக்காமலே விட்டுப் போனார்கள். வேறு சிலர் கணவன் குழந்தை முதலியவர்க்கு அன்னம் பரிமாறிக்கொண்டிருப்பதை அப்படியே விட்டுப்போனார்கள். வேறுசிலர் குழந்தைகளுக்கு முலைப்பால் கொடுத்துக்கொண்டிருப்பதை அப்படியே விட்டுப்போனார்கள். வேறுசிலர் கணவர்களுக்குச் சுஶ்ரூஷை செய்துகொண்டிருப்பதை அப்படியே விட்டுப் போனார்கள். சாப்பிட்டுக்கொண்டிருந்த சிலர் இலையில் அன்னத்தை அப்படியே விட்டுப்போனார்கள். உள்ளே மெழுகிக்கொண்டிருந்த சிலர் மெழுகுவதையும், விளக்கிக்கொண்டிருந்த சிலர் விளக்குவதையும், கண்களுக்கு மையிட்டுக்கொண்டிருந்த சிலர் மையிடுவதையும் துறந்து போனார்கள். சிலர் போகிற வேகத்தில் ஒன்றுந் தெரியாமல் ஆடையாபரணங்களை மாறுபாடாகத் தரித்து ஸ்ரீக்ருஷ்ணனண்டைக்குச் சென்றார்கள். அவர்களில் சிலர் கணவர் தந்தைமார் உடன் பிறந்தவர் பந்துக்கள் இவர்களால் தடுக்கப்பட்டும் ஸ்ரீக்ருஷ்ணனால் மனம் பறியுண்டவர்களாகையால் அவர்களைக் கடந்து திரும்பாமலே போய்ச் சேர்ந்தார்கள். சிலர் வீட்டிற்குள் தடுக்கப்பட்டு வெளிப்பட முடியாமல் ஸ்ரீக்ருஷ்ணனைப் பற்றின பாவனை என்றும் மாறாதிருப்பவர்களாயினும் அப்பொழுது கண்களை மூடிக்கொண்டு அவனை விசேஷமாக த்யானித்தார்கள். அவர்கள் வருந்தியும் பொறுக்க முடியாத தங்கள் அன்பனுடைய பிரிவினாலுண்டாகும் பெருந்துயரத்தை அனுபவிக்கையால் பாபகர்மங்களும் த்யானத்தினால் நெஞ்சில் தோற்றின அவ்வச்சுதனை அணைக்கையாலுண்டான ஸந்தோஷத்தை அனுபவிக்கையால் புண்யகர்மங்களும் க்ஷீணிக்கப்பெற்றார்கள். அந்தக் கோபிமார்கள் பரமாத்மாவான ஸ்ரீக்ருஷ்ணனையே கள்ளபுருஷனென்னும் புத்தியினால் புணர்ந்தவர்

களாயினும் தத்க்ஷணமே ஸம்ஸாரபந்தத்திற்கு வரான புண்யபாபகர்மங்களெல்லாம் க்ஷீணிக்கப்பெற்று ஸத்த்வாதிகுணமயமான தேஹத்தைத் துறந்தார்கள்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான் :—முனிவரே! கோபிகைகள் ஸ்ரீக்ருஷ்ணனைத் தங்கள் மனத்திற்கினிய புருஷனென்று அறிந்தார்களேயன்றி அவனைப் பரப்ரஹ்மமென்று அறிந்தவர்களல்லர். அவர்கள் சப்தாதி விஷயங்களில் தாழ்ந்த மனமுடையவர்களாகி அவனை விரும்பினார்களேயன்றி வேறில்லை. இத்தகையர்களான அந்தக் கோபிமார்களுக்கு ஸத்த்வாதி குணங்களின் பரிணாமமான தேஹஸம்பந்தம் எங்ஙனம் நீங்கிற்று ?

ஸ்ரீசுகர் சொல்லுகிறார் :- இதைப்பற்றி நான் உனக்கு முன்னமே மொழிந்திருக்கின்றேன். சிசுபாலன் ஸ்ரீக்ருஷ்ணனை த்வேஷித்துக்கொண்டிருப்பினும் ஸித்திபெற்றான். அந்த ஸ்ரீக்ருஷ்ணனுக்கு அன்பர்களான கோபிகைகள் ஸித்தி பெறுவதைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? ஈச்வரன் ஜீவனைப்போலக் கர்மத்தினால் விளையும் பிறவி முதலிய விகாரங்களுடையவனல்லன்; தேசகாலவஸ்துபரிச்சேதங்களற்றவன். வாக்குக்கும் மனத்திற்கும் எட்டாத மஹிமையுடையவன்; ஸத்த்வரஜஸ்ஸு முதலிய ப்ராக்ருதகுணங்களற்றவன்; கல்யாணகுணங்களுக்கு விளைநிலமாயிருப்பவன். இத்தகையனான பகவான் இவ்வுலகத்தில் தோன்றுவது ப்ராணிகளின் க்ஷேமத்திற்காகவே. காமம் கோபம் பயம் ஸ்னேஹம் நம்மோடொக்க ஒரு குலத்தில் பிறந்தவனென்னும் நினைவு பக்தி ஆகிய இவற்றில் ஏதேனுமொன்றை ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் என்றும் மாறாமல் நடத்திக் கொண்டு வருவார்களாயின், அவர்கள் அவனிடத்தில் மாறாத மதியுடையவர்களாகி மோக்ஷத்தைப் பெறுகின்றார்கள். ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் ஏதேனுமொருவிதத்

தில் ஸம்பந்தமுடைய ஸ்தாவராதிகளும் மோக்ஷம் அடைவதைப்பற்றி நீ வியப்புறவேண்டியதில்லை, அவன் இந்த்ரியங்களுக்கு விஷயமாகாதவன். தன்னிடத்தில் காமம் கோபம் முதலியன செய்பவர்களுடைய இந்த்ரியங்களையும் அவன் வேறு விஷயங்களில் போகவொட்டாமல் தன்னிடத்திலேயே நிலைநிறுத்துந்திறமையுடையவன்; யோகேச்வரர்களுக்கும் ஈச்வரன்; ஜ்ஞானாதி குணங்களுக்கு விளைநிலமாயிருப்பவன். ஆகையால் அவன் விஷயத்தில் சேராதது எதுவுமே இல்லை. பிறகு ஸ்ரீக்ருஷ்ணபகவான் அங்ஙனம் வந்திருக்கின்ற அந்தக் கோபிகைகளைக் கண்டு பேசுவோர்களில் சிறந்தவனாகையால் அழகிய உரைகளால் அவர்களை மயங்கச் செய்பவனாகி மேல்வருமாறு கூறினான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:— மிகுந்த பாக்யமுடையவர்களே! உங்களுக்கு நல்வரவா? கோகுலம் க்ஷேமமாயிருக்கின்றதல்லவா? நீங்கள் இப்பொழுது எதற்காக வந்தீர்களோ அந்தக் காரணத்தைச் சொல்வீர்களாக. உங்களுக்கு என்ன ப்ரியம் செய்யவேண்டும்? இப்பொழுது பயங்கரமான இரவாயிருக்கிறது. அதிலும் துஷ்ட ஜந்துக்கள் உலாவும் ஸமயம் இது. ஆகையால் நீங்கள் இடைச்சேரிக்குத் திரும்பிப் போவீர்களாக. அழகிய இடையுடையவர்களே! பெண்களாகிய நீங்கள் இச்சமயம் இங்கிருக்கலாகாது. உங்கள் தாய்தந்தைகளும் புதல்வர்களும் உடன்பிறந்தவர்களும் கணவர்களும் உங்களைக் காணாமல் தேடித் தடுமாறுவார்களல்லவா? அங்ஙனம் பந்துக்களுக்குப் பயத்தை விளைக்கவேண்டாம். இவ்வனம் பூத்து அழகாயிருக்கிறது; மற்றும் பூர்ணசந்த்ரனுடைய கிரணங்கள் படர்ந்து ரமணீயமாயிருக்கின்றது; யமுனையின் காற்றினால் மெல்ல மெல்ல

அசைகின்ற வ்ருக்ஷங்களின் தளிர்களால் சோபித்துக் கொண்டிருக்கின்றது. இத்தகைய இவ்வனத்தின் சோலையைக் கண்டீர்களல்லவா? இனித் திரும்பிப் போவீர்களாக. தாமதஞ் செய்யவேண்டாம். சேரிக்குப் போய்ச் சேருங்கள். பதிவ்ரதைகளாகிக் கணவர்களுக்குச் சுஶ்ரூஷை செய்வீர்களாக. முன் குழந்தைகளும் பின்குழந்தைகளும் உங்களைக் காணாமல் அழும். அவற்றிற்குப் பால்கொடுப்பீர்களாக. கன்றுகள் கதறும். அவற்றை ஊட்டவிட்டுப் பசுக்களைக் கறப்பீர்களாக. அல்லது நீங்கள் என்னிடத்தில் ஸ்னேஹத்தினால் கட்டுண்ட மனமுடையவர்களாகி வந்திருப்பீர்களாகின், அப்பொழுது நீங்கள் வந்தது யுக்தமே. ஏனென்றால், ஸமஸ்த ஜந்துக்களும என்னிடத்தில் ப்ரீதியுடையவைகளாகவே இருக்கின்றன. ஸர்வாந்தர்யாமியும ஸர்வஸாக்ஷியுமாகிய என்னிடத்தில் ஸமஸ்தஜந்துக்களுக்கும பொதுவான ப்ரீதி உங்களுக்கும் இருக்குமாகின் அது யுக்தமே. கபடமில்லாமல் பர்த்தாவுக்குச் சுஶ்ரூஷை செய்கையே ஸ்த்ரீகளுக்கு மேலான தாமம். நல்லியர்கையுடையவர்களே! மற்றும அந்தப் பர்த்தாவின தந்தை உடன பிறந்தவர் முதலிய பந்துக்களுக்குச் சுஶ்ரூஷை செய்கையும பிள்ளை பெண் முதலிய குழந்தைகளைப் போஷிக்கையும் ஸ்த்ரீகளுக்கு மேலான தாமம். கணவன துராசாரமுடையவனாயினும், குரூபியாயினும் கிழவனாயினும், ரோகியாயினும், பணமில்லாதவனாயினும்; மஹாபாதகியல்லாதிருப்பானாயின், புண்ய லோகங்களை விரும்பும் பெண்கள் அவனைத் துறக்கலாகாது. மற்றும், குலத்தில் பிறந்த மடந்தைக்குக் கணவன் இருப்பினும் இல்லாமற்போயினும வேறு புருஷனுடன புணர்ச்சியென்பது ஸ்வர்க்கத்திற்கிடமன்று; புகழுக்குமிடமன்று, மிகவும அற்பத்தனத்திற்கே இடமாயிருக்கும்: துக்

கத்தைவிளைக்கும்; பயத்திற்கும் இடம்; எல்லா இடங்களிலும் நிந்திக்கப்பட்டது. ஆகையால் நீங்கள் கணவர்களைத் துறந்து என்னுடன் கலந்தனுபவிக்கவிரும்புவது யுக்தமன்று. ஒருகால் 'ஜகத்திற்கெல்லாம் பதியாகிய நீ எங்களுக்கும் பதியே' என்று நினைப்பீர்களாயின் அது யுக்தமே. நான் என்றும் அழியாதவன். நான் நிஷ்காரணமாகவே ஸமஸ்தஜந்துக்களுக்கும் பதியும் பந்துவுமாயிருப்பவன். ஆயினும் ஸ்வரூபரூபகுணவிபூதிகளைக் கேட்பதனாலும் காண்பதனாலும் த்யானிப்பதனாலும் என் குணங்கள் என் நாமங்கள் இவற்றை வாயால் சொல்லுவதனாலும் என்னிடத்தில் எவ்வளவு ப்ரீதி உண்டாகுமோ, அவ்வளவு ப்ரீதி என்னோடு கலந்திருப்பதனால் உண்டாகாது. ஆகையால் நீங்கள் வீட்டிற்குச் செல்வீர்களாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—கோபிகைகள் இங்ஙனம் கோவிந்தன் மொழிந்த அனிஷ்டமான வசனத்தைக் கேட்டுத் தங்கள் நினைவு கைகூடப்பெறாமையால் வருந்தி எல்லையில்லாத சிந்தையில் ஆழ்ந்தார்கள். அவர்கள் முகங்களைக் கவிழ்த்துச் சோகத்தினால் வருகின்ற உஷ்ணமான மூச்சுக்காற்றுக்களால் கொவ்வைகனிவாய்கள் உலரப்பெற்று இடக்கால்கட்டைவிரலால் பூமியைக் கீறுபவர்களும் கண்மையைக் கரைத்துக்கொண்டு பெருகி வருகின்ற கண்ணீர்களால் கொங்கைமேல் அணிந்த குங்குமத்தின் குழம்புகளை அலம்புவபவர்களும் பெருந்துக்கமாகிற பாரமுடையவர்களுமாகி வெறுமனே நின்றிருந்தார்கள். அனந்தரம் ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில்மிகுந்த அனுராகமுடையவர்களும் அவனுக்காக மற்ற மனோரதங்களையெல்லாம் துறந்தவர்களுமாகிய அந்தக்கோபிகைகள் அழுதகண்ணீர்களால் ஓயாமல் மறைக்கப்

பட்டுக் காட்சியற்றிருக்கின்ற கண்களை மெல்லத் துடைத்துக்கொண்டு கொஞ்சங்கோபத்தினால் தழுதழுத்த மொழியுடையவர்களாகித் தங்களுக்கு மிக்க அன்பனாயினும் அன்பற்ற சத்ருவைப்போல மொழிகின்ற அந்த ஸ்ரீக்ருஷ்ணனைக் குறித்து மேல் வருமாறு கூறினார்கள்.

கோபிகைகள் சொல்லுகிறார்கள்:—ப்ரபூ! நீ இங்ஙனம் கொடுமையாகக் கூறுவது யுக்தமன்று. ஒருவர்க்கும் பிடிகொடாமல் ஸ்வதந்த்ரமாயிருப்பவனே! ஸமஸ்த விஷயங்களையும் துறந்து உன்பாதமூலங்களைப் பணிய வந்திருக்கின்றோம். ஆகையால் நீ எங்களைத் துறக்கலாகாது. எங்களுக்கு நீ அனுகூலனாயிருக்கவேண்டும். ஆதிபுருஷனாகிய பகவான் மோக்ஷத்தில விருப்பத்துடன் தன்னைப் பணிகின்றவர்களை எங்ஙனம் கைவிடமாட்டானோ, அங்ஙனமே நீயும் எங்களைக் கைவிடலாகாது. ஓ க்ருஷ்ணனே! தர்மங்களை உணர்ந்த நீ கணவன் குழந்தை நண்பர் முதலியவர்களுக்குத் தொடர்ந்துசுஶ்ரூஷை செய்கையே பெண்களுக்கு மேலான தர்மமென்று மொழிந்தனையே. இது நாங்கள் உன்னிடத்தில் தர்மோபதேசங் கேட்க வந்திருப்போமாயின இப்படியே இருக்கலாம். ஜகதீசனே! நாங்கள் இப்பொழுது உன்னிடத்தில் உபதேசங் கேட்க வரவில்லை. நீ எங்களுக்கு மிக்க அன்பனென்று உன்னுடன் கலந்து களிக்கவந்திருக்கின்றோம். 'நான் உங்களுக்கு அன்பனென்பது எங்ஙனம் தெரியும்?' என்னில், கேட்பாயாக. நீ ஸமஸ்தப்ராணிகளுக்கும் அந்தராத்மாவாகி நிஷ்காரணபந்துவுமாயிருப்பவனல்லவா? ஆகையால் நீ எங்களுக்கு அன்பனென்பதைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? மற்றும், நீ கணவன் குழந்தை நண்பன் முதலியவர்களைத் தொடர்ந்து சுஶ்ரூஷை செய்கையே பெண்களுக்கு உரியதர்மமென்று

மொழிந்தது யுக்தமே. அங்ஙனம் தொடரத்தகுந்தவர்களென்று உபதேசிக்கப்படுகிற கணவன் முதலிய ஸமஸ்த பந்துக்களும் தானேயாயிருக்கின்ற உன்னிடத்திலேயே அவர்களிடத்தில் செய்யும் சுஶ்ரூஷைகளெல்லாம் நடக்கட்டும். நீ ஸமஸ்த ஆத்மாக்களுக்கும் அந்தராத்மாவும மிகுந்த அன்பனுமாயிருப்பவனல்லவா? ஆகையால் உன்னைப் பணிய வந்திருக்கின்ற எங்களை நீ துறக்கலாகாது. சாஸ்த்ரங்களைக் கற்றறிந்த நிபுணர்கள் அந்தராத்மாவாயிருப்பவனும் என்றும் அன்பனுமாகிய உன்னிடத்திலேயே ப்ரீதியைச் செய்கின்றார்கள். துக்கத்தை விளைப்பவர்களும் காரணத்தைப்பற்றி ஏற்பட்டவர்களுமான கணவர் பிள்ளை முதலியவர்களால் என்ன ப்ரயோஜனம்? ஆகையால் எங்களுக்கு அருள் புரிவாயாக. நெடுநாளாக உன்னிடத்தில் வளர்த்திக்கொண்டுவந்த எங்களாசையை வீண்செய்யவேண்டாம், வேண்டும் வரங்களைக் கொடுப்பவனே! ஜகதீஶ்வரனுகையால் எல்லாத்திறமைகளும அமைந்தவனே! தாமரைக் கண்ணனே! எங்கள் விருப்பத்தையும் நிறைவேற்றுவாயாக. வீட்டுக் கார்யங்களில் ஊக்கமுற்றிருந்த எங்கள் மனத்தை நீ அனுயாஸமாகப் பறித்துக்கொண்டனை. மற்றும், வீட்டு வேலைகளில் தொடர்ந்திருந்த எங்கள் கைகளும் அவ்வேலைகளைச் செய்யவொட்டாதபடி ஸ்வாதீனமற்றவைகளாகச் செய்யப்பட்டன. அங்ஙனமே எங்கள்பாதங்களும் உன்பாதமூலத்தினின்று அப்புறம் ஓரடியுங்கூட அசையமாட்டாதிருக்கின்றன. எங்களை இடைச்சேரிக்குத் திரும்பிப்போகும்படி நியமிக்கின்றனை. இத்தசையிலிருக்கின்ற நாங்கள் எங்ஙனம் சேரிக்குத் திரும்பிப்போவோம்? இதற்குமேல் நாங்கள் என் செய்வோம்? 'ஆனால் நான் உங்களுக்குச் செய்யவேண்டியது என்?' என்றால், சொல்லுகிறோம. கேட்பாயாக. ஸ்ரீக்ரு

ஷ்ணு ! புன்னகையோடுகூடின உன்கண்ணோக்கத்தினு லும் மதுரமான உன்வேணுகானத்தினுலும் எங்களுக்கு உண்டாயிருக்கின்ற காமவிகாரமாகிற அக்னியை உன் கோவைக்கனிவாயின் அம்ருதவெள்ளத்தினுல் அணைப் பாயாக. நண்பனே! இப்படி செய்யாது போவாயாயின் நாங்கள் உன் பிரிவாகிற அக்னியால் தேஹம் தஹிக்கப் பெற்று உன்னையே த்யானித்து உன்பாதாரவிந்தங் களின் பதவியைப் பெறுவோம். தாமரைக்கண்ணனே! 'உங்கள் கணவர்களே தங்கள் வாயம்ருதத்தினுல் உங் கள் காமாக்னியை அணைப்பார்களே' என்று நினைப்பா யாயின், சொல்லுகிறோம், கேட்பாயாக. அரண்யத்தில் வஸிக்கின்ற முனிவர்களுக்கு அனபனே! ஸ்ரீமஹாலக்ஷ் மிக்கு மஹோத்ஸவத்தை விளைப்பதாகிய உன்பாதமூலத் தை நாங்கள் எப்பொழுது ஸ்பர்சித்தோமோ, நீயும் எங் களை எப்பொழுது அபிநந்தனஞ்செய்தனையோ, அந் நாள்முதலாக நாங்கள் இதரபுருஷர்களின் முனனிலை யில் நிற்கவுங்கூட வல்லமையற்றிருக்கின்றோம். அற்பர்க ளாகிய மற்ற புருஷர்கள் எங்களுக்கு ருசிக்கவில்லை. எவ ளுடைய கண்ணோக்கத்தை விரும்பி ப்ரஹ்மா முதலிய மற்றதேவதைகள் அனைவரும் தவஞ்செய்து ப்ரயாஸப் படுகிறார்களோ, அப்படிப்பட்ட ஸ்ரீமஹாலக்ஷ்மி உன் மார்பில் மற்றவருடைய இடைஞ்சலில்லாமல் உயர்ந்த பதவியைப் பெற்றும் உன்ப்ருத்யர்கள் அனைவரும் விரும் புகிற உன் பாதாரவிந்தத்தின் தூளியைத் துளஸியோ டொக்கத் தானும் அனுபவிக்கவேண்டுமென்று ஆசைப் படுகிறாளல்லவா? அவளைப்போல நாங்களும் உன்பா தாரவிந்தங்களின் தூளியைப் பணிய வந்திருக்கின்றோம். துக்கங்களைப் போக்குந்தன்மையனே! உன்னைப் பணிய வேண்டுமென்றே விரும்புகின்ற நாங்கள் வீடு வாசல்க

ளைத் துறந்து யோகிகளைப்போல உன்பாதமூலத்தைப் பற்றினோம். ஆகையால் எங்களுக்கு அருள்புரிவாயாக. புருஷஶ்ரேஷ்டனே! அழகிய புன்னகையோடுகூடின உன் கண்ணோக்கத்தினால் பொறுக்கமுடியாமல் கிளர்ந்தெரிகின்ற தீவ்ரமான மன்மத தாபத்தினால் எரிக்கப்பட்ட தேஹங்களையுடைய எங்களுக்கு உன் தாஸ்யத்தைக் கொடுப்பாயாக. 'போகத்திற்கிடமான வீடுவாசல் முதலியவற்றைத் துறந்து என் தாஸ்யத்தை ஏன் விரும்புகிறீர்கள்?' என்பாயாயின், சொல்லுகிறோம்; கேட்பாயாக. குண்டலங்களால் திகழ்கின்ற கபோலங்களுடையதும் கனிவாயில் அம்ருதம் பெருகப்பெற்றதும் புன்னகையோடுகூடின கண்ணோக்கம் அமைந்திருப்பதும் முன்னெற்றி மயிர்களால் மறைக்கப்பட்டதுமாகிய உன் முகத்தையும் ஆஶ்ரிதர்களுக்கு அபயங்கொடுப்பவைகளாகித் திரண்டுருண்டு நீண்ட பாஹுதண்டங்களையும் ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு முக்யமாய் ப்ரீதியை விளைக்கவல்ல உன் மார்பையும் கண்டு உனக்கே தாஸிகளாயினோம். ஸ்ரீக்ருஷ்ணா! மதுரமான பதங்களையுடைய உன் வேணுகானத்தினுடைய நீண்ட மூர்ச்சனையைக் கேட்டு மதிமயங்கி மூன்று லோகங்களிலும் அழகியதான உன்னுருவத்தையும் காண்பார்களாயின், மூன்று லோகங்களிலும் எவள்தான் நன்னடத்தையினின்று நழுவமாட்டாள். பசுக்கள் வ்ருக்ஷங்கள் பக்ஷிகள் ம்ருகங்கள் இவைகளுங்கூட உன் வேணுகானத்தைக் கேட்டமாத்ரத்தில் மயிர்க்கூச்சம் அடைகின்றன. எங்களைப்போன்றவர்களைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? ஆதிபுருஷன் தேவதைகளின் வருத்தங்களைப் போக்குவதற்காக உபேந்த்ரரூபனாக அவதரிப்பதுபோல, நீயும் இடைச்சேரியிலுள்ள ஜனங்களின் வருத்தங்களைப் போக்குவதற்காக அவதரித்தனை.

இது நிச்சயம். வருந்தினவர்களுக்குப் பந்துவாயிருப்பவனே! மன்மததாபத்தினால் எரிக்கப்பட்டவைகளான உன் பணிக்காரிகளாகிய எங்கள் கொங்கைகளிலும் தலைகளிலும் தாமரைமலர் போன்ற உன் கரத்தை வைத்து எங்கள் வருத்தத்தைப் போக்குவாயாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஸ்ரீக்ருஷ்ணன் இங்ஙனம் உடம்பு தெரியாமல் தழுதழுத்துச் சொல்லுகிற கோபிகைகளின் வார்த்தையைக் கேட்டுச் சிரித்து யோகேஸ்வரர்களுக்கும் ஈஸ்வரனாயினும் தன்னைத் தானே அனுபவிக்கையால் களிப்புற்றுச் சப்தாதிவிஷயங்களை விரும்பாதவனாயினும் தன்னைப்பற்றினவருடைய வருத்தங்களைப் போக்குந் தன்மையனாகையால் மன இரக்கமுற்று அவர்களுடன் க்ரீடித்தான். அன்பனாகிய தனைக் கண்ட ஸந்தோஷத்தினால் மலர்ந்த முகமுடையவர்களும் கூட்டங் கூடியிருப்பவர்களுமாகிய அந்தக் கோபிகைகளுடன் தன்னைப்பற்றினவர்களைக் கைவிடாத அச்யுதன கம்பீரமான புன்னகையிலும் பற்களிலும் குந்தகுஸுமங்களின் ஒளி விளங்கப்பெற்று நக்ஷத்ரங்களால் சூழப்பட்ட சந்த்ரன்போல விளங்கினான். அந்த ஸ்ரீக்ருஷ்ணன கோபிகைகளால பாடப்பெற்றுத் தானும் உரக்கப்பாடிக் கொண்டு பெண்யானைகளின் கூட்டத்தினிடையில் விளங்கும் மத்தகஜம்போன்று வைஜயந்தியென்னும் பூமாலையை அணிந்து வனத்தையெல்லாம் விளங்கச்செய்துகொண்டு உலாவினான். அலைகளால் அசைகின்ற ஆம்பல் புஷ்பங்களின் பரிமளத்தை ஏந்திக்கொண்டு வருகின்ற மந்தமாருதத்தினால் வீசப்பட்டதும ஸ்வர்ணமயமான மணல்கள் அமைந்திருப்பதுமான யமுனையின் மணற்குன்றில் சென்று கோபிகைகளுடன் விளையாடினான். தோளின்மேல் கைகளை நீட்டுவது அணைப்பது கைக

னால் முன்னெற்றிமயிர்கள் துடை அரையாடையின்முடி ஸ்தனங்கள் இவற்றை ஸ்பர்சிப்பது பரிஹாஸவாக்யங்களைப் பேசுவது நகக்ஷதங்கள் செய்வது இவைகளாலும் மற்றும் பல விளையாடல்களாலும் கண்ணோக்கங்களாலும் புன்னகைகளாலும் ஸ்ரீக்ருஷ்ணன் கோபிகைகளுக்கு மன்மதவிகாரத்தை மேலெழச்செய்துகொண்டு விளையாடினான். இங்ஙனம் மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருருஷ்ணனிடத்தினின்று தாங்கள் விரும்பினபடி கல்விகொடுக்கையாகிற வெகுமதியைப் பெற்றுக் கர்வமுடையவர்களாகி அந்தக்கோபிகைகள் தங்களைப் பூமியிலுள்ள மடந்தையர்களுக்குள் மேன்மையுடையவர்களாக நினைத்தார்கள். ப்ரஹ்மருத்ரர்களுக்கும் நியாமகனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் அந்தக் கோபிமார்களுக்குத் தங்களைக்காட்டிலும் மேற்பட்ட அழகிகளே இல்லையென்னும் அபிமானத்தினால் உண்டான மதத்தையும் மன உயர்த்தியையும் கண்டு அந்த மதம் மனஉயர்த்தி ஆகிய அவையிரண்டும அடங்கும்பொருட்டும் மேனமேலும் அவர்களுக்குத் தன்னிடத்தில் அபிநிவேசத்தை விளைவிக்கையாகிற அனுக்ரஹஞ்செய்யும் பொருட்டும் அந்த மணற்குன்றிலேயே மறைந்தான. இருபத்தொன்பதாவது அத்யாயம முற்றிற்று.

{ கோபிகள் ஸ்ரீக்ருஷ்ணனுடைய விரஹத்தைப் பொறுக்க முடியாமல வருந்தி அவனைத் தேடுதல். }

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன மறைகையில் கோபிகைகள் அவனைக்காணுமல் கூட்டத்தில் தலைமையுள்ள ஆண்யானையைக்காணுத யானைப்பேடுகள்போல உடனே பரிதபித்தார்கள்.

அந்தக் கோபிகைகள் ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு அன்பனான க்ருஷ்ணனுடைய புன்னகை அமைந்த அழகியகடைக் கண்ணோக்கம் இனிய உரைகள் விளையாடல்கள் மற்றும் பலவகை விலாஸங்கள் இவைகளால் இழுக்கப்பட்ட மன முடையவர்களாகி அவனிடத்திடலேயே மனம் குடிகொண்டு அந்தப் பகவானுடைய பலவகையான அந்தந்த விளையாடல்களை அநுஸரித்தார்கள். அன்பனாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் நிலைநின்ற மனமுடையவர்களும் நடை புன்னகை நோக்கம் உரை இவை முதலியவற்றை அநுஸரிக்க முயன்றமாத்ரத்தில் அவனுடைய உருவங்களெல்லாம் நன்றாக மனதில் படியப்பெற்றவர்களும் அவனுக்கு அன்பர்களுமாகிய கோபிகைகள் அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய விளையாடல்களைப்போன்ற விளையாடல்களை நடத்தத் தொடங்கி 'இதோ நான் க்ருஷ்ணனாய் விட்டேன். இதோ நான் க்ருஷ்ணனாய்விட்டேன்' என்று ஒருவர்க்கொருவர் சொல்லிக்கொண்டார்கள். ஒருகூட்டமாய்க் கூடியிருக்கின்ற கோபிகைகள் அந்த ஸ்ரீக்ருஷ்ணனையே பாடிக்கொண்டு பித்தம்பிடித்தவர்களைபோல ஒருவனத்தினின்று மற்றொருவனத்திற்குச் செல்பவர்களாகி ஆகாயம்போல ஜங்கமஸ்தாவரரூபமான ஸமஸ்த பூதங்களிலும் உள்ளும் புறமும் நிறைந்திருக்கின்ற பரம புருஷனைத் தேடினார்கள்; ஆங்காங்கு வ்ருக்ஷங்களைப் பார்த்து வினவுதலுஞ் செய்தார்கள்.

'அரசமரமே! கல்லாலமரமே! ஆலமரமே! நந்தகோபன்மகன் ப்ரீதியும் புன்னகையும் அமைந்த கண்ணோக்கங்களால் எங்கள்மனத்தைப் பறித்துக்கொண்டு திருடன்போல் போனான். நீங்கள் அவனைக் கண்டீர்களா? மருதாணிமரமே! அசோகமரமே! நீர்க்கடம்ப மரமே! சந்தனமரமே! கர்வமுடைய மடந்தையர்களின்

கொழுப்பைப் பறிக்கவல்ல புன்னகையுடைய எங்கள் இராமானுசன் இப்படி சென்றான்? துளஸி! கோவிந்தனுடைய பாதாரவிந்தங்களுக்கு ப்ரியமாயிருப்பவளே! நல்லபாக்யமுடையவளே! வண்டினங்களோடு உன்னைத் தரிப்பவனும் உனக்கு மிக்க அன்பனுமாகிய அச்சுதனைக் கண்டாயோ? மாலதி! மல்லீ! ஜாதிமல்லீ! யூதிகே! நீங்கள் மாதவனைக் கண்டீர்களோ? அவன் தன் கையால் உங்களை ஸ்பர்சித்து உங்களுக்கு ப்ரீதியை விளைத்துக்கொண்டு இப்படி சென்றானே! மாமரமே! ப்ரியாளமரமே! பலாமரமே! அஸனமரமே! கோவிதாரமரமே! நாவல்மரமே! அருக்கஞ்செடியே! வில்வமரமே! மகிழமரமே! பிறர்க்காகவே உபயோகப்படும் பிறவியுடையவைகளாகி யமுனையின் கரையில் இருக்கின்ற மற்றும் பல மரங்களே! ஸ்ரீக்ருஷ்ணனைப் பிரிந்து மனமற்றவர்களான எங்களுக்கு அவன் போன வழியைச் சொல்வீர்களாக. பூமிதேவி! நீ என்ன தவஞ் செய்தனையோ? ஏனென்றால், நீ கேசவனுடைய பாதாரவிந்தங்களின் ஸ்பர்சமாகிற மஹோத்ஸவம் நேரப்பெற்று மயிர்க்கூச்சம் அடைந்து விளங்குகின்றனை. ஆ! உன்னுடைய பாக்யமே பாக்யம். பூமீ! இந்த மயிர்க்கூச்சம் இப்பொழுது ஸ்ரீக்ருஷ்ணனுடைய பாதாரவிந்தங்களின் ஸ்பர்சத்தினால் ஏற்பட்டதா? அல்லது த்ரிவிக்ரமாவதாரஞ் செய்த பரமபுருஷன் உலகமெல்லாம் நிரம்ப விரித்துவைத்த பாதத்தின் ஸ்பர்சத்தினால் ஏற்பட்டதா? அல்லது வராஹ உருவங்கொண்ட பகவானுடைய ஆலிங்கனத்தினால் ஏற்பட்டதா? ஓ மானபேடே! அச்சுதன் அழகியவைகளான கை கால் முதலிய அங்கங்களால் உங்கள் கண்களுக்கு மிகுந்த ஸந்தோஷத்தை விளைத்துக்கொண்டு காதலியுடன் இவ்வழியாக வந்தானா? அன்பிற்கிடமான காதலி

யின் அங்கத்தை அணைக்கையால் அவள் பூசியிருந்த குங்குமக்குழம்புபடியப்பெற்றதான ஸ்ரீக்ருஷ்ணனுடைய குந்தப்பூமாலையின் மணம் இங்கு வீசுகின்றது. ஆகையால் அவன் இங்கு வந்திருக்கவேண்டும். ஓ மரங்களே! ஸ்ரீக்ருஷ்ணன் வலக்கையில் தாமரைமலரை ஏந்தி அன்பிற்கிடமான காதலியின்தோள்மேல் இடக்கையைவைத்துத் துளஸியின பரிமளத்தை விரும்பி மேல்விழுந்து வருகின்ற வண்டினங்களால் தொடரப்பெற்று இங்கு உலாவிக்கொண்டிருந்து ப்ரீதியமைந்த கண்ணோக்கங்களால் உங்கள் நமஸ்காரத்தை ப்ரீதியுடன் அங்கீகரித்தானா? தோழிகளே! இதோ புலப்படுகின்ற இக்கொடிகள் க்ருஷ்ணனுடைய ஸமபந்தம் பெற்றன. இவை தங்கள் காதலனை வ்ருக்ஷத்தின் கிளைகளாகிற புஜங்களைத் தழுவியிருப்பினும் ஸ்ரீக்ருஷ்ணனுடைய நகங்களால்ஸ்பர்சிக்கப்பட்டன. பாருங்கள். இது நிச்சயம். ஏனெனில் இவை மயிர்க்கூச்சம் உண்டாகப்பெற்றிருக்கின்றன. தங்கள் காதலரோடு கலந்தமையால் உண்டானதன்று. இப்படிப்பட்ட மயிர்க்கூச்சம இவற்றிற்கு மற்றெப்பொழுதும் உண்டானதில்லை. ஆகையால் இது ஸ்ரீக்ருஷ்ணனுடைய கரம் பட்டமையால் உண்டாயதே?

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் பித்தேறினவர்கள்போல் பேசுகின்ற அந்தக் கோபிகைகள் ஸ்ரீக்ருஷ்ணனைத் தேடின ஆயாஸத்தினால் தழதழத்து அவனிடத்திலேயே மனங் குடிகொள்ளப்பெற்று அந்தப் பகவானுடைய அந்தந்த விளையாடல்களை அனுஸரிக்கத் தொடங்கினார்கள். ஸ்ரீக்ருஷ்ணனைப் போல நடனஞ் செய்கின்ற ஒரு கோபிகை பூதனையைப் போல் நடனஞ் செய்கின்ற மற்றொருகோபிகையின் ஸ்தனத்தைப்பானஞ் செய்தாள். ஒருத்தி சிசுவாயிருந்தக்ருஷ்ணனை அனுஸரித்

து சகடாஸுரனை அனுஸரித்த மற்றொருத்தியைப்பா ல் உதைத்துத்தள்ளினாள். ஒருத்தி த்ருணாவர்த்த னென்னும் அஸுரனைப்போல் பாவனைசெய்கின்ற மற் றொருத்தியை எடுத்துக் கொண்டுபோனாள். ஒருத்தி ஒலிக்கின்ற ஆபரணங்களின் ஒலி அமைந்த பாதங்களை இழுத்துக்கொண்டு முழங்கால்களால் நகர்ந்தாள். இரண்டு கோபிகைகள் க்ருஷ்ணராமர்களைப்போல் நட னஞ் செய்தார்கள். மற்றவர்கள் இடையர்களும் கன்று களுமாக நடனஞ் செய்தார்கள். அவர்களில் ஒருத்தி வத்ஸாஸுரனைப்போல் பாவனை செய்து வந்த மற் றொருத்தியைப் பிடித்துச் சுழற்றி எறிந்தாள். க்ருஷ்ண னைப்போல் பாவித்த ஒருத்தி பகாஸுரனைப்போல் பாவனை செய்து வந்த மற்றொருத்தியைப் பிடித்து வதிப் பதுபோல் நடனஞ் செய்தாள். பசுக்களைப்போல் பாவனை செய்து வெகுதூரஞ் சென்ற சிலகோபிகைகளை ஒருத்தி ஸ்ரீக்ருஷ்ணன பசுக்களை அழைப்பதுபோலவே அழைத் தாள். க்ருஷ்ணனைப்போல் பாவித்து வேணுகானஞ் செய்கின்ற ஒருத்தியைச் சிலகோபிகைகள் இடையர் களைப் போல் பாவித்து 'நன்றாயிருக்கிறது. நன்றாயிருக் கிறது' என்று கொண்டாடினார்கள். ஒருத்தி தன்னை ஸ்ரீக்ருஷ்ணனாகவே நினைத்து ஒருத்தியின தோள்மேல் தனபுஜத்தை வைத்து அடிகளையிட்டுநடந்துகொண்டே மற்றவர்களை நோக்கி 'ஓ ஸகிகளே! நான க்ருஷ்ணன். மிகவும் அழகியதான எனது நடையைப் பாருங்கள்' என்றாள். அங்ஙனமே மற்றொருத்தி நான் க்ருஷ்ண னென்று மொழிந்து 'மழையினின்றும் காற்றினின்றும் நீங்கள் பயப்பட வேண்டாம். அவற்றினின்று உங்களைப் பாதுகாக்க நான் உபாயஞ் செய்தேன்' என்று மொழி ந்து ஒருகையால் உத்தரீயத்தை விரித்து மேல்தூக்கிப்

பிடித்தாள். மன்னவனே! மற்றொருத்தி காளியஸர்ப்ப ராஜனைப்போல் பாவனை செய்கின்ற ஒருத்தியைத் தலையில் காலால் மிதித்து மேலேறி 'துஷ்டஸர்ப்பமே! நீ இந்த மடுவினின்று புறப்பட்டுப் போவாயாக. ஓ ஸர்ப்ப ராஜனே! நான் துஷ்டர்களைத் தண்டிக்கும்பொருட்டு அவதரித்திருக்கின்றேனல்லவா? ஆகையால் நீ இனி இங்கு நிற்கலாகாது' என்று மொழிந்தாள். மற்றும் அவர்களில் மற்றொருத்தி 'ஓ கோபர்களே! பொறுக்க முடியாததும் கிளர்ந்து பரந்தெரிகின்றதுமாகிய காட்டுத் தீயைக் காண்பீர்களாக. நீங்கள் கண்களை மூடிக்கொள்ளுங்கள். நான் உங்களுக்குச் சீக்ரத்தில் அனுயாஸமாக க்ஷேமஞ் செய்கிறேன்' என்றாள். ஒருத்தி மற்றொருத்தியைப் பூமாலையால் பந்தனஞ் செய்துகொண்டே 'அட! க்ருஷ்ணு! இப்பொழுது நீ வெண்ணெயைத் திருடினையல்லவா! மற்றும், அந்த வெண்ணெய்த்தாழியையும் உடைத்துவிட்டனை. ஆகையால் உன்னை உரலில் கட்டுகிறேன்' என்றாள். அங்ஙனஞ் சொல்லிக் கட்டுண்ட மற்றொருத்தியும் பயந்தவள்போன்று அழகிய கண்கள் அமைந்த தன் முகத்தைக் கைகளால் மறைத்துப் பயந்த க்ருஷ்ணனுடைய சேஷ்டையை நடனஞ் செய்தாள். இங்ஙனம் ஸ்ரீக்ருஷ்ணனுடைய லீலைகளை நடனஞ்செய்து பொழுது போக்கி மீளவும் ப்ருந்தாவனத்தில் உள்ள கொடிகளையும் செடிகளையும் மரங்களையும் க்ருஷ்ணனைக் கண்டீர்களாவென்று வினவிக்கொண்டே சென்று வனபூமியில் பரமாத்மாவான ஸ்ரீக்ருஷ்ணனுடைய அடிகளைக்கண்டார்கள்.

கோபிகைகள் சொல்லுகிறார்கள்:—இவை மஹாத்மாவாகிய நந்தகுமாரனுடைய அடிகளே, நிச்சயம். ஏனென்றால், இவை த்வஜம் தாமரைமலர் வஜ்ரம் மா

வெட்டி கொடி முதலிய ரேகைகளால் விளங்குகின்றன. ஆகையால் ஸ்ரீக்ருஷ்ணனுடைய அடிகளே.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அந்தந்த அடிவைப்புக்களால் ஸ்ரீக்ருஷ்ணனுடைய மார்க்கத்தைத் தேடிக்கொண்டு செல்கின்ற அம்மாதரசிகள் அப்பொழுது அந்த ஸ்ரீக்ருஷ்ணபகவானுடைய காலடிகள் ஒரு மடந்தை காலடிகளால் இடையிடையில் கலந்திருக்கக் கண்டார்கள்; கண்டு வருந்தினார்கள்; மற்றும் மேல்வருவாறு கூறினார்கள்.

கோபிகைகள் சொல்லுகிறார்கள்:—யானையுடன் யானைப்பேடுபோல அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய தோள்மேல் கையை வைத்து அவனுடன் நடந்து சென்ற ஒரு பெண்மணியின் அடிகள் இவை. கோபிகைகளே! பாருங்கள். இல்லையாயின் இங்ஙனம் அடிகள் கலந்திருப்பதற்கு இடமில்லை. இம்மடந்தையர்மணி ஷாட்குண்யபூர்ணனும் தன்னைப்பணிந்தவர்களின் வருத்தங்களைப்போக்குந்தன்மையனுமாகிய ஸர்வேச்வரனைப் பூர்வஜன்மத்தில் நன்றாக ஆராதித்தாள். இது நிச்சயம். ஏனென்றால், கோவிந்தன நம்மெல்லோரையும் விட்டு ஏகாந்தமாக இவளை அழைத்துக்கொண்டு போனானல்லவா? (ஜன்மாந்தரத்தில் ஈச்வரனை ஆராதியாதவர்களுக்கு ரஹஸ்யத்தில் கோவிந்தனுடைய கலவி கிடைப்பதரிது.) தோழிமார்களே! இந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய பாதாரவிந்தங்களின் பராகங்கள் மிகுந்த மஹிமையுடையவை. ஏனென்றால் ப்ரஹ்மருத்ராதி தேவதைகள் பரமபுருஷனைப் பெறுதற்குத் தடையான தங்கள் பாபந்தீரும்பொருட்டு இப்பராகங்களைத் தலைகளில் தரிக்கின்றார்கள்

லவா? (நாமும் இந்தத் தூளியை அபிஷேகஞ் செய்து கொள்வோமாயின் அங்ஙனமே ஸ்ரீக்ருஷ்ணனைப் பெறக் கூடும்.) தோழிகளே! ஸ்ரீக்ருஷ்ணனுடன் சென்ற அம் மாதுசிரோமணியின் இவ்வடிகள் நமக்கு மிகவும் மனக் கலக்கத்தை விளைவிக்கின்றன. ஏனென்றால், அவள் கோபிகைகள் அனைவர்க்கும் பொதுவான அச்சுதனுடைய கொவ்வைக்கனிவாயின் அம்ருதத்தைத் தானொருத்தியே ரஹஸ்யத்தில் அனுபவிக்கின்றாளல்லவா? ஓ கோபிகைகளே! அப்பெண்மணியின அடிகள் இங்குப் புலப்படவில்லை. ஏனென்றால், முள்ளுகள்போலப் பொற்றுகின்ற புல்முளைகளில் ஸுகுமாரமான பாதங்களை ஊன்ற முடியாமல் வருந்துகிற அன்பிற்கிடமான அம்மாதரசியை அன்புள்ள அவ்வச்சுதன் தோளமேல் தூக்கி எடுத்துக் கொண்டுபோனானபோலும். கோபிகைகளே! அவன அப்பெண்மணியை எடுத்துக்கொண்டு நடந்துபோகின்றமையால் அவனடிகள் பாரத்தினால் அழுந்தியிருக்கின்றன. இதோ பாருங்கள் மஹானுபாவனும் காமுகனுமாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் இங்குப புஷ்பம் பறிக்கும பொருட்டு அப்பெண்மணியைக் கீழே இறக்கிவிட்டான். இங்கு அன்பிற்கிடமான அம்மாதரசியை அலங்கரிக்கும் பொருட்டு மிகவும் அனபனுகிய ஸ்ரீக்ருஷ்ணன புஷ்பங்களைப் பறித்தான. இதோ பாருங்கள். அவன நுனிக் கால்களைத் தூக்கிக்கொண்டு புஷ்பம் பறித்தானாகையால் அவனடிகள் பூமியில் முழுவதும்படியாமல் பாதி படிந்திருக்கின்றன. பாருங்கள். காமக்கலவியில் ஆழ்ந்த மனமுடைய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் இங்குக் காமக்கலவியில் திறமையுடையவளாகிய அம் மாதரசியின் தலைமயிர்களைக் கோதி வகுடும் எடுத்துப் புஷ்பங்களைச் சூட்டி முடித்தான். அன்பிற்கிடமான அப்பெண்மணிக்குப்

புஷ்பங்களைச் சூட்டும்பொருட்டு ஸ்ரீக்ருஷ்ணன் இங்கு உட்கார்ந்தான். இது நிச்சயம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— அந்தக்கோபிகள் இங்ஙனம் ஒருவருக்கொருவர் மொழிந்துகொண்டு மனக்கலங்கப் பெற்றுப் பித்தம்பிடித்தவர்கள்போன்று ஆங்காங்குத் திரிந்தார்கள். ஸ்ரீக்ருஷ்ணன் தன்னைத் தானே அனுபவிக்கையாகிற மஹாநந்தத்தில் ஆழ்ந்திருப்பவனாயினும் அவாப்தஸமஸ்தகாமனாயினும் அந்தக் கோபிமார்கள் கண்டு வருந்தவண்ணமே ஒரு பெண்மணியைமாத்ரம் தனியே அழைத்துக்கொண்டு சென்று அவளுடன் ரஹஸ்யத்தில் சென்று காமக்கலவியில் ஆழ்ந்தவனாமுடைய ஸமஸாரிகளுடைய தைன்யத்தையும் ஸ்த்ரீகளின் துஷ்டஸ்வபாவத்தையும் வெளியிட முயன்று விளையாடினான். ஸ்ரீக்ருஷ்ணன் மற்ற மடந்தையர்களையெல்லாம் துறந்து எவளைத் தனியே அழைத்துக்கொண்டு சென்றானோ, அம்மடந்தையர்மணி அப்போது 'காமவிகாரத்தினால் தூண்டப்பட்டு வீடுவாசல்களையெல்லாம் துறந்து வந்திருக்கின்ற மற்ற மடந்தையர்களெல்லோரையும் துறந்து இந்த ஸ்ரீக்ருஷ்ணன் அன்புடையவனாகி என்னைத் தொடர்ந்து வருகின்றான். ஆகையால் நான் மேன்மையுடையவள்' என்றுஎல்லாப்பெண்களினும் தன்னை மேன்மையுடையவளாக நினைத்துக்கொண்டாள். அப்பால் அவள் வனத்தில் கொஞ்சதூரம் சென்ற பின்பு கர்வமுடையவளாகி ஸ்ரீக்ருஷ்ணனைப் பார்த்து 'நான் நடக்க முடியாதிருக்கின்றேன். நீ எங்குப்போக வேண்டுமென்று விரும்புகின்றனையோ; அவ்விடத்திற்கு என்னை எடுத்துக்கொண்டு போவாயாக' என்று மொழிந்தாள். ஸ்ரீக்ருஷ்ணன் இங்ஙனம் மொழியப்பெற்று அன்பிற்கிடமான அம்மடந்தையை நோக்கி 'என்தோள்

மேல் ஏறிக்கொள்வாயாக' என்று மொழிந்தான். அனந்தரம் அவன் மறைந்தான். அவள் : அப்பொழுதே 'ஆ! நாதா! என்னுடன் விளையாடிக்கொண்டிருந்தவனே! மிகவும் அன்பிற்கிடமாயிருப்பவனே! எங்கிருக்கின்றனை? எங்கிருக்கின்றனை? மஹா இரக்கத்திற்கிடமாயிருக்கின்ற உன் தாஸியாகிய எனக்கு நீ இருக்குமிடத்தைக் காட்டுவாயாக. நண்பனே! நீ இப்படி வஞ்சிக்கலாகுமா?' என்று பரிதாபத்துடன் புலம்பினாள். பகவானுடைய மார்க்கத்தைத் தேடிக்கொண்டு செல்கின்ற அந்தக் கோபிமார்கள் அனபிற்கிடமான அப்பரமனுடைய விரஹத்தினால் மதி மயங்கி வருந்துகின்ற அப்பெண்மணியை அருகாமையில் கண்டார்கள். பிறகு அவள் தானமாதவனிடத்தினின்று வெகுமதி அடைந்ததையும் துஷ்டத்தனத்தினால் அவமானம் அடைந்ததையும சொல்லக் கேட்ட கோபிமார்களனைவரும் மிகவும் வியப்புற்றார்கள். அப்பால் அந்தக் கோபிகைகள் அவளுடன்கூடி எவ்வளவு தூரம் நிலவு திகழ்கின்றதோ அது வரையில ஸ்ரீக்ருஷ்ணனைத் தேடிக்கொண்டு காடு காடாகத் திரிந்தார்கள். அதற்குமேல் வ்ருக்ஷங்கள் அடர்ந்து இருள் மூடிக்கொண்டிருப்பதைக் கண்டு அப்பெண்கள் திரும்பினார்கள். அந்த ஸ்ரீக்ருஷ்ணனிடத்திலேயே மனங்குடிகொண்டு அவனுடைய பேச்சுக்களையே பேசிக்கொண்டு அவனுடைய சேஷ்டைகளையே அனுகரித்துத் தமமை அவனாகவே பாவித்துக் கொண்டிருக்கின்ற அந்தக் கோபிமாரகள் பேரிருளைக் கண்டும் தங்கள் வீடுவாசல்களை நினைக்கவேயில்லை. ஸ்ரீக்ருஷ்ணனையே பாவித்துக்கொண்டிருக்கின்ற அம்மடந்தையர்கள் முன்பு அவனுடன் எவ்விடத்தில் கலந்திருந்தார்களோ, அந்த மணற்குன்றிற்குத் திரும்பி வந்து ஒன்று சேர்ந்து க்ருஷ்ணன் வரு

வனை விரும்பி எதிர் பார்த்து அவனையே பாடிக்கொண்டிருந்தார்கள். முப்பதாவது அத்யாயம் முற்றிற்று.

—••◆ கோபிகா கீதை ◆••—

கோபிகைகள் சொல்லுகிறார்கள் :—கோகுலம் உன்னுடைய ஜன்மத்தினால் மிகவும் மேன்மையுற்று விளங்குகின்றது. நீ இங்கு வந்து பிறந்தமையால் ஸ்ரீமஹாலக்ஷ்மியும் இவ்விடத்தில் என்றும் மாறாமல் வாஸஞ்செய்து கொண்டு உன்னைப் பணிகின்றாள். அன்பனே! இங்ஙனம் கோகுலமெல்லாம் பெருங்கிளர்த்தியுடன் ஸந்தோஷமுற்றிருக்கையில் உன்னுடையவர்களோவென்றால் வருத்தம் பொறுக்கமுடியாமல் ப்ராணன்களை விடவேண்டியிருப்பினும் உனக்காகவே அவற்றை ப்ரயத்னப்பட்டுத் தரித்துக்கொண்டு உன்னையே தேடிக்கொண்டிருக்கிறார்கள். ஆகையால் நீ எங்கள் கண்ணுக்குப் புலப்படுவாயாக. ஸம்போகத்தை வளர்ப்பவனே! வேண்டும் வரங்களை யெல்லாங் கொடுப்பவனே! சரத்காலத்தில் தாமரையோடையில் ஆழத்தில் நன்கு பூத்தெழுந்த அழகிய தாமரைமலருடைய உள்ளிதழின் சோபையைப் பறிக்கின்ற கண்ணால் அனன்யப்ரயோஜனமாக உனக்குத் தொண்டுபட்ட பணிக்காரிகளான எங்களை ஹிம்ஸிக்கின்ற இது வதமன்றோ? (ஆயுதத்தினால் செய்யும் வதந்தான வதமோ? கண்ணால் வதிப்பது வதமாகாதோ? ஆகையால் உன்கண்ணால் பறித்துக்கொண்டுபோன எங்கள்ப்ராணன்களை மீட்டுக் கொடுக்கும்பொருட்டு எங்களுக்குப் புலப்படுவாயாக.) சிறப்புடையவனே! காளிய மடுவின் விஷஜலத்தைப் பானஞ் செய்தமையாலுண்டான அபாயத்தினின்றும்

மலைப்பாம்பின் உருவங்கொண்ட அகாஸுரனிடத்தினின்றும் பெருமழை பெருங்காற்று இடி நெருப்பு இவற்றினின்றும் அரிஷ்டாஸுரனிடத்தினின்றும் வ்யோமாஸுரனிடத்தினின்றும் மற்றும் பலவகைப் பயங்களினின்றும் நீ எங்களைப் பலவாறு பாதுகாத்தனையே. (அப்படிப்பட்டவன் ஏன் இப்பொழுது வெறுங் கண்ணால் எங்களை வதிக்கின்றனை?) நண்பனே! நீ யசோதையின் புதல்வனல்லை. பராக்ருதசிசுக்களைப்போல யசோதைக்குப் பிறந்த சிசுவல்லை. நீ ஸமஸ்த ப்ராணிகளுக்கும் அந்தராத்மாவான பரமபுருஷனே. ஆகையால் நீ எல்லாமறிந்தவனை; ப்ராணிகள் செய்யும் சுபாசுபகர்மங்களுக்கு ஸாக்ஷியாயிருப்பவன். நீ ப்ரஹ்மதேவனால் உலகங்களைப் பாதுகாக்கும்பொருட்டு வேண்டப்பட்டு உன பக்தர்களான யாதவர்களின் வசத்தில் கேவலம் உனனுடைய ஸங்கல்பத்தினால் அவதரித்தனையன்றி ப்ராக்ருதர்களைப்போல் கர்மத்தினால் பிறந்தவனல்லை. இங்ஙனம் ஜகத்ரக்ஷணத்திற்காக அவதரித்தவனும் ஆஸ்ரிதர்களிடத்தில் பக்ஷபாதமுடையவனுமாகிய நீ எங்களை உபேக்ஷிப்பது யுக்தமன்று. நாங்கள் உன்னையொழிய மற்றொன்றையும் அறியாத உன பக்தைகளல்லமோ? ஸாதாரணமாக உலகத்தவர்களைப் பாதுகாப்பதுபோலாயினும் எங்களைப் பாதுகாக்கலாகாதோ? நாங்கள் உலகத்தில் அடங்கினவர்களல்லமோ? ஆகையால் எங்களை நீ இங்ஙனம் உபேக்ஷிக்கலாகாது. வ்ருஷ்ணிகளில் சிறந்தவனே! அழகா! ஸம்ஸாரத்தினின்று பயந்து உனபாதாரவிந்தங்களைச் சரணம் அடைபவர்களுக்கு அபயங்கொடுப்பதும் ஸ்ரீமஹாலக்ஷ்மியின் கையைப்பிடிப்பதுமாகிய உன் தாமரைக்கையை எங்கள் சிரஸ்ஸில் வைப்பாயாக. இடைச்சேரியிலுள்ள ஜந்துக்களின் வருத்

தங்களைப் போக்குந் தன்மையனே! வீரனே! தன்னைச் சேர்ந்த ஜனங்களின் கர்வத்தை அழிக்கவல்ல புன்னகையுடையவனே! நண்பனே! எங்கள் ஸுகதுக்கங்களை உன்னுடையவைகளாகப் பாவிக்குந் தன்மையனே! உன் பணிக்காரிகளான எங்களுக்கு அனுகூலனாயிருப்பாயாக. தாமரைமலர்போன்ற உன் முகத்தை எங்களுக்குக் காட்டுவாயாக. உன்னைப் பணியும ப்ராணிகளின் பாபங்களைப் போக்குவதும் பசுக்களைப் பின்றொடர்ந்து செல்லுவதும ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு இருப்பிடமும் காளிய நாகத்தின பணங்களில் வைக்கப்பட்டதுமாகிய உன் பாதாரவிந்தத்தை எங்கள் கொங்கைகளின்மேல் வைப்பாயாக; வைத்து எங்கள் காமவேதனையை அறுப்பாயாக. தாமரைக்கண்ணனே! பண்டிதர்களின் மனத்திற்கினியதும் அழகிய வாக்யங்கள் அமைந்திருப்பதும் செவிக்கின்பம் விளைப்பதுமாகிய உன் தேன்மொழியால் இங்ஙனம் மதிமயங்கிக் கிடக்கிற எங்களை உன் வாய் அமுதத்தினால் பிழைப்பிப்பாயாக. ஸம்ஸாரதாபங்களால் வருந்ினவர்களைப் பிழைக்கச்செய்வதும் ப்ரஹ்மதேவன் முதலிய பண்டிதர்களால் புகழப்படுவதும் பாபங்களைப் போக்குவதும் கேட்டமாத்ரத்தில் பெரிய நன்மையை விளைப்பதும் சமதமாதிகுணங்களை விளைவிக்கையாகிற மேன்மையுடையதும் எங்கும் நிறைந்திருப்பதுமாகிய உன்கதையாகிற அம்ருதத்தை இப்புவியில் எவர்கள் பாடுகிறார்களோ, அவர்கள் பெருங்கொடையாளர்கள். (ஜன்மாந்தரத்தில் மிகப்பெரிய தானாதி தர்மங்களை அனுஷ்டித்த பெரும்புண்யசாலிகள்). அன்பனே! வஞ்சகனே! உனபுன்னகையும் ப்ரேமம் வழிந்த உன்கண்ணோக்கமும் நினைத்தமாத்ரத்தில் மஹாநந்தத்தைவிளைப்பதாகிய உன்விளையாடலும் எங்கள் மனத்தினின்று

மாறுமல் வேறொன்றியிருக்கின்ற உன் ரஹஸ்யசேஷ்டைகளும் எங்கள் மனத்தைக் கலக்குகின்றன. நாதா! எங்கள்மனத்திற்கினியனே! அன்பனே! நீ பசுக்களை மேய்க்கும்பொருட்டு இடைச்சேரியினின்று புறப்படுகையில் தாமரைமலர்போல் மென்மையமைந்து ஸுந்தரமுமான உன்பாதம் முள்போல் உறுதியுள்ள புற்களின் முனைகளால் வருந்துமேயென்று எங்கள்மனம் மோஹத்தை அடைகின்றது இத்தகைய எங்களை நீ வஞ்சிக்கலாகுமா? வீரா! நீ ஸாயங்காலத்தில் கறுத்த முன்னெற்றிமயிர்களால் சூழப்பட்டிருப்பதும் வனத்தில் பசுமேய்க்கும் பொழுது அவற்றின் குளம்புகளால் கிளம்பின தூள்கள் படிந்திருப்பதும் தாமரை மலர்போன்றதுமாகிய முகத்தை அடிக்கடி காட்டிக்கொண்டு வந்து எங்கள மனத்தில் மன்மதவிகாரத்தை விளைவிக்கின்றனை; (ஆனால் கலவியை மாத்ரம் கொடுக்கிறதில்லை. ஆகையால் நீ வஞ்சகன்.) ப்ரீதியை விளைப்பவனே! மனவருத்தங்களைப் போக்குந்தன்மையனே! தன்னை வணங்கினவர்களின் விருப்பங்களை நிறைவேற்றிக்கொடுப்பதும் ப்ரஹ்மாதிதேவதைகளால் ஆராதிக்கப்படுவதும் பூமண்டலத்திற்கெல்லாம் அலங்காரமாயிருப்பதும் ஆபத்காலத்தில் த்யானிக்கத்தக்கதும் பணியும்பொழுது மிக்க ஸந்தோஷமயமாயிருப்பதுமாகிய உன பாதாரவிந்தத்தை எங்கள் கொங்கைகள்மேல வைத்துக் காமாக்னியைத தணிப்பாயாக. வீரனே! ப்ராணிகளுக்கு மற்ற ஸுகங்களின் விருப்பத்தை மறக்கடிப்பதும் இனிதாக ஒலிக்கின்றவேணுவோடொன்றாக இணைந்திருப்பதும் ஸம்ஸாரதாபங்களால் விளையுந் துக்கங்களை அழிப்பதும மேன்மேலும் ப்ரீதியை வளர்ப்பதுமாகிய உன்கனிவாயின் அம்ருதத்தை எங்களுக்குக் கொடுப்பாயாக. நீ பகல்

வேளையில் பசுக்களை மேய்த்துக் கொண்டு வனத்தில் திரியும்பொழுது உன்னைக் காணப்பெறாத ப்ராணிகளுக்கு அரைக்ஷண காலமும் ஒருயுகம்போல வளர்கின்றது. மீளவும் நீ ஸாயங்காலத்தில் திரும்பிவரும்பொழுது சுரிகுழல்கள் அமைந்திருப்பதும் மிகுந்த சோபையுடையதுமாகிய உனமுகத்தை ஆவலுடன் பார்க்கும் ப்ராணிகளின் கண்களுக்கு இமைகளைப் படைத்த ப்ரஹ்மதேவன் புத்தியில்லாத மூடனே. (ஒரு இமைப்பொழுதுங் கூட உன்னைக் காணாதிருக்க முடியாது). அச்சுதனே! எங்கள் வரவை அறிந்த உன்னுடைய உரத்த வேணுகானத்தினால் மோஹித்து நாங்கள் கணவர்களையும் பிள்ளைகளையும் அவர்களைச் சேர்ந்த மற்றவர்களையும் உடன் பிறந்தவர்களையும் மற்றுமுள்ள பந்துக்களையும் கடந்து உன்ஸந்நிதானத்திற்கு வந்தோம். துஷ்டனே! இத்தகையர்களான பெண்களை இரவில் உன்னைத் தவிர மற்ற எவன்தான் துறந்து மறைவான்? எவனும் துறந்து மறையமாட்டான். ரஹஸ்யத்தில் செய்கிற உன்சேஷ்டைகளையும் மன்மதவிகாரத்தை விளைப்பதும் ப்ரீதியமைந்திருப்பதுமாகிய உன் கண்ணோக்கத்தையும் புன்னகையோடு கூடின உன்னழகிய முகத்தையும் ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு வாஸஸ்தானமும் அகன்றதுமாகிய உன்மார்பையும் கண்டு எங்களுக்கு உன்னைப் புணரவேண்டுமென்று பெருவிருப்பம் உண்டாகின்றது. விருப்பத்தின்படி புணராமையால் எங்கள்மனம் அடிக்கடி மோஹத்தை அடைகின்றது. ஓ க்ருஷ்ணா! உன்னுடைய அவதாரம் கோபர்களின் துக்கத்தையும் முனிவர்களின் துக்கத்தையும் அடியோடு போக்குவதற்கும் ஜகத்திற்கெல்லாம் மங்களத்தை விளைப்பதற்குமே ஏற்பட்டது. உன்னிடத்தில் விருப்பமுற்று அது நிறைவேறாமல் வருந்துகின்ற உன்

னுடையவர்களான எங்கள் மனவியாதியைப் போக்குவ தான ஏதேனுமொரு ஒளஷதத்தைக் கொடுப்பாயாக. அன்பனே! மென்மைக்கிடமான உன்பாதாரவிந்தத்தை உறுதியுள்ள எங்கள் ஸ்தனங்களில் நோகுமோவென்று பயந்து மெல்லமெல்ல வைத்துக்கொள்கிறோம். அப்படிப் பட்ட உன்பாதாரவிந்தத்தினால் காடுமேடெல்லாம் திரி கின்றனை. அப்பாதம் பரற்கல் முதலியவைகளால் எப்படி வருந்தாதிருக்கும்? வருந்தவேவருந்தும்; என்று உன்னை யே ப்ராணனாகவுடைய எங்கள்மதி மயங்குகின்றது. முப் பத்தொன்றாவது அத்யாயம் முற்றிற்று.

## ஸ்ரீக்ருஷ்ணன் கோபிகளுக்குத் தோன்றி அவர்களை ஸமாதானப்படுத்தல்

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மன்னவனே! இங்ஙனம் பகவானுடைய குணங்களைப் பாடுவதும பலவாறு பிதற்றுவதுமாயிருக்கின்ற அந்தக் கோபிகைகள் க்ருஷ்ணனைக் காண்பதில் பேராவலுடையவர்களாகி இனிய குரலுடன் உரக்கப் புலம்பினார்கள். பீதாம்பரம் உடுத்திருப்பவனும் வனமாலை அணிந்தவனும் உலகங்களை மயக்குகின்ற ஒன்றான மன்மதனுக்கும் மயக்கத்தை விளைக்கும்படியான பேரழகனும் புன்னகையோடுகூடின தாமரைமலர்போன்ற முகமுடையவனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் அங்ஙனம் புலம்புகின்ற அந்தக் கோபிகைகளின் எதிரே வந்து தோன்றினான். மிகவும் அன்பிற்கிடமான க்ருஷ்ணன் வந்திருப்பதைக் கண்டு ஸந்தோஷத்தினால் கண்கள் மலரப்பெற்று ப்ராணன் வந்திருக்கையில் சரீரங்கள் எழுந்திருப்பதுபோல, எல்லோரும் ஒரேதடவையில் எழுந்திருந்தார்கள். பெரியோர்கள் அந்த ஸ்ரீக்ருஷ்

ணனுடைய பாதாரவிந்தங்களை எவ்வளவுபணிந்தும த்ரு ப்தி அடையாதிருப்பதுபோல, அம்மடந்தையர்கள் அவ னுடைய முகசோபையாகிற அம்ருதத்தைத் தங்கள் கண்களாகிற பாத்ரங்களால் ஏந்திப் பருகிப்பருகியும் த்ருப்தி அடையவில்லை. அவர்களில் ஒருத்தி ஸந்தோ ஷத்தினால் அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய தாமரைமலர் போன்ற கையைத் தன் அஞ்சலியினால் பிடித்துக்கொண் டாள். ஒருத்தி நிரம்பவும் சந்தனம் பூசப்பெற்ற அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய புஜத்தைத் தன் தோள்மேல் எடுத் து வைத்துக்கொண்டாள். ஒருத்தி அவன் மென்ற தாம் பூலத்தைத் தன் அஞ்சலியில் வாங்கிக்கொண்டாள். ஒருத்தி விரஹதாபத்தினால் தபிக்கப்பட்ட தன் கொங் கைகளில் அவன்பாதாரவிந்தத்தை எடுத்துவைத்துக் கொண்டாள். ஒருத்தி புருவத்தை நெரித்து ப்ரணய கோபத்தினால் தழதழத்து உதட்டைக் கடித்துக் கொ ண்டு கடைக்கண்ணோக்கத்தினால் அவனை அடிப்பவள் போல நோக்கினாள். ஸத்புருஷர்கள் அவனுடையபாதார விந்தங்களை எவ்வளவு பணிந்தும் த்ருப்தி அடையாதி ருப்பதுபோல, ஒருத்தி இமை கொட்டாத கண்களால் அவனமுகத்தைப் பானஞ்செய்தும் மேன்மேலும் அதை யே ஸேவித்துக்கொண்டிருந்து சிறிதும் த்ருப்தி அடையவில்லை. ஒருத்தி அவனைக் கண்த்வாரத்தினால் மனத்தில் நிறுத்திக்கொண்டு நன்றாக ஆலிங்கனஞ் செய்து கண்ணைத் திறந்து உடம்பெல்லாம் மயிர்க்கூச் சம் உண்டாகப்பெற்று ஆநந்தஸாகரத்தில் அழுந்தி யோகியைப்போன்றிருந்தாள். யோகிகள பரமாத்ம ஸாக்ஷாத்காரம உண்டாகப்பெற்று ஆத்யாத்மிகம் முத லிய ஸம்ஸாரதாபங்களைத் துறப்பதுபோல, அந்தக் கோபிகைகள் அனைவரும் அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய

காட்சியாகிற மஹோத்ஸவத்தினால் மிகவும்ஸந்தோஷம் அடைந்து அவனைப் பிரிந்தமையாலுண்டான தாபத்தைத் துறந்தார்கள். அப்பா! மன்னவனே! விரஹதாபத்தைத் துறந்த அந்தக் கோபிகைகளால் சூழப்பட்ட அவ்வச்சுதன் இருபத்துநாலு தத்வங்களாகிற சக்திகளால் சூழப்பட்ட பரமபுருஷன்போல விளங்கினான் அப்பால் ப்ரபுவாகிய ஸ்ரீக்ருஷ்ணன் அவ்விடத்தினின்று அவர்களை அழைத்துக்கொண்டு ராஸக்ரீடைக்கு உரியதாகிய வேறொரு மணற்குன்றிற்குச் சென்றான். அங்குக் காற்று மலர்ந்த குந்தபுஷ்பங்களிலும் மந்தாரபுஷ்பங்களிலும் பட்டு நல்லபரிமளத்துடன் வீசிக்கொண்டிருந்தது. வண்டுகள் அந்தக் காற்றைத் தொடர்ந்து வந்து அவ்விடத்தில் ஜங்காரஞ்செய்துகொண்டிருந்தன. முழுநிலாவுடன் திகழ்கின்ற சரத்கால சந்த்ரனுடைய கிரணஸமூஹங்களால் இரவின் இருட்டெல்லாம் தொலைந்து அவ்விடம் மிகவும் அழகாயிருந்தது. அங்கு யமுனாநதியின்கரையில் [1] கரங்கள்போன்ற அலைகளால் மென்மையான மணல்கள் குவிக்கப்பட்டிருந்தன. இத்தகையதான மணற்குன்றிற்கு ஸ்ரீக்ருஷ்ணன் அவர்களை அழைத்துக்கொண்டு சென்று அங்கு அம்மடந்தையர்களால் சூழப்பட்டு விளங்கினான். பூர்வபாகங்களென்றும் உத்தரபாகங்களென்றும் இரண்டுவகையாகப் பிரிந்த வேதங்கள் பரமபுருஷனை மொழிந்து தங்கள்மனோரதமெல்லாம் நிரம்பப்பெறுவதுபோல, அக்கோபிமார்கள் அந்த ஸ்ரீக்ருஷ்ணனைக் கண்டமையாலுண்டான ஸந்தோஷத்தினால் மனவருத்தங்களையெல்லாம் துறந்து தங்கள் மனோரதங்களெல்லாம் நிறைவேறப்பெற்றார்கள். அவர்கள் தங் கொங்கைகளின்மேல் அணிந்த குங்குமங்கள் படிந்த உத்தரீயங்களால் தங்கள்பந்துவாகிய அந்த ஸ்ரீ

---

1, கரம் - கை.

க்ருஷ்ணனுக்கு ஆஸனம் அளித்தார்கள். ஸர்வேஸ்வரனாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் யோகீஸ்வரர்களின் ஹ்ருதயகமலத்தில் வாஸஞ்செய்பவனாயினும் அந்தக் கோபிகைகள் விரித்த உத்தரீயமாகிற ஆஸனத்தின்மேல் அவர்களின் நடுவே உட்கார்ந்து மூன்று லோகங்களிலுமுள்ள ஸௌந்தர்யசேரபைகளுக்கெல்லாம் முக்யாதாரமான உருவத்துடன் அவர்களுக்குத் தர்சனங்கொடுத்துக்கொண்டு விளக்கமுற்றிருந்தான். அந்தக் கோபிகைகள் காமவிகாரத்தை மேன்மேலெழ விளைக்கின்ற அப்பகவானைப் புன்னகை யமைந்த அழகிய கடைக்கண்ணோக்கத்தினால் விலாஸத்துடன் திகழ்கின்ற புருவத்தினால் கௌரவித்துத் தங்கள் மடியில் இடப்பட்ட அப்பகவானுடைய பாதங்களைக் கரங்களால் ஸ்பர்சித்துத் திடமாகப்பிடித்துக்கொண்டு சிறிதுகோபத்துடன் மொழிந்தார்கள்.

கோபிகைகள் சொல்லுகிறார்கள்:—சிலர் தங்களை அனுஸரிப்பவர்களைத் தாங்கள் அனுஸரிக்கின்றார்கள். சிலர் தங்களை அனுஸரியாதவர்களை அனுஸரிக்கின்றார்கள். சிலர் தங்களை அனுஸரிக்கிறவர்களையும் அனுஸரிக்கிறதில்லை; அனுஸரியாதவர்களையும அனுஸரிக்கிறதில்லை. ஓ க்ருஷ்ணா! இதை எங்களுக்கு நன்றாக விவரித்துச் சொல்வாயாக (இதற்குக் காரணத்தையும் பலனையும் இதிலுள்ள குணதோஷங்களின தாரதம்யத்தையும் எங்களுக்கு விவரித்துச் சொல்லவேண்டும்).

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—தோழிகளே! எவர்கள் ஒருவரையொருவர் அனுஸரிக்கிறார்களோ; அவர்கள் தத்தம் ப்ரயோஜனத்தை நிறைவேற்றிக்கொள்வதில் திடமான முயற்சியுடையவர்கள். ஆகையால் அங்ஙனம் ஒருவரையொருவர் அனுஸரிப்பதற்கு ஸ்னேஹம்

காரணமன்று. மற்றும் அதில் தர்மமும் கிடையாது. அதில் அவரவர் ப்ரயோஜனம் கைகூடுகைமாத்ரமே உள்ள தன்றி மற்றொன்றும் இல்லை. நுண்ணிடையுடைய வர்களே! எவர்கள் தங்களை அநுஸரியாதவர்களை அநுஸரிக்கிறார்களோ, அவர்கள் தந்தைகள்போலக் கருணையுடையவர்கள். ஸமஸ்தபூதங்களிடத்திலும் நட்புடைய வர்களாயிருக்கையே இதற்குக் காரணம். இதில் அழிவில்லாத தர்மம் உண்டாகும். தங்களை அநுஸரிக்கிறவர்களையும் அநுஸரியாதவர்கள் அநுஸரியாதவர்களை எப்படி அநுஸரிப்பார்கள்? அங்ஙனம் அநுஸரியாதவர்களில் சிலர் தங்கள் தேஹபோஷணமாத்ரத்தில் ஊக்கமுடையவர்கள். சிலர் சப்தாதிவிஷயபோகங்களும் அவற்றிற்குவேண்டிய கருவிகளும் அவற்றிற்குரிய ஸ்தானங்களும் ஸம்ருத்தமாயிருக்கப் பெற்றவர்கள். சிலர் பிறர் செய்த நன்றியை நினையாமல் மறந்து குருக்களுக்கும் த்ரோஹஞ் செய்பவர்கள். தோழிகளே! நான் என்னை அநுஸரிக்கிறவர்களையும் அநுஸரிக்கிறதில்லை. ஆயினும் நான் பிறர் செய்த நன்றியை நினையாமல் மறப்பவனல்லேன். ஆனால் நான் அவர்களை ஏன் அநுஸரிக்கிறதில்லையென்றால்பணமில்லாதவன் தெய்வாதீனமாய்க்கிடைத்த பணம் ஒருகால் திடீரென்று கைசேர்ந்துபோகையில் அதையே சிந்தித்துக்கொண்டு அதில் மனவூக்கமுற்று மற்றொன்றையும் நினையாதிருப்பதுபோல, ஒருகால்என்னைக் கண்டனுபவித்தவர்கள் மேன்மேலும் என்னைக் கண்டனுபவிக்கவிரும்பி என்னை அநுஸரிக்கினும் அவர்கள் என்னையே நினைத்து என்னிடத்திலேயே மனவூக்கமுற்று மேன்மேலும் மற்றொன்றையும் நினையாதிருப்பதற்காகவே நான் அவர்களுக்குத் தர்சனங் கொடுத்து அவர்களை அநுஸரிக்கிறதில்லை. நான் அவர்களை அநு

ஸரித்திருப்பேனுயின் நெடுநாள் பணமில்லாதிருந்தவன் ஒருகால் பணத்தைப் பெற்று அது கைசோராதிருக்கப் பெற்றுச் சப்தாதிவிஷயங்களில் மனஞ் சென்று அந்தப் பணத்தையும் மற்றதையும் நினையாமல் கொழுத்திருப்பது போல, அவர்களும் கொழுத்து என்னையும் மறந்து மற்றதையும் மதிக்கமாட்டார்கள். ஆகையால் அவர்கள் என்னை மறவாமல் பெரிய ஆவலுடன் அநுஸரிப்பதற்காகவே நான் அவர்களை அநுஸரிக்கிறதில்லை. மாதர்களே! எனக்காக நீங்கள் லோகமர்யாதையையும் வேதமர்யாதையையும் பந்துக்களையும் கடந்துவந்தீர்கள். அத்தகைய உங்களுக்கு மேனமேலும் மனத்தொடர்ச்சி விளையும்பொருட்டு உங்களுக்குஉபகாரஞ்செய்ய முயன்றே நான் உங்கள்கண்ணுக்குத் தெரியாமல் மறைந்தேன். அன்பிற்கிடமாயிருப்பவர்களே! ஆகையால் நீங்கள் உங்கள் அன்பனுகிய என்மேல் அஸூயைப்படலாகாது. நிஷ்கபடமாக என்னை அநுஸரிக்கின்ற உங்களுக்கு நன்றாக ப்ரதியுபகாரஞ்செய்ய [1] ப்ரஹ்மாயுஷத்தினுலும் வல்லனல்லேன. எவ்வளவு வருந்தியும் அறுக்கமுடியாததான இல்லறவாழ்க்கையாகிற சங்கிலியை நன்றாக அறுத்து என்னைத் தொடர்ந்து வந்தீர்கள். ஆகையால் அத்தகைய உங்களுக்கு அச்சங்கிலி மீளவும் தொடராமல் இப்பொழுது அடியோடு அறுந்துபோமாக. இது தவிர நீங்கள் செய்த உபகாரம் உங்களிடத்திலேயே ஜீர்ணமாக வேண்டுமென்றி அதற்கு என்னுல் தகுமாறு பதிலுபகாரஞ் செய்ய முடியாது. முப்பத்திரண்டாவது அத்யாயம் முற்றிற்று.

1. அவ்வளவு நெடுங்காலத்தினுலும்.

ராஸக்ரீடையும், பரீக்ஷித்து மன்னவன் வினவுதலும், ஸ்ரீசுகர் ஸமாதானங் கூறுதலும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—கோபிகைகள் இங்ஙனம் மொழிந்த பகவானுடைய இனிய உரைகளைக் கேட்டு அவனுடைய அங்கத்தை அணைத்து மனோரதம் கைகூடப்பெற்று அவனைப் பிரிந்தமையாலுண்டான தாபத்தைத் துறந்தார்கள். அந்த ஸ்ரீக்ருஷ்ணன் தன்னைத் தொடர்ந்தவர்களும் மிகுந்த அன்புடையவர்களும் ஒருவர்க்கொருவர் கைகோத்துக்கொண்டிருப்பவர்களுமாகிய அப்பெண்மணிகளுடன் அம்மணற்குன்றில் ராஸக்ரீடை செய்யத்தொடங்கினான். யோகேஶ்வரனான அந்த ஸ்ரீக்ருஷ்ணன் கோபிகைகளின் மண்டலங்களால் அழகாயிருப்பதான ராஸக்ரீடையாகிற மஹோத்ஸவத்தை நடத்தினான். அந்த ஸ்ரீக்ருஷ்ணன் மண்டலமாயிருக்கின்ற அக்கோபிகைகளின் இடையில் இரண்டிரண்டுபேர்களின் நடுவில் நுழைந்து தனவிருபக்கங்களிலுமிருக்கின்ற கோபிகைகளைக் கண்டத்தில் கைகளால் தழுவிக்கொண்டு நின்றான். அவன் சிந்திக்கமுடியாத பலவகை விசித்ர சக்திகளுடையவனாகையால் பலவுருவங்கள் கொண்டு இரண்டிரண்டுபேர்களின் நடுவில் நுழைந்து ஒவ்வொருத்தியும் 'ஸ்ரீக்ருஷ்ணன் என்பக்கத்திலேயே என்னைத்தழுவிக்கொண்டிருக்கிறான்' என்று நினைக்குமாறு அவர்களை மதிமயக்கினான். தேவதைகள் அப்பொழுதே பெரிய ஆவலால் மனம் பறியுண்டு மடந்தையர்களுடன் விமானங்களின்மேல் ஏறிக்கொண்டு அவ்விடம் வந்து சேர்ந்தார்கள். அதனால் ஆகாசமெல்லாம் விமானமாய் விட்டது. சிறப்புடைய கந்தர்வர்கள் தத்தம்மடந்தையர்களுடன் வந்து பரிசுத்தமான அப்பகவானுடைய புக

ளைப் பாடினார்கள். ராஸமண்டலத்தில் அன்பனாகிய ஸ்ரீக்ருஷ்ணனுடன் நர்த்தனஞ் செய்கின்ற அக்கோபிமார்களின் வளைகள் தண்டைகள் சிறுசதங்கைகள் ஆகிய இவற்றின் சப்தங்கள் ஒன்று சேர்ந்து பெருஞ்சப்தமாயிற்று. நீலமேகஶ்யாமலனான அந்த ஸ்ரீக்ருஷ்ணன் அந்த ராஸமண்டலத்தில் பொன்னிறமுடைய அக்கோபிமார்களால் சூழப்பட்டிருப்பினும் பொன்மணிகளின் இடையில் பெரிய மரகத ரத்னம்போல நன்கு விளங்கினான். (அத்தனை மடந்தையர்கள் நடுவிலும் அவனொருவனே ப்ரகாசித்தான்). ஸ்ரீக்ருஷ்ணனுடைய மனத்திற்கினிய மடந்தையர்களாகிய கோபிமார்களும் நர்த்தனஞ் செய்யும் பொழுது நேரிடுகின்ற அடிவைப்புக்களோடும் கைகளை அசைக்குவதோடும் புன்னகையோடுகூடின புருவநெரிப்புக்களோடும் முறிகின்றவை போன்ற நுண்ணிடைகளோடும் ஆடைகளோடும் கபோலங்களில் தொங்குகின்ற குண்டலங்களோடுங்கூடி முகங்கள் வேர்க்கவும் தலைச்சொருக்கு அரைநாண்மாலை இவைகள் அவிழ்ந்தலையவும் பெற்று அந்த ஸ்ரீக்ருஷ்ணனைப்பாடிக்கொண்டு அவனுடன் கூடி மேகமண்டலத்தில் மின்னல்கள்போல விளங்கினார்கள். நர்த்தனஞ்செய்கின்ற அந்தக்கோபிமார்கள். பலராகங்களால் இனிய குரலுடையவர்களாகி ஸ்ரீக்ருஷ்ணனுடைய ஸ்பர்சத்தினால் மனக்களிப்புற்று உரக்கப் பாடினார்கள். அவர்களுடையஸங்கீதம் இந்தப்ரபஞ்சம் முழுவதும் நிரம்பிற்று. அவர்கள்பாடினகானத்தின் சிறிதுபாகத்தையே இப்பொழுது இந்த ப்ரபஞ்சத்திலுள்ளவர் பாடுகிறார்கள். அந்தக் கோபிகைகளில் ஒருத்தி ஷட்ஜம் முதலிய ஏழுவகை ஸ்வரங்களையும் ஒன்றோடொன்று கலக்காமல் ஸ்ரீக்ருஷ்ணனோடுகூட அவன்பாடுகிற ஸ்வரங்களைக் காட்

டிலும் விலக்ஷணமாயிருக்குமாறு மூர்ச்சனையில் நிறுத்திப் பாடினாள். ஸ்ரீக்ருஷ்ணன் அதற்கு ஸந்தோஷம் அடைந்து நல்லதுநல்லதென்று புகழ்ந்தான். அவள் மேலும் உத்ஸாஹமுற்று அதற்கே தானம் பாடி மூர்ச்சனையில் நிறுத்த ஸ்ரீக்ருஷ்ணன் மிகவும் மிகுந்த ஸந்தோஷம் அடைந்து அவளுக்கு வெகுமானஞ் செய்தான். ஒருத்தி ராஸக்ரீடைசெய்த பரிஶ்ரமத்தினால் இளைப்புற்றுக் கைவளைகளும் தலையில் சூட்டின மல்லிப் புஷ்பங்களும் நழுவப்பெற்றுத் தன்னையினால் பார்ஶ்வத்தில் இருக்கின்ற பகவானுடைய தோளைப் பற்றினாள். அவர்களில் ஒருத்தி தன் தோள்மேல் இருப்பதும நெய்தல் பூமணமுடையதும் நிரம்பச் சந்தனம் பூசப்பெற்றிருப்பதுமாகிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய புஜத்தை மோந்து மயிர்க்கூச்சம் உண்டாகப்பெற்று அதைச் சும்பனஞ் செய்தாள். ஒருத்தி நர்த்தனஞ் செய்கையால் அசைகின்ற குண்டலங்களின் காந்தியால் திகழ்கின்ற கபோலத்தை அத்தகைய ஸ்ரீக்ருஷ்ணனுடைய கபோலத்துடன் சேர்க்க அவன் தன்வாயில் மென்று கொண்டிருக்கிற தாம்பூலத்தை அவளுக்குக் கொடுத்தான். நர்த்தனஞ் செய்துகொண்டே பாட்டும் பாடிக்கொண்டிருக்கிற ஒருத்தி தண்டையும் அரைநாண்மாலையும் ஒலிக்கப்பெற்று இளைப்புற்று அழகியதும் தாமரை மலர்போன்றதுமாகிய பக்கத்திலிருக்கின்ற அச்சுதனுடைய ஹஸ்தத்தைத் தன் ஸ்தனங்களின்மேல் வைத்துக்கொண்டாள். கோபிகைகள் ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு மிகவும் அன்பனாகிய ஸ்ரீக்ருஷ்ணனைக் கணவனாகப்பெற்று அவனைப்பாடிக்கொண்டு விளையாடினார்கள். காதுகளில் அணிந்திருக்கின்ற நெய்தல் புஷ்பங்களாலும் முன்னெற்றிமயிர்களால் அலங்கரிக்கப்பட்ட கபோலங்களாலும்

ங்கையால் மலர்ந்தும் அடைந்து அவாப்தஸமஸ்தகாமனாயிருப்பினும் லீலைக்காகவே அவர்களுடன் க்ரீடித்தான். ஓ குருச்ரேஷ்டனே! ஷாட்குண்யபூர்ணனாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணனானவன் இரக்கமுடையனாகையால் ஸம்போகத்தினாலும் மற்றும் பலவிளையாடல்களாலும் இளைப்புற்றிருக்கிற அந்தக்கோபிகைகளின வேர்த்திருக்கின்ற முகங்களை மிகவும் ஸந்தோஷத்தை விளைப்பதாகிய தனகையினால் ப்ரேமத்துடன் துடைத்தான். அந்தப் பகவானுடைய நகங்களின் ஸ்பர்சத்தினால் ஸந்தோஷம் அடைந்திருக்கின்ற கோபிகைகள் திகழ்கின்ற ஸ்வர்ணமயமான குண்டலங்களின் காந்தியாலும் முன்னெற்றிமயிர்களின காந்தியாலும் விளங்குகின்ற கபோலங்களின் சோபையாலும் அம்ருதம்போன்ற புன்னகையோடு கூடின கண்ணோக்கத்தினாலும் தங்கள் நாதனாகிய ஸ்ரீக்ருஷ்ணனுக்கு வெகுமதி செய்துகொண்டு புண்யங்களான அவனுடைய செயல்களைப் பாடினார்கள். அந்தக் கோபிகைகளைக் கட்டியணைக்கும்பொழுது அவர்களுடைய அங்கங்களால் கசக்கப்பட்டிருப்பதும் அவர்களுடைய ஸ்தனங்களின குங்குமக்குழம்பு படிந்திருப்பதுமாகிய புஷ்பமாலையைத் தரித்து கந்தர்வச்ரேஷ்டர்களைப்போல மிகவும் இனிதாகப் பாடுகின்ற வண்டுகளின இனங்களால் சூழப்பட்ட அந்த ஸ்ரீக்ருஷ்ணன் ஸம்போகத்தினாலும் விளையாடல்களாலும் நேர்ந்த ச்ரமத்தைத் தீர்க்கும்பொருட்டுக் கரையுள்ள மத்தகஜம் இளைப்புற்றுத் தன் பேடைகளுடன் அணைகளையெல்லாம் உடைத்துக்கொண்டு ஜலத்தில் இழிவதுபோல, லோகமர்யாதைகளையும் வேதமர்யாதைகளையும் கடந்து அவர்களுடன் ஜலக்ரீடை செய்ய ஜலத்தில் இழிந்தான். ஷாட்குண்யபூர்ணனாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் ஆத்மாரா



2316. ராஸக்ரீடை.

பலத்தினால் மஹாநந்தமுற்று நிறைவாளனாயினும் யானை தன்பேடைகளோடு விளையாடுவதுபோல, ஜலத்தில் இழிந்து மிகவும் ஸந்தோஷமுற்று நகைக்கின்ற கோபஸ்த்ரீகள் ப்ரீதியுடன் ஜலங்களை வாரியிறைத்து நனைக்கத் தானும் அவர்கள்மேல் ஜலத்தை இறைத்து நனைத்துக்கொண்டு ஆகாயத்தில் புஷ்பங்களைப் பெய்கின்ற தேவதைகளால் துதிக்கப்பெற்று விளையாடினான். அப்பால் ஜலத்திலும் நிலத்திலும் பூக்கின்ற புஷ்பங்களின் பரிமளங்களை ஏற்றுக்கொண்டு வருகிறகாற்றினால் வீசப்பெற்ற திசைகளையுடையதும் அழகாயிருப்பதுமாகிய யமுனைக்கரையிலுள்ள உபவனத்தில் மதஜலங்களைப் பெருக்குகின்ற மத்தகஜம் பெண்யானைகளுடன் திரிவதுபோல, வண்டினங்களாலும் மடந்தையர்மணிகளின் கூட்டங்களாலும் சூழப்பட்டு உலாவிக்கொண்டிருந்தான். ஸத்யஸங்கல்பனும் ஷாட்குண்யபூர்ணனுமாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன மடந்தையர்மணிகள் ப்ரேமத்துடன கூட்டங்கூட்டமாய்த் தொடரப்பெற்றுச் சரமதாதுவைத் தன்னிடத்திலேயே அடக்கிக்கொண்டு (காமத்தை வென்று) சந்த்ரகிரணங்களால் திகழ்பவைகளும் காவ்யங்களில் சொல்லப்படுங் கதாரஸங்களுக்கெல்லாம் இடமாயிருப்பவைகளுமான சரத்காலத்து ராத்ரிகளெல்லாம் அவர்களோடு விளையாடினன

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான் :—பகவான் தர்மத்தை நிலைநிறுத்தும்பொருட்டும் அதர்மத்தை அழிக்கும்பொருட்டுமல்லவோ தன்னுடைய அம்சமாகிய பலராமனுடன் தனஸங்கல்பத்தினால் அவதரித்தான் ப்ரஹ்மர்ஷீ! அத்தகையனான ஸர்வேஶ்வரன் தர்ம மர்யாதைகளைத் தானும் அனுஷ்டித்துப் பிறர்க்கும் உபதேசித்துப் பாதுகாக்கவேண்டியவனாயிருந்தும் பிறர்

தாரங்களைப் புணர்கையாகிற விபரீதகார்யத்தை எப்படி செய்தான்? யாதவர்களில் அவதரித்த மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் தான் அவாப்த ஸமஸ்தகாமனாயிருந்தும் நிந்தைக்கிடமான கார்யத்தைச்செய்தமைக்கு என்ன அபிப்ராயம்? இவ்விஷயத்தில் எங்களுக்கு ஸம்சயமாயிருக்கின்றது. நன்கு வ்ரதங்களை அனுஷ்டிக்குந் தன்மையுடையவரே! அதைப் போக்குவீராக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—சாஸ்த்ரநிபந்தனைகளுக்கு உட்படாதபெரியோர்கள் சாஸ்த்ரங்களில்சொல்லப்பட்ட தர்மங்களைக் கடப்பதும் சாஸ்த்ரார்த்தங்களை ஆராயாமல் தோன்றபடி செய்வதும் புலப்படுகின்றது. ஆயினும் தேஜிஷ்டர்களான பெரியோர்களுக்கு அது தோஷத்தை விளைக்காது. எல்லாவற்றையும் தஹிக்கின்ற அக்னிக்கு தஹிக்கப்படுகிற வஸ்துக்களின் தோஷம் ஸம்பந்திக்குமோ? ஸம்பந்திக்காதல்லவா? சாஸ்த்ரவச்யர்களல்லாத ஈச்வரர்கள் செய்கிற இத்தகைய தப்புக்கார்யங்களைச் சாஸ்த்ரநிபந்தனைகளுக்கு உட்பட்டு நடக்க வேண்டியவர்கள் ஒருகாலும் மனத்திலுங்கூட நினைக்கலாகாது. மூடத்தனத்தினால் தான் சாஸ்த்ரத்திற்குட்பட்டு நடக்கும் ஸந்நிவேசனமை அறியாமல் அந்த விபரீதகார்யங்களைச் செய்வானாயின் நிச்சயம் நசித்துப்போவான். ஸமுத்ரத்தினின்று உண்டான விஷத்தை ருத்ரன் பக்ஷித்தபோது மற்றொருவன் பக்ஷிப்பானாயின் சேதத்தை அடைவானல்லவா? 'ஆனால்பெரியோர்களின் நடத்தைகளெல்லாம் மற்றவர்களுக்கு ப்ரமாணமல்லவா' என்றால், சொல்லுகிறேன் கேட்பாயாக. பெரியோர்கள் 'இதைச்செய். இதைச் செய்யவேண்டாம்' என்று சொல்லும் வார்த்தைகளெல்லாம் ப்ரமாணமே. நடத்தைகளோ வென்றால், எவைகள் ப்ரமாணமான அவர்களுடைய உக்திக்கு

விபரீதமல்லாத சிலவற்றையே அனுஷ்டிக்கலாமன்றிமற்றவைகளை அனுஷ்டிக்கலாகாது. ஆகையால்புத்தியுடையவன் பெரியோர்கள் தாங்கள் நிரூபித்துச் சொல்லும் சொற்களுக் கிணங்கின ஆசாரத்தையே அனுஷ்டிக்க வேண்டும். பெரியோர்களுக்கு இவ்வுலகத்தில் நன்னடத்தையை அனுஷ்டித்துவராநிக்கவேண்டிய ப்ரயோஜனம் எள்ளவுமே இல்லை. அவர்கள் விபரீதகார்யங்களைச் செய்யினும் அதனால் தேஹத்தை ஆத்மாவாக ப்ரமித்தவர்களாகமாட்டார்கள். தேஹாத்மாபிமானம் பூர்வஜன்மகர்மத்தினால் உண்டாகின்றது; மேன்மேலும் கர்மங்களைச் செய்வதற்குக் காரணமாயிருக்கும். அத்தகைய தேஹாத்மாபிமானமற்றவர்களாகையால் அவர்கள் கர்மவச்யர்களல்லர். கர்மத்திற்கு உட்படாமையைப்பற்றியே அவர்கள் சாஸ்த்ரநிபந்தனைகளுக்கு உட்பட்டவர்களல்லர். ஆகையால் அவர்களுக்குத் தர்மங்களைச் செய்கையால் ஒரு ப்ரயோஜனமுமில்லை; அதர்மங்களைச் செய்கையால் ஒரு கெடுதியும் கிடையாது. இப்படியிருக்க, திர்யக்கு மனுஷ்யர் தேவர்கள் என்று பலவகையாகப் பிரிந்திருப்பவைகளும் நியமிக்கத்தகுந்தவைகளுமாகிய ஸமஸ்த ஜந்துக்களுக்கும் நியாமகனான ஸர்வேச்வரனுக்கு நன்மை தீமைகளில் ஸம்பந்தமில்லையென்பதைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? இவனுடைய பாதாரவிந்தங்களின் பராகத்தைப் பணிகையால் த்ருப்தி அடைந்து சப்தாதி விஷயங்களில் விருப்பம் தீரப்பெற்று அப்பாதாரவிந்தங்களை த்யானிப்பதின் மஹிமையால் ஸமஸ்த கர்மபந்தங்களையும உதறின ஸனகாதி முனிவர்கள் சாஸ்த்ர நிபந்தனைகளால் கட்டப்படாதவர்களாகி நினைத்தபடி ஸஞ்சரிக்கின்றார்கள்; தன்னிச்சையினால் சுத்தஸத்வமயமான திவ்யமங்கள விக்ரஹங்களை ஏற்றுக்கொள்பவ

னும் பாபங்கள் தீண்டப்பெறாதவனுமாகிய அத்தகைய பகவானுக்குக் கர்மபந்தம் எங்கிருந்து நேரப்போகின்றது? அவன் நினைத்தபடி எதைச் செய்யினும் அதனால் அவனுக்குப் பந்தம் உண்டாகாது. இந்த ஸர்வேச்வரன் கோபிகளுக்கும் மற்றுமுள்ள ஸமஸ்தஜீவாத்மாக்களுக்கும் அந்தராத்மாவாய் நிறைந்து நியமித்துக்கொண்டிருப்பவன்; அவரவர்கள் செய்யும் கர்மங்களுக்குத் தகுந்தபடி ஸுகம் துக்கம் முதலிய பலன்களைக் கொடுப்பவன்; ஷாட்குண்யபூர்ணன். இவன் நம்மைப்போல் கர்மபலனான ஸுகதுக்கங்களை அனுபவிப்பதற்காகத் தேஹங்கொண்டவனல்லன்; விளையாட்டிற்காகவே இம்மானிட உருவம் பூண்டு அவதரித்தவன். பக்தர்களை அனுக்ரஹிப்பதற்காக இவன் மானிடஉருவத்தை ஏற்றுக்கொண்டான். எவைகளைக் கேட்டமாத்ரத்தில் உலகமெல்லாம் தன்னிடத்தில் மனவூக்கமுறுமோ, அத்தகைய விளையாடல்களைச் செய்கிறான். ஆகையால் அவனுடைய விளையாடல்களும் ப்ராணிகளைத் தன்வசமாக்கி அனுக்ரஹிப்பதற்காகவே. (அவனுடைய அவதாரங்கள் விளையாட்டிற்காக. விளையாட்டு பக்தர்களை அனுக்ரஹிப்பதற்காக.) கோபிகைகளின் கணவர்களும் அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய மாயையினால் மதிமயங்கித் தங்கள் தாரங்களைத் தங்கள்பக்கத்தில் இருப்பதாகவே நினைத்து அவன்மேல் அஸூயைப்படவில்லை. அப்பால் ப்ராஹ்மமுஹூர்த்தம் ப்ராப்தமாகையில் ஸ்ரீக்ருஷ்ணன் அந்தக் கோபிகைகளை அநுமோதனஞ்செய்து நீங்கள் போய் வாருங்களென்று விடைகொடுத்தனுப்பினான். ஆயினும் அவர்கள் அவனிடத்தில் மிகுந்த அன்புடையவர்களாகையால் திரும்பிப்போக மனவிருப்பமில்லாமலேமிகவும் வருந்தித் தத்தம் க்ருஹங்களுக்கு மீண்டு சென்றார்கள்.

ஸ்ரீக்ருஷ்ணன் கோபஸ்த்ரீகளோடுகூடி நடத்தின இந்த ராஸக்ரீடையை எவன் ஶ்ரத்தையுடன் கேட்கிறானோ, அல்லது கேட்பிக்கிறானோ. அவன் பகவானிடத்தில் மிகுந்த பக்தியைப் பெற்று இந்த்ரியங்களை வென்று ஸம்ஸாரமாகிற மனோவியாதியை விளைப்பதாகிய அஜ்ஞானத்தைக் காலதாமதமின்றிச் சீக்ரத்தில உதறிவிட்டு மஹாநந்தத்தை அடைவான். முப்பத்துமூன்றாவது அத்யாயம் முற்றிற்று

ப்ராஹ்மண சாபத்தினால் ஸர்ப்பஜன்மம் பெற்ற ஸுதர்சனனென்னும் வித்யாதரனை சாபத்தினின்று விடுவித்தல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஒருஸமயம் கோபாலர்கள் தேவனுடையயாத்ரோத்ஸவத்தைப் பணியவேண்டுமென்னும் விருப்பம் உண்டாகப்பெற்று எருதுகள் பூட்டப்பெற்ற வண்டிகளின்மேல் ஏறிக்கொண்டு அம்பிகாவனத்திற்குச் சென்றார்கள். அவர்கள் அவ்வனத்திற்கு அருகாமையிலுள்ள ஸரஸ்வதிநதியில் ஸ்நானஞ்செய்து சந்தனம் புஷ்பம் முதலியவைகளால் ப்ரபுவான பசுபதியையும் அம்பிகாதேவியையும் பக்தியுடன் பூஜித்தார்கள். மற்றும், அவர்கள் 'தேவனாகிய பசுபதி நம் விஷயத்தில் ப்ரீதியுடையவேண்டும்' என்னும் அபிப்ராயமுடையவர்களாகி ப்ராஹ்மணர்களுக்குப் பசுக்களையும் ஸுவர்ணத்தையும் வஸ்த்ரங்களையும் தேனோடுகூடிய மதுரமான அன்னத்தையும் கொடுத்தார்கள். நந்தஸுநந்தகர் முதலிய அந்தக்கோபர்கள் அப்பால் ஜலத்தைமாத்ரமே உட்கொண்டு ப்ராஹ்மசர்யவ்ரதத்தில் ஊக்கமுற்று அன்றிரவெல்லாம் அந்த ஸரஸ்வதிநதியின் கரையிலேயே வஸித்திருந்தார்கள். அந்த அம்பிகாவனத்தில் பெருருவமு

டைய ஒரு ஸர்ப்பம் மிகவும் பசித்து வசித்திருந்தது. அந்தஸர்ப்பம் திடீரென்று அவ்விடம் வந்து படுத்துக்கொண்டிருக்கின்ற நந்தகோபனைப் பிடித்து விழுங்க முயன்றது. அங்ஙனம் ஸர்ப்பத்தினால் பிடியுண்ட அந்நந்தகோபன 'க்ருஷ்ணா! க்ருஷ்ணா! அப்பனே! பெரிய ஸர்ப்பமொன்று என்னைப் பிடித்து விழுங்குகின்றது. உனனைச் சரணம் அடைந்த என்னை இந்த ஸர்ப்பத்தினின்று விடுவிப்பாயாக' என்று முறையிட்டான். அந்த நந்தனுடைய கூக்குரலைக் கேட்டுக் கோபாலர்கள் அனைவரும் விரைவுடன் எழுந்து நந்தனை ஸர்ப்பத்தினால் பிடிபட்டிருப்பதைக் கண்டு மிக்கக் கலக்கமுற்று அந்த ஸர்ப்பத்தைக் கொள்ளிக்கட்டைகளால் அடித்தார்கள். அது அவற்றால் அடிபட்டும் அந்நந்தனை விடவில்லை. அப்பால் தன்னைச் சரணம் அடைந்தவர்களுக்கு ரக்ஷகனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் வந்து அந்த ஸர்ப்பத்தைத் தன்பாதத்தினால் ஸ்பர்சித்தான். அந்த ஸர்ப்பமும் ஸ்ரீக்ருஷ்ணனுடைய பாதம்பட்டமாத்ரத்தில் பாபந்தீரப்பெற்று ஸர்ப்பசரீரத்தைத் துறந்து வித்யாதரர்களால் புகழப்படுகின்ற வித்யாதர உருவம்பெற்று ஸ்ரீக்ருஷ்ணனை நமஸ்கரித்து நிற்க, மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணனும் எதிரில் நமஸ்காரஞ்செய்து ஒளிப்பெருக்குடன் திகழ்கின்ற மேனியைப் பெற்று நிற்கின்றவனும் ஸ்வர்ணமாலை தரித்திருப்பவனுமாகிய அப்புருஷனை நோக்கி இங்ஙனம் வினவினான்.

ஸ்ரீக்ருஷ்ணன் சொல்லுகிறான்:—அழகிய காட்சியுடையவனே! நீ யார்? பெரிய ஒளிப்பெருக்குடன் திகழ்கின்றனை. இப்படிப்பட்ட நீ நிந்தைக்கிடமான இந்த ஸர்ப்பஜன்மத்தை அடையும்படி எப்படி மெய்மறந்து நடந்தனை?




2322. ஸர்ப்பம் நந்தனை பிடித்துக்கொள்ள
ஸ்ரீக்ருஷ்ணன் அதினின்று அவனை விடுவித்தல்,

புருஷன் சொல்லுகிறான்:— நான் ஸுதர்சனனென்று ப்ரஸித்தனான ஒரு வித்யாதரன். செல்வப் பெருக்குடனும் பெரிய ஸௌந்தர்யஸம்ருத்தியுடனும் கூடியவனான ஒருகால் விமானத்தின்மேலேறித் திசைகளையெல்லாஞ்சுற்றிக்கொண்டு வருகையில் ஸௌந்தர்யத்தினால் கர்வமுற்றுக் குரூபிகளான அங்கிரஸரிஷிகளைக் கண்டு பரிஹாஸஞ் செய்தேன். அப்பொழுது என்னால் பரிஹாஸஞ்செய்யப்பட்ட அம்முனிவர்கள் என்னுடைய பாபத்தினால் தூண்டப்பட்டு எனக்கு இந்த ஸர்ப்பஜன்மத்தை இயன்றார்கள். அங்கிரஸமுனிவர்கள் என்னால் பரிஹாஸஞ்செய்யப்பட்டும் மஹத்த்வமுடையவர்களாகையால் என்னை அநுக்ரஹிக்கும்பொருட்டே எனக்கு இச்சாபங்கொடுத்தார்கள். ஏனென்றால், நான் மூன்றுலோகங்களுக்கும் குருவாகிய உன்னால் பாதத்தினால் ஸ்பர்சிக்கப்பட்டுப் பாபங்களெல்லாம் தீரப்பெற்றேனல்லவா? பயங்களைப் போக்குந்தன்மையனே! ஸம்ஸாரத்தினின்றும் பயந்து உன்னைச் சரணம் அடைந்தவர்களுடைய பயத்தைப் போக்குபவனும் ஜகத்குருவுமாகிய உன்னை, உன் பாதஸ்பர்சத்தினால் சாபத்தினின்றும் விடுபட்ட நான் போய்வருகிறேனென்று கேட்டுக்கொள்ளுகிறேன். சிந்திக்க முடியாத பலவகை ஆச்சர்ய சக்திகளுடையவனே! மஹாபுருஷா! ஸத்புருஷர்களுக்கு ரக்ஷகனே! உன்னை நான் சரணம் அடைந்தேன். ஸமஸ்தலோகங்களுக்கும் நியாமகனே! ஆச்ரிதர்களைக் கைவிடாத மஹாநுபாவனே! நான் உன்னைக் கண்டமாத்ரத்தில் ப்ராஹ்மண சாபத்தினின்று விடுபட்டேனென்பது ஆச்சர்யமன்று. ஏனென்றால் உன்னுடைய நாமத்தை உச்சரிக்கும் புருஷன் தன்னையும் கேட்கிற ஸமஸ்த ஜனங்களையும் அக்ஷணமே பரிசுத்தஞ்செய்கிறான். அத்தகைய

ப்ரபாவமுடைய நாமங்கள் அமைந்த உன்பாதத்தினால் நேரே ஸ்பர்சிக்கப்பட்ட நான் சாபத்தினின்று விடுபட்டதைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? உன்பெருமைக்கு இது ஒரு பொருளோ?

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஸுதர்சனன் இங்ஙனம் ஸ்ரீக்ருஷ்ணனிடம் அனுமதி பெற்றுக்கொண்டு அவனை ப்ரதக்ஷிணஞ் செய்து நமஸ்கரித்து ஸ்வர்க்கம் போய்ச் சேர்ந்தான். நந்தனும் ஸர்ப்பத்தினால் நேரும் வருத்தத்தினின்று விடுபட்டான். மன்னவனே! அப்பால் கோபர்கள் ஸ்ரீக்ருஷ்ணனுடைய அஸாதாரணமான வைபவத்தைக் கண்டு வியப்புற்ற மனமுடையவர்களாகி அவ்வம்பிகாவனத்தில் நியமத்துடன் இருக்கையாகிற வ்ரதத்தை முடித்து ப்ரீதியுடன் ஸ்ரீக்ருஷ்ணனுடைய ப்ரபாவத்தை மொழிந்துகொண்டே கோகுலத்திற்கு வந்து சேர்ந்தார்கள். பிறகு ஒருகாலத்தில் அற்புதமான பராக்ரமமுடைய ராமக்ருஷ்ணர்கள் இருவரும் ராத்ரியில் அரண்யத்தில் சென்று கோகுலத்திலுள்ள கோபஸ்த்ரீகளின் இடையில் விளையாடிக்கொண்டிருந்தார்கள். உடம்பெல்லாம் நன்றாக அலங்கரித்துக்கொண்டு சந்தனம் குங்குமம் முதலியன பூசி பூமாலைகளைச் சூடி நிர்மலமான வஸ்த்ரங்களைத் தரித்து நிலைநின்ற நட்புடைய கோபஸ்த்ரீகளால் இனிதாகப் பாடப்பெற்று விளங்குகின்ற அந்த ஸ்ரீக்ருஷ்ணராமர்கள் சந்த்ரனும் நக்ஷத்ரங்களும் உதித்து மலர்ந்த மல்லிப்பூக்களின் வாஸனையால் மதித்த மதுகரங்கள் சூழ்ந்திருப்பதும் நெய்தல் முதலிய புஷ்பங்களின் மணத்தைக் கொண்டுவருகிற மந்தமாருதத்தினால் வீசப்பெற்றிருப்பதுமாகிய ப்ரதோஷத்தைப் புகழ்ந்துகொண்டு ஸமஸ்தபூதங்களின் மனத்திற்கும் செவிகளுக்கும் இனிதாயிருக்கும்படி ஷட்ஜாதிஸ்வரங்களின் ஸமூ

ஹங்களை மூர்ச்சனையில் நிறுத்தி இருவரும் ஒரேஸமயத்தில் பாடினார்கள். மன்னவனே! கோபிகைகள் அந்தகானத்தைக்கேட்டு மதிமயங்கி அரையில் உடுத்தினபட்டாடையும் அவிழ்ந்து தலைமயிர்களில் சூடின பூமாலையும்நழுவித் தாங்கள் அங்ஙனம் இருப்பதையும் அறியாதிருந்தார்கள். இங்ஙனம் ராமக்ருஷ்ணர்கள் மதித்தவர்கள் போலாறு யதேஷ்டமாகப் பாடுவதும் ஆடுவதுமாயிருக்கையில் சங்கசூடனென்னும் பெயர் பெற்ற குபேரனுடையவேலைக்காரனை ஒருவன் அவ்விடம் வந்தான். அவன் மனத்தில் சிறிதும் சங்கையின்றி அந்த ராமக்ருஷ்ணர்கள்பார்த்துக்கொண்டிருக்கையில் அவர்களை நாதர்களாகவுடையதும் 'க்ருஷ்ணா! ராமா' என்று முறையிடுவதுமாகிய கோபஸ்த்ரீகளின் கூட்டத்தைப் பலாத்காரமாக வடதிசைக்குத் துரத்திக்கொண்டு போனான். அப்பொழுது ப்ராதாக்களாகிய அந்த ராமக்ருஷ்ணர்களிருவரும் தங்கள்பரிக்ரஹமாகிய கோபஸ்த்ரீகள் புலியினால் பிடியுண்ட கோக்கள்போலாறு 'க்ருஷ்ணா! ராமா!' என்று முறையிடுவதைக் கண்டு பின்தொடர்ந்தோடினார்கள். மஹாபலிஷ்டர்களாகிய அந்த ராமக்ருஷ்ணர்கள் கையில் ஸாலவ்ருக்ஷங்களைப் பிடுங்கியெடுத்துக்கொண்டு பயப்படவேண்டாமென்று உரக்க அபயம் மொழிந்துகொண்டே விரைந்தோடிச்சென்று யக்ஷர்களில் அதமனாகிய அந்தச்சங்கசூடனைக் கிட்டினார்கள் அந்தயக்ஷாத்மன் காலம்ருத்யுக்களைப்போல அருகாமையில் வந்திருக்கின்ற அந்த ராமக்ருஷ்ணர்களைக் கண்டு பயந்துஸ்த்ரீஜனங்களை விட்டுப் பிழைக்கவிரும்பிச் சரணாகதியை அறியாதவனுடைமையால் அவர்களை வணங்கிப் பிழைக்காமல் வெறுமனே ஓடிப்போனான். ஸ்ரீக்ருஷ்ணன் அவனு சிரத்திலுள்ள ரத்னத்தைப் பறிக்கவிரும்பி அவனை காங

கொண்டு ஓடுகிறானோ அங்கெல்லாம் துரத்திக்கொண் டோடினான். பலராமனோவென்றால் ஸ்த்ரீகளைக் காத்துக் கொண்டு அவ்விடத்திலேயே இருந்தான். மன்னவனே! அப்பால் பகவான் அருகாமையில் எதிரேவந்து துர்ப்புத் தியனான அந்தச் சங்கசூடனுடைய சூடாமணியோடு கூடிய சிரத்தை முஷ்டியினால் அடித்தான். ஸ்ரீக்ருஷ்ணன் இங்ஙனம் சங்கசூடனைக் கொன்று அவன் தலையி லிருந்த மணியைக் கொண்டுவந்து கோபஸ்த்ரீகள் பார்த் துக்கொண்டிருக்கையில் ப்ரீதியுடன் தமையனாகிய பல ராமனுக்குக் கொடுத்தான். முப்பத்து நான்காவது அத் யாயம் முற்றிற்று.

(வேணு கதை.)

{ கோபிகள் பகலில் ஸ்ரீக்ருஷ்ணனைப் பிரிந் திருக்க முடியாமல் புலம்புதல். }

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— ஸ்ரீக்ருஷ்ணன் பசுக்களை ஓட்டிக்கொண்டு வனத்திற்குப் போகையில் அவனைத் தொடர்ந்த மனமுடைய கோபிகைகள் அவனுடைய லீலைகளை ஒருவர்க்கொருவர் பாடிக்கொண்டு பகல்களை யெல்லாம் பெருவருத்தத்துடன் கழித்துக்கொண்டிருந் தார்கள்.

கோபிகைகள் சொல்லுகிறார்கள்:—கோபிமார்களே! ஸ்ரீக்ருஷ்ணன் வலக்கபோலத்தை வலத்தோள்மேல் சாய்த்துப் புருவங்களை உயரநெரித்து மேல்விரல்களால் ரந்த்ரங்களை ஸ்பர்சித்துக்கொண்டு வேணுவைத் தன் கனிவாயில் வைத்து ஊதுகையில், தெய்வமடந்தையர் கள் விமானங்களில் தத்தம் கணவர்களுடன் கலந்திருப் பினும் அந்த வேணுகானத்தைக் கேட்டு முதலில் வியப்

புற்றுத் தங்கள்மனத்தை மன்மதபாணங்களுக்கு அர்ப்பணஞ்செய்து வெட்கமுற்று அரையாடையின் முடி அவிழ்ந்திருப்பதையும் அறியாதபடி மோஹித்தார்கள். இத்தகையனான ஸ்ரீக்ருஷ்ணனுடைய சரித்ரத்தை எங்ஙனம் சொல்லப்போம்? பெண்களே! இந்த ஆச்சர்யத்தைக் கேட்பீர்களாக. இது மிகவும் ஆச்சர்யம். முத்து மாலைகளில் படிந்த நிர்மலமான மந்தஹாஸமுடையவனும் மார்பில் மின்போல் திகழ்கின்ற ஸ்ரீமஹாலக்ஷ்மியுடையவனுமாகிய இந்நந்தகோபகுமாரன் தன்னைப் பிரிந்து வருந்துகின்ற நம்மைப்போன்றவர்களுக்கு மிகவும் துக்கத்தை விளைப்பவனாகி வேணுகானஞ் செய்கையில், கோகுலத்திலுள்ள எருதுகளும் ம்ருகங்களும் பசுக்களும் வேணுகானத்தை வெகுதூரத்தில் கேட்டு மனமபஹரியுண்டு நினைப்பற்றவைகளாகக் கவ்வின புற்கவளங்களைப் பற்களில் கடித்துக் காதுகளை நிமிர்த்து உறக்கமுற்றவை போலவும் எழுதின சித்ரங்களைப்போலிருந்தன. தோழி! மயில்தோகையின் கொத்துக்கள் கைரிகதாதுக்கள் தளிர்கள் இவைகளால் புதுமைதரித்து [illegible] மல்லர்களைப்போல வேஷம் தரித்த ஸ்ரீக்ருஷ்ணன் பலராமனோடும் கோபர்களோடுங்கூடிப் பசுக்களை வேணுகானத்தினால் அழைக்கையில் அச்சமயங்களில் நதிகளும் காற்றில் அடித்துக்கொண்டுவருகிற அவனுடைய பாதாரவிந்தங்களின் பராகத்தைப் பெற விரும்பி நடையற்று நிரம்பவும் புண்யஞ்செய்யப் பெறாதவையாகையால் நம்மைப்போலவே அது சேரப்பெறாமல் அலைகளாகிற புஜங்களைப் ப்ரேமத்தினால் அசைத்து மேன்மேலும் பெருகிப் போகமுடியாத ஜலமுடையவைகளாய் அப்படியே நிற்கின்றன. ஆதிபுருஷனைப்போல அழியாத செல்வப் பெருக்குடைய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் பசுக்களைத் தொடர்

ந்து வருகின்ற கோபர்களால் பாடப்பட்ட வீர்யமுடைய வனாகிய வனத்தில் திரிந்துகொண்டு மலைச் செறிவுகளில் மேய்கின்ற பசுக்களை அவ்வவற்றின் பெயர்கள் உள்ளடங் கப் பெற்ற வேணுகானத்தினால் அழைக்கையில், பாரத் தினால் தழைத்த கிளைகளுடையவைகளும் பூ காய் பழம் இவை நிறைந்தவைகளுமாகிய காட்டுக்கொடிகளும் மரங்களும் தேன்தாரைகளைச் சொரிந்தன. இதென்ன ஆச்சர்யம! அழகர்களில் சிறந்தவனும அழகிய நெற்றித் திலகமுடையவனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் வனமாலையில் சேர்க்கப்பட்ட திவ்யகந்தமுடைய துளஸியின் தேனைப் பருகிமதித்த வண்டினங்கள் உரக்கப்பாடுகிற இஷ்டமான கானத்தை ஆவலுடன் அங்கீகரித்துத் தன கொவ்வைச செவ்வாயில் வேணுவைத் தொடுக்கும் பொழுது, தாமரைத்தடாகங்களிலுள்ள ஹம்ஸங்களும் மற்றுமுள்ள பறவைகளும் அழகியதான அவ்வேணுகானத்தினால் இழுக்கப்பட்ட மனமுடையவைகளாகி அருகாமையில் வந்து வேறுவிஷயங்களினின்று மனத்தை இழுத்து அம் மனத்தில் அவனுருவத்தை மனனஞ் செய்துகொண்டு அவனைப் பணிந்தன. ஆ! அப்படிப்பட்ட க்ருஷ்ணனை நாம் பிரிந்திருக்கலாயிற்றே. இதென்ன வருத்தம்! ஓ கோபிகைகளே! ஸ்ரீக்ருஷ்ணன பலராமனோடுகூடிப பூ மாலைகளால் காதுக்கு அலங்காரஞ் செய்து சிரத்தில் முத்துமாலைகளை அணிந்து மிகவும் அழகனாகிப் பர்வ தத்தின தாழ்வரைகளில் திரிந்துகொண்டு ஸந்தோஷ முற்று ஜகத்தையெல்லாம் ஸந்தோஷம் அடையச்செய் பவனாகி வேணுகானஞ் செய்கையில், மேகம் மஹானுபா வனாகிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய எதிரில்சென்று அவனுடை யவேணுகானத்திற்கு விரோதமாக நாம் கர்ஜனை செய் வோமாயின பெரியோர்களை அதிக்ரமித்த அபசாரத்தில்

விழுவேனோமென்று சங்கித்து அவனெதிரில் வருகிறதுமில்லை; உரக்கக் கர்ஜிக்கிறதுமில்லை; அவ்விடத்திலேயே இருந்து வேணுவின் சப்தத்தை அநுஸரித்து மெல்லமெல்லக் கர்ஜனை செய்கின்றன; மற்றும், மேனியின் ஒளியாலும் ஜகத்தின தாபங்களைப் போக்குகையாலும தனக்கு நண்பனாகிய ஸ்ரீக்ருஷ்ணன்மேல்பூமழை பொழிந்து தன்நிழலால் அவனுக்குக் குடையும் பிடித்தது. நல்லியற்கையுள்ள யசோதே! பலவகையான இடையர் விளையாட்டுக்களில் ஸமர்த்தனாகிய உன் புதல்வன் கொவ்வைப் பழம்போன்ற தன் செவ்வாயில் வேணுவை வைத்து வேணுவாத்ய விஷயங்களில் பலவகையான விகல்பங்களைத் தானே ஊஹித்து நிஷாத ருஷபாதி ஸ்வரஜாதிகளை ஆலாபிக்கையில், இந்த்ரன் ருத்ரன் ப்ரஹ்மன முதலிய தேவதைகள் அவ்வேணுகானம் எத்திசையினின்று அடிக்கடி கேட்கின்றதோ, அத்திசையில் கழுத்தையும் மனத்தையும் தாழ்த்தி அதை நன்றாகக்கேட்டுப் பண்டிதர்களாயினும அது இன்ன பிரிவில் சேர்ந்ததென்கிற அதன் உண்மையை அறிய முடியாமல் மயங்கிறார்கள். த்வஜம் வஜ்ரம் தாமரைமலர் மாவெட்டி முதலிய விசித்ரமான அடையாளங்கள் அமைந்த அடிகளாகிற தாமரையிதழ்களால் பசுக்களின் குளப்படிகள் பொற்றி வருந்துகின்ற கோகுலபூமியின் வருத்தத்தைப் போக்கிக் கொண்டு உலாவுகின்றவனும் பெரிய மத்தகஜத்தின் நடைபோன்ற நடையுடையவனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் வேணுகானஞ் செய்துகொண்டு நடக்கையில், விலாஸங்களோடு கூடின அவனுடைய கண்ணோக்கத்தினால் காமவிகாரம் வேகமாக விளையப்பெற்று நாங்கள் அசையாப் பொருள்களான வ்ருக்ஷங்கள்போல எவ்வகைச் சேஷ்டையுமின்றி மதிமயங்கித் தலை அவிழ்ந்திருப்பதையா

களுக்கு மஹாநந்தத்தை விளைப்பவனும் நண்பர்களாகிய நம்மனோரதத்தை நிறைவேற்றும்பொருட்டுத் தேவகியின் வயிற்றில் சந்த்ரன்போல உதித்தவனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன், ஸாயங்காலமாகையில் பசுமந்தைகளையெல்லாம் ஒன்று சேர்த்து வேணுகானஞ் செய்துகொண்டு [1] அநுசரர்களால் பாடப்பட்ட புகழுடையவனும் பசுக்களின் குளப்படிகளால் கிளம்பின தூட்களபடிந்த பூமாலையுடையவனுமாகி இதோ வருகின்றான். மத்யபானஞ் செய்தமதத்தினால் சிறிது சுழல்கின்ற கண்களுடையவனும் தன் நண்பர்களுக்கு வெகுமதியளிப்பவனும் சிறிது பக்வமான இலந்தம்பழம்போல் வெளுத்த முகமுடையவனும் ஸ்வர்ணமயமான குண்டலங்களின் காந்தியினால் மெல்லிய கபோலங்களையுடைய முகத்தை விளங்கச்செய்பவனும் யானைகளில் சிறந்த ஐராவதத்தை நிகர்த்த விளையாடலுடையவனும் யாதவஶ்ரேஷ்டனுமாகிய பலராமன் ஸாயங்காலத்தில் சந்த்ரன்போன்று தெளிந்த முக முடையவனாகிப் பகலில் தனனைப்பிரிந்திருக்கின்ற இடைச்சேரியிலுள்ளவர்களின் அபாரமான தாபத்தையெல்லாம் போக்கிக்கொண்டு இதோ அருகாமையில் வருகின்றான்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ராஜனே! கோபிகைகள் இங்ஙனம் ஸ்ரீக்ருஷ்ணனுடைய லீலைகளைப் பகல்களில் பாடிக்கொண்டிருந்து அவனிடத்தில் தங்கின ஜீவனமும் மனமுமுடையவர்களாகி மஹோத்ஸவத்துடன் க்ரீடித்துக் கொண்டிருந்தார்கள். முப்பத்தைந்தாவது அத்யாயம் முற்றிற்று.

1. அநுசரர்கள்—தன்னைப் பின்தொடர்ந்துவருங் கோபர்கள்.

ஷ்ணன் வ்ருஷபாஸுரனை வதித்தலும், நாரதரால் தூண்டப்பட்ட கம்ஸன் ஸ்ரீக்ருஷ்ணனை அழைத்துக்கொண்டு வரும்படி அக்ரூரனை அனுப்புதலும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் ஸ்ரீக்ருஷ்ணன் கோகுலத்தையெல்லாம் களிப்புறச் செய்துகொண்டிருக்கையில், அரிஷ்டனென்னும் அஸுரன் வ்ருஷபத்தின் உருவந்தரித்துப் பெரிய முசுப்பும் பெரிய உருவமும் உடையவனாகிக் குளப்படிகளால் பூமியைப் பிளந்து நடுங்கச்செய்துகொண்டு கோகுலத்திற்கு வந்தான். அவ்வஸுரன் எருதுகள் கர்ஜிப்பதுபோல மிகவும் கடோரமாகக் கர்ஜிப்பதும் பாதத்தினால் பூமியைக் கீறுவதும் வாலைத் தூக்கிக்கொண்டு கொம்பின நுனியால் கோட்டை முதலிய உயர்ந்த இடங்களைக் குத்திக்கிளப்புவதும் இடையிடையில் சிறிது மலமூத்ரங்களை விடுவதுமாகிக் கண்களை இமைகொட்டாமல் விழித்துக் கொண்டு இடைச்சேரியுள் நுழைந்தான். ராஜனே! இந்த அரிஷ்டனுடைய கடோரமான கர்ஜனையைக் கேட்ட மாத்ரத்தில் பசுக்களின் கர்ப்பங்களும் ஸ்த்ரீகளின் கர்ப்பங்களும் பயத்தினால் அகாலத்தில் நழுவுவதும் ஸ்ரவித்துப்போவதும் உண்டு. இவனுடைய முசுப்பின்மேல் மேகங்கள் பர்வதமென்னும் ப்ரமத்தினால் தங்குவது வழக்கம். கூரான கொம்புகளையுடைய அவ்வரிஷ்டாஸுரனைக் கண்டு கோபிகைகளும் கோபர்களும் பயந்தார்கள். ராஜனே! பசுக்கள் அவ்வஸுரனைக் கண்டு பயந்து கோகுலத்தினின்று ஓடிப்போயின. அங்குள்ள கோபர்களும் கோபிகைகளும் 'க்ருஷ்ணா! க்ருஷ்ணா!' என்று முறையிட்டுக்கொண்டே அவனைச் சரணம் அடைந்தார்கள். அப்பால் மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் கோகுலமெல்லாம் பயத்தினால் தழதழத்திருப்பதைக் கண்டு 'பயப்படவேண்




2333. வ்ருஷபாஸுரவதம்.

டாம்' என்னும் இனிய உரையினால் ஸமாதானப்படுத்தி வ்ருஷபாஸுரனை யுத்தத்திற்கு வரும்படி அழைத்தான். 'அட! மந்தபுத்தியனே! இளைஞர்களையும் பசுக்களையும் பயப்படுத்துவதனால் என்ன ப்ரயோஜனம்? துஷ்டர்களில் தலைவனே! உன்னைப்போன்ற துர்ப்புத்தியுடைய துஷ்டர்களின் கொழுப்பை அடக்குவதற்காகவே நான் இதோ இருக்கின்றேன். ஆகையால் இங்கு வருவாயாக' என்று மொழிந்து தன்னைப்பற்றினவர்களின் மனவருத்தங்களைப் போக்குந்தன்மையனும் அவர்களைக் கைவிடாதவனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் உள்ளங்கையால் தோளைத் தட்டி அரிஷ்டனுக்குக் கோபத்தை விளைத்துக்கொண்டு ஸர்ப்பத்தின் உடல்போன்ற தன்புஜத்தை நண்பனுடைய தோள்மேல் சாய்த்து நின்றான். அப்பால் அவ்வரிஷ்டாஸுரன் ஸ்ரீக்ருஷ்ணனால் இங்ஙனம் கோபிக்கும்படி செய்யப்பட்டுக் குளம்பினால் பூமியைக் குற்றிக்கிளரிக்கொண்டு உயரத்தூக்கப்பட்ட வாலால் மேகங்கள் சுழலப் பெற்றுக் கோபமுற்று ஸ்ரீக்ருஷ்ணனைக் கிட்டி வந்தான். அவன கொம்புகளின் நுனியை முன்னே நெரித்துக்கொண்டு இமைகொட்டாத சிவந்த கண்களுடையவனாகி ஸ்ரீக்ருஷ்ணனைக் கண்டு இந்த்ரன் விடுத்த வஜ்ராயுதம் போல விரைவுடன் அவன்மேல் எதிர்த்தோடிவந்தான். அப்பொழுது ஷாட்குண்யபூர்ணனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் அந்த அரிஷ்டாஸுரனைக் கொம்புகளில் பிடித்துக் கொண்டு, ஒருயானை மற்றொருயானையைத் தள்ளுவது போலப் பதினெட்டடிகள் பின்னே தள்ளினான். அங்ஙனம் பகவானால் பின்னே தள்ளுண்டுவிழுந்த அவ்வரிஷ்டாஸுரன் விரைவுடன் எழுந்து உடம்பெல்லாம் புழுங்கப்பெற்றுக் கோபத்தினால் மெய்ம்மறந்து பெருமூச்செறிந்துகொண்டு மீளவும் ஸ்ரீக்ருஷ்ணனை எதிர்த்தோ

டினன். அந்த ஸ்ரீக்ருஷ்ணனும் தன்னை எதிர்த்து வருகின்ற அவ்வஸுரனைக் கொம்புகளில் பிடித்துக்கொண்டு காலால் அமுக்கிப் பூமியில் விழத்தள்ளி ஈரத்துணியை முறுக்கிப் பிழிவதுபோல முறுக்கிக் கசக்கி அவன் கொம்புகளைப் பிடுங்கிக்கொண்டு அதனால் அவனை அடித்தான் அவனும் அடியுண்டு விழுந்தான். மற்றும், அவன மலமூத்ரங்களை விடுவதும் ரக்தத்தைக் கக்குவதும் பாதங்களை உதறுவதும் செய்து கண்கள் சுழலப்பெற்று ப்ராணன்கள் கிளம்பிப்போகையாகிற வருத்தத்தை அடைந்தான்; உடனே ம்ருத்யுவின் க்ருஹத்திற்குப் போய்ச் சேர்ந்தான். தேவதைகள் ஸ்ரீக்ருஷ்ணனமேல் புஷ்பங்களை இறைத்து அவனை ஸ்தோத்ரஞ்செய்தார்கள். மஹானுபாவனுகிய ஸ்ரீக்ருஷ்ணன் இங்ஙனம அரிஷ்டாஸுரனைக் கொன்று தன்ஜாதியர்களான இடையர்களால் துதிக்கப்பெற்றுக் கோபிகைகளின கண்களுக்கு மிகுந்த ஸந்தோஷத்தை விளைத்துக்கொண்டு பலராமனுடன் கோகுலத்திற்குள நுழைந்தான். இங்ஙனம் கோகுலத்தில் அற்புதமான செயலுடைய ஸ்ரீக்ருஷ்ணன் அரிஷ்டாஸுரனை வதித்து வாழுங்காலத்தில் தேவரிஷியாகிய நாரதர் கம்ஸனிடம் வந்து மொழிந்தார்.

ஸ்ரீநாரதர் சொல்லுகிறார் :—தேவகியின் எட்டாங் கர்ப்பமாகிய கன்னிகை யசோதையின புதல்வி. யசோதையின் பிள்ளையென்று ப்ரஸித்திபெற்ற ஸ்ரீக்ருஷ்ணனே தேவகியின் எட்டாங் கர்ப்பம். பலராமன் தேவகியின் ஏழாங்கர்ப்பம். வஸுதேவன் உன்னிடத்தினின்று பயந்து அந்த ராமக்ருஷ்ணர்களைத் தன்நண்பனுன இந்த நந்தகோபனிடத்தில் கொண்டுபோய் வைத்தான். அவர்களே அரிஷ்டன்முதலிய உன் ப்ருத்யர்களை வதித்தார்கள்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—கம்ஸன் நாரதர்மொழிந்த இவ்வசனத்தைக் கேட்டுக் கோபத்தினால் இந்த்ரியங்களெல்லாம் கலங்கப்பெற்று வஸுதேவனைக் கொல்ல விரும்பிக் கூரான கத்தியை எடுத்தான். அப்பால் அவன் நாரதமஹர்ஷியால் வேண்டாமென்று தடுக்கப்பெற்று அவ்வஸுதேவனுடைய பிள்ளையே தனக்கு ம்ருத்யுவென்பதை நாரதருடைய உபதேசத்தினால் அறிந்து இருப்புச்சங்கிலிகளால் வஸுதேவனை அவன் பார்யையாகிய தேவகியுடன் பந்தனஞ்செய்து வைத்தான். பிறகு நாரதர் புறப்பட்டுப் போகையில், கம்ஸன் கேசியென்னும் ராக்ஷஸனை அழைத்து 'நீ போய் ராமக்ருஷ்ணர்களை வதித்துவருவாய்' என்று சொல்லி அனுப்பினான். பிறகு முஷ்டிகன் சாணூரன் சலன் தோஸலகன் முதலிய மந்த்ரிகளையும் யானைப்பாகர்களையும் அழைத்து நல்வார்த்தை சொல்லி உத்ஸாஹப்படுத்தி இங்ஙனம் மொழிந்தான்.

கம்ஸன் சொல்லுகிறான்:—ஓ வீரத்தன்மையுள்ள சாணூரனே! ஓ முஷ்டிகனே! மற்றுமுள்ள வீரர்களே! இதைக் கேட்பீர்களாக. வஸுதேவனுடைய பிள்ளைகளாகிய ராமக்ருஷ்ணர்கள் கோகுலத்தில் இருக்கின்றார்களல்லவா? அவர்கள் எனக்கு ம்ருத்யுக்களென்று தெய்வத்தினால் அறிவிக்கப்பட்டார்கள். ஆகையால் நீங்கள் அவர்களை எந்த உபாயத்தினாலாவது இங்கே அழைத்துக்கொண்டு மல்லலீலையினால் வதிக்கவேண்டும். மல்லர்கள் யுத்தஞ்செய்வதற்குரிய ஒரு யுத்தரங்கத்தை ஏற்படுத்தி அதில் ஆஸனங்களை அமைத்து வைப்பீர்களாக. நகரத்து ஜனங்களும் நாட்டு ஜனங்களும் ஆகிய அனைவரும் அவ்வாஸனங்களில் உட்கார்ந்து யதேஷ்டமாக மல்லயுத்தத்தைக் காண்பார்களாக. ஓ யானைப்பாகனே!

மிகுந்த மதியுடையவனே! நான் சொல்லுவதைக் கேட்பாயாக. மதஜலம் பெருகப்பெற்ற துதிக்கையின் சோபையால் விளங்கும் முகமுடைய குவலயாபீடமென்னும் யானையை யுத்தரங்கத்தின்வாசலில் வைத்து அதன் துதிக்கையில் இரும்புத்தடியைக் கொடுத்து வைக்க வேண்டும். வஸுதேவனுடைய பிள்ளைகளான ராமக்ருஷ்ணர்கள் வருவார்களாயின் அவர்களை அந்தக் குவலயாபீடத்தினால் வாசலிலேயே வதிக்கவேண்டும்' என்றான். அப்பால் அதைக்கேட்ட யானைப்பாகன் மதிமயங்கிக் கம்ஸனை நோக்கி 'மஹாராஜனாகிய உனது பகினியின் புதல்வர்களான ராமக்ருஷ்ணர்களை நான் எங்ஙனம் வதிப்பேன்' என்றான். யானைப்பாகனால் இங்ஙனம் மொழியப்பட்ட துர்ப்புத்தியுடைய கம்ஸமன்னவன் கூட்டமாகச் சேர்ந்திருக்கின்ற எல்லோரும் கேட்கும்படி மொழிந்தான்.

கம்ஸன சொல்லுகிறான்:—நான் சொல்லப்போகிற இவ்விஷயத்தை எல்லோரும் கேட்பீர்களாக. கேட்டு இதை மனத்தில் நிறுத்திக்கொள்வீர்களாக. நான் முதலேபிடித்துப் பந்துக்களிடத்தில் த்வேஷத்துடன் நடப்பதற்குக் காரணம் சொல்லுகிறேன; கேளுங்கள். மிகுந்த பாக்யமுடையவளும் தாமரைமலர்போன்ற கண்களுடையவளுமாகிய என்தாய் ஒருகால் மந்தமாருதம் வீசப்பெற்றதும் அசோகம் மகிழ் பாக்கு புன்னை முதலிய மரங்கள் புஷ்பித்திருப்பதுமாகிய பெரிய ஒரு உத்யானத்தில் உலாவிக்கொண்டிருந்தாள். அவ்வுத்யானத்தில் வண்டினங்கள் சுழன்று கொண்டிருந்தன. குயிலினங்கள் நிறைந்து கூவிக்கொண்டிருந்தன. மயிலினங்கள் நர்த்தனஞ்செய்துகொண்டிருந்தன. குரங்குகள் பெரிய ஆரவாரத்துடன் விளையாடிக் கொண்டிருந்

தன. இங்ஙனம் அழகாயிருக்கின்ற அவ்வுத்யானம் அப்பொழுது வஸந்தகாலமாகையால் மிகவும் அழகாயிருந்தது. பற்பலவகையான வ்ருக்ஷங்கள் அதன் அழகை வளர்த்தன. பதிவ்ரதையும் ருதுஸ்நானஞ்செய்து நன்கு அலங்கரித்துக்கொண்டிருப்பவளுமாகிய என்தாய் இத்தகைய அவ்வுத்யானத்தில் உலாவிக்கொண்டிருக்கும் பொழுது காமவேதனையால் பரிதபித்துத் தன் கணவனை நினைத்தாள். அப்பொழுதே அவ்வுத்யானத்தில் பிறர்க்குத் தெரியாமல ஸஞ்சரித்துக்கொண்டிருநத த்ரமிளனென்னும் பெயருடைய ஒரு கந்தர்வன் அங்ஙனம் என்தாய் தனியே உலாவிக்கொண்டிருப்பதைக் கண்டு அவன ஸமஸ்தப்ராணிகளுடைய மனக்கருத்தையும் உள்ளபடி அறியுந்திறமையுடையவனாகையால் அவளுடைய மனோபாவத்தையும் அறிந்து புன்னகையோடு கூடின உரையும் நோக்கமும் அமைந்து உக்ரஸேனனுடைய உருவம்போன்றதுமாகிய உருவத்தைத் தரித்துக காம விகாரத்தினால் வருந்திப் பதிவ்ரதையும் இஷ்டப்படி ஸஞ்சரித்துக்கொண்டிருப்பவளுமாகிய என்தாயைக்கிட்டினான். அவள் அவனுடைய உண்மையை அறியாதவளாகையால் அவனுடன் கலந்து அவ்வனத்தில் விளையாடினாள். பதிவ்ரதையாகிய அவள் அவனுடைய மனக்கருத்து முதலிய அடையாளங்களால் அவன் தன் கணவனைக்காட்டிலும் வேறுபட்டவனென்பதை அறிந்து மிகவும் வருந்திக் கண்களும் மனமும் கலங்கப் பெற்று 'துஷ்டனே! நீ யாவன்? துர்ப்புத்தியுடைய நீ பெரியோர்களால் நிந்திக்கத்தகுந்த இத்தகைய பாபகார்யஞ்செய்தனையே' என்றாள். நீண்ட புஜதண்டங்களையுடைய அந்த த்ரமிளனென்னும் கந்தர்வன இங்ஙனம் மொழிகின்ற அவளை மெல்லமெல்ல நல்வார்த்தைகளால் ஸமாதானப்படுத்திக்கொண்டு மொழிந்தான்.

கந்தர்வன் சொல்லுகிறான் :—பெண்மணீ! நாங்கள் கந்தர்வர்கள்; தேவதைகளோடொத்தவர்கள்; இந்த்ரனுடைய பரிசாரகர்கள். மங்களஸ்வபாவமுடையவளே! நாங்கள் மனுஷ்யர்களால் அனுபவிக்கத்தகுந்த உங்களைப்போன்ற மனுஷ்யஸ்த்ரீகளுக்கு எளிதில் கிடைக்கக்கூடியவர்களல்லோம். பிறத்தல் சாதல் முதலிய பலவருத்தங்களுக்கிடமான மானிடர்களுக்கும் அவையெவையும் தீண்டப்பெறாத தேவதைகளுக்கும் நெடுவாசி உண்டு. ஆகையால் நாங்கள் வேண்டினாலுங் கூடக் கிடைக்கக் கூடியவர்களல்லோம்.

கமலன் சொல்லுகிறான் :—என் தாய் இங்ஙனம் மொழிகின்ற அந்தக்கந்தர்வனை நோக்கிக் கோபத்தினால் இந்த்ரியங்கள் கலங்கப்பெற்று மீளவும் மொழிந்தாள்.

கம்லனதாய் சொல்லுகிறாள் :—நீ இவ்வாறு துஷ்டகார்யத்தைச்செய்து மீளவும் எதுக்காக என்னை நல்லவார்த்தை சொல்லுகிறாய்? பூமி ஜலம் அக்னி வாயு ஆகாசம சந்த்ரன ஸூர்யன் திசைகள் காலம் தர்மம் காலை மாலை ஸந்த்யைகள் ஆகிய இவை பிராணிகளின புண்ய பாபங்களுக்கு ஸாக்ஷிகள். இவைகளையெல்லாம பொருள் செய்யாமல் துர்ப்புத்தியுடைய நீ என்னை [1] மலினமாக்கினை காட்டின் இடையிலிருக்கின்ற தாமரையோடையை மத்தகஜம் கலக்கிப்பாழ்செய்வதுபோல உத்யானவனத்தினிடையி லிருக்கின்ற பரிசுத்தையான என்னை நீ லோக வேத மர்யாதைகளைக் கடந்து மலினஞ் செய்தனை. தேவர்களில் அதமனே! அத்தகைய துர்ப்புத்தியுடைய நீ என்னை என்னென்று நல்வார்த்தை சொல்லுகின்றனை?

---

1 மலின மாக்குதல்-அழுக்குடையதாகச்செய்தல்-தோஷமுடையதாகச் செய்தலென்று கருத்து.

கம்ஸன் சொல்லுகிறான்:—என்தாய் இங்ஙனம் மொழிகையில் அக்கந்தர்வன் சாபங்கொடுப்பனோ என்னவோ என்று பயந்து மீளவும் அவளைக் குறித்து மொழிந்தான்.

கந்தர்வன் சொல்லுகிறான்:-தாமரையிதழ் போன்ற கண்களுடையவளே! மனுஷ்ய ஸ்த்ரீகளோடு தேவதைகள் புணர்வது அனுலோமமென்றும், தெய்வமடந்தையர்களோடு மனுஷ்யர்கள் புணர்வது ப்ரதிலோமமென்றும் பெரியோர்கள் கூறுகிறார்கள். தாமரைமலரின் மணமுடையவளே! ஆகையால் நான் அபராதஞ் செய்தவனல்லேன். மற்றும், என்னுடைய ஸங்கமத்தினால் உனக்குச் செல்வம மதி மிகுந்த உத்ஸாஹம் இவையுடைய புதல்வன் பிறப்பான. எவ்விதத்திலும் என்வீர்யம் வீணாகாது. என்வார்த்தையும் பொய்யாகாது.

கமஸன் சொல்லுகிறான் :—பெரும்புகழுடைய என் மாதா இங்ஙனம் கூறுகின்ற அக்கந்தர்வன்மேல் மிகுந்த கோபமுடையவளாகி மிகவும் கிடைக்க அரிதான பதிவ்ரதாதர்மத்தை இழக்கநேரிட்டமையால் வருந்தி மொழிந்தாள்.

கம்ஸன் தாய் சொல்லுகிறாள் :—நீ லோகவேதமர்யாதைகளைக் கடந்தவன்; ஸதாசாரத்தை உதறினவன்; லோகத்திலும் வேதத்திலும் நிஷேதிக்கப்பட்ட நடத்தையில் இருப்பவன். இத்தகைய உன் வீர்யத்திற்குப் பிறக்கும் பிள்ளை கொடுந்தன்மையுடையவனும் ஸாஹஸம் முதலிய துர்க்குணங்கள் அமைந்தவனும் நற்குணங்களற்றவனும் தேவதைகள் ப்ராஹ்மணர்கள் தாபஸர்கள் இவர்களால் நிக்ரஹிக்கத் தகுந்தவனுமாயிருப்பானாக.

கம்ஸன் சொல்லுகிறான் :—அவள் இங்ஙனம் கோப முற்றுச் சொல்லிக்கொண்டிருக்கையில் அக்கந்தர்வன் சாபங்கொடுப்பாளோ என்று பயந்து 'ஆனால் அவன் உன் பந்துக்களுக்கே சத்ருவாயிருப்பானாக' என்று மொழிந்து அந்தர்த்தானம் அடைந்தான். அவன் போன பின்பு பெரும்புகழுடைய என்மாதா தன்வ்ருத்தாந்தம் ஒருவர்க்கும் தெரியாதபடி க்ருஹத்திற்குப் போய்ச் சேர்ந்தாள். அப்பால் அவள் கர்ப்பந்தரித்து ப்ரஸவகாலம் நேருகையில் என்னைப் பெற்றாள். என்று ஜ்ஞானாதி குணங்கள் நிறைந்த மஹானுபாவரான நாரதமஹர்ஷி இந்த வ்ருத்தாந்தத்தை ஒருகால் எனக்கு மொழிந்தார். அது முதற்கொண்டு நான் பந்துக்களில் துஷ்டத்தன முடைய அவரவர்களை த்வேஷித்துக் கொண்டிருக்கிறேன். அவர்களும் என்னை த்வேஷிக்கிறார்கள். இது உங்களுக்குத் தெரிந்தவிஷயமே யல்லவா? ஆகையால் துர்ப்புத்தியுள்ள உக்ரஸேனன் கெடுநினைவுள்ள தேவகன் துஷ்டனாகிய வஸுதேவன இவர்களையும் அவர்களைச் சேர்ந்த மற்றுமுள்ள துர்ப்புத்திகளையும் நான் வதஞ்செய்யினும் எனக்குத் தோஷம் உண்டாகாது. ஏனென்றால், நான கந்தர்வனிடத்தினின்று பிறந்தவனேயன்றி உக்ரஸேனனிடத்தினின்று பிறந்தவனன்று. ஆகையால் நான ராமக்ருஷ்ணர்களைக் கொல்லவேண்டுமென்று மனஇரக்கமின்றிக் கட்டளையிடுகினறேன. இந்த வஸுதேவாதிகளும மிகுந்த பலமுடைய குவலயாபீடமெனனும யானையினால் வதிக்கப்பட்ட இளைஞர்களான அநத ராமக்ருஷ்ணாகளை உபஹாரமாகக்கொண்டு பரலோகத்தில் வைவஸ்வதன முதலிய தேவதைகளை உத்தேசித்துச் செய்யவேண்டிய பூஜையை நடத்தி அவர்கள் போன வழியைத் தொடர்ந்து போவார்களாக. வஸுதேவன் உக்ரஸேனன் நந்தன் தேவகன் இவர்

களும் கோபாலர்களும் யாதவர்களும் அவர்களைத் தொடர்ந்த மற்றவர்களும் வதிக்கப்படுகின்ற தங்கள் குழந்தைகளைக் கண்குளிரக் காண்பார்களாக. மற்றும், நாட்டிலுள்ள ஜனங்களையும் வரவழையுங்கள். அவர்களும் வந்து மல்லயுத்தத்தை யதேஷ்டமாகப் பார்க்கட்டும். அட! யானைப்பாகனே! நல்லியற்கை யுடையவனே! நீ குவலயாபீட மென்னும் யானையை யுத்தரங்கத்தின வாசலில் கொண்டுவந்து வைத்திரு. அதைக் கொண்டு என் சத்ருக்களான அப்பாலகர்களை வதித்துவிடு. சதுர்த்தசியினன்று விதிப்படி தனுர்யாகத்தைத் தொடங்கி நடத்துங்கள். நம் விருப்பங்களைப்பெய்கின்ற பூதநாதனான ருத்ரனைக் குறித்துப் பரிசுத்தமான பசுக்களை வெட்டுங்கள்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—நீதிசாஸ்த்ரத்தின கருத்தை அறிந்த அநகம்ஸன இங்ஙனம மந்த்ரிகள் முதலியவர்களுக்கு ஆஜ்ஞாபித்து யதுஶ்ரேஷ்டனான அக்ரூரனை அழைத்துத் தன் கையினால் அவன் கையைப் பிடித்துக்கொண்டு இனிதாக மொழிந்தான்.

கம்ஸன் சொல்லுகிறான்:—ஓ தானபதீ (தானஞ் செய்வதில் பின்வாங்காத மஹானுபாவனே!) எனக்கு ஸ்னேஹிதர்களால் ஆகவேண்டிய கார்யம் ஒன்று இருக்கிறது. அதை எனது ஸ்னேஹிதனாகிய நீ ஆதரவுடன் நடத்தவேண்டும். போஜர்களிலாவது வ்ருஷ்ணிகளிலாவது உன்னைக்காட்டிலும் மிகுந்த ஹிதமானவன் எவனும் கிடையாது. ஆகையால் இந்த்ரன விஷ்ணுவை அடைந்து தன் விருப்பம் நிறைவேறப்பெற்றாற்போல நானும் மிகப்பெரிய கார்யங்களையும் நிறைவேற்ற வல்லவனாகிய உன்னை அடைந்து என்மனோரதம் கைகூடப் பெற விரும்புகிறேன். நீ நந்தகோகுலத்திற்குப் போவாயாக. அங்கு வஸுதேவனுடைய பிள்ளை

கள் இருக்கின்றார்கள். அவர்களை இந்த ரதத்தின்மேல் ஏற்றிக்கொண்டு வருவாயாக. காலதாமதஞ் செய்ய வேண்டாம். விஷ்ணுவைப் பற்றினவர்களான தேவதைகள் அந்த வஸுதேவபுத்ரர்களை எனக்கு ம்ருத்யுவாக ஏற்படுத்தியிருக்கிறார்களல்லவா? ஆகையால் உபஹாரங்களோடு கூடிய நந்தன் முதலிய கோபர்களுடன் அவர்களை இவ்விடம் அழைத்துக்கொண்டு வருவாயாக. உன்னால் இவ்விடம் கொண்டுவந்து சேர்க்கப்பட்ட அவர்களை நான் ம்ருத்யுவைப்போன்ற இந்தக் குவலயாபீடமென்னும் யானையினால் வதிப்பிக்கிறேன். ஒருகால் அந்த யானையிடத்தினின்று தப்பித்துக்கொள்வார்களாயின் இடிகள்போன்ற சாணூராதி மல்லர்களைக் கொண்டு வதிப்பிக்கிறேன் அவர்கள் முடிந்துபோகையில் வருத்தமுற்றிருக்கின்ற வஸுதேவன் முதலிய அவர்களது பந்துக்களான வருஷ்ணிகளையும் போஜர்களையும் தாசார்ஹர்களையும் கொன்றுவிடுவேன். கிழத்தனம் வந்தபின்பும் இன்னும் ராஜ்யத்தை விரும்புகிற என் தந்தையான உக்ரஸேனனையும் அவன் ப்ராதாவான தேவகனையும், மற்றும் எனக்கு எவரெவர் த்வேஷிகளோ அவர்களெல்லோரையும் வதித்துவிடுவேன். நண்பனே! இங்ஙனம் செய்கையில் பின்பு இப்பூமண்டலம் சத்ருக்களாகிற முள்ளுகளெல்லாம் தொலைந்து சுத்தமாய் விடும். ஜராஸந்தன் எனக்குக் குரு. த்விவிதனென்னும் வானரன் எனக்கு மிகவும் அன்பிற்கிடமான நண்பன். சம்பரன் நரகன் பாணன் இவர்களும் என்னிடத்திலேயே மிகுந்த நட்புடையவர்கள். நான் அவர்களைக்கொண்டு தேவபக்ஷத்திலுள்ள மன்னவர்களையெல்லாம் வதித்துப் பூமியை ஆண்டுவருவேன். நீ என் மனத்திலுள்ள இந்த விஷயங்களையெல்லாம் நன்றாக ஆராய்ந்தறிந்து

பாலர்களான ராமக்ருஷ்ணர்களைச் சீக்ரத்தில் இவ்விடம் அழைத்துக்கொண்டு வருவாயாக. இங்கு நடக்கும் தனுர்யாகத்தைப் பார்ப்பதற்காகவும் மதுராபுரியின் அழகைப் பார்ப்பதற்காகவும் நான அழைத்துக் கொண்டு வரச்சொன்னதாகச் சொல்லி அழைப்பாயாக.

கம்ஸன் இங்ஙனம் மொழியக்கேட்ட அக்ரூரன் சொல்லுகிறுன் :-தன்னுடைய மரணமாகிற கெடுதியைப் போக்கடித்துக்கொள்ளவேண்டுமென்கிற உன நினைவு அழகியதே. ஆயினும் தெய்வமே பலன் கொடுக்க வேண்டுமாகையால் பலன் ஸித்திக்கிலும் ஸித்திக்காமல் தவறிப்போயினும் அவற்றில் கலக்கமின்றி இரண்டையும் ஸமமாகப் பாவித்துக்கொண்டு கார்யங்களைச் செய்ய வேண்டும். இவ்வுலகத்தில் ஜனங்கள் தாங்கள் விரும்பும் ப்ரயோஜனங்கள் தெய்வத்தினுல் தடுக்கப்பட்டிருப்பினும் அவற்றைப் பெறவேண்டுமென்று மேன்மேலென முயற்சி செய்கின்றுர்கள். கடைசியில் ஸுகத்திற்காகச் செய்த முயற்சியால் துக்கத்தை அடைகின்றுர்கள். ஒருகால் தெய்வம அனுகூலமாயிருக்குமாயின் ஸுகத்தையும் பெறுகின்றுர்கள். பிறனுக்குத் துயரத்தை விளைவிக்கவேண்டுமென்று முயன்று தாங்களே துயரத்தை அடைவதும் உண்டு. பிறனேவென்றல் ஸுகத்தையே அடைவான். ஆயினும் நான உன்னுடைய கட்டளையின்படி நடக்கின்றேன்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறுர்:—அக்ரூரன் இங்ஙனம் மொழிகையில் கம்ஸன் அவனைப் பாரத்து 'நல்லது நான் போய்வருகிறேன்' என்று அவனிடம் அனுமதி பெற்றுக் கொண்டு மந்த்ரிகளையும் கட்டளையிட்டனுப்பித் தன் க்ருஹத்திற்குப் போனுன். அக்ரூரனும் கம்ஸனுல் விடப்பட்டுத் தன் க்ருஹத்திற்குப் போனுன். முப்பத்தாருவது அத்யாயம் முற்றிற்று.

### கேசிஸம்ஹாரமும், நாரதர் வந்து ஸ்ரீ க்ருஷ்ணனுக்கு மேல்நடக்க வேண்டிய கார்யங்களைக் கூறுதலும், வ்யோமாஸுரவதமும்



ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—கம்ஸன் ஸ்ரீக்ருஷ்ணனை வதிக்கும்படி அனுப்பின கேசியென்னும் மஹாஸுரன் மனோவேகமுடைய பெரிய குதிரையின் உருவம் பூண்டு குளம்புகளால் பூமியைப் பிளப்பதும் பிடரிமயிர்களால் ஆகாயத்தில் ஆங்காங்கு நிறைந்திருக்கின்ற மேகங்களையும் விமானங்களையும் இப்படி அப்படி உதறித் தள்ளுவதும் கனைப்புகளால் எல்லோரையும் பயமுறுத்துவதும் செய்துகொண்டு கோகுலத்திற்கு வந்தான். அகன்ற கண்களும் பொந்துபோலப் பரந்த வாயும் நீண்டு பருத்துப் பெரியதுமான கழுத்தும் அமைந்து பெரிய நீல மேகம்போன்று ஸ்ரீக்ருஷ்ணனைக் கொல்லவேண்டுமென்னும் கொடிய நினைவுடையவனும் ப்ரஸித்தி பெற்றவனுமாகிய அவ்வஸுரன் கம்ஸனுக்கு ஹிதஞ் செய்யவிரும்பிக் கோகுலத்தை நடுங்கச்செய்துகொண்டு அதற்குள் நுழைந்தான். ஒரு பயமுமின்றி ஸுகமாயிருக்கின்ற கோகுலத்தைத் தன் கனைப்புகளால் பயப்படுத்துகின்றவனும் வால்மயிர்களால் மேகங்களைச் சுழன்று சிதறும்படி தள்ளுகின்றவனும் யுத்தஞ்செய்யத் தன்னைத் தேடிக்கொண்டு வருகின்றவனுமாகிய அக்கேசியைக் கண்டு எதிரே வந்து ஸ்ரீக்ருஷ்ணன் அவனைச் சண்டைக்கு வரும்படி அழைத்தான். அக்கேசியும் கோபத்தினால் ஸிம்ஹம்போலக் கர்ஜனை செய்தான். அப்பால் அவ்வஸுரன் தன்னை யுத்தத்திற்கு அழைக்கின்ற ஸ்ரீக்ருஷ்ணனைக் கண்டு முகத்தினால் ஆகாயத்தைப் பருகுபவன்போன்று பெருங்கோபமுற்று எதிர்த்

தோடி வந்தான். எவர்க்கும் எதிர்க்கமுடியாதவனும் கொடிய வேகமுடையவனும் கடக்கமுடியாதவனுமாகிய அவ்வஸுரன் தாமரைக்கண்ணனாகிய ஸ்ரீக்ருஷ்ணனைப் பின்கால்களால் உதைத்தான். ஸ்ரீக்ருஷ்ணன் அந்த அடியைத் தன்மேல் படவொட்டாதபடி தப்பித்துக் கொண்டு வஞ்சித்து அவ்வஸுரனைத் தன்னை அடிப்பதற்காக நீட்டின பாதங்களில் பிடித்துக்கொண்டு சுழற்றிக் கருடன் ஸர்ப்பத்தைச் சுழற்றியெறிவதுபோல அவலீலையாக நூறு வில்லளவு தூரத்தில் வீசியெறிந்து நின்றிருந்தான். அக்கேசி கீழே விழுந்து மூர்ச்சித்து ப்ரஜ்ஞை தெளியப்பெற்று மீளவும் எழுந்து கோபத்தினால் வாயைத் திறந்துகொண்டு வலிவுடன் ஸ்ரீக்ருஷ்ணனை எதிர்த்து வந்தான். அப்பொழுது அந்த ஸ்ரீக்ருஷ்ணனும் பயமின்றிச் சிரித்துக்கொண்டே ஸர்ப்பத்தைப் பாழியில் நுழைப்பதுபோல அந்தக் கேசியின் வாயில் இடக்கையை நுழைத்தான். அவ்வஸுரன் ஸ்ரீக்ருஷ்ணனுடைய புஜத்தைப் பற்களால் கடிக்கப் பார்க்கையில் அப்புஜத்தை ஸ்பர்சித்த மாத்ரத்தில் அவனுடைய பற்களெல்லாம் பழுக்கக் காய்ச்சின இரும்பை ஸ்பர்சித்தாற்போல உடனே உதிர்ந்துபோயின. அவ்வஸுரனுடைய தேஹத்தில் ப்ரவேசித்த மஹானுபாவனான ஸ்ரீ க்ருஷ்ணனுடைய புஜமோவென்றால் சிகித்ஸை செய்யாமல் உபேக்ஷிக்கப்பட்ட ஜலோதரவியாதிபோல் வளர்ந்தது அந்கேசியஸுரன் மேன்மேலும் நன்கு வளர்கின்ற ஸ்ரீக்ருஷ்ணனுடைய புஜத்தினால் ஶ்வாஸம் தடைபடப்பெற்றுப் பாதங்களை உதைத்து உடம்பெல்லாம் புழுங்கவும் கண்கள் சுழலவும் பெற்று ப்ராணன்களை இழந்து மலவிஸர்ஜனஞ் செய்து பூமியில் விழுந்தான். திரண்டுருண்டு நீண்டபாஹுதண்டங்களையுடைய

ஸ்ரீ க்ருஷ்ணன், பக்வமான வெள்ளரிப்பழம்போல வெடித்து ப்ராணன்களை இழந்த அந்தக் கேசியின் சரீரத்தினின்று தன புஜத்தை வாங்கிக்கொண்டு சிறிதுங் கர்வமின்றி அநாயாஸமாகச் சத்ருவைக்கொன்று புஷ்பவர்ஷங்களைப் பொழிகின்ற தேவதைகளால் துதி செய்யப்பெற்றிருந்தான். மன்னவனே! பிறகு பாகவத ஸ்ரேஷ்டருமாகிய தேவரிஷியுமாகிய நாரதர் கம்பீரமான செயல்களையுடைய ஸ்ரீ க்ருஷ்ணனிடம் வந்து ஏகாந்தத்தில் இங்ஙனம் மொழிந்தார்.

நாரதர் சொல்லுகிறார்:—க்ருஷ்ண! க்ருஷ்ண! அளவுக்கு உட்படாத ஸ்வரூப ஸ்வபாவங்களுடையவனே! அளவற்ற ஆச்சர்யசக்தியுடையவனே! ஜகத்திற்கெல்லாம நியாமகனே! நீயே ப்ரஹ்மாதிகளுக்கு அந்தராத்மாவாயிருந்து ஸ்ருஷ்டி முதலிய கார்யங்களை நடத்துகின்றனை. ப்ரஹ்மாண்டத்திற்கும் அதிலுள்ள ஸமஸ்த வஸ்துக்களுக்கும் நீயே ஆதாரமாகையால் வாஸுதேவனென்று கூறப்படுகின்றனை. நீ எல்லாவற்றையும் ஆதாரமாக வுடையவன். பக்தர்களால் மிகவும் விரும்பப்படுகின்றவனே! (நீ உன பக்தர்களின் விருப்பத்தை நிறைவேற்றும்பொருட்டே இங்ஙனம் அவதரித்தனையன்றி உன்னவதாரத்திற்கு வேறு காரணம் கிடையாது). நீ சேதனர்களைப்போல் கர்மத்திற்கு உட்பட்டு நடப்பவனல்லை. நீ ஸமஸ்த பூதங்களுக்கும் அந்தராத்மாவாயிருப்பவன். கட்டைகளில் பற்றியெரிகின்ற அக்னி அவற்றின் தோஷங்கள் தீண்டப்பெறாதிருப்பதுபோல ஸர்வாந்தராத்மாவாகிய நீ அவற்றின் தோஷங்கள் தீண்டப்பெறாமல் எனறும் ஒருவாறாயிருப்பவன. அரணிக்கட்டையில் அக்னி மறைந்திருப்பதுபோல நீ ஸமஸ்தபூதங்களுக்கும் உள்ளே புகுந்து

மறைந்து அவைகளுக்குப் புலப்படாதிருக்கின்றனை. நீ ஹ்ருதயகுஹையில் வாஸஞ்செய்பவன்; எல்லாவற்றையும் ஸாக்ஷாத்கரித்தவன்; ப்ரஹ்மன் முதலிய ஸமஸ்தஜீவாத்மாக்களைக்காட்டிலும் விலக்ஷணனுகையால் மஹாபுருஷனென்று கூறப்படுகின்றனை. நீயே அந்தஜீவாத்மாக்களுக்கு மேலான அதிபதி. இத்தகைய நீ தன்னையே ஆதாரமாகவுடையவனுகித் தன சரீரமான ப்ரதானத்தின காரியமாகிய மஹத்து முதலிய தத்த்வங்களைத் தானே தன ஸங்கல்பத்தினுல் முதலில் படைக்கின்றனை. ஜகதீச! ஸத்யஸங்கல்பனுன நீ அந்தத் தத்த்வங்களால் ப்ரஹ்மதேவன் முதல் பூச்சி புழுவரையிலுள்ள இநத ப்ரபஞ்சத்தை யெல்லாம் படைத்து அதைக் காப்பதும் அழிப்பதும் செய்கின்றனை. அத்தன்மையுள்ள நீ பூமிக்குப் பாரமாயிருக்கின்ற தைத்யர்கள் ப்ரமதகணங்கள் ராக்ஷஸர்கள இவர்களை அழிக்கும்பொருட்டும் ஸத்புருஷர்களை ரக்ஷிக்கும்பொருட்டும் அவதரித்திருக்கின்றனை. குதிரையின உருவந்தரித்துவந்த கேசியென்னும் அஸுரனை இப்பொழுது நீ அனுயாஸமாக வதித்தனை. இது எங்களுக்குப் பெரிய ஆநந்தமாயிருக்கின்றது. இது எங்கள்பாக்யமே. தேவதைகள் இவனுடையகனைப்பைக் கேட்டமாத்ரத்தில் பயந்து ஸ்வர்க்கத்தைத் துறக்கின்றார்கள். ஆகையால் இந்தப் பாபிஷ்டனை நீ வதஞ்செய்தது யுக்தமே. ப்ரபூ! நாளையின்னறையதினம் சாணுரன் முஷ்டிகன இவர்களையும் மற்றும்பல மல்லர்களையும் குவலயாபீடமென்னும் யானையையும கம்ஸனையும் நீ வதிக்க நான பார்க்கப்போகிறேன். அதன்பிறகு சங்கன் யவனன்முரன நரகன இவர்களை நீ வதிக்க நானபார்க்கப் போகிறேன். அப்பால் இந்த்ரனுடைய உத்யானவனத்தினின்று பாரிஜாதவ்ருக்ஷத்தைக் கொண்டு வரப் போகின்றனை. அதற்காக உன்மேல் எதிர்த்து வருகிற

இந்த்ரனைப் பரிபவஞ் செய்யப்போகின்றனை. வீர்யத்தையே பந்தயம் முதலியனவாகக்கொண்டு வீரர்களான பீஷ்மகன் முதலியவர்களின் பெண்களாகிய ருக்மிணி முதலியவர்களை மணம் புரியப்போகின்றனை. ஜகத்பதி! ந்ருகனைச் சாபத்தினின்று விடுவிக்கப் போகின்றனை. த்வாரகையில் ஜாம்பவதியை மணம் புரிவதுடன் ஸ்யமந்தக மணியையும் பெறப்போகின்றனை. மரணம் அடைந்த ப்ராஹ்மணபுத்ரர்களை உன்ஸ்தானமாகிய வைகுண்ட லோகத்தினின்று கொண்டுவந்து கொடுக்கப் போகின்றனை. பிறகு பௌண்ட்ரகனை வதிக்கப்போகின்றனை. அப்பால் காசிப் பட்டணத்தைக் கொளுத்தப்போகின்றனை. தந்தவக்த்ரனை வதிக்கப்போகின்றனை. தர்மபுத்ரனுடைய ராஜஸூயயாகத்தில் சிசுபாலனை வதிக்கப்போகின்றனை. இவற்றையெல்லாம் நான் பார்க்கப்போகின்றேன். மற்றும், நீ த்வாரகையில் வாஸஞ் செய்துகொண்டு பூமியில் பண்டிதர்களால் பாடத்தகுந்தவைகளான எத்தனையோ செயல்களை நடத்தப்போகின்றனையோ, அவற்றையெல்லாம் நான் பார்க்கப்போகின்றேன். அப்பால் காலத்தைச் சரீரமாகவுடைய நீ அர்ஜுனனுக்கு ஸாரதியாயிருந்து பூமியின் பாரத்தை நீக்கும் பொருட்டுப் பல அக்ஷௌஹிணிகளைக் கொண்ட ஸைன்யங்களை அழிக்க நான் பார்க்கப்போகிறேன். நீ [1] அபஹதபாப்மத்வம் முதலிய குணங்கள் அமைந்து கேவலம் ஜ்ஞானானந்தஸ்வரூபனாயிருப்பவன். அளவற்ற ஆனந்தமயமான தன்ஸ்வரூபத்தை அனுபவிக்கையால ஸமஸ்த காமங்களும் நிறைவேறப் பெற்றவன்; அவாப்த ஸமஸ்தகாமன்; ஸத்யஸங்கல்பன்; முயன்ற காரியம் எதுவும் வீணாகப் பெறாத விசித்ரசக்தியுடையவன். தன்

1. ப்பாபங்களற்றிருக்கை,

தேஜஸ்ஸினால் மாயையின் குணங்களான ஸத்த்வாதிகளுடைய ப்ரவாஹத்தை என்றும் உதறியிருப்பவன்; ஷாட்குண்ய பூர்ணன்; ஸர்வேஶ்வரன். இத்தகையனான உன்னைச்சரணம் அடைகின்றேன். நீ தன்னையே தனக்கு ஆதாரமாக வுடையவன்; பூமி முதலிய பூதங்களைக் கொண்டு தன் ஸங்கல்பத்தினால் தேவாதிஸ்ருஷ்டியை நடத்தினவன். இப்பொழுது லீலைக்காக மானிட உருவத்தை ஏற்றுக்கொண்டிருக்கின்றனை. யாதவர்களுக்கும் வ்ருஷ்ணிகளுக்கும் ஸாத்வதர்களுக்கும் பாரவாஹியாயிருக்கின்றனை. உன்னைச் சரணம் அடைகின்றேன்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—பாகவதஶ்ரேஷ்டராகிய நாரதமுனிவர் இங்ஙனம் யாதவர்களுக்குப் பதியான ஸ்ரீக்ருஷ்ணனை நமஸ்கரித்து அவனால் அனுமதிகொடுக்கப்பெற்று அவனுடைய காட்சியினால் களிப்புற்றிருப்பினும் மீளவும் காணவேண்டுமென்னும் விருப்பம் மாறப்பெறாமலே திரும்பிச் சென்றார். கோகுலத்திற்கு ஸுகமளிப்பவனும் மஹானுபாவனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணனும் யுத்தத்தினால் கேசியை வதித்து அன்பர்களான இடைப்பிள்ளைகளுடன் பசுக்களை மேய்த்துக்கொண்டிருந்தான். ஒருகால் ஸ்ரீக்ருஷ்ணன் முதலிய அந்த இடைப்பிள்ளைகள் சிலர் திருடர்களென்றும் சிலர் அவர்களிடத்தினின்று காக்கிறவர்களென்றும் ஏற்படுத்திக்கொண்டு நிலாயனமென்னும் விளையாட்டு விளையாடினார்கள். மன்னவனே! அவர்களில் சிலர் திருடர்களாயிருந்தார்கள். சிலர் அவர்களிடத்தினின்று காக்கிறவர்களாயிருந்தார்கள். மற்றவர் ஆடுகளாயிருந்தார்கள். அவர்கள் இங்ஙனம் மூன்றுவகையாகப் பிரிந்து விளையாடினார்கள். அப்பொழுது மயனுடைய பிள்ளையும் [1] மஹாகாயனுமாகிய

1. மஹாகாயன்-பெரிய சரீரமுடையவன்.

வ்யோமனென்னும் அஸுரன் இடைப்பிள்ளைகளின் உருவம்போன்ற உருவந்தரித்துப் பெரும்பாலும் தான் திருடனாகவே இருந்து ஆடுகளாயிருந்த இடைப்பிள்ளைகள் பலரையும் எடுத்துக்கொண்டு போனான். அங்ஙனம் கொண்டுபோன கோபர்களையெல்லாம் அம்மஹாஸுரன் பர்வத குஹையில் வைத்து அதன் த்வாரத்தைப் பாறையால் மூடிவைத்தான். விளையாட்டிற்கு ஐந்து கோபர்களே மிகுந்திருந்தார்கள். அப்பொழுது ஸத்புருஷர்களுக்குச் சரணங் கொடுப்பவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் அந்த வ்யோமாஸுரனுடைய கார்யத்தை அறிந்து ஸிம்ஹம் செந்நாயைப் பிடிப்பதுபோல, கோபர்களைக் கொண்டுபோகின்ற அவ்வஸுரனை வலிவுடன் பிடித்துக் கொண்டான். மஹாபலிஷ்டனாகிய அவ்வஸுரன் அப்பொழுது பெரிய பர்வதம்போன்ற உண்மையான தன்னுருவத்தைத் தரித்து ஸ்ரீக்ருஷ்ணன் பிடித்துக்கொண்டதற்கு வருந்தித் தன்னை அவனிடத்தினின்று விடுவித்துக்கொள்ள விரும்பியும் அதற்கு வல்லனாகவில்லை. அப்பால் ஸ்ரீக்ருஷ்ணன் அவனை இருபுஜங்களாலும் நன்றாக இறுக்கிப் பிடித்துப் பூமியில் தள்ளி ஆகாயத்தில் தேவதைகள் பார்த்துக் கொண்டிருக்கையில் பசுவைக் கொல்லுவதுபோலக் கொன்றுவிட்டான். பிறகு குஹையில் மூடியிருந்த பாறையை வாங்கிப் போகட்டுப் பர்வத குஹையில் அகப்பட்டுக் கொண்ட வருத்தத்தினின்று கோபர்களை விடுவித்துத் தேவதைகளாலும் கோபர்களாலும் துதிக்கப்பெற்றுத் தன் கோகுலம் போய்ச் சேர்ந்தான். முப்பத்தேழாவது அத்யாயம் முற்றிற்று.

அக்ரூரன் நந்தகோகுலம் போகும்பொழுது
வழியில் ஸ்ரீ க்ருஷ்ணானுபவத்தைப்
பற்றி மனோரதித்தலும், ஸ்ரீக்ருஷ்ணன்
அக்ரூரனை ஸத்கரித்தலும்.



ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—பகவானிடத்தில் ஆழ்ந்த மதியுடைய அக்ரூரனும் அன்றையதினம் ராத்ரி மதுரையில் இருந்து மற்றைநாள் விடியற்காலையில் ரதத்தில் ஏறிக்கொண்டு நந்தகோகுலத்திற்குப் போனான். மிகுந்த பாக்யமுடைய அவ்வக்ரூரன் பகவானிடத்தில் மிகுந்த பக்தி உண்டாகப்பெற்று வழியில் போய்க்கொண்டே இங்ஙனம் சிந்தித்தான். 'நான் என்ன மங்கலகார்யம் செய்தேனோ? மேம்பட்ட தவம் என்ன செய்தேனோ? ஸத்பாத்ரமான புருஷனுக்கு என்ன தானஞ் செய்தேனோ? ஏனென்றால், இப்பொழுது நான் கேசவனைப் பார்க்கப் போகிறேனல்லவா? இல்லாதபக்ஷத்தில் இது எனக்கு எப்படி நேரும்? சூத்ரஜாதியில் பிறந்தவனுக்கு வேதஞ் சொல்லுவது எங்ஙனம் கிடைக்க அரிதோ, அங்ஙனமே சப்தாதிவிஷயங்களில் சுழிந்த மனமுடைய எனக்கு உத்தமஸ்லோகனான பகவானுடைய இத்தகைய தர்சனம் கிடைப்பது அரிதே. ப்ரஹ்மாதி தேவதைகளுங்கூட அவனை வெறுமனே புகழ்ந்து மனத்தினால் சிந்திக்கவேண்டுமேயன்றிக் காணமாட்டார்கள். அத்தகைய பரமபுருஷனுடைய தர்சனம் எனக்கு எங்ஙனம் கிடைக்கும்? அல்லது இப்படி அன்று. நீசனாகிய எனக்குங்கூட அச்சுதனுடைய தர்சனம் கிடைக்கும். ஏனென்றால், ஆற்றுவெள்ளத்தில் அடித்துக்கொண்டு போகின்ற புல் முதலியவற்றில் ஒன்று ஒருகால் கரையேறுவதும் உண்டல்லவா? அங்ஙனமே கர்மவசத்தினால் காலமாகிற ஆற்றுவெள்ளத்தில் அடித்துக்கொண்டு போகிற ஜீவாத்மாக்களுக்குள் ஒருவன் ஒருகால் கரை

யேறக்கூடும். இப்பொழுது என்னுடைய அமங்கல மெல்லாம் பறந்துபோயிற்று. இப்பொழுது என்னுடைய ஜன்மமும் ஸபலமாயிற்று. ஏனென்றால், யோகிகளுக்குங் கூட த்யானிக்கக்கூடியதேயன்றிக் காணக்கூடாததான பகவானுடைய அடித்தாமரையை நான் வணங்கப் போகிறேனல்லவா? கம்ஸன் இப்பொழுது எனக்கு மிகவும் மேம்பட்ட அனுக்ரஹஞ் செய்தான். ஆ! என்ன ஆச்சர்யம்! நான் அவனால் அனுப்பப்பட்டு ஸ்ரீக்ருஷ்ணனுடைய பாதாரவிந்தத்தைப் பார்க்கப்போகிறேனல்லவா? முன்புள்ள பெரியோர்கள் பூமியில் மானிடஉருவம பூண்டு அவதரித்த இந்தப்பகவானுடைய பாதாரவிந்தங்களின் நக மண்டலங்களுடைய காந்தியினால் எவ்விதத்திலும் கடக்கமுடியாத பாபமாகிற அந்தகாரத்தைக் கடந்தார்கள். (இப்பகவானுடைய பாதங்களை த்யானித்த மாத்ரத்தில் பெரியோர்கள் பாபங்களைக் கடந்தார்களென்றால், அப்பகவானுடைய பாதாரவிந்தங்களை நேரில் காணப்போகிற என்னுடைய பாபங்கள் தொலைந்தன வென்பதில் ஸந்தேஹம் உண்டோ?) ப்ரஹ்மதேவன் ருத்ரன் முதலிய தேவதைகள் ஸ்ரீமஹாலக்ஷ்மி பக்தர்கள் முனிவர்கள் இவர்களால் பூஜிக்கப்பட்டதும் அனுசரர்களான கோபாலர்களுடன் பசு மேய்க்கும்பொருட்டு வனத்தில் ஸஞ்சரிப்பதும் கோபிகைகளின் கொங்கைகளிலுள்ள குங்குமக்குழம்புகளால் அடையாளஞ் செய்யப்பட்டதுமாகிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய பாதாரவிந்தத்தை நான் காணப்போகிறேன். அழகியகபோலங்களும் அத்தகைய மூக்கும் புன்னகையோடு கூடின கண்ணோக்கமும் செந்தாமரைமலர்போல் சிவந்த கண்களும் அமைந்து சுரிகுழல்களால் சூழப்பட்டிருப்பதுமாகிய முகுந்தனுடைய முகத்தை நான் பார்க்கப் போகிறேன். இது நிச்சயம்.

இந்த ம்ருகங்கள் எனக்கு ப்ரதக்ஷிணமாய்ப் போகின்றன. (இந்தச் சுபசகுனம் வீண்போகாது.) பூமியின பாரத்தை நீக்கும்பொருட்டுத் தன் ஸங்கல்பத்தினால் மானிட உருவம பூண்டவனும் மேலான லாவண்யமுடையவனுமாகிய ஸ்ரீமஹாவிஷ்ணுவின் தர்சனம்எனக்கு இப்பொழுது நேருமாயின, என் கண்களுக்குப்பயன் உடனே உண்டாகுமெனபதில் ஸந்தேஹமில்லை. இப்பரமபுருஷன் தன்சரீரங்களான ப்ரக்ருதிபுருஷர்களை ஸாக்ஷாத்கரிப்பவன்; ஜீவனைப்போல் தேஹத்தை ஆத்மாவாக ப்ரமிப்பதற்குக் காரணமான அஹங்காரமற்றவன். மற்றும், இவன் தனக்கு அஸாதாரணமான அளவற்ற ஜ்ஞானமாகிற தேஜஸ்ஸினால் அஜ்ஞானமாகிற தமஸ்ஸையும் ஸ்வதந்த்ரவஸ்து உண்டென்கிற பேதத்தையும் உதறியிருப்பவன்; மற்றும், தன்சரீரமான ப்ரக்ருதியைக் கொண்டு அதுபரிணமிக்கும்படி ஸங்கல்பித்துத் தானே ஆதாரமாயிருந்து ப்ராணன்கள் இந்த்ரியங்கள் புத்தி இவற்றைப் படைத்து இவற்றால் போகத்திற் கிடமான தேஹங்களில் ஊஹிக்கப்படுகிறான். இவனுடைய குணங்களும் செயல்களும் பிறவிகளும் சொல்லுவதும் கேட்பதும் செய்கிற ஸகலஜனங்களின பாபங்களையும் போக்குந்திறமையுடையவை; மிகவும் மங்கலமாயிருப்பவை. இத்தகைய குணம்செயல பிறவி இவற்றைமொழியுஞ் சொற்கள் ஜகத்தைப் பிழைப்பித்து விளங்கச்செய்து புனிதஞ்செய்கின்றன. இவற்றின ஸம்பந்தமற்ற சொற்கள் பல அழகுகள் அமைந்திருப்பினும் சவத்திற்குச் செய்யும் அலங்காரங்களோடொத்தவைகளேயாம். எவன் இத்தகைய ஸர்வேஶ்வரனென்றும் மஹாவிஷ்ணுவென்றும் கூறப்படுகிறானோ, அவனே யாதவகுலத்தில் ஸ்ரீக்ருஷ்ணனாய் அவதரித்திருக்கின்றான். அவன் தன்னால் ஏற்படுத்

த்பட்ட தர்மமர்யாதைகளைப் பாதுகாப்பவர்களான தெய்வப் பிறப்பினர்களுக்கு க்ஷேமத்தை விளைக்குமய ன்று ஸமஸ்தமங்கலங்களுக்கும் இருப்பிடமும் தேவதைகளால் பாடப்பட்டதுமாகிய தனபுகழைப் பரவச்செய்து கொண்டு கோகுலத்தில் இருக்கின்றான். ஸத்புருஷர்கள் தன்னைப் பெறுதற்குத் தானே உபாயமாயிருப்பவனும் அவர்களுக்கு ஹிதஞ் செய்பவனும் மூன்று லோகங்களிலும் அழகான உருவந்தரித்திருப்பவனும் கண் படைத்தவர்களுக்கு மஹோத்ஸவத்தை விளைப்பவனும் ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு இனிய வாஸஸ்தானமுமாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணனை நான் இப்பொழுது நிச்சயமாய்ப் பார்க்கப்போகின்றேன். எனக்கு விடியற்காலங்கள் நன்மையை விளைக்கும்படி அருள்புரிந்தன. (இரவெல்லாம் நல்ல பொழுதாக விடிந்தன). நான் அங்குச் சென்று இந்த ஸ்ரீக்ருஷ்ணனைக் கண்டவுடனே ரதத்தினின்றும் இறங்கி ஜகதீஸ்வரர்களும் புருஷோத்தமர்களுமாகிய ராமக்ருஷ்ணர்களின் பாதாரவிந்தங்களை வணங்குவேன். யோகிகளுங்கூட இந்தப்பாதாரவிந்தங்களைத் தங்கள் ஸத்தை ஸித்திக்கும்பொருட்டுப் புத்தியால் பாவிக்கிறார்களன்றிக் கண்ணால் கண்டதில்லை. (அத்தகைய பாதாரவிந்தங்களைக் கண்களால் காணப்பெற்ற நான் என்ன பாக்யசாலியோ?) பின்பும், அந்த ராமக்ருஷ்ணர்களோடு அவர்களுடைய நண்பர்களான கோபர்களையும் வணங்குவேன். அப்பால் பிரபுவாகிய ஸ்ரீக்ருஷ்ணன் தன்பாதாரவிந்தங்களில் விழுந்திருக்கின்ற என்சிரஸ்ஸில் காலமாகிற ஸர்ப்பத்தின் வேகத்தினால் பயந்து தன்னைச் சரணமடையுஞ் ஜனங்களுக்கு அபயங் கொடுப்பதும் தாமரைமலர் போன்றதுமாகிய தன்கரத்தை வைப்பான். இந்த்ரனும் பலிசக்ரவர்த்தியும் இந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய

ஹஸ்தத்தில் அர்க்யங் கொடுத்து மூன்றுலோகங்களுக்கும் ப்ரபுக்களாயிருக்கையாகிற மேன்மையைப் பெற்றூர்களல்லவா? செங்கழுநீர்மலரின் பரிமள முடைய இந்த ஹஸ்தம் விளையாடல்களால் இளைப்புற்ற கோபிகைகளின் ச்ரமத்தைத் தன்ஸ்பர்சத்தினுல் போக்கிற்றல்லவா? (அப்படிப்பட்ட தன் ஹஸ்தத்தை ஸ்ரீக்ருஷ்ணன் என்சிரஸ்ஸில் வைப்பானுயின் எனக்கு வேறு பயன் என்ன வேண்டும்?) நான் கம்ஸனுல் அனுப்பப்பட்டவன்; அவனுடைய ப்ருத்யனுமாயிருக்கின்றேன்; ஆயினும் ஸ்ரீக்ருஷ்ணன் என்னிடத்தில் சத்ருவென்னும் புத்தியைக் கொள்ளமாட்டான். அவன் எல்லாவற்றையும் அறிந்தவன்; ஒரே காலத்தில் எல்லாச் சரீரங்களையும் அறிந்து அவற்றை நியமித்துக் கொண்டிருப்பவன். மற்றும், அவன் நம்மனத்திற்கு உள்ளும் புறமும் வஸித்துக்கொண்டு மலர்தலும் குவிதலுமின்றி ஒருவாறாயிருப்பதும் நிர்மலமுமான தன் ஜ்ஞானத்தினுல் அம்மனத்தின் கருத்தை யெல்லாம் காண்கின்றான். நான் வெளியில் மாத்ரம் கம்ஸனை அனுஸரிக்கிறேனன்றி உள்ளூர ஸ்ரீக்ருஷ்ணனையே அனுஸரித்திருக்கின்றேன். ஹ்ருதயத்தில் வாஸஞ் செய்கின்ற அந்த ஸ்ரீக்ருஷ்ணனுக்கு இது தெரியுமாகையால் என்னைச் சத்ருவென்று நினைக்கமாட்டான் மற்றும், அந்த ஸ்ரீக்ருஷ்ணன் தன் பாதமூலத்தில் மனவூக்கத்துடன் கைகுவித்துக்கொண்டிருக்கின்ற என்னைப் புன்னகை அமைந்து கருணையினுல் நனைந்திருக்கின்ற கண்ணுல் காண்பானுயின், அப்பொழுதே நான் பாபங்களெல்லாம் தொலையப்பெற்றுச் சங்கையின்றி நிலைநின்ற ஸந்தோஷத்தை அடைவேன். மிகுந்த நண்பனும் பந்துவும் தன்னைவிட வேறுதெய்வம் உண்டென்று நினையாதவனுமாகிய என்னை அந்த ஸ்ரீக்

ருஷ்ணன் நீண்டபுஜதண்டங்களால் அணைத்துக்கொள்வான். அப்பொழுதே என்சரீரம் பரிசுத்தமாக்கப்படுமல்லவா? அதனால் என்னுடைய கர்மபந்தமும் அழிந்து போய்விடும். பெரும்புகழுடைய ஸ்ரீக்ருஷ்ணன், ஆலிங்கனஞ்செய்யப் பெற்று வணங்கி அஞ்சலித்துக் கொண்டிருக்கின்ற என்னை 'அக்ரூர! அப்பா!' என்று அழைப்பான். அப்பொழுதன்றோ என்னுடைய ஜன்மம் ஸபலமாகும் (பயன்பெறும்). மிகவும் மஹானுபாவனாகிய பகவானால் எவன் ஆதரிக்கப் பெறமாட்டானோ; அவனுடைய ஜன்மத்தைச்சுடவேண்டுமல்லவா? எல்லாவற்றையும்ஸமமாகப் பார்க்குந்தன்மையுள்ள அப்பரமபுருஷனுக்கு அன்பிற்கிடமாயிருப்பவனாவது மிகுந்த நண்பனாவது அன்பிற்கிடமாகாதவனாவது த்வேஷிக்கத் தகுந்தவனாவது உபேக்ஷிக்கத் தகுந்தவனாவது ஒருவனும் இல்லை. அவனுக்கு அத்தகைய பேதபுத்தி கிடையாது. ஆயினும் பக்தர்கள் தன்னை எங்ஙனம் பணிகின்றார்களோ; அப்படியே தானும் அவர்களைப் பணியுந்தன்மையனாகி கல்பவ்ருக்ஷம் தன்னை அடைந்தவர்களுக்கு அவர்கள் விரும்பும் ப்ரயோஜனங்களை நிறைவேற்றிக் கொடுக்கின்றது; தன்னைப் பணியாதவர்களுக்கு அங்ஙனம்செய்கிறதில்லை. அங்ஙனமே இந்தப் பரமபுருஷனும் தன்னை ப்ரீதியோடு பணிகின்றவர்களைத் தானும் ப்ரீதியோடு தொடர்கின்றான். இதனால் அவனுக்கு விஷமம் உண்டென்று சொல்ல முடியாதல்லவா? மற்றும், யாதவஸ்ரேஷ்டனும் அந்த ஸ்ரீக்ருஷ்ணனுக்குத் தமையனுமாகிய பலராமன் தன்பாதங்களில் விழுந்து நமஸ்கரிக்கின்ற என்னைப் புன்னகையுடன் வாரியெடுத்தணைத்து என்னைக் குவித்த கைகளில் பிடித்து மாளிகைக்குள் அழைத்துக் கொண்டுபோய் எனக்கு ஆஸனம் முதலிய ஸத்காரங்க

ளெல்லாம்செய்து தன் பந்துக்கள் மேல் கம்ஸன் செய்யும் த்ரோஹத்தைப் பற்றி வினவுவான்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஸ்வபல்கனுடைய பிள்ளையாகிய அக்ரூரன் இங்ஙனம் வழிமுழுவதும சிந்தித்துக் கொண்டே ரதத்தின்மேல் ஏறிக் கோகுலம் போய்ச் சேர்ந்தான். மன்னவனே! அப்பொழுது ஸூர்யனும் அஸ்தமயபர்வதத்தை அடைந்தான். அவ்வக்ரூரன அந்தக் கோகுலத்தில் ஸமஸ்தலோகபாலர்களின் கிரீடங்களால் ப்ரீதியுடன பணியப்பட்ட பாதாரவிந்தங்களின பராகங்களையுடைய ஸ்ரீக்ருஷ்ணனுடைய அடிவைப்புக்களைக் கண்டான். அவை பூமிக்கு அலங்காரங்களாயிருந தன; மற்றும், தாமரைமலர் யவை மாவெட்டி இவை முதலிய இரேகைகளாகிற அடையாளங்களால் அறியக் கூடியவைகளாயிருநதன. அவன் அந்த அடிவைப்புக்களைக் கண்ட மாத்ரத்தினால் ஸந்தோஷம் அடைந்து மிகவும பரபரப்புற்று ப்ரீதியினால் மயிர்க்கூச்சம் உண்டாகப பெற்றுக் கண்ணீர்த் துளிகளால் கலங்கின கண்களையுடையவனாகி ரதத்தினின்றும் இறங்கி 'இவை நம்ப்ரபுவான ஸ்ரீக்ருஷ்ணனுடைய பாதாரவிந்தங்களின் பராகங்களல்லவா' என்னும் எண்ணத்துடன அவற்றில் விழுந்து புரண்டான. பகவானுடைய குணங்களைச் சொல்லுவதனாலாவது அவனுடைய திருவுருவங்களையும் மற்ற அடையாளங்களையும் காண்பது கேட்பது முதலியவற்றாலாவது தன்னிலைமை மாறப்பெறுகையாகிற இவ்வளவே இவ்வுலகத்தில் தேஹம் படைத்தவர்கள் பெறக்கூடிய புருஷார்த்தம். ஆகையால் ஸ்ரீக்ருஷ்ணனுடைய அடிவைப்புக்களைக் கண்ட மாத்ரத்தில் அவற்றில் விழுந்து புரளும் படியான நிலைமை உண்டாகப்பெற்றமை அவ்வக்ரூரனுடைய பாக்யமஹிமையேயன்றி வேறன்று. ஆனால் ஜம்

பக்தியினாலாவது பயத்தினாலாவது சோகத்தினாலாவது அங்ஙனம் செய்வானாயின் அது புருஷார்த்தமாகாது. அவ்வக்ரூரன் நெடுநேரம் புரண்டு மீளவும் ரதத்தில் ஏறிக்கொண்டு பசுக்களுக்கு நாதனான ஸ்ரீக்ருஷ்ணனும் பலராமனும் எங்கே இருக்கின்றார்களென்று வினவிக்கொண்டே வேகமாகச் சென்றான். அப்பால் அவன் கோகுலத்தில் பசுக்கள் கறக்குமிடத்தில் இருக்கின்ற ராமக்ருஷ்ணர்களைக் கண்டான். அவர்களில் ஒருவன் பீதாம்பரத்தையும் மற்றொருவன் நீலாம்பரத்தையும் உடுத்திருந்தார்கள். மற்றும், அவர்கள் சரத்காலத்தில் மலர்ந்த தாமரையலர் போன்ற கண்களுடையவர்களும் பாலர்களும் ஒருவன் கறுப்பும் ஒருவன் வெளுப்புமாயிருப்பவர்களும் ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கும் சோபைக்கும் இடமாகிய நீண்ட புஜதண்டங்களும் அழகிய முகமும் அமைந்து மிகவும் அழகாயிருப்பவர்களும் யானைக்குட்டிகள் போல் நடப்பவர்களும் த்வஜம் வஜ்ரம் மாவெட்டி தாமரைமலர் இந்த ரேகைகளால் அலங்காரஞ் செய்யப்பெற்ற அடிகளால் கோகுலத்தை விளங்கச்செய்பவர்களும் மஹானுபாவர்களும் தயையும் புன்னகையும் அமைந்த கண்ணோக்கமுடையவர்களும் மேம்பட்ட அழகிய விளையாட்டுக்களுடையவர்களுமாகி ஸ்னானஞ் செய்து நிர்மலமான வஸ்த்ரங்களை உடுத்துச் சிறந்த சந்தனம் பூசி வனமாலையும் மற்றும் பல் பூமாலைகளும் அணிந்திருந்தார்கள். புருஷச்ரேஷ்டர்களும் ஆதிபுருஷர்களும் ஜகத்காரணர்களும் ஜகத்தையெல்லாம் சரீரமாக வுடையவர்களாகையால் ஜகத்தெல்லாம் தாமேயாயிருப்பவர்களும் ஜகத்தைப் பாதுகாக்கும்பொருட்டு ஸங்கல்பத்தினால் அவதரித்தவர்களுமாகிய அந்த ராமக்ருஷ்ணர்களை அக்ரூரன் கண்டான். மன்னவனே!

[1] இடையில் ஸ்வர்ணரேகையுடைய மரகதபர்வதம் போன்ற ஸ்ரீக்ருஷ்ணன் இடையில் மைப்பூசின வெள்ளி மலைபோன்ற பலராமன் ஆகிய இவ்விருவரும் தங்கள் தேஹகாந்தியால் திசைகளையெல்லாம் இருளற்றுவிளங்கச் செய்துகொண்டிருந்தார்கள். அப்பொழுது அந்த அக்ரூரன் அக்கணமே ரதத்தினின்றும் இறங்கி ப்ரேமத்தினால் தழுதழுத்து ராமக்ருஷ்ணர்களின் பாதங்களில் தண்டம்போல விழுந்தான். பகவானைக் கண்ட ஆனந்தத்தினால் நீர்தளும்பின கண்களுடையவனாகி உடம்பெல்லாம் மயிர்க்கூச்சம் உண்டாகப்பெற்று ஸந்தோஷத்தின் மிகுதியால் தன் பெயரைச் சொல்ல முடியாதிருந்தான். தன்னை வணங்கினவர்களிடத்தில் வாத்ஸல்யமுடைய மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன அவ்வக்ரூரனுடைய நிலைமையை அறிந்து சக்ராயுதம்பிடித்த அடையாளமுடைய கையினால் அவனை அருகாமையில் இழுத்து ப்ரேமத்துடன் அணைத்துக் கொண்டான். அப்பால் பலராமனும் நமஸ்கரித்த அக்ரூரனை ஆலிங்கனஞ் செய்து மனக்களிப்புற்றுத் தன் கையால் அவன் கையைப் பிடித்துத் தம்பியாகிய ஸ்ரீக்ருஷ்ணனுடன் க்ருஹத்திற்குள் அழைத்துக்கொண்டு சென்றான். பிறகு நல்வரவாவென்று வினவி அவ்வக்ரூரனுக்கு மேலான ஆஸனம் அளித்து விதிப்படி பாதங்களை அலம்பி மதுபர்க்கம் கொண்டுவந்து கொடுத்தான். அனந்தரம் அதிதியாகிய அவ்வக்ரூரனுக்கு ஆவலுடன் பசுவைக் கொடுத்து இளைப்புற்றிருக்கின்ற அன்னவனுக்கு ஶ்ரத்தையுடன் அறுசுவைகளும் அமைந்து மற்றும் பலகுணங்களும் நிறைந்து பரிசுத்தமுமாகிய அன்னத்

---

1. ஸ்ரீ க்ருஷ்ணன் பீதாம்பரமுடுத்தவனாகையாலும், பலராமன் நீலாம்பரம் உடுத்தவனாகையாலும், இங்ஙனம் உவமை கூறப்பட்டது.

ளையும் அளித்தான். பிறகு ஏலக்காய் லவங்கம் கற்பூரம் முதலிய முகவாஸனைகளாலும் சந்தனம் முதலிய கந்தங்களாலும் பூமாலைகளாலும் தாம்பூலம் முதலிய மற்றும் பல உபசாரங்களாலும் போஜனஞ் செய்த அவ்வக்ரூரனுக்குப் ப்ரேமத்துடன் மேலான ஸந்தோஷத்தை விளைத்தான். பிறகு நந்தகோபன் இங்ஙனம் ஸத்கரிக்கப்பட்ட அவ்வக்ரூரனைப் பார்த்து அனுக்ரஹமென்பதையே அறியாதவனும் கொடியவனுமாகிய கம்ஸன் ஜீவித்திருக்கையில் கொலையாளியால் பாதுகாக்கப்பட்ட ஆடுகள்போல நீங்கள் எப்படி இருக்கின்றீர்கள்? தன் [1] பகினி வேண்டாமென்று முறையிட்டுக்கொண்டிருக்கையில் அவளுடைய குழந்தைகளை இவன் வதித்தானல்லவா? இவன் தனப்ராணனாகிய த்ருப்தியைக் கெடுப்பதிலேயே மிக்க மனவூக்கமுடையவன்; துஷ்டன். இத்தகையனான கம்ஸனுடைய ப்ரஜைகளாகிய உங்களுக்கு க்ஷேமமென்பது எங்ஙனம் இருக்குமென்று நினைக்கின்றோம் (நீங்கள் ஜீவித்திருப்பதே அருமையாயிருக்க க்ஷேமம் ஏது?)' என்று க்ஷேமம் வினவினான். முப்பத்தெட்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

ஸ்ரீக்ருஷ்ணன் அக்ரூரனால்
கம்ஸனுடைய அபிப்ராயத்தை அறிந்து
மதுரைக்குப் புறப்படுவதைக் கண்டு
கோபிகைகள் வருந்துவதும், நடுவழியில்
யமுனையில் ஸ்நானஞ் செய்கின்ற
அக்ரூரனுக்கு ஸ்ரீக்ருஷ்ணன் தன் திவ்ய
மங்கல விக்ரஹத்தைக் காட்டுவதும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்.—அக்ரூரன் ராமக்ருஷ்ணர்களால் மிகவும் வெகுமதிக்கப்பட்டுப் படுக்கையில் ஸுகமாக உட்கார்ந்து வழியில் தான் விரும்பின விருப்பங்

1. பகினி-உடன்பிறந்தவள்.

களை யெல்லாம் பெற்றான். ஸ்ரீ மஹாலக்ஷ்மிக்கு வாஸஸ்தானமா யிருப்பவனும் ஷாட்குண்ய பூர்ணனுமாகிய பரமபுருஷன் அருள்புரிவானாயின் எதுதான் கிடைக்க அரிது? எதுவும் அரிதன்று. மன்னவனே! ஆயினும் அவனுடைய பக்தர்கள் எதையும் விரும்பமாட்டார்கள். அப்பொழுது மஹானுபாவனாகிய தேவகியின் புதல்வன் ஸாயங்கால போஜனஞ் செய்து தன் அன்பர்களான வஸுதேவாதிகளிடத்தில கம்ஸன் இருக்கும் நிலையையும் அவன் செய்ய நினைத்திருப்பதையும் வினவினான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—அப்பா! நல்லியற்கையுடையவரே! வந்தீரா? உமக்கு நல்வரவா? உங்களுக்கு க்ஷேமம் உண்டாகுக. நம்முடைய ஜ்ஞாதிகளும் பந்துக்களும் ஒரு கெடுதியுமின்றி ஆரோக்யத்துடன் க்ஷேமமாயிருக்கின்றார்களா? மாமனென்னும் பெயர்பூண்டு நங்குலத்திற்கு வியாதிபோன்ற கம்ஸன் வளர்ந்து கொண்டிருக்கையில், நம்பந்துக்களுக்கும் அவர்களுடைய ப்ரஜைகளுக்கும் என்னவென்று க்ஷேமம் விசாரிப்பேன்? க்ஷேமமாவென்று நான் கேட்பதுங்கூட அழகன்று. பூஜிக்கத்தகுந்தவர்களும் நிரபராதிகளுமாகிய தாய்தந்தைகளுக்கு எங்கள் நிமித்தமாகப் பெருந்துக்கம் உண்டாயிற்று. எங்களைப்பற்றியல்லவோ எங்களுக்கு முன் தோன்றல்களான பிள்ளைகள் அனைவரும் மரணம் அடைந்தார்கள்? எங்களைப்பற்றியல்லவோ அவர்கள் சிறையில் அடைப்புண்டார்கள்? அது கிடக்கட்டும். நல்லியற்கை யுடையவரே! எங்களுக்கு மிகுந்த பந்துவாகிய உம்மைப் பார்க்கவேண்டுமென்று நெடுங்காலமாய் விரும்பிக் கொண்டிருந்தேன். அது இப்பொழுது நேரிட்டது. இது எங்களுக்கு மிகவும் ஆநந்தத்திற்கிடமாயிருக்கின்றது அன்றோ! நீர் வந்த காரணத்தைச் சொல்லுவீராக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் பகவானால் வினவப்பெற்ற மதுவம்சாலங்காரனாகிய அவ்வக்ரூரன் கம்ஸனுக்கு யாதவர்களிடத்தில் வைரம் மாறாமல் தொடர்ந்து வருவது அவன் வஸுதேவனை வதிக்கவேண்டுமென்று முயன்றிருப்பது முதலிய எல்லாவற்றையும் ஸவிஸ்தரமாகச் சொன்னான். கம்ஸன் தனுர்யாகமென்னும் வ்யாஜத்தைச் சொல்லி அழைத்துக்கொண்டு வரச்சொன்னதையும், அவன் தன்னை எதற்காகத் தூதனுப்பினானோ அதையும், வஸுதேவனிடத்தினின்று ஸ்ரீக்ருஷ்ணன் பிறந்ததைப்பற்றி நாரதர் கம்ஸனுக்குச் சொன்ன விவரத்தையும் சொன்னான். சத்ருவீரர்களை அழிக்குந்திறமையுடைய ஸ்ரீக்ருஷ்ணனும் பலராமனும் இவ்விருவரும் அக்ரூரன் சொன்ன செய்தியைக் கேட்டுச் சிரித்துத் தந்தையாகிய நந்தகோபனைக் குறித்து ராஜாவான கம்ஸன் கட்டளையிட்டதையெல்லாம் விண்ணப்பஞ் செய்தார்கள். அந்த நந்தகோபனும் கோகுலத்திலுள்ள கோபர்களுக்கெல்லாம் மேல்வருமாறு ஆஜ்ஞாபித்தான். 'பால் தயிர் முதலியவற்றை யெல்லாம் சேர்த்து எடுத்துக் கொள்ளுங்கள். மேலான வஸ்துக்களையும் எடுத்துக் கொள்ளுங்கள். வண்டிகளில் எருதுகளைப் பூட்டி ஸித்தப்படுத்துங்கள். நாளைத்தினம் எல்லாரும் மதுரைக்குப் போகவேண்டும். ராஜனாகிய கம்ஸனுக்குப் பால் தயிர்நெய் முதலியவற்றைக் கொடுக்க வேண்டும். அந்த மதுராபுரியில் தனுர்யாகம் நடக்கிறதாம்; அதையும் பார்க்கலாகும். நாட்டுப்புறத்து ஜனங்கள் பலரும் அவ்விடம் போகிறார்களாம் (அவர்களையும் பார்க்கலாம்). இங்ஙனம் நந்தகோபன் தன் கோகுலத்தில் முழுவதும் ஸூதனைக் கொண்டு கோஷமிடுவித்தான். மன்னனே! அந்தக் கோகுலத்திலுள்ள



2362. அக்ரூரன் கோகுலத்திற்குச் சென்று ஸ்ரீக்ருஷ்ணனிடம் கம்ஸன அழைத்துக்கொண்டு வரச்சொன்ன செய்தியைக கூறுதல்.

கோபிகைகள் அப்பொழுது அக்ரூரன் ராமக்ருஷ்ணர்களை அழைத்துக்கொண்டு போவதற்காக வந்திருக்கிறானென்று கேள்விப்பட்டு வருத்தமுற்றார்கள். சில கோபிகைகள் அந்த ஸமாசாரங் கேட்டதனால் மனத்தில் தாபம் உண்டாகப்பெற்று அதனால் உஷ்ணமாய் வருகின்ற மூச்சுக்காற்றினால் முகத்தின் ஒளி மழுங்கப்பெற்றார்கள். சில கோபிகைகள் அரையில் தரித்திருந்த வெண் பட்டாடையும் கைவளைகளும் நழுவித் தலைச்சொருக்கும் அவிழ்ந்தலையப் பெற்றார்கள். வேறு சில கோபிகைகள் பகவானுடைய த்யானத்தினால் கண் காது முதலிய ஸமஸ்த இந்த்ரியங்களின் வ்யாபாரங்களும் ஓயப்பெற்று ஆத்ம ஸாக்ஷாத்காரம் பெற்ற யோகிகள்போல இவ்வுலகத்தையும் (தேஹத்தையும்) அறியாதிருந்தார்கள். வேறு சில கோபிகைகள் ப்ரேமத்தினாலுண்டான புன்னகையுடன் மொழியப் பட்டவைகளும் மனத்திற்கு இனியவைகளும் விசித்ரமான பதங்கள் அமைந்தவைகளுமான அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய உரைகளை நினைத்து மோஹித்தார்கள். வேறு சிலர் மேல்வரப்போகிற பிரிவை நினைத்துப் பயந்து தழதழப்புற்று முகுந்தனுடைய நடையழகையும் ராஸக்ரீடை முதலிய விளையாடலையும் ஸ்னேஹம் நிறைந்த புன்னகை அமைந்த கண்ணோக்கத்தையும் சோகத்தைப் போக்கவல்லவைகளான பூதனாவதம் சகடாஸுரவதம் முதலிய செயல்களையும் படுத்தல் கிடத்தல் புசித்தல் முதலிய கம்பீரமான சரித்ரங்களையும் நினைத்து அவ்வச்சுதனிடத்தில் மனங் குடிகொண்டு முகத்தில் கண்ணீர் நிரம்பப்பெற்று ஆங்காங்குக் குவியல் குவியலாகச் சேர்ந்து இங்ஙனம் மொழிந்தார்கள்.

கோபிகைகள் சொல்லுகிறார்கள்:—ஓ தெய்வமே! உனக்கு எங்கும் தயை கிடையாது. ஆ! இதென்ன

வருத்தம்! நீ ஹிதஞ்செய்யுந் தன்மையோடும் விஶ்வாஸத்தோடும் ப்ராணிகளை ஒன்று சேர்த்து ப்ரயோஜனம் கைகூடாதிருக்கும்பொழுதே அவர்களைப் பிரித்துவிடுகின்றனை. குழந்தைகளின் நடத்தைபோல உன செய லெல்லாம் பயனற்றதே. (உன்னைப்போன்ற மூர்க்கன் ஒருவனும் இருக்கமாட்டான்). கறுத்த முன்னெற்றி மயிர்களால் மறைக்கப்பட்டிருப்பதும் அழகிய கபோலங்களும் உயர்ந்த மூக்கும் சோகத்தைப் போக்கவல்ல புன்னகையும் அமைந்து அழகியதுமான முகுந்தனுடைய முகத்தை எங்களுக்குக் காட்டி மீளவும் அதைக் கண்மறையக் கொண்டுபோகின்றனையாகையால் உன் செயல் நன்றன்று. நீ எங்களுக்குக் கண்ணைக் கொடுத்து மீளவும் அதை நீயே அக்ரூரனென்னும் பெயர் பூண்டு வந்து அறியாதவன்போலப் பறித்துக்கொண்டு போகின்றனை. ஆகையால் நீ பெருங்கொடியன். ([1] தத்தாபஹாரஞ் செய்வதைக்காட்டிலும் மற்றொரு கொடுமை உண்டோ?) நீ கொடுத்த கண்ணால் ஸ்ரீக்ருஷ்ணனுடைய திருமேனியில் திருமுகமண்டலம் முதலிய ஓரவயவத்திலும் உனனுடைய ஸ்ருஷ்டி ஸாமர்த்யம் முழுவதையும் கண்டோம். (அப்படிப்பட்ட கண்ணனை நீ கொண்டு போகின்றனையாகையால் எங்கள் கண்ணையும் கொண்டு போனாற்போலவே). அவன் போனபின்பு எங்கள் கண்கள் இருந்து என்ன ப்ரயோஜனம். உனனுடைய ஸ்ருஷ்டி ஸாமர்த்யரஹஸ்யத்தை யெல்லாம் நாங்கள் அறிந்து கொண்டோமெனனும் பொறாமையால் ஸ்ரீக்ருஷ்ணனைப் பிரித்து நீ எங்களைக் குருடிகளாகச் செய்கின்றனை. கோபிகளே! நந்தகுமாரன் க்ஷணகாலமுங்கூட

1 தத்தாபஹாரம்—கொடுத்த வஸ்துவைப் பறித்த கொள்ளல். தத்தம்-கொடுக்கப்பட்ட வஸ்து.

நிலையில்லாத நட்புடையவன். நாம் வீடுவாசல்களையும் பந்துக்களையும் பிள்ளை பெண்களையும் கணவர்களையும் துறந்து நேரே தனக்குப் பணிவிடை செய்ய வந்து தன்னுடைய புன்னகை முதலிய இனியசெயல்களால் மனம் பறியுண்டு ஸ்வாதீனமற்றுத் தன் பாதமூலத்திலேயே விழுந்திருப்பினும் அவன் நம்மைக் கண்ணெடுத்தும் பார்க்க மாட்டான். அவன் புதியதில் ப்ரியமுடையவன். (புதியவர்களான பட்டணத்து மடந்தையர்கள் அவன் மனத்தை இழுக்கின்றார்கள்.) ஆகையால் அவன் நம்மைத் துறந்து போய்விடுவான். ஆ! நமக்கு என்னவருத்தம் நேரிட்டது! மதுராபுரியிலுள்ள மடந்தையர்களுக்கு இவ்விரவு நல்ல பொழுதாக விடிந்தது. அவர்களுடைய மனவிருப்பங்களெல்லாம் உண்மையாகப் பலித்தன. இதுநிச்சயம். ஏனென்றால், அந்தப்பட்டணத்து மடந்தையர்கள் பட்டணத்தில் நுழைகின்ற ஸ்ரீக்ருஷ்ணனுடைய முகத்தைக் காணப்போகிறார்களல்லவா? கடைக்கண்ணோக்கத்தினால் வளர்ந்த புன்னகையாகிற மகரந்தம் பெருகப்பெற்றதாகிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய முகாரவிந்தத்தைக் கண்களால் பானஞ் செய்வதைக்காட்டிலும் மேலான பயன என்ன இருக்கிறது? ஆகையால் ஸ்ரீக்ருஷ்ணனுடைய முகாரவிந்தத்தில் கடைக்கண்ணோக்கத்தினால் வளர்ந்துவருகின்ற புன்னகையாகிற மகரந்தத்தைப பானஞ் செய்ய நேரப்பெற்ற பட்டணத்து மடந்தையர்களின் பாக்யமஹிமையை என்னென்று வர்ணிக்க முடியும்? பெண்களே! ஸ்ரீக்ருஷ்ணன் தான் மன உறுதியுடையவனாயினும் அந்தப்பட்டணத்து மாதரசிகளின் தேன் மொழிகளால் மனம் பறியுண்டு ஸ்வாதீனமற்றுத் திறமையற்ற சேரிப் பெண்களாகிய நம்மிடம் எங்ஙனம் திரும்பிவருவான்? லஜ்ஜையும் புன்னகையும் அமைந்த அம்மடந்தையர்களின் விலாஸங்களால் கட்டுண்டு அவ்வி

டத்திலேயே சுழன்றுகொண்டிருப்பானன்றித் திரும்பி வரவேமாட்டான். இப்பொழுது அந்தப் பட்டணத்தி லுள்ள தாசார்ஹர் போஜர் அந்தகர் வ்ருஷ்ணிகள் ஸாத்வதர் ஆகிய இவர்களின் கண்களுக்கு மஹோத்ஸவம் உண்டாகப்போகின்றது. மற்றும், ஸ்ரீ மஹாலக்ஷ்மிக்கு வல்லபனும் கல்யாணகுணங்களுக்கு ஆதாரனுமாகிய ஸ்ரீ க்ருஷ்ணனை வழியில் எவரெவர் பார்க்கப்போகிறார்களோ, அவர்களுடைய கண்களுக்கும் இப்பொழுது உத்ஸவம் நேரிடப்போகின்றது. இது நிச்சயம். இத்தகைய செயலுடையவனாகையால் மன இரக்கமில்லாத இன்னவனுக்கு அக்ரூரனென்னும் பெயர் பொருந்தாது. மிகவும் கொடியனாகையால் க்ரூரனென்னும் பெயரே இவனுக்குத் தகும். இவ்வக்ரூரன் மிகவும் வருத்தமுற்றிருக்கின்ற நமமை ஆஶ்வாஸப்படுத்தாமலே ப்ரீதிக்கிடமான ப்ராணனைக்காட்டிலும் ப்ரியனான ஸ்ரீக்ருஷ்ணனை நமக்கெட்டாத வெகுதூரத்திற்குக் கொண்டு போகப் பார்க்கிறானல்லவா? இதைக்காட்டிலும் வேறு கொடுஞ்செயல் என்னவேண்டும்? இந்த ஸ்ரீக்ருஷ்ணனும் ஈரமில்லாத மதியுடையவனாகி ரதம் ஏறுகின்றான். கொடிய மதமுடைய இந்தக் கோபர்களும் அவனை அனுஸரித்து அவனை த்வரைப்படுத்துகிறார்கள். பெரியோர்களும் உபேக்ஷித்து அவனை வேண்டாமென்று தடுக்காமல் வெறுமனே இருக்கின்றார்கள். தெய்வமுங்கூட இப்பொழுது நமக்கு விபரீதமாக நடக்கின்றது. (தெய்வம் அனுகூலமாயிருக்குமாயின் இவனுடைய ப்ரயாணம் விக்னங்களால் தடைபடும்; இப்பொழுதே திடீரென்று இடைச்சேரியில் ஏதேனும் ஒரு கெடுதி உண்டாகும். அது வொன்றும் இல்லை. ஆகையால் தெய்வமும் ப்ரதிகூலமாயிருக்கின்றது). தோழிகளே! நாம் அந்த

ஸ்ரீக்ருஷ்ணனிடம் சென்று 'நீ போகக்கூடாது' என்று தடுப்போம். சேரியில் பெரியோர்களாவது பந்துக்களாவது ஒரு நிமிஷமுங்கூட விடமுடியாத ஸ்ரீக்ருஷ்ணனுடைய ஸஹவாஸத்தினின்று தெய்வத்தினால் பிரிக்கப்பட்ட மனமுடைய நமக்கு என்னசெய்யமுடியும்? இத்தகைய நமக்கு மரணத்தினின்றுங்கூடப் பயனில்லை. மரணத்திற்குமேற்பட ஒருகெடுதியும் ஒருவரால் செய்யமுடியாது. ஆகையால் துணிந்த நாம் ஸ்ரீக்ருஷ்ணனிடம்போய்த் தடுப்போம். இந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய ப்ரேமம் நிறைந்த அழகிய புன்னகைகளும் இனிய உரைகளும் விலாஸங்கள் அமைந்த கடைக்கண்ணோக்கமும் ஆலிங்கனங்களும் அளவற்றிருக்கப்பெற்ற ராஸகோஷ்டியில் நாம் பலராத்ரிகளை ஒருக்ஷணம்போலக் கடந்தோம். அப்படிப்பட்ட இந்த ஸ்ரீக்ருஷ்ணனைப் பிரிந்து நாம் பிரிவினாலுண்டான துக்கத்தை எங்ஙனம் கடப்போம்? எவ்விதத்திலும் கடக்கமுடியாது. ஆகையால் நாம் அவனைப் போகவேண்டாமென்று தடுப்பதே நலம். மற்றும் இந்த ஸ்ரீக்ருஷ்ணன் பலராமனோடு கூடி மற்றும் பல கோபர்களாலும் சூழப்பட்டு மாலைவேளையில் பசுக்களின் குளம்புகளால் கிளம்பின தூட்கள் படிந்த முன்னெற்றிமயிர்களுடையவனாகி இடைச்சேரியில் நுழையும்பொழுது வேணுகானஞ்செய்துகொண்டு புன்னகை அமைந்த கடைக்கண்ணோக்கத்தினால் நம்மனத்தைப் பறிப்பானல்லவா? அத்தகையனான இந்த ஸ்ரீக்ருஷ்ணனைப் பிரிந்து நாம் எங்ஙனம் ஜீவித்திருக்கமுடியும்? ஆகையால் அவனைப் போகவேண்டாமென்று தடுப்பதே நலம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் மொழிந்துகொண்டு ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் ஆழங்கால்பட்ட மன

முடையவர்களும் அவனுடைய பிரிவை நினைத்து வருந்துகின்றவர்களுமாகிய கோபிகைகள் வெட்கத்தைத் துறந்து 'கோவிந்த! தாமோதர! மாதவ!' என்று இனிய குரலுடன் உரக்க அழுதார்கள். கோபஸ்த்ரீகள் இங்ஙனம் அழுதுகொண்டிருக்கையில் ஸூர்யோதயம் ஆயிற்று. அப்பால் அக்ரூரன ஸூர்ய உபஸ்தானம் முதலிய தினக்கடனை முடித்துக் கோபர்களிடத்தில் ஸ்னேஹத்தை வெளியிட்டுத் தேரை ஓட்டினான். பிறகு நந்தன் முதலிய கோபர்கள் தயிர் நெய் பால் முதலிய கோரஸங்கள் நிறைந்த குடங்களையும் அளவற்ற உபஹாரங்களையும் எடுத்துக்கொண்டு அந்தத் தேரைப் பின்றொடர்ந்து சென்றார்கள். அப்பொழுது கோபிகைகள் ஸ்ரீக்ருஷ்ணனைத் தொடர்ந்து அவனால் ஆஸ்வாஸபடுத்தப்பட்டு அவனுடைய மறுமொழியை எதிர்பார்த்து அவ்விடத்திலேயே ஒன்று சேர்ந்திருந்தார்கள். யாதவஸ்ரேஷ்டனாகிய ஸ்ரீக்ருஷ்ணன், தான் புறப்பட்டுப் போவதைப்பற்றி அங்ஙனம் பரிதபிக்கின்ற அந்தக்கோபிகளைப் பார்த்துச் சீக்ரம் வருகிறேனென்று தூதர்மூலமாய்ச் சொல்லியனுப்பின வசனங்களால் ஸமாதானப்படுத்தினன். அப்பொழுது ஸ்ரீக்ருஷ்ணனைத் தொடர்ந்து செல்லும்படி அனுப்பப்பட்ட மனமுடைய அக்கோபிகைகள் எதுவரையில் ரதத்தின் த்வஜமும் தூளும் புலப்பட்டுக்கொண்டிருந்தனவோ, அதுவரையில் அதே இடத்தில் சித்ரத்தில் எழுதின ப்ரதிமைகள்போல நின்றிருந்தார்கள். அப்பால் கோவிந்தன் வெகுதூரம் போகையால் அவன் ரதத்தினுடைய தூளுங்கூடக் கண்ணுக்குப் புலப்படாமல் மறைகையில் கோபிகைகள் இனி ஸ்ரீக்ருஷ்ணனை நம்மால் திருப்பமுடியாதென்று அவ்விஷயத்தில் ஆசையற்றவர்களாகி மீண்டுபோய் அன்பனாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய சரித்ரங்களைப்பாடிக்கொண்டு அத

ஞல் சோகமற்றவர்களாகி நாள்களைக் கழித்துக்கொண்டிருந்தார்கள். மன்னவனே! மஹானுபாவனுகிய ஸ்ரீக்ருஷ்ணன பலராமனேடும் அக்ரூரனேடுங்கூடி வாயு வேகம்போன்ற வேகமுடைய ரதத்தில் ஏறிக்கொண்டு பாபங்களைப் போக்கவல்ல யமுனையைச் சேர்ந்த புண்ய தீர்த்தமாகிய ஒரு மடுவண்டையில் சென்றன. ஸ்ரீக்ருஷ்ணன் அம்மடுவில் இறங்கிச் சாணை பிடிக்கப்பட்டு ஜ்வலிக்கின்ற இந்த்ர நீலமணியின் ஒளிபோன்ற ஒளியுடைய ஜலத்தைப் பருகி ஆசமனீயமும் செய்து குவிதல்குவிய லாய் அடர்ந்திருக்கின்ற வ்ருக்ஷங்களின் இடையே சென்று ராமனுடன் ரதத்தில் ஏறிக்கொண்டான் அப்பொழுது அக்ரூரன சத்ருக்களிடத்தினின்று பயந்து அந்த ராமக்ருஷ்ணர்களை ரதத்தினமேல் உட்கார வைத்து விடைபெற்றுக்கொண்டு மாத்யாஹ்னிகக்கடன்களைச் செய்வதற்காக யமுனையின மடுவில இறங்கி அங்கு விதிப்படி ஸ்னானஞ்செய்யத் தொடங்கினுன். அவ்வக்ரூரன் அம்மடுவின் ஜலத்திற்குள் முழுகி அனுதியான பரப்ரஹ்மத்தின ஸ்வரூபத்தை அறிவிக்கிறப்ரணவத்தை ஜபித்துக்கொண்டிருக்கையில் அங்கு அந்த ராமக்ருஷ்ணர்களிருவரும் சேர்ந்திருக்கக் கண்டான். அங்ஙனம் கண்ட அவ்வக்ரூரன 'வஸுதேவ குமாரர்களான அந்த ராமக்ருஷ்ணர்கள் ரதத்தின்மேல் இருக்கின்றர்களல்லவா? இங்கு எப்படி புலப்படுகின்றர்கள்? ஆனல் அவர்கள் ரதத்தினின்று இறங்கி இங்கு வந்திருப்பார்களாயின அங்கு ரதத்தினமேல் இல்லையா என்ன? போய்ப் பார்க்கிறேன' என்று தனக்குள் சிந்தித்து ஜலத்தினின்று மேற்கிளம்பிக் கரையேறிப் பார்த்தான். அங்கும் அவர்கள் முனபோலவே உட்கார்ந்திருக்கக் கண்டு 'ஆனல் நான அவர்களை ஜலத்திற்குள் கண்டது பொய்யோ? மெய்யோ? மீளவும் போய்ப் பார்க்கிறேன்' என்று

சிந்தித்து மீளவும் ஜலத்திற்குள் முழுகினான். அவன் மீளவும் அந்த ஜலத்திற்குள் நாகராஜனாகிய ஆதிசேஷனைக் கண்டான். ஸித்தர்களும் நாகச்ரேஷ்டர்களும் அஸுரர்களும் தலைவணக்கமுற்று அவனைத் துதித்துக் கொண்டிருந்தார்கள். அவ்வாதிசேஷன் ஆயிரந்தலைகளும் ஆயிரம்பணங்களும் ஆயிரங்கிரீடங்களும் அமைந்து கறுத்தவஸ்த்ரந் தரித்துத் தாமரைத்தண்டின் நூல் போல் வெளுத்துப் பல சிகரங்களோடுகூடின வெள்ளி மலைபோன்று விளக்கமுற்றிருந்தான். அவ்வாதிசேஷனுடைய மடியில் நீலமேகம் போல் கறுத்துப் பொன்னிறமான பட்டுவஸ்தரந்தரித்து நான்கு புஜங்கள் அமைந்து தாமரையிதழ்போல மிளிர்ந்து செவ்வரியோடி நீண்ட பெரியகண்களும் தெளிந்தழகிய முகமும் அழகான புன்னகையும் அத்தகைய கண்ணோக்கமும் அழகிய புருவங்களும் உயர்ந்த மூக்கும் அழகான காதுகளும் அழகிய கபோலங்களும் சிவந்த கனிவாயும் முழந்தாள் வரையில் தொங்குகின்ற பருத்தபுஜதண்டங்களும் உயர்ந்த தோள்களும் அகன்ற மார்பும் அம்மார்பில் ஸ்ரீமஹாலக்ஷ்மியும் சங்கம்போல் மூன்று ரேகைகள் அமைந்து அதிகநீளமும் அதிக குறுக்கமு மின்றிப் பருத்த [1] கண்டமும் ஆழ்ந்த கொப்பூழும் மூன்று வரிகள் அமைந்து அரசிலைபோன்ற உதரமும் அகன்ற கடித்தடமும் நிதம்பமும் [2]கரபம்போன்ற திருத்துடைகளும் அழகிய முழந்தாள்களும் நீண்ட கணைக்கால்களும் சிறிது உயர்ந்த குதிகால்களும் அமைந்து அருள்பெருக்குடன் திகழ்கின்ற பரமபுஷருனைக் கண்டான். அவன் சிவந்த கால்நகங்களின் காந்திகளாலும் அழகிய விரல்களும்

---

1. கண்டம் - கழுத்து. 2. கரபம்-மணிக்கட்டு முதல் சுண்டு விரல்வரையிலு முள்ள உள்ளங்கையின் வெளிபாகம்.

கட்டைவிரல்களுமாகிற புதிய இதழ்களாலும் திகழ்கின்ற பாதாரவிந்தங்களுடையவனாகி விலையுயர்ந்த ரத்னங்கள்நிரைநிரையா யிழைக்கப்பட்ட கிரீடமகுடம் தோள்வளை அரைநாண்மாலை யஜ்ஞோபவீதம் முத்துமாலை தண்டை குண்டலம் முதலிய ஆபரணங்களால் திகழ்வுற்று ஒருகையில் தாமரைமலரையும் மற்ற மூன்று கைகளில் சங்கம் சக்கரம் கதை இவைகளையும் தரித்து மார்பில் ஸ்ரீவத்ஸமென்னுந் திருமறுவும் கௌஸ்துபமணியும் திகழப்பெற்று வனமாலையும் அணிந்து மிகவும் அழகனாயிருந்தான். ஸுநந்தர் நந்தர் முதலிய பாரிஷதர்களும் ஸனகாதிமஹர்ஷிகளும் ப்ரஹ்மருத்ராதிதேவஸ்ரேஷ்டர்களும் பண்டிதர்களான மரீசிமுதலிய ப்ராஹ்மணஸ்ரேஷ்டர்களும் பரிசுத்தமான மனமுடையவர்களாகி ஸர்வசேஷியென்றும் பரப்ரஹ்மமென்றும் ஸர்வகாரணனென்றும் ப்ரஜாபதியென்றும் வெவ்வேறு கருத்துடைய வசனங்களால் அவனைத் துதித்துக்கொண்டிருந்தார்கள். ஸம்பத்து புஷ்டி வாக்கு காந்தி கீர்த்தி துஷ்டி இளை ஊர்ஜை வித்யை அவித்யை சக்தி மாயை என்னும் பன்னிரண்டு சக்திகளும் உருவத்துடன் அவனைப் பணிந்து கொண்டிருந்தன. அக்ரூரன் இத்தகைய பரமபுருஷனைக் கண்டு மிகவும் ஸந்தோஷம் அடைந்து மிகுந்த பக்தியுடன்கூடி மயிர்க்கூச்சம்உண்டாகப்பெற்று ப்ரீதியின் மிகுதியால்மனம் உருகிக் கண்கள் பனிக்கப்பெற்றுத் தைர்யத்தை ஏற்றுக்கொண்டு தழதழத்த உரையுடன் மெல்ல மெல்ல ஸ்தோத்ரஞ் செய்தான். முப்பத்தொன்பதாவது அத்யாயம் முற்றிற்று.

### அக்ரூரன் ஸ்ரீக்ருஷ்ணனை ஸ்தோத்ரஞ் செய்தல்.

அக்ரூரன் சொல்லுகிறான் :—ஸமஸ்த ப்ரபஞ்சத்திற்கும் காரணங்களான மஹத்துமுதலிய தத்வங்க

ளுக்குக் காரணனும் நாராயணனென்று அஸாதாரணமான நாமம் பெற்றவனும் ஆதிபுருஷனும் (தனக்குத் தானே காரணமாகி வேறுகாரணமற்றவனும்) விகாரங்களற்றவனுமாகிய உன்னை நமஸ்கரிக்கின்றேன். இந்த ப்ரபஞ்சமெல்லாம் எவனிடத்தினின்று உண்டாயிற்றோ, அப்படிப்பட்ட ப்ரஹ்மதேவன் உன்னுடைய நாபியாகிற தடாகத்தில் பூத்த தாமரை மொக்கினின்று உண்டானான். (வ்யஷ்டிஸ்ருஷ்டியை ப்ரஹ்மதேவனை மூலமாகவும் ஸமஷ்டிஸ்ருஷ்டியை நீயே நேராகவும் நடத்துகின்றனையாகையால் காரணங்களுக்கும் காரணன் நீயே யென்பதில் ஸந்தேஹம் உண்டோ?) ஜகத்ஸ்ருஷ்டிக்குக் காரணங்களான பூமி ஜலம் அக்னி வாயு ஆகாசம் ஆகிய பஞ்சபூதங்களும் இவற்றிற்குக் காரணமான அஹங்காரமும் அதற்குக் காரணமான மஹத்தும் அதற்குக் காரணமான மூலப்ரக்ருதியும் ஸாத்விகாஹங்காரத்தின் கார்யங்களான ஜ்ஞானேந்த்ரிய கர்மேந்த்ரியங்களும் மனமும் அவற்றிற்கு அபிமானிகளான தேவதைகளும் அவ்விந்த்ரியங்களின் விஷயங்களானசப்தாதிகளும் ஆகிய இவையெல்லாம் உனக்குச்சரீரங்கள். (நீ மூலப்ரக்ருதியைச் சரீரமாகக்கொண்டு மஹத்து முதலிய தத்வங்களைச் சரீரமாகவுடைய நீயாய் விரிகின்றனையாகையாலும், மூலப்ரக்ருதியையும் மஹத்து முதலியவற்றையும் சரீரமாகக்கொண்டு அவற்றை நியமித்துக்கொண்டிருக்கின்றனையாகையாலும் ஜகத்திற்கு உபாதானகாரணம் நிமித்தகாரணம் ஆகிய இரண்டு காரணங்களும் நீயே.) உன் சரீரங்களான மூலப்ரக்ருதி முதலியவை ஜடங்களாகையால் அந்தராத்மாவான உன ஸ்வரூபத்தை அறியாதிருப்பதுபோல ஜ்ஞானஸ்வரூபர்களான ஜீவாத்மாக்களும் உன்னை அறிகிறதில்லை. ஏனென்றால், அவர்கள் ஆத்மாவல்லாத தேஹத்தை ஆத்மாவாகவும் உனக்குப் பரதந்த்ரர்களான தங்களை ஸ்வ

தந்த்ரர்களாகவும் ப்ரமித்துத் தேஹத்தைக்காட்டிலும் விலக்ஷணர்களும் உனக்குச் சேஷப்பட்டிருப்பவர்களு மான தங்கள் ஸ்வரூபத்தையே அறிகிறதில்லை. இனி உன்னை எங்ஙனம் அறியப்போகிறார்கள்? ப்ரஹ்மதேவ னுங்கூடத் தன்சரீரத்திற்குக் காரணங்களான ஸத்த்வ ரஜஸ்தமோ குணங்களால் தொடரப்பட்டு ப்ரக்ருதி யின் குணங்களான ஸத்த்வரஜஸ்தமஸ்ஸுக்களைக் காட்டிலும விலக்ஷணனும் அவற்றிற்கு நியாமகனுமாகிய உன் ஸ்வரூபத்தை அறிகிறதில்லை. மற்ற ஜீவாத்மாக்கள் எங்ஙனம் அறிவார்கள்? (ஆனால் ஒருவரும் அறியாரக ளாயின், பரமாத்மஸ்வரூபம் முயற்கொம்புபோலத் ததேயாகுமென்று சங்கிக்கவேண்டாம். தேஹாத்மாபி மானம் முதலிய அவிவேகமுடையவர்களின கட்கண் ணுக்கு அறியக்கூடாதவனாயினும் யோகத்தினால் பரி சுத்தமான மனமுடையவர்களுக்கு அறியத்தகுந்தவ னே.) சில யோகிகள் மஹாபுருஷனும் ஸர்வேச்வரனு மாகிய உன்னையே நேரில் உபாஸிக்கிறார்கள். சில ஸா துக்கள் ஸூர்யன இந்த்ரன் முதலிய தேவதைகளுக்கு அந்தராத்மாவான உன்னையும், சிலர் தங்கள் சரீரங்க ளின் அவயவங்களான கண் ஹ்ருதயம் முதலிய இடங் களில் இருக்கின்ற உன்னையும், சிலர் ஸமஸ்த பூதங்களி லும் அந்தராத்மாவாயிருக்கின்ற உன்னையும் உபாஸிக் கின்றார்கள். யாகாதிகர்மங்களில் மனவிருப்ப முற்ற சில அந்தணர்கள் உன சரீரங்களான இந்திரன் முதலிய பற்பல தேவதைகளின் நாமங்களையுடைய வேதத்தின் பூர்வபாகமாகிற வித்யையினால் அறிவிக்கப்பட்ட பல யாகங்களால், அந்தத் தேவதைகளுக்கு அந்தராத்மா வாகி அவர்களைச் சரீரமாகவுடைய உன்னை ஆராதிக் கின்றார்கள். பகவானுக்குச் சேஷப்பட்டிருக்கையையே முக்ய ரஸமாகவுடைய ஆத்மஸ்வரூபத்தின் உண்மை

யை அறிந்த சில ஜ்ஞானிகள் அஹங்கார மமகாரங்களை உட்கொண்டிருக்கையால் ஆத்மஸ்வரூபத்திற்கு இணங்காதவைகளான கர்மங்களையெல்லாம் துறந்து சப்தாதி விஷயங்களில் இவை போக்யங்களென்னும் புத்தி ஒழியப்பெறுகையாகிற உபசாந்தியை அடைந்து ஜ்ஞானஸ்வரூபனான உன்னை ஜ்ஞானயோகத்தினால் ஆராதிக்கின்றார்கள். நீ மொழிந்த பாஞ்சராத்ராகமத்தில் சொன்னபடி தாபம் முதலிய பஞ்சஸம்ஸ்காரங்களால் பரிசுத்தமான தேஹங்களை யுடையவர்களும் உன்னைப் பற்றின அறிவு மாறாதிருக்கப்பெற்றவர்களுமான சில பெரியோர்கள் வ்யூஹவிபவங்களால் பல மூர்த்தியும் பரமாத்மரூபத்தினால் ஏகமூர்த்தியுமாகிய உன்னைப் பாஞ்சராத்ரத்தில் சொல்லப்பட்ட தர்மங்களால் நேராக ஆராதிக்கின்றார்கள். ஷாட்குண்ய பூர்ணனே! வேறு சிலர் காபாலிகன காலாமுகன சைவன பாசுபதன முதலிய பலவகையான ஆசார்யர்களால் ஏற்பட்ட ஆகாரபேதத்தையுடையதும் சிவனால் மொழியப்பட்டதுமாகிய சைவம் முதலிய ஆகமத்தில் சொல்லப்பட்ட விதியின்படி சிவரூபனான உன்னையே ஆராதிக்கின்றார்கள். (அவர்களுக்கு உன்னையே ஆராதிக்கிறோமென்கிற எண்ணம் இல்லாமற் போயினும் அவர்கள் செய்யும் உபாஸனை உன்னிடத்திலேயே வந்து முடிகின்றது. ஆனால் அந்த உபாஸனம் விதியை முன்னிட்டுக்கொண்டிருப்பதன்று; ஆனது பற்றியே நச்வரமான பலனைக் கொடுக்குமன்றி அழிவில்லாத பரமபுருஷார்த்தமான முக்தியைக் கொடுக்காது.) ப்ரபூ! தேவதாந்தரபக்தர்கள் பரமாத்மாவான உன்னைக் காட்டிலும் வேறுபட்ட அந்தத் தேவதைகளிடத்தில் மன விருப்பமுற்று அவர்களை உபாஸிக்கின்றார்கள். ஆயினும் அவர்கள் அனைவரும் ஸமஸ்ததேவதைகளை

யும் சரீரமாக வுடையவனுகையால் ஸமஸ்ததேவதா ஸ்வரூபனும் அவர்களுக்கு நியாமகனுமாகிய உன்னையே உபாஸிக்கின்றூர்கள். ஆகையால் அவர்கள் செய்யும் உபாஸனைகள் உன்னைச் சேர்ந்தவைகளே. ப்ரபூ! பர்வதங்களினின்று உண்டான நதிகளெல்லாம் மேகம் மழை பெய்கையால் வெள்ளம் நிறைந்தவைகளாகி ஸமுத்ரத்தில் போய் விழுவதுபோல, அவரவர்கள் செய்யும் உபாஸனங்களெல்லாம் கடைசியில் உன்னையே அடைகின்றன. ஸத்த்வம் ரஜஸ்ஸு தமஸ்ஸு என்னும் இவை உன் சரீரமாகிய ப்ரக்ருதியின் குணங்கள். ஸ்தாவரம் முதல் ப்ரஹ்மதேவன் வரையிலுள்ள ப்ராக்ருதங்களான ஸமஸ்தவஸ்துக்களும் அக்குணங்களில் கோக்கப் பட்டவைபோன்றிருக்கின்றன. (ப்ரஹ்மன் முதலிய ஜீவாத்மாக்களால அதிஷ்டானஞ் செய்யப்பட்ட தேஹங்களெல்லாம் உன்சரீரமான குணமயப்ரக்ருதியின் கார்யங்களாகையால் உனக்கு உட்பட்ட ஸத்தாதிகளை யுடையவை.) நீ ப்ரஹ்மன் முதலிய ஸமஸ்த ஜீவாத்மாக்களுக்கும் அந்தராத்மாவாயிருப்பவன். நீ அவர்களைச் சரீரமாக வுடையவனுயினும் அவர்களைப்போல் தேஹத்தையே ஆத்மாவாக ப்ரமிக்குந்தன்மையனல்லே. நீ எல்லா அறிவுகளையும் நேரே அறிகின்றவனுகையால் உன்னிடத்தில் தேஹாத்மாபிமானம் முதலிய அவிவேகங்களுக்கு இடமில்லே. தேவர் மனுஷ்யர் திர்யக்கு என்னும் தேஹங்களையுடைய ஆத்மாக்களுக்கு ஸத்த்வாதி குணங்களின் ப்ரவாஹரூபமான இந்த ஸம்ஸாரம் உன்னுடைய மாயையினுல் ஓயாமல் நடந்து வருகின்றது. அத்தகைய உனக்கு நமஸ்காரம். அக்னி உன்முகம். பூமி உன்பாதம். ஸூர்யன் உன்னுடைய நேத்ரம். ஆகாசம் உன்னுடைய நாபி. திசைகள் உன்செவி. ஸத்ய லோகம் உன் சிரஸ்ஸு. இந்த்ராதி தேவதைகள் உன்

புஜங்கள். ஸமுத்ரங்கள் உன் வயிறு. காற்று உன் ப்ராணனும் பலமும். வ்ருக்ஷங்களும் ஓஷதிகளும் உன் ரோமங்கள். மேகங்கள் உன் தலைமயிர்கள். பர்வதங்கள் உன் எலும்புகள். பரமனே! இரவும் பகலும் உன் இமைகள். ப்ரஜாபதி உன்னுடைய ஆண்குறி. மழை உன் வீர்யம். இவை இங்ஙனம் உன்னால் படைக்கப்பட்டன. மற்றும், யோகிகள் அக்னி முதலியவற்றை உன் முகம் முதலிய அவயவங்களாக த்யானிக்கின்றார்கள். என்றும் மாறாமல் ஒருவாறாயிருக்கும் ஸ்வரூபமுடையவனே! பல ஜீவாத்மாக்களால் நிறைந்திருப்பவைகளும் இந்த்ராதி லோகபாலர்களோடு கூடினவைகளுமாகிய ஸமஸ்த லோகங்களும் பரிசுத்தமான மனத்தினால் அறியத்தகுந்தவனும் பரமபுருஷனுமாகிய உன்னிடத்தில் படைக்கப்பட்டு ஜலத்தில் ஸூக்ஷ்மஜந்துக்கள் ராசிராசியாய் ஸஞ்சரிப்பதுபோலவும் அத்திப்பழத்திற்குள் கொசுகுகள்போலவும் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கின்றன. நீ விளையாட்டிற்காக அநந்தாநந்த உருவங்களை ஏற்றுக்கொள்கின்றனையே, அவ்வுருவங்களை அனுஸந்திக்கையால் ஆத்யாத்மிகம் முதலிய தாபங்களையெல்லாம் துறந்து ரஸம் அறிந்த ஜனங்கள் உன்புகழைப் பாடுகின்றார்கள். காரணத்திற்காக மத்ஸ்ய உருவங்கொண்டு ப்ரளய ஸமுத்ரத்தில் ஸஞ்சரித்த உனக்கு நமஸ்காரம். ஹயக்ரீவாவதாரஞ் செய்து மதுகைடபர்களை ஸம்ஹரித்த உனக்கு நமஸ்காரம். பெரியகூர்ம உருவந்தரித்து மந்தர பர்வதத்தைத் தாங்கின உனக்கு நமஸ்காரம். வராஹ உருவங்கொண்டு பூமியை மேலுக்கெடுக்கையாகிற விளையாடலை நடத்தின உனக்கு நமஸ்காரம். அற்புதமான ஸிம்ஹ உருவங்கொண்டு ஸாதுலோகங்களின் பயத்தைப் போக்கின உனக்கு நமஸ்காரம். வாமனாவதா

ரஞ் செய்து மூன்று லோகங்களையும் அளந்த உனக்கு நமஸ்காரம். ப்ருகுவம்சத்தவர்களில் சிறந்த பரசுராமஞக அவதரித்துக் கொழுத்த க்ஷத்ரிய குலமாகிற வனத்தைச் சேதித்த உனக்கு நமஸ்காரம். ரகுவம்சத்தில் ஸ்ரீராமஞக அவதரித்து ராவணனைக் கொன்ற உனக்கு நமஸ்காரம். வாஸுதேவனென்றும் ஸங்கர்ஷணனென்றும் ப்ரத்யும்னனென்றும் அநிருத்தனென்றும் நான்கு வ்யூஹாவதாரங்கள் செய்த உனக்கு நமஸ்காரம். ஸாதுக்களைப் பாதுகாக்கும் பொருட்டு இப்பொழுது ராமக்ருஷ்ணர்களாக அவதரித்த உனக்கு நமஸ்காரம். புத்தாவதாரஞ் செய்து வேதம் அப்ரமாணமென்று உபதேசித்து தைத்யர்களையும் தானவர்களையும் மதிமயங்கச் செய்தவனும் பரிசுத்தனுமாகிய உனக்கு நமஸ்காரம். கல்கியவதாரஞ் செய்து ம்லேச்சர்களைப்போன்ற க்ஷத்ரியர்களின் குலத்தை அழிக்கப்போகிற உனக்கு நமஸ்காரம். ஷாட்குண்ய பூர்ணனே! இவ்வுலகத்திலுள்ள ஸமஸ்த ஆத்மாக்களும் உன்னுடைய மாயையிஞல் மதிமயங்கி அஹங்கார மமகாரங்களாகிற அஜ்ஞானத்திஞல் சப்தாதி விஷயங்களை நிறைவேற்றிக் கொடுப்பவைகளான கர்மமார்க்கங்களில் சுழல்கின்றனர். நானும் ஸ்வப்னத்திற்கண்ட வஸ்துக்கள்போல அநித்யங்களான பிள்ளை மனை மனைவி பணம் பந்துக்கள் முதலியவற்றை நித்யமென்று ப்ரமித்து அவற்றில் உழன்றுகொண்டிருக்கின்றேன். நான் அநித்யமான வஸ்துக்களை நித்யங்களென்றும் ஆத்மாவல்லாத தேஹத்தை ஆத்மாவென்றும் துக்கரூபங்களான சப்தாதி விஷயங்களை ஸுகங்களென்றும் ப்ரமித்துச் சப்தாதிவிஷயஸுகங்களைப்பற்றி நேருந் துக்கங்களையும் ஸுகமாகவே நினைத்து அஜ்ஞானத்திஞல் சூழப்பட்டு ஆத்மாவுக்கு ப்ரியஞன உன்னை

அறியாதிருக்கின்றேன். ஓரிடத்தில் ஜலம் இருப்பினும் அதினின்று முளைத்த புற்களால் அது மறைக்கப்பட்டிருக்கையால் அங்கு ஜலம் இருக்கிறதென்பதை அறியாமல் ஜலம்போலத் தோற்றுகிற கானலைத் தேடியோடுவதுபோல, நானும் மேம்பட்ட புருஷார்த்தமும் அதற்கு ஸாதனமுமாயிருக்கின்ற உன்னைத் துறந்து தேஹாதிகளில் மனஞ் செல்லப்பெற்றிருக்கின்றேன். சப்தாதி விஷயங்களில் தாழ்ந்த மதியுடைய நான் காமத்தினாலும் கர்மத்தினாலும் கலக்கப்பட்டு வலிவுடையவைகளான இந்த்ரியங்களால் மூலைக்குமூலை இழுக்கப்படுவதுமாகிய மனத்தைத் தடுக்க முடியாதிருக்கின்றேன். இத்தகைய நான் அஸத்துக்களுக்கு அடைய முடியாததான உன பாதாரவிந்தத்தைச் சரணம் அடைந்தேன். அதுவும் உன்னுடைய அருளென்றே நினைக்கின்றேன். ஜகதீசனே! (ஸமஸ்த ப்ராணிகளுக்கும் அந்தராத்மாவான நீயே என்னைத் தூண்டி உன்னைச் சரணம் அடையும்படி செய்தனை. இங்ஙனம் நீ அருள் செய்யாத பக்ஷத்தில் எனக்கு அந்த எண்ணமே உண்டாகாது, தாமரை யுந்தியனே! இவனை ஸம்ஸாரத்தினின்று கரையேற்ற வேண்டுமென்று நீ எப்பொழுது அருள் புரிகின்றனையோ, அப்பொழுதுதான் சேதனனுக்கு உன்னைப் பணிய வேண்டுமென்னும் புத்தி உண்டாகின்றது. கேவலஜ்ஞானாநந்த ஸ்வரூபனும் எல்லோர்க்கும் ஜ்ஞான ப்ரதானஞ் செய்பவனும் ப்ரக்ருதிபுருஷர்களுக்கு நியாமகனும் அளவற்ற ஸ்வரூப ஸ்வபாவங்களுடையவனும் அளவற்ற சக்திகளுடையவனுமாகிய உனக்கு நமஸ்காரம். ஸமஸ்த பூதங்களுக்கும் ஆதாரமாகி வாஸுதேவனென்னும் பெயர்பெற்ற உனக்கு நமஸ்காரம். இந்த்ரியங்களுக்கு நியாமகனே! உனக்கு நமஸ்காரம். வேறுகதி

யற்று உன்னையே சரணம அடைந்த என்னைப் பாது காப்பாயாக. நாற்பதாவது அத்யாயம் முற்றிற்று.

ஸ்ரீ க்ருஷ்ணன் மதுராபுரியில் நுழைத லும், வண்ணான் கூனி முதலியவர்களை அனுக்ரஹித்தலும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஷாட்குண்ய பூர்ணனு கிய ஸ்ரீக்ருஷ்ணன் இங்ஙனம் துதிசெய்கின்ற அக்ரூர னுக்கு ஜலத்தில் தன்னுடைய திவ்ய உருவத்தைக் காட்டி, நடன ஆட்டமாடுவதற்காக ஏற்றுக்கொண்ட வேஷத்தைக் காட்டி மறைப்பதுபோல மறைத்தான். அந்த அக்ரூரனும் அவ்வுருவம் மறைந்ததைக் கண்டு ஜலத்தினின்று மேல்கிளம்பி த்வரையுடன் அவஶ்யமாக அனுஷ்டிக்க வேண்டிய மாத்யாஹ்நிகம் முதலிய நித்ய கர்மத்தை யெல்லாம் செய்து முடித்து வியப்புடன ரதத் தின்மேல் ஏறினான். ஸ்ரீ க்ருஷ்ணன் அவ்வக்ரூரனைப் பார்த்து 'அண்ணு! நீர ரதத்திலாவது பூமியிலாவது ஆகாயத்திலாவது ஜலத்திலாவது ஏதேனும் அற்புதம் கண்டீரா? உம்மைப் பார்த்தால் ஏதோ ஒரு அற்புதம் கண்டவர்போல் தோற்றுகிறது' என்று வினவினான். அதைக்கேட்டு அக்ரூரன் ஸ்ரீ க்ருஷ்ணனைப்பார்த்துப் பூமியிலாவது ஆகாயத்திலாவது ஜலத்திலாவது எவ் வளவு ஆச்சர்யங்கள் உண்டோ அவை யெல்லாம விஶ்வரூபனுகிய உன்னிடத்தில் இருக்கின்றன. அத்த கைய உன்னைக் காண்கின்ற நான என்ன கண்டேன்? உன்னிடத்தில் இல்லாத அற்புதம் ஒன்றையும் நான் காணவில்லை. அளவற்ற ஸ்வரூப ஸ்வபாவங்களுடையவ னே! எவனிடத்தில் எல்லா அற்புதங்களும் அமைந் திருக்கின்றனவோ, அத்தகைய உன்னைக் கண்ட நான்

பூமியிலாவது ஆகாயத்திலாவது ஜலத்திலாவது என்ன அற்புதம் கண்டேன்? உன்னை யொழிய வேறொரு அற்புதமும் நான் காணவில்லை' என்று மொழிந்து காந்தினியின் புதல்வனாகிய அவ்வக்ரூரன் ரதத்தை ஓட்டிக்கொண்டு சென்று மாலைவேளையில் ராமனையும் க்ருஷ்ணனையும் மதுரையில் சேர்த்தான். மன்னவனே! வழியில் ஆங்காங்கு க்ராமத்து ஜனங்கள் வந்து ராமக்ருஷ்ணர்களைக் கண்டு மிகவும் ஸந்தோஷம் அடைந்து வைத்த கண்ணை வாங்காமல் பார்த்துக்கொண்டே யிருந்தார்கள். அக்ரூரன் ராமக்ருஷ்ணர்களை மதுரையில் கொண்டு சேர்ப்பதற்குள்ளாகவே நந்தன் முதலிய கோபர்கள் உபவனத்தில் சென்று ஸ்ரீராமக்ருஷ்ணர்கள் வருவதை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். மஹானுபாவனும் ஜகதீச்வரனுமாகிய ஸ்ரீ க்ருஷ்ணன் அவர்களுடன் கலந்து தன் கையினால் வணக்கமுடைய அக்ரூரனை கையைப் பிடித்துப் புன்னகை செய்துகொண்டு மொழிந்தான்.

ஸ்ரீ க்ருஷ்ணன் சொல்லுகிறான்:—நீர் தேரை ஓட்டிக்கொண்டு பட்டணத்திற்குள் நுழைந்து முன்னதாகவே மாளிகைக்குப் போய்ச் சேருவீராக. நாங்கள் இங்கு இறங்கியிருந்து நாளை உதயத்தில் உங்கள் பட்டணத்தைப் பார்க்க வருகின்றோம்.

அக்ரூரன் சொல்லுகிறான்:—ப்ரபூ! உங்களை விட்டு நான் தனியே பட்டணத்திற்குள் நுழையமாட்டேன். நாதா! உன்பக்தனாகிய என்னைக் கைவிடலாகாது. நீ பக்தர்களிடத்தில் வாத்ஸல்ய முடையவனல்லவா? ஆகையால் என்னைத் தனியே விடவேண்டாம். இந்த்ரியங்களால் விளையும் அறிவுகளுக்கு எட்டாத பரமனே! நீயும் இப்பொழுதே என்னுடன் புறப்பட்டு வருவாயாக. நா

மெல்லோரும் போவோம். தேவஸ்ரேஷ்டனே! உன் தமையனான பலராமனோடும் கோபாலர்களோடும் நண்பர்களோடும் வந்து நீ எங்கள் க்ருஹத்தை நாதனோடு கூடினதாகச் செய்யவேண்டும். எந்தப் பாததூளியை அலம்பின ஜலத்தைப் பருகினும் சிரத்தில் தரிப்பினும் எங்கள் பித்ருக்களும் அக்னிகளும் தேவதைகளும் த்ருப்தி அடைகின்றார்களோ, அத்தகைய உன்பாத தூளியால் நீ க்ருஹஸ்தர்களான எங்கள் க்ருஹத்தைப் புனிதஞ் செய்வாயாக. பலிசக்ரவர்த்தி உனபாதங்களை அலம்பிப் புகழத்தகுந்தவனும் பெருங்குணங்களுடையவனுமானான்; மற்றும் உன் ஸங்கல்பத்தினால் நிகரில்லாத ஐஸ்வர்யத்தையும் அனன்ய ப்ரயோஜனர்களான உன் பக்தர்கள் பெறும்படியான பரமகதியையும் பெற்றான். உன்பாதாரவிந்தங்களை அலம்பினஜலம் மிகவும் பரிசுத்தமானது; அதுவே கங்கையாகப் பெருகி மூன்று லோகங்களையும் புனிதஞ் செய்தது. ருத்ரன் அந்த ஜலத்தைத் தன்தலையால் தரித்தான. மற்றும், அந்த ஜலத்தினால் ஸகர புத்ரர்கள் ஸ்வர்க்கம் அடைந்தார்கள். ப்ரஹ்மன முதலிய தேவர்களுக்கும தேவனே! ஜகத்திற்கெல்லாம நாதனே! உன்னைக் காதால் கேட்கினும் வாயால் சொல்லினும் அவர்களுக்கு அவை புண்யத்தை விளைக்கும. (புண்யமான ஸ்ரவண கீர்த்தனங்களை யுடையவனே!) யாதவர்களில சிறந்தவனே! சிறப்புடைய ப்ரஹ்மாதிகளாலும் புகழப்படும் பரமனே! சிறந்த புகழுடையவனே! (உத்தமஸ்லோகனே!) நாராயணா! உனக்கு நமஸ்காரம்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—யாதவர்களின் குலத்திற்கெல்லாம் த்ரோஹம் செய்கின்ற கம்ஸனைக்கொன்ற பின்பு தமையனுடன் கூடி உம்முடைய க்ருஹத்திற்கு

நான் வரப்போகிறேன். மற்ற நண்பர்களுக்கும் ப்ரியஞ் செய்யப்போகிறேன்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் பகவானால் மொழியப்பட்ட அவ்வக்ரூரன் சிறிது மனவருத்த முற்றவனாகவே மதுரைப்புரியுள் நுழைந்து ராமக்ருஷ்ணர்களை அழைத்துக்கொண்டு வந்தமையாகிற தான் செய்த கார்யத்தைக் கம்ஸனுக்குத் தெரிவித்துத் தன்க்ருஹத்திற்குச் சென்றான். பிறகு மற்றைநாள் காலையில் மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் பலராமனோடு கூடிக் கோபர்களால் சூழப்பட்டு மதுரைப் புரியைப் பார்க்க விரும்பி அதற்குள் நுழைந்தான். ஸ்படிகரத்னங்களால் இயற்றின உயர்ந்த கோபுரவாசற்களும் மற்ற வாசற்களும் அமைந்து ஸ்வர்ணத்தினால் இயற்றப்பட்ட பெரிய கதவுகளும் தோரணங்களும் செம்பு பித்தளை இவைகளால் இயற்றப்பட்ட தான்யசாலை முதலிய கொட்டாரங்களும் உத்யானங்களும் அழகிய உபவனங்களும் நிறைந்து அகழிகளால் நுழைய முடியாததுமான அம் மதுராபுரியை ஸ்ரீக்ருஷ்ணன் கண்ணுற்றான். அந்நகரம், ஸ்வர்ணமயமான நாற்சந்தி வீதிகளாலும் வீட்டின புழைக்கடைத் தோட்டங்களாலும் அம்மட்டன வண்ணான கருமான தட்டான முதலிய கைத்தொழிலர்களின இருப்பிடங்களாலும் மற்றும் பல க்ருஹங்களாலும அலங்கரிக்கப்பட்டு வைடூர்யம் வஜ்ரம் ஸ்படிகம் இந்த்ரநீலம் பவழம் முத்து மரகதம் இவை இழைக்கப் பெற்ற கொடுங்கைகளிலும் திண்ணைகளிலும சாளரங்களின் ரந்த்ரங்களிலும் கல்படுத்த பூமிகளிலும் உட்கார்ந்து புறாக்களும மயில்களும் குலாவப்பெற்று ராஜமார்க்கங்களும் கடைத்தெருவுகளும் நாற்சந்திவீதிகளும் தெளித்து ஆங்காங்குப் புஷ்பங்களும் தளிர்

முளைகளும் பொரிகளும் அக்ஷதைகளும் இறைத்துத் தயிர் சந்தனம் இவை பூசின பூர்ணகும்பங்களாலும் புஷ்பங்களாலும் கொடிவிளக்குகளாலும் தளிர்களாலும் குலைகளோடு கூடின வாழைமரங்களாலும் அத்தகைய பாக்கு மரங்களாலும் த்வஜங்களாலும் பட்டு வஸ்த்ரங்களாலும் அலங்கரிக்கப்பட்ட வீட்டுவாசற்களையுடையதுமாகி மிகவும் அழகாயிருந்தது. (அந்நகரத்தில் வீட்டுவாசல்கள் தோறும் திண்ணைகளில் இருபுறத்திலும் [1] தண்டிலங்களைப் பரப்பி அவற்றின்மேல் பூர்ணகும்பங்களை அமைத்து அவற்றில் தயிரையும் சந்தனத்தையும் பூசி அதனமேல் அக்ஷதையை அப்பி அந்தப் பூர்ணகும்பங்களைச் சுற்றிப் புஷ்பங்களை இறைத்துக் கும்பங்களின் கழுத்தில் பட்டு வஸ்த்ரங்களைச் சார்த்தி அவற்றின்வாயில் மாமுதலிய தளிர்களைச் சேர்த்து அந்த மாவிலைகளின் இடையில் தீபங்களை வரிசைவரிசையாக ஏற்றிவைத்து அருகாமையில் குலையோடு கூடின வாழைமரங்களும் பாக்குமரங்களும் த்வஜங்களும் தோரணங்களும் நாட்டப்பட்டிருந்தன). இத்தகைய அந்த மதுரைப்புரியுள் நண்பர்களோடு கூடி ராஜமார்க்கத்தினுல் நுழைகின்ற வஸுதேவ குமாரர்களான அந்த ராமக்ருஷ்ணர்களைப் பார்க்கப் பட்டணத்து மடந்தையர்கள் விரைந்தோடிவந்து ஆங்காங்கு நிறைந்தார்கள் மன்னவனே! சிலர் மிக்க ஆவலுடன் உப்பரிகைகளின்மேல் ஏறினார்கள். சிலர் வேகத்தினால் விவேகமற்று ஆடைகளையும் ஆபரணங்களையும் விபரீதமாகத் தரித்து வந்தார்கள். சிலர் இரட்டையாகத் தரிக்கவேண்டிய கைவளை முதலியவற்றில் ஒன்றை அணிந்து மற்றொன்றை மறந்து வந்தார்கள் சிலர் ஒரு காதில் ஓலையும் ஒரு காலில் தண்டையும் அணிந்து ஒரு கண்ணுக்கு மையிட்டு இரண்டாங்கண்ணுக்கு மையிட மறந்துவந்தார்

1. தண்டிலம்-அரிசி.

கள். போஜனஞ் செய்து கொண்டிருந்த சிலர் அதை அப்படியே துறந்து ஸ்ரீக்ருஷ்ணனைக் காண்கையாகிற மஹோத்ஸவத்தை அனுபவிக்க ஓடிவந்தார்கள். எண்ணெய் தேய்த்துக்கொண்டிருந்த சிலர் ஸ்நானஞ் செய்யாமல் அப்படியே ஓடிவந்தார்கள். தூங்கிக்கொண்டிருந்தவர் சப்தத்தைக் கேட்டுத் திடீரென்று எழுந்து வந்தார்கள். குழந்தைக்கு முலை கொடுத்துக் கொண்டிருந்த தாய்மார்கள் அக்குழந்தைகளை விட்டு விரைந்தோடினார்கள் மதித்த யானையின் நடைபோன்ற நடை யுடையவனும் ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு மனக்களிப்பை விளைப்பவனுமாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணபகவான தன் திறமைகளை வெளியிடவல்ல லீலைகளாலும் புன்னகைகளாலும் கண்ணோக்கங்களாலும் அப்பட்டணத்து மடந்தையர்களின கண்களுக்கு மஹாநந்தத்தை விளைத்துக் கொண்டு அவர்களின மனங்களைப் பறித்தான. சத்துருக்களை அழிப்பவனே! அந்த ஸ்ரீக்ருஷ்ணனை வெகுநாளாகக் கேள்விப்பட்டிருந்தார்களாகையால் அவனைத் தொடர்ந்த மனமுடைய அப்பட்டணத்து மடந்தைகள் அம்மஹானுபாவனைக் கண்டு அவனுடைய கண்ணோக்கத்தினாலும் புனனகையாகிற அம்ருதப்பெருக்கினாலும் வெகுமதி கிடைக்கப் பெற்றுக் கண்வழியால் மனத்தில் புகுந்திருக்கின்ற ஆநந்தமூர்த்தியாகிய அப்பரமபுருஷனை அணைத்து உடம்பெல்லாம் மயிர்க்கூச்சம் உண்டாகப்பெற்று நெடுநாளாக அவனைக் காண நேராமையாலுண்டான அளவற்ற மனவருத்தத்தைத் துறந்தார்கள். ஸந்தோஷத்தின் மிகுதியால் தாமரை மலர் போன்ற முகம் மலரப்பெற்ற அம்மடந்தையர்மணிகள் உப்பரிகைகளின் நுனிமேல் ஏறிப் புஷ்ப ஸமூஹங்களை ராமக்ருஷ்ணர்களின்மேல் இறைத்தார்கள். ஆங்காங்கு

ப்ராஹ்மணபத்தினிகள் மிகவும ஸந்தோஷமுற்றுத் தயிர் அக்ஷதை ஜலம்நிறைந்த குடங்கள் பூமாலை சந்தனம் இவைகளாலும் உபஹாரங்களாலும் ராமக்ருஷ்ணர்களைப் பூஜித்தார்கள். அப்பட்டணத்து மடந்தையர்கள ஸ்ரீக்ருஷ்ணனைப் பார்த்து 'ஆ! கோபிகைகள்என்ன பெருந்தவஞ் செய்தார்களோ? ஏனென்றால், அந்தக் கோபிகைகள் மனுஷ்ய லோகத்திற்கு மஹோத்ஸவத்தை விளைக்கின்ற இந்தராமக்ருஷ்ணர்களைக் கண்டு களிக்கின்றார்களல்லவா? இது ஸாதாரணமாய்க் கிடைக்கக்கூடியதன்றல்லவா? ஆகையால் அவர்கள் பெரிய தவஞ் செய்திருக்கவேண்டும்' என்று ஒருவர்க்கொருவர் மொழிந்து கொண்டார்கள். அப்பொழுது மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன வழியில் வஸ்த்ரங்களை வெளுப்பவனும சாயந்தோய்ப்பவனுமாகிய ஒரு வண்ணான் வரக்கண்டு 'ஓ வண்ணானே! மேன்மைக் குரியவர்களான எங்களுக்குத தகுந்த வஸ்த்ரங்களைக் கொடுப்பாயாக. கொடுப்பாயாயின் உனக்கு மேலான நன்மை உண்டாகும் இவ்விஷயத்தில் ஸந்தேஹம்இல்லை' என்று சலவை செய்து அற்புதமாயிருக்கின்ற வஸ்த்ரங்களைத் தனக்குக் கொடுக்கும்படி அவ்வண்ணானை வேண்டினான் எல்லாவற்றிலும் பூர்ணகாமனான பகவானால் வேண்டப்பெற்ற அவ்வண்ணான் ராஜாவான கம்ஸனுடைய ப்ருத்யனும் கொடிய மதமுடையவனுமாகையால் அங்ஙனம கேட்டதற்குக் கோபமுற்று 'அட துர்மார்க்கர்களே! பர்வதத்திலும வனத்திலும் ஸஞ்சரிக்கின்ற நீங்கள இதுகைய வஸ்த்ரங்களைத்தான உடுத்துக் கொள்கின்றீர்களோ? உங்கள் அதிகாரத்தை ஆலோசிக்காமல் ராஜாக்களுக்கு உரிய வஸ்துக்களை விரும்புகிறீர்களே. இதென்ன மதிகேடு. மூடர்களே! விரைந்தோடிப் போவீர்களாக.

ஜீவிக்கவேண்டுமென்னும் விருப்பம் உளதாயின் இங்ஙனம் ப்ரார்த்திக்கவேண்டாம். இங்ஙனம் ப்ரார்த்திப்பீர்களாயின், ராஜபுருஷர்கள் துஷ்டர்களான உங்களைக் கட்டியடித்து உங்கள் ஸொத்தையும் பிடுங்கிக்கொள்வார்கள்' என்று எடுத்தெறிந்தாற்போல் அலக்ஷ்யமாக மொழிந்தான். இங்ஙனம் வண்ணானை பிதற்றிக்கொண்டிருக்கையில் மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் கோபித்துக் கை நுனியால் அவன் தலையைச் சரீரத்தினின்று கீழே விழத் தள்ளினான். அப்பால் அவ்வண்ணானைத் தொடர்ந்தவர்கள் அனைவரும் துணிமூட்டைகளைப் போகட்டு நாற்புறத்திலும் ஓடிப்போனார்கள். அச்சுதன் தங்களுக்கு வேண்டிய வஸ்த்ரங்களை எடுத்துக்கொண்டான். அப்பொழுது பலராமனும் க்ருஷ்ணனும் தங்களுக்கு இஷ்டமான வஸ்த்ரங்களை உடுத்து மற்றவைகளைக் கோபர்களுக்குக் கொடுத்துச் சிலவற்றை அவ்விடத்திலேயே போகட்டுப்போனார்கள். அப்பால் ஒரு சேணியன் பல வர்ணங்களையுடைய ஆடைகளாகிற ஆபரணங்களால் அவர்களுக்குத் தகுந்தபடி ப்ரீதியுடன் அலங்காரஞ் செய்தான். அப்பொழுது பலவகையலங்காரங்களை அணிந்து உத்ஸவகாலங்களில் நன்கு அலங்கரிக்கப்பட்ட வெளுப்பும் கறுப்புமான இரண்டு பால கஜங்களைப்போல் விளங்கினார்கள். அனந்தரம் மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் அந்தச் சேணியனுக்கு அருள்புரிந்து மோக்ஷம் கொடுத்தான். மற்றும், அவனுக்கு இவ்வுலகில் பெரிய ஸம்பத்தையும் பலத்தையும் ஐச்வர்யத்தையும் தன்னைப்பற்றின நினைவு மாறாதிருக்கையையும் இந்த்ரியங்களின் உறுதியையும் கொடுத்தான். பிறகு ஸுதாமனென்னும் பெயருடைய [1] மாலாகாரனுடைய க்ருஹத்திற்குச் சென்றார்கள். அவனும் அவர்

1. மாலாகாரன்—பூமாலை கட்டுகிறவன்.

களைத் தூரத்திலேயே எழுந்து எதிர்கொண்டுவந்து பூமியில் தலைசாய்த்து நமஸ்காரஞ் செய்தான் அம்மா லாகாரன் அவர்களுக்கு ஆஸனம் கொண்டுவந்து கொடுத்துப் பாதங்களில் பாத்யமும் ஸமர்ப்பித்து அர்க்யம் முதலிய பூஜாத்ரவ்யங்களால் அவர்களையும் அவர்களோடுகூட வந்தவர்களையும் பூஜித்தான். மற்றும், அவன் அந்த ராமக்ருஷ்ணர்களை நோக்கி 'உங்கள் வரவினால் எங்கள் ஜன்மம் பயன்பெற்றது; எங்கள் குலமும் பரிசுத்தமாயிற்று. எங்கள் பித்ருக்களும் தேவதைகளும் ரிஷிகளும் ஸந்தோஷம் அடைந்தார்கள். நீங்கள் ஸமஸ்த லோகங்களுக்கும் மூலகாரணமாயிருப்பவர்கள். இத்தகைய நீங்கள் ஸாதுக்களின் யோகக்ஷேமங்களை நிறைவேற்றும் பொருட்டு ஸங்கல்பத்தினால் இவ்வுலகத்தில் அவதரித்திருக்கிறீர்கள். நீங்கள் ஜகத்திற்கு அந்தராத்மாவாயிருப்பவர்கள்; ஸமஸ்தபூதங்களுக்கும் நண்பர்களாயிருப்பவர்கள். ஆகையால் உங்களுக்கு விஷம த்ருஷ்டி கிடையாது. நீங்கள் ஸமஸ்த பூதங்களிடத்திலும் ஸமமாயிருப்பவர்கள்; மற்றும், தங்களை எவர்கள் பணிகின்றார்களோ, அவர்களை ப்ரீதியுடன் தொடருந் தன்மையுடையவர்கள். (பக்தர்களை அனுக்ரஹிப்பது பக்ஷபாதத்தினாலன்று. தன்னை அடுத்தவர்களின் விருப்பங்களை நிறைவேற்றுகிற கல்பவ்ருக்ஷத்திற்கு பக்ஷபாதமென்று சொல்ல முடியாதல்லவா? பக்ஷபாதமில்லாமைக்காகவே ப்ராணிகளின் பணிவிடையாகிற வ்யாஜத்தை எதிர்பார்க்கின்றீர்கள்) பருத்யனாகிய என்னை உங்களிஷ்டப்படி நியமிப்பீர்களாக. நான் உங்களுக்கு என்ன செய்யவேண்டும் உங்களால் இஷ்டப்படி நியமிக்கப்படுகையாகிற இதுவே ஜீவாதமாவுக்கு நீங்கள் செய்யும் அனுக்ரஹமாம்' என்று மொழிந்தான். ராஜஸ்ரேஷ்டனே! இங்

னம் விண்ணப்பஞ் செய்கின்ற அந்த ஸுதாமன் அவர்ளுடைய அபிப்ராயத்தை அறிந்து ஸந்தோஷமுற்ற மனமுடையவனுகிச் சிறந்த மணமுடைய புஷ்பங்களால் கட்டின மாலையை அவர்களுக்குக் கொடுத்தான். வரங் கொடுக்கவல்லவர்களாகிய அந்த ராமக்ருஷ்ணர்கள் அப் பூமாலைகளால் அலங்கரித்துக் கொண்டு சரணம அடைந்த அம்மாலாகாரனுக்கு வேண்டிய வரங்களைக் கொடுத்தார்கள். மஹானுபாவனுகிய அந்த ஸுதாமனும் சேதனுசேதனரூபமான ஸமஸ்த ப்ரபஞ்சத்திற்கும் அந்தராத்மாவாகிய அந்தப் பகவானிடத்தில் மாறாத பக்தியையும் அவனுடைய பக்தர்களிடத்தில் ஆனுகூல்யத்தையும் அவனுடைய சரீரங்களான பூதங்களிடத்தில பிறர்துக்கங்களைப பொறுக்காமையாகிற மேலான மன இரக்கத்தையும் வேண்டினுன். ஸ்ரீக்ருஷ்ணன இங்ஙனம அவன வேண்டினபடி வரங்களைக் கொடுத்து அவன் வேண்டாதிருப்பினும வம்சவ்ருத்தியுடைய ஸம்பத்து பலம் ஆயுள புகழ் காந்தி இவைகளையுங் கொடுத்துத் தமையனுகிய பலராமனுடன புறப்பட்டுப்போனுன். நாற்பத் தொன்றாவது அத்யாயம் முற்றிற்று.

ஸ்ரீக்ருஷ்ணன் கூனியை அனுக்ரஹித்ததும், வில்லை முறித்து அதைக்காக்கும் புருஷர்களையும் முடித்துக் கம்ஸனுக்குப் பயத்தை விளைவித்துத் தன் விடுதிக்குப் போதலும், கம்ஸன் மல்லயுத்தத்திற்காகச் சபை சேர்த்து நகரத்திலுள்ளவரை வரவழைத்தலும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார் —அனந்தரம் ராஜமார்க்கத்தில் போய்க்கொண்டிருக்கின்ற மாதவன், பாத்ரத்தில அங்கராகத்தை எடுத்துக்கொண்டு போகின்ற வளும் யௌவனவயதினுல் விளக்கமுற்று அழகிய முக

முடையவளுமாகிய ஒரு கூனியைக் கண்டு புன்னகையுடன் மனக்களிப்பை விளைத்துக்கொண்டு இங்ஙனம் மொழிந்தான்.

ஸ்ரீக்ருஷ்ணன் சொல்லுகிறான்:—பெண்மணி! அழகிய இடையுடையவளே! நீ யார்? இந்தப் பட்டணத்தில் இவ்வங்கராகம் யாருக்குக் கொண்டு போகின்றனை? உண்மையை எனக்குச் சொல்வாயாக. அல்லது யாருக்காவது இருக்கட்டும். சிறந்த இந்த அங்கராகத்தை எங்களுக்குக் கொடுப்பாயாக. அதனால் உனக்குச் சீக்ரத்தில் நன்மை உண்டாகும்.

கூனி சொல்லுகிறாள்:—அழகனே! நான் கம்ஸனுக்கு இஷ்டமான பணிக்காரி; த்ரிவக்ரையென்னும் பெயருடையவள். நான் அக்கம்ஸனால் அங்கராகம் கூட்டிக் கொடுக்குங் கார்யத்தில் நியமிக்கப்பட்டிருக்கின்றேன். (கழுத்து துடை இடை இம்மூன்றும் கோணலாயிருக்கையால் த்ரிவக்ரையென்னும் பெயர் எனக்கு உண்மையாயிருக்கும்). நான் கூட்டிக்கொடுக்கிற அங்கராகம் கம்ஸனுக்கு மிகவும் ப்ரியமாயிருக்கும். அந்த அங்கராகத்தைப்பூச உங்களைத் தவிர மற்ற எவன்தான் உரியவன்? எவனும் உரியவனன்று.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— பகவானுடைய அங்கஸௌஷ்டவம் ஸௌகுமார்யம் ரஸிக்யம் புன்னகை பேச்சு நோக்கம் இவைகளால் மனம் பறியுண்டு ஈரமாயிருக்கின்ற அந்த அங்கராகத்தை ராமக்ருஷ்ணர்களிருவர்களுக்கும் கொடுத்தாள். அனந்தரம் அவர்கள் தங்கள் மேனியின் நிறத்தைக்காட்டிலும் வேறு நிறமுடையதாகையால் பரபாகத்துடன் திகழ்கின்ற அவ்வங்கராகத்தைப் பூசிக்கொண்டு மிகவும் விளங்கினார்கள். மஹானுபாவனாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் அருள்புரிந்து

தன் காட்சியின் பயனைக் காட்ட முயன்று அழகிய முக முடைய த்ரிவக்ரையென்னும் பெயர்பூண்ட அக்கூனியைக் கூன்நிமிர்த்து நேராகச்செய்ய மனங்கொண்டான். அப்பரமபுருஷன் அக்கூனியின் நுனிக்கால்களிரண்டையும் தன்பாதங்களால் மிதித்து இரண்டு விரல்கள் உயரத்தூக்கப்பெற்ற தன் ஹஸ்தத்தினால் அவளுடைய மோவாயைப் பிடித்துக்கொண்டு அவள் தேஹத்தை நிமிரத்தூக்கினான். அவள் அப்பொழுதே சரீரம் நேராகி ஏற்றக்குறைவுகளின்றி ஸமமாயிருக்கப்பெற்றுப் பருத்த நிதம்பங்களும ஸ்தனங்களு முடையவளாகி முகுந்தனுடைய ஸ்பர்சத்தினால் அந்தக்ஷணமே சிறந்தமடந்தையாய் விட்டாள். அப்பால் அழகும குணங்களும் மேன்மையும உடைய அம்மாது சி மன்மதவிகாரம உண்டாகப் பெற்றுப புன்னகை செய்துகொண்டே ஸ்ரீக்ருஷ்ணனை உத்தரீயத்தில பிடித்திழுத்து மொழிந்தாள்.

கூனி சொல்லுகிறாள் :—வீரனே! எங்கள வீட்டிற்குப போவோம? வருவாயாக. நான இவ்விடத்தை விட்டுப்போக முடியாதிருக்கின்றேன். புருஷஶ்ரேஷ்டனே! உன்னால் கலக்கப்பட்ட மனமுடைய என்மேல அருள் புரிவாயாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார் :—இங்ஙனம அப்பெண்மணியால பலராமன பார்த்துக்கொண்டிருக்கையில வேண்டப்பெற்ற ஸ்ரீக்ருஷ்ணன தன்னைத் தொடர்ந்து வருகின்ற கோபர்களின முகத்தையும் ராமனுடைய முகத்தையும பார்த்துச் சிரித்துக்கொண்டே இங்ஙனம் மொழிந்தான.

ஸ்ரீக்ருஷ்ணன சொல்லுகிறான :—அழகிய புருவங்களுடையவளே! நான ஒருப்ரயோஜனத்தை உத்தேசித்து




2390. ஸ்ரீக்ருஷ்ணன் கூனியை அநுக்ரஹித்தல்.

வந்திருக்கின்றேன். அதை நிறைவேற்றிக் கொண்டு உன் க்ருஹத்திற்கு வருகின்றேன். இப்பட்டணத்தில் எங்களுக்குத் தங்குமிடம் கிடையாது. நாங்கள் வழிப்போக்கர்கள். ஆகையால் எங்களுக்கு நீயே முக்யமான புகுமிடம். கார்யத்தை முடித்துக் கொண்டு அவச்யம் வருகிறேன.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஸ்ரீக்ருஷ்ணன் இங்ஙனம் தேன்போன்ற இனிய உரையினால் ஸமாதானஞ் சொல்லி அவளை அனுப்பி வழியில் தமையனுடன் கொஞ்சதூரம் நடந்து சென்று கடைத்தெருவில் நுழைந்து, அங்குப் பல உபஹாரங்களாலும் தாம்பூலம் பூமாலை சந்தனம் முதலிய கந்தம் இவைகளாலும் பூஜிக்கப்பட்டான். கடைக்காரர்கள் பல நிதிகளையுட தாம்பூலாதிகளையும் கொடுத்து அந்த ராமக்ருஷ்ணர்களை ஆராதித்தார்கள். அப்பொழுது பட்டணத்து மடந்தையர்கள் ஸ்ரீக்ருஷ்ணனைக்கண்டதனால் மன்மதவிகாரமுற்று ஆடை தலைச் சொருக்கு கைவளை முதலியவை நழுவப்பெற்றுச் சித்ரத்தில் எழுதின ப்ரதிமைகள்போன்று மெய்ம்மறந்திருந்தார்கள். அப்பால் அவ்வச்சுதன தனுஸ்ஸு வைத்திருக்குமிடம் எதுவென்று பட்டணத்து ஜனங்களை வினவிக் கொண்டு சென்று அவ்விடத்தில் நுழைந்து இந்த்ர தனுஸ்ஸுபோல அற்புதமாயிருக்கின்ற தனுஸ்ஸைக் கண்டான். அதைப் பல புருஷர்கள் பாதுகாத்துக் கொண்டிருந்தார்கள். மற்றும், அது பூஜிக்கப்பட்டு ஸ்வர்ணாலங்காரம் முதலிய பல மேன்மைகள் அமைந்திருந்தது. அப்பொழுது அதைப் பாதுக்காக்கும் புருஷர்கள் வேண்டாம் வேண்டாமென்று தடுத்துக் கொண்டிருப்பினும் ஸ்ரீக்ருஷ்ணன் அதைப் பொருள் செய்யாமல் பலாத்காரமாக அந்தத் தனுஸ்ஸை எடுத்துக்

கொண்டான். த்ரிவிக்ரமாவதாரஞ் செய்த மஹானுபாவனாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணபகவான் அந்தத் தனுஸ்ஸை நிமிஷத்திற்குள் இடக்கையால் அவலீலையாக எடுத்து நாணேற்றிட்டு ஜனங்கள் பார்த்துக்கொண்டிருக்கையில் மத்தகஜம் கரும்புத்தடியை முறிப்பதுபோல இழுத்து இடையில் முரித்தான். அப்பொழுது முரிகின்ற அந்தத் தனுஸ்ஸின் த்வனி அந்தரிக்ஷலோகத்தையும் ஆகாசம் பூமி இவைகளையும் திசைகளையும் நிறைத்துவிட்டது. அதைக் கேட்டுக் கம்ஸன் பயம் அடைந்தான். அந்தத் தனுஸ்ஸைக்காக்கும் புருஷர்களும் அவர்களைத் தொடர்ந்த மற்றுமுள்ள பணிக்காரர்களும் அவனை வதிக்க வேண்டுமென்னும் எண்ணத்தினால் ஆயுதங்களை யேந்தி அவனைப் பிடிக்க விரும்பிப் 'பிடியுங்கள் கட்டுங்கள்' என்று மொழிந்துகொண்டே அவனைச்சுற்றிலும் சூழ்ந்தார்கள். அவர்கள் அங்ஙனம் கொல்லவேண்டுமென்னும் கெட்ட எண்ணத்துடன் வருவதைக் கண்டு ராமக்ருஷ்ணர்கள் கோபமுற்று முரிந்து விழுந்திருக்கின்ற தனுஸ்ஸின் துண்டங்களை எடுத்துக்கொண்டு அவர்களை அடித்து முடித்தார்கள். அச்செய்தியை அறிந்த கம்ஸன் ஸைன்யத்தை அனுப்ப, அதையும் கொன்று, அப்பால் தனுர்யாகசாலையினின்று புறப்பட்டு ஆநந்தமாகப் பட்டணத்தின் செல்வப்பெருக்குகளைப் பார்த்து மனக்களிப்புற்றுத் திரிந்தார்கள். பட்டணத்து ஜனங்கள் அவர்கள் செய்த தனுர்ப்பங்கம் முதலிய செயலையும் தேஜஸ்ஸு தைர்யம் உருவம் இவைகளையுங்கண்டு 'இவர்கள் ஸாதாரண புருஷர்களன்று; தேவஸ்ரேஷ்டர்களே' என்று நினைத்தார்கள். அந்த ராமக்ருஷ்ணர்கள் அங்ஙனம் யதேஷ்டமாகப் பட்டணத்தில் உலாவிக்கொண்டிருக்கையில் ஸூர்யன் அஸ்தமித்தான். அப்பால் அவர்

கள் கோபர்களுடன் வண்டிகள் விட்டிருந்த இடம் போய்ச் சேர்ந்தார்கள். ஸ்ரீக்ருஷ்ணன் கோகுலத்தினின்று புறப்படும்பொழுது அவனைப் பிரிந்திருக்க முடியாமல் வருத்தமுற்ற கோபிகைகள்செய்த ஆசீர்வாதங்களெல்லாம புருஷஸ்ரேஷ்டனாகிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய திருமேனியின் சேவையைக் காண்கின்ற மதுராபுரத்து மடந்தையர்கள் விஷயத்தில் ஸத்யமாயின. ஸ்ரீமஹாலக்ஷ்மி தனனைப் பணிகின்ற மற்றவர்களையெல்லாம் துறந்து எவனை மேல்விழுந்து விரும்பினளோ, அப்படிப்பட்ட புருஷோத்தமனைப் பிரிந்தவர்கள் வருந்துவதும், அவனைக் கண்டனுபவிப்பவர்கள் களிப்பதும் யுக்தமேயல்லவா? அந்த ராமக்ருஷ்ணர்கள் விடுதிக்குச் சென்று கால்களை அலம்பிக்கொண்டு பால்விட்டுக் கலந்த அன்னத்தைப் புசித்து மற்றை நாள் கம்ஸன் செய்ய நினைக்கிற நிரூபணைக அறிந்தும் சிந்தையின்றி அவ்விரவு ஸுகமாகவே வஸித்திருந்தார்கள். துர்ப்புத்தியுடைய கம்ஸனோவென்றால் ராமக்ருஷ்ணர்கள் அவலீலையாகத் தனுர்ப்பங்கஞ்செய்தது அதைக்காத்துக்கொண்டிருந்த புருஷர்களை வதித்தது தான அனுப்பின ஸைன்யத்தையும் முடித்தது ஆகிய இவை யெல்லாவற்றையும் கேட்டுப்பயந்து உறக்கமின்றி ஜாகரமே தொடர்ந்து வரப்பெற்று மருத்யுவுக்குத் தூதுசெய்பவை போன்ற இருவகை அவசகுனங்களைக் கண்டான். (கண்விழித்துக் கொண்டிருக்கும்பொழுது சில அவசகுனங்களையும் தூங்கும்பொழுது சில அவசகுனங்களையும் கண்டான். ஜாகரிதங்களென்றும ஸ்வாப்னங்களென்றும அவசகுனங்கள் இருவகைப்பட்டிருக்கும். ஜாகரிதங்கள் விழித்துக்கொண்டிருக்கும்பொழுது புலப்படுகிற அவசகுனங்கள். ஸ்வாப்னங்கள் ஸ்வபனத்தில் புலப்படுகிற அவசகுனங்கள்). ஜலம் முதலியவற்றில் தன்ப்ரதிபிம்பத்தைக் காணும்பொழுது

அதில் தன் தலையைக் காணாமை, சந்த்ரன் முதலிய சோதிகள் ஒன்றாயிருப்பினும் இரட்டையாகத் தோற்றுகை, தன் நிழலில் ரந்த்ரம் புலப்படுகை, காதுரந்த்ரங்களை மூடினால் கேட்கிற ப்ராணகோஷம் கேளாமை, வ்ருக்ஷங்களில் பொன்னிறம் தோற்றுகை, பூமியில் நடக்கும்பொழுது தன் காலடிகள் தெரியாமை ஆகிய ஜாகரித அவசகுனங்களையும், பிணங்களைக் கட்டிக்கொள்கை, கழுதைமேல் ஏறிக்கொண்டு போகை, சாமரைத் தண்டுகளைப் புசிக்கை, ஜபாபுஷ்பமாலையை அணிந்து எண்ணெய் தேய்த்துக்கொண்டு அரையில் ஆடையின்றித் தனியே போகை ஆகிய ஸ்வப்ன அவசகுனங்களையும் கண்டான். மற்றும், இத்தகைய பற்பல ஜாகரிதங்களையும் ஸ்வப்னங்களையும் காண்கின்ற அந்தக்கம்ஸன் அவற்றால் தனக்கு மரணம் நேரிடுமென்பதை நன்றாக நிச்சயித்து மிகவும் பயந்து சிந்தையினால் நித்ரை நேரப்பெறாதிருந்தான். குருவம்சத்தரசர்களில் சிறந்தவனே! இங்ஙனம் பெருவருத்தத்துடன் ராத்ரி பொழுது விடிகையில் ஸூர்யனும் ஜலத்தினின்று மேல்கிளம்பி உதயமாகையில் கம்ஸன் மல்லர்கள் ஒன்று சேர்ந்து விளையாடுகையாகிற மஹோத்ஸவத்தை நடத்தினான். மல்லர்கள் விளையாடுமிடமாகிய அரங்கத்தைப் பணிக்காரர்கள் அலங்கரித்தார்கள் மங்கல வாத்யங்களும் பேரிவாத்யங்களும் முழக்கப்பட்டன. பார்க்க வருகிறவர்கள் உட்காரும் ஆஸனங்களாகிய மஞ்சங்கள் பூமாலைகளாலும் த்வஜங்களாலும் சித்ர வஸ்த்ரங்களாலும் தோரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தன. அப்பால் அந்த மஞ்சங்களில் ப்ராஹ்மணர் க்ஷத்ரியர் முதலிய பட்டணத்து ஜனங்களும் நாட்டுஜனங்களும் ஸுகமாக உட்கார்ந்தார்கள். தேசாந்தரங்களினின்று வந்த ராஜாக்களும் ஸிம்

ஹாஸனங்களில் வீற்றிருந்தார்கள். கம்ஸனே வென்றல் மண்டலேச்வரர்களின் இடையில் இருந்துகொண்டு பரிதபிக்கின்ற மனத்துடன் மந்த்ரிகளால் சூழப்பட்டு ராஜமஞ்சத்தின்மேல் (அகண்ட மண்டலேச்வரனான மஹாராஜன் உட்காரவேண்டிய பெரிய ஸிம்ஹாஸனத்தின்மேல்) உட்கார்ந்தான். அப்பொழுது மல்லர்கள் தோள் தட்டும் த்வனிகளுடன் கலந்து வாத்யகோஷங்கள் முழங்கிக்கொண்டிருக்கையில் மல்லர்கள் அனைவரும் நன்றாக அலங்கரித்துக்கொண்டு மல்லாசார்யர்களுடன் அவ்வரங்கத்திற்குள் நுழைந்தார்கள். அங்ஙனமே சாணூரன் முஷ்டிகன் கூடன் சலன் தோஸலன் ஆகிய இவர்களும் அழகிய வாத்ய கோஷங்களால் மனக்களிப்புற்று அவ்விடம் வந்து சேர்ந்தார்கள். நந்தகோபன் முதலிய கோபர்களும் போஜராஜனால் அழைக்கப்பட்டு வந்து உபஹாரங்களை அம்மன்னவனுக்கு ஸமர்பித்து ஒரு மஞ்சத்தில் உட்கார்ந்தார்கள். நாற்பத்திரண்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

ஸ்ரீ ராமக்ருஷ்ணர்கள் குவலயாபீடமென்னும் கஜத்தையும் பாகனையும் வதித்து மல்லரங்கத்திற்குள் நுழைதலும், ஜனங்கள் அவர்களைப்பற்றிப் பேசுதலும், சாணூரனுக்கும் ஸ்ரீக்ருஷ்ணனுக்கும் ஸம்பாஷணமும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—சத்ருக்களை அழிப்பவனே! பிறகு மற்றை நாள் காலையில் ராமனும் க்ருஷ்ணனும் ஸ்நானாதி கர்மங்களை முடித்துக்கொண்டு மல்லர்களின் கோஷத்தையும் துந்துபிவாத்யங்களின் முழக்கத்தையும் கேட்டுப் பார்க்க வந்தார்கள். ஸ்ரீக்ருஷ்ணன் மல்லரங்கத்தின் வாசலில் வந்து அங்கு யானைப்பாகனால்

தூண்டப்பட்டு நின்றிருக்கின்ற குவலயாபீடமென்னும் கஜத்தைக் கண்டான். ஸ்ரீக்ருஷ்ணன் அரைத்துணியை இழுத்துக் கட்டிச் சுருண்டிருண்ட முன்னெற்றிக் குழல்களை ஒதுக்கி மேக கர்ஜனம்போல் கம்பீரமான ஒலியுடன் யானைப்பாகனைப் பார்த்து மொழிந்தான்.

ஸ்ரீ க்ருஷ்ணன் சொல்லுகிறான்:—ஓ யானைப்பாகனே! யானைப்பாகனே! வழிவிட்டு ஒதுங்கிப்போவாயாக. காலதாமதஞ் செய்யவேண்டாம். வழி விடமாட்டாயாயின் இப்பொழுது யானையுடன் உன்னைக் கொன்று யமலோகத்திற்கு அனுப்பி விடுகிறேன்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் விரட்டப்பட்ட அந்த யானைப்பாகன் கோபமுற்றுக் கோபமுற்றிருப்பதும் மிருத்யு காலனை யமன் இவர்களை நிகர்த்திருப்பதுமாகிய யானையை ஸ்ரீ க்ருஷ்ணன்மேல் தூண்டினான். யானைகளிற் சிறந்த அந்தக் குவலயாபீடம் க்ருஷ்ணனை எதிர்த்துப் பலாத்கரித்துத் துதிக்கையினால் அவனைப் பிடித்துக்கொண்டது. அந்த ஸ்ரீ க்ருஷ்ணன் அதன் துதிக்கையினின்று நழுவி அதை முட்டியினால் அடித்து அதன் கால்களில் மறைந்துகொண்டான். யானை அவனைக் காணாமல் மிகவும் கோபாவேசமுற்று க்ராணேந்த்ரியத்தினால் கண்டறியுந் தன்மை உடையதாகையால் மோந்துபார்த்து அவனிருக்குமிடம் தெரிந்துகொண்டு அவனைத் துதிக்கையால் ஸ்பர்சித்தது. அந்த ஸ்ரீக்ருஷ்ணன் பராக்ரமமாக வெளிப்பட்டு மிகுந்த பலமுடைய அந்த யானையை வாலில் பிடித்துக்கொண்டு கருடன் ஸர்ப்பத்தை அவலீலையாக இழுப்பதுபோல, இருபத்தைந்து வில்லளவு தூரம் பிடித்திழுத்தான். அப்பகவான், வாலைப் பிடித்துக்கொண்டிருக்கின்ற தன்னைப் பிடித்துக்கொள்ள யானை வலப்புறத்தில் திரும்பும்

பொழுது இடப்புறத்தில் இழுப்பதும் இடப்புறத்தில் திரும்பும்பொழுது வலப்புறத்தில் பிடித்திழுப்பதுமாகித் தான் குழந்தையாயிருக்கும் பொழுது பசுவின் கன்றின் வாலைப்பிடித்திழுத்து அத்துடன் சுற்றுவதுபோல இரு புறமும் தன்னைப் பிடிப்பதற்காகச் சுழல்கின்ற அந்த யானையுடன் தானும் சுழன்றுகொண்டிருந்தான். அப்பால் அந்த ஸ்ரீக்ருஷ்ணன் யானைக்கு எதிரே வந்து அதைக் கையால் அடித்து ஓடிப்போனான். ஓடும்பொழுது அடிகள்தோறும் யானையால் ஸ்பர்சிக்கப்பட்டு அதன் கையில் அகப்படுகிறதுபோலவேயிருந்து அகப்படாமலே அதை ஏமாற்றி ஓடிக் கீழ்விழச் செய்தான். அந்தயானை விழும்பொழுது ஸ்ரீக்ருஷ்ணனும் ஓடிக்கொண்டேயிருந்து விளையாட்டிற்காகக் கீழ்விழுவதும், கீழ் விழுந்ததைக் கண்டு அது எதிர்த்தோடி வருகையில் அங்கிருந்து விரைந்தெழுந்து ஓடுவதுமாயிருந்தான். யானையோவென்றால் அவன் அதே இடத்தில் விழுந்திருக்கிறானென்று நினைத்துக் கோபத்தினால் மெய் மறந்து தந்தங்களால் பூமியை இடித்துக்கொண்டிருந்தது. அந்த யானை இங்ஙனம் தன்பராக்ரமம் வீணாவதைக் கண்டு கோபம் மாத்ரமே மிகப்பெற்றுப் பின்னால் பலாத்காரமாகத் தூண்டப்பட்டு ஸ்ரீக்ருஷ்ணன் மேல் கோபத்துடன் எதிர்த்து வந்தது. அப்பொழுது மஹானுபாவனாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் தன்மேல் எதிர்த்து வருகின்ற யானையைக் கிட்டித் தன் கையினால் அதன் துதிக்கையைப் பிடித்துக்கொண்டு அதைப் பூமியில் விழத்தள்ளினான். விழுந்திருக்கின்ற அந்த யானையைப் பாதத்தினால் அமுக்கி ஸிம்ஹம்போல அவலீலையாக அதன் தந்தத்தைப் பிடுங்கிக்கொண்டு அந்தத் தந்தத்தினாலேயே யானைப்பாகனை அடித்தான். கை

யில் தந்தத்தை ஏந்தின அந்த ஸ்ரீக்ருஷ்ணன் மரணம் அடைந்த யானையைத் துறந்து அப்பால் அந்த யானையின் தந்தக்கொம்பைத் தோள்மேல் சாய்த்துக்கொண்டு உள்ளே நுழைந்தான். அப்பரம புருஷன் யானையின் ரக்தம் மதஜலம் இவற்றின் பிந்துக்களால் அடையாள முடையவனும் தாமரைமலர்போன்ற முகத்தில் புழுக்க ஜலத்துளிகள் உண்டாகப பெற்றவனுமாகி விளங்கினன். மன்னவனே! ராமக்ருஷ்ணர்கள் சில கோபர்களால் சூழப்பட்டு யானையின் தந்தங்களையே சிறந்த ஆயுதங்களாகக்கொண்டு மல்லர்கள் விளையாடுமிடமாகிய அரங்கத்திற்குள் நுழைந்தார்கள். மல்லர்களால் இடியென்றும் ஸாதாரண மனுஷ்யர்களால் மனுஷ்யஶ்ரேஷ்டனென்றும், ஸ்த்ரீகளால் உருவங்கொண்ட மன்மதனென்றும், கோபர்களால் பந்துவென்றும், துஷ்டர்களான மன்னவர்களால் நம்மை அடக்க வந்தவனென்றும், தாய் தந்தைகளால் குழந்தையென்றும், கம்ஸனால் ம்ருத்யு வென்றும், மூடர்களால் கேவல தேஹமென்றும், யோகிகளால் பரதத்த்வமென்றும், வருஷ்ணிகளால் பரதேவதை யென்றும் அறியப்பட்ட அந்த ஸ்ரீக்ருஷ்ணன் தமையனோடுகூட அரங்கத்திற்குள் நுழைந்தான். மன்னவனே! கம்ஸன குவலயாபீடம் கொல்லப்பட்டதைக் கண்டு அதனால் அந்த ராமக்ருஷ்ணர்கள் ஜயிக்கமுடியாதவர்களென்று தெரிந்துகொண்டு திரானும் மிகவும் பயமுற்றான். விசித்ரமான வேஷமும் ஆபரணங்களும் பூமாலையும் ஆடைகளும் தரித்து நீண்ட புஜதண்டங்களை யுடையவர்களுமாகிய அந்த ராமக்ருஷ்ணர்கள் யுத்தரங்கத்திற்குள் நுழைந்து தங்கள் தேஹகாந்தியால் காண்போர்களின் மனத்தைக் கலக்கச் செய்து கொண்டு சிறந்த வேஷந்தரித்த நடராஜர்கள்போல

விளங்கினார்கள். மன்னவனே! பட்டணத்து ஜனங்களும் நாட்டுப்புறத்து ஜனங்களும் புருஷோத்தமர்களாகிய அந்த ராமக்ருஷ்ணர்களைக் கண்டு ஸந்தோஷத்தின் மிகுதியால் முகமெல்லாம் கண்களே யென்னும்படி கண்கள் மலரப்பெற்றுக் கண்களாகிற பாத்ரங்கலால் அவர்கள் முகத்தின் அழகாகிற அம்ருதத்தைச் சிறிதும் த்ருப்தி யின்றிப் பானஞ்செய்தார்கள். ஜனங்கள் அந்த ராமக்ருஷ்ணர்களைக் கண்களால் பருகுபவர்போலவும், நாக்கினால் நக்குபவர்போலவும, புஜங்களால் அணைப்பவர்கள் போலவும் தோன்றினார்கள். அவர்கள் அந்த ராமக்ருஷ்ணர்களின் அழகிய உருவம் குணங்கள் இனிமை தைரியம் இவைகளால் நினைவு மூட்டப்பட்டவர்கள் போன்று தாங்கள் எதை எங்ஙனம் பார்த்தார்களோ எங்ஙனம் கேட்டார்களோ, அதையெல்லாம் அங்ஙனமே ஒருவர்க்கொருவர் மொழிந்துகொண்டார்கள்.

ஜனங்கள் சொல்லுகிறார்கள்:—ஒன்றான ஸ்ரீமந்நாராயணனே வஸுதேவனுக்கு அவன் பதகினியாகிய தேவகியிடத்தில் தன்ஸங்கல்பத்தினால் இந்த ராமக்ருஷ்ணர்களாக அவதரித்தான். இந்த ஸ்ரீக்ருஷ்ணன் தேவகியிடத்தில் பிறந்தவுடனே வஸுதேவனால் கோகுலத்தில் கொண்டுவிடப்பட்டான். இவன் இதுவரையில் நந்தனுடைய க்ருஹத்தில் மறைந்து வளர்ந்து வந்தான். இவன் பூதனையை வதித்தான்; சுழல்காற்றினுருவங் கொண்டு வந்த த்ருணாவர்த்தனென்னும் அஸுரனையும் இவன் வதித்தான்; மருதமரங்களை வேரோடு முறித்து விழத்தள்ளினான்; தேனுகன் கேசி சங்கசூடன் இவர்களும் இவர்களைப்போன்ற மற்றும் பலர்களும் இவனால் முடிக்கப்பட்டார்கள். இவனே கோக்களையும் கோபாலர்களையும் காட்டுத்தீயினின்று விடுவித்தான்; காளிய

னென்னும் ஸர்ப்பத்தைச் சிக்ஷித்தான்; இந்த்ரனுடைய கர்வத்தை அடக்கினான். இவன் பர்வதங்களில் சிறந்த கோவர்த்தனகிரியை ஏழுநாள்வரையில் ஒற்றைக்கையால் தாங்கிக்கொண்டிருந்து மழை காற்று இடி இவற்றினின்று கோகுலத்தைக் காத்தான். கோபிகைகள் என்றும் ஸந்தோஷமுற்ற புன்னகையும் நோக்கமும் அமைந்த இந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்து ஆத்யாத்மிகம் முதலிய தாபங்களையெல்லாம் அனாயாஸமாகக் கடந்தார்கள். இந்த யதுவின் வம்சம் இவனால் பாதுகாக்கப்பட்டு மிகவும் பாந்து செல்வம் புகழ் பெருமை இவைகளை அடையப்போகின்றதென்று சொல்லுகிறார்கள் இவனுடைய தமையனாகிய இந்தப் பலராமன் தாமரையிதழ்போன்ற கண்களுடையவன்; கல்யாணகுணங்களெல்லாம் அமைந்தவன், ப்ரலம்பன் வத்ஸன் தேனுகன் முதலியவர்களை இவன கொன்றான்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:--ஜனங்கள இங்ஙனம் சொல்லிக்கொண்டிருக்கையில் வாத்யங்களும முழங்கப் பட்டிருக்கையில் சாணூரன ஸ்ரீக்ருஷ்ணனையும் பலராமனையும் அழைத்து மொழிந்தான.

சாணூரன் சொல்லுகிறான்:—ஓ நந்தகுமாரர்களே! க்ருஷ்ணா! ஓ பலராமா! நீங்கள் வீரர்களாக மிகவும் புகழப் பட்டவர்கள். நீங்கள் மல்லயுததத்தில் ஸமர்த்தர்களென்று கேள்விப்பட்டு உங்கள யுத்தத்தைப் பார்க்க விரும்பி மன்னவன உங்களை வரவழைத்தான. ப்ரஜைகள் மனம் செயல் வாக்கு என்னும் இம்மூன்று காரணங்களாலும் அரசனுக்கு ப்ரியஞ் செய்வார்களாயின் நன்மையைப் பெறுவார்கள்; அப்ரியஞ் செய்யின் துக்கத்தைப் பெறுவார்கள். இடையர்கள் என்றும் களிப்புற்றுக்

கன்று மேய்க்கும் நாள்முதல் பசுக்களை மேய்க்கும் நாள் வரையில் வனத்தில் மல்லயுத்தஞ் செய்து விளையாடிக் கொண்டே பசுக்களை மேய்ப்பது வழக்கமல்லவா? (ஆகையால் நீங்கள் கைச்சண்டையில் வல்லவர்களே யென்பதில் ஸந்தேஹம் என்ன?) ஆகையால் நீங்களும் நாங்களும் மன்னவனுக்கு ப்ரியஞ் செய்வோம். மன்னவன் ஸந்தோஷம் அடைவானாயின் ஸமஸ்த பூதங்களும் நமக்கு அருள்புரியும். ஏனென்றால், மன்னவன ஸர்வபூத ஸ்வரூபனல்லவா?

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஸ்ரீக்ருஷ்ணன் அதைக் கேட்டு மல்ல யுத்தத்தைத் தனக்கு இஷ்டமாகவே ஒப்புக்கொண்டு அவன வார்த்தையைப் புகழ்ந்து தேசகாலங்களுக்கு உரியபடி மொழிந்தான்.

ஸ்ரீக்ருஷ்ணன் சொல்லுகிறான்:—காட்டில் திரிகிற நாங்களும் இந்த மன்னவனுக்கு ப்ரஜைகளே. நாங்களும் அவனுக்கு என்றும் பிரியஞ் செய்யவேண்டியவர்களே. எங்கள் செயலால மன்னவன ப்ரீதி அடைவானாயின், அது எங்களுக்கு மேலான அனுக்ரஹம். ஆனால் நாங்கள் அறியாத இளைஞர்கள். ஆகையால் எங்களோடொத்த பலமுடையவர்களோடு நாங்கள் விளையாடுகிறோம். எங்களுக்குத் தகுந்தபடி மல்லயுத்தம் நடக்கட்டும். மல்லனே! அதரமயுத்தம் நடக்குமாயின் அதைப் பார்க்கிற ஸபிகர்களுக்கும் அதர்மம் சேரிடும். அது வேண்டாம்.

சாணூரன் சொல்லுகிறான்:—நீ குழந்தையுமன்று; குட்டியுமன்று; நீ நல்ல யௌவனவய துடையவன்தான். அதிலும் மிகுந்தபலமுடையவர்களில் சிறந்தவன். ஆயிரம் யானைகளின பலமுடைய குவலயாபீடமென்னும் யானையை நீ அனுயாஸமாகக் கொன்றாயல்லவா? உன்

தமையனாகிய பலராமனும் உன்னைப்போன்ற பலசாலியே. ஆகையால் பலிஷ்டர்களான நீங்கள் பலிஷ்டர்களான என்னைப் போன்றவர்களோடுதான் யுத்தஞ் செய்ய வேண்டும். இந்த யுத்தத்தில் அதர்மம் கிடையாது. இது நிச்சயம். வ்ருஷ்ணிவம்சகுமாரனே! நீ என்னுடன் யுத்தஞ் செய்வாயாக. முஷ்டிகன் பலராமனோடு யுத்தஞ் செய்யட்டும். நாற்பத்துமூன்றாவது அத்யாயம் முற்றிற்று.

## சாணூரன் முஷ்டிகன் கூடன் தோஸலன் கம்ஸன இவர்களை வதித்தல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மஹானுபாவனாகிய மதுஸூதனன் தான் ஸங்கல்பித்திருந்ததையே பிறர்வாயால் நிச்சயப்படுத்திக்கொண்டு சாணூரனை எதிர்த்தான். பலராமனும் முஷ்டிகனை எதிர்த்தான். அப்பொழுது அந்த ஸ்ரீக்ருஷ்ணசாணூரர்களும் பலராமமுஷ்டிகர்களும் கைகளைக் கைகளாலும் பாதங்களைப் பாதங்களாலும் கட்டிக்கொண்டு ஒருவரையொருவர் ஜயிக்கவிரும்பி ஒருவரையொருவர் பலாத்காரமாகப் பிடித்திழுத்தார்கள். அவர்கள் முட்டிகளால் முட்டிகளையும் முழங்கால்களால் முழங்கால்களையும் தலைகளால் தலைகளையும் மார்புகளால் மார்புகளையும் ஒருவர்க்கொருவர் அடித்துக்கொண்டார்கள். சுழற்றுவது தள்ளுவது எதிர்ப்பது பின்னை நகருவது இவைகளால் அவர்கள் ஒருவரை யொருவர் தகைத்தார்கள். ஒருவரையொருவர் ஜயிக்க விரும்புகிற அவர்கள் கீழ் விழுந்தவனைக் கால் கைகளை மடக்கி மேல் தூக்குதல் கைகளால் எடுத்துக்கொண்டு போதல், அப்புறம் தள்ளுதல், கைகால்களை நீட்டவொட்டாமல் மடக்குதல் இவைகளால் ஒருவர் தேஹத்தை ஒருவர் பிடித்தார்கள். ராஜனே! அப்பொ

மூது மடந்தையர்கள் எல்லாரும் கூட்டங்கூட்டமாய் ஒன்று சேர்ந்து ராமக்ருஷ்ணர்களிடத்தில் மன இரக்க முற்று ஒருபக்கத்தில் பலமும் ஒருபக்கத்தில் துர்ப்பலமு மாயிருக்கிறதாகையால் 'இது ஸமமான யுத்தமன்று· விஷமயுத்தம்' என்று மொழிந்தார்கள்.

மடந்தையர்கள் சொல்லுகிறார்கள் :—இந்த ராஜ ஸபையில் அதிகரித்தவர்களுக்குப் பெரிய அதர்மமே. ஆ! என்னவருத்தம்? ஏனென்றால், இவர்கள் துர்ப் பலர்களான பாலர்களும் பலிஷ்டர்களான மல்லர்களும் சண்டை செய்வதை ஒப்புகொண்டிருக்கிறார்கள். அர சன் இந்த விஷம யுத்தத்தைப் பார்ப்பானாயின் ஸபிகர் கள் கூடாதென்று தடுக்கவேண்டும். அரசன் பார்த்துக் கொண்டிருக்கையில் தாங்களும ஸம்மதித்திருக்கின்றார் களல்லவா? ஸமஸ்த அங்கங்களும் வஜ்ராயுதம் போல உறுதியாயிருக்கப் பெற்றவர்களும் பெரிய மலைபோன்ற வர்களுமாகிய இந்த மல்லர்கள் எங்கே? மிகவும் மென் மைக் கிடமான அங்கங்களுடையவர்களும் யௌவன வயது நேரப்பெறாதவர்களுமாகிய இந்தக் குழந்தைகள் எங்கே? (ஆகையால் பலிஷ்டர்களையும் துர்ப்பலர்களையும் சண்டைக்கு விட்டு வேடிக்கை பார்ப்பது யுக்தமன்று). ஆகையால் இந்த ஸபைக்குப் பெரிய அதர்மம் உண்டா கும். இது நிச்சயம். ஆனால் என்ன செய்யலாம்? எவ் விடத்தில் அதர்மம் உண்டாகுமோ, அவ்விடத்தில் ஒரு க்ஷணங்கூட இருக்கலாகாது. அப்புறம போகவேண்டும். பண்டிதனாயிருப்பவன் ஸபிகர்களுக்கு நேரும் தோஷங் களை நினைத்து ஸபைக்குள் நுழையலாகாது. தெரிந்து சொல்லாதிருப்பினும், தெரியாமல் விபரீதமாகச் சொல் லினும் தெரிந்திருக்கையில தெரியாதென்று சொல்லினும் பாபத்தை அடைவான். ஆகையால் ஸபையில் நுழைய

லாகாது. சத்துருவைச் சுற்றிச் சுழன்று
இந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய தாமரைமுகம் வேர்வைத்
துளிகளால் நிறைந்து ஜலத்துளிகள் நிறைந்த கமலம்
போல் திகழ்கின்றது, பாருங்கள். முழுவதும் சிவந்த
கண்களுடையதும் முஷ்டிகன்மேல் கோப முற்றிருப்ப
தும் சிரிப்பு பரபரப்பு இவைகளால் அழகாயிருப்பது
மாகிய பலராமனுடைய முகத்தை நீங்கள் ஏன் பார்க்க
லாகாது? பாருங்கள். தான் புராணபுருஷனாகிய ஸ்ரீமந்
நாராயணனாயிருந்தும் மானிட உருவத்தினால் தன் ஸ்வ
ரூபகுணாதிகளை மறைத்துக்கொண்டு காட்டில் பூத்த அற்
புதமான புஷ்பங்களால் தொடுக்கப்பட்ட பூமாலையை
அணிந்து ருத்ரன் முதலிய ஸகலதேவதைகளாலும்
ஸ்ரீமஹாலக்ஷ்மியாலும் பூஜிக்கப்பட்ட பாதாரவிந்தங்க
ளுடையவனாகிப் பலராமனுடன்கூடி வேணுகானஞ்செய்
வதும பசுக்களை மேய்ப்பதும் விளையாடுவதுமாகி எவ்
விடத்தில் ஸுகமாக உலாவிக்கொண்டிருந்தானோ, அத்
தகைய கோகுலத்தின் ப்ரதேசங்களே புண்யமானவை.
இவனை அவமதிக்கின்ற இந்த ஸபையோவென்றால் பா
பிஷ்டமே. ஆ! கோபிகைகள் என்ன தவஞ் செய்தார்
களோ? அளவற்ற லாவண்யமுடையதும் இணையெதி
ரில்லாததும் ஆபரணம் முதலிய வேறு ஸம்ஸ்காரங்களை
எதிர்பாராமல் தானே அழகாயிருப்பதும் கர்மாயத்த
மாகாமல் ஸங்கல்பஸித்தமாயிருப்பதும் புகழ் செல்வம்
ஐஶ்வர்யம் இவற்றிற்கு என்றும் மாறாத இடமாயிருப்
பதும் எப்பொழுதும் புதிது புதிதாயிருப்பதும புண்யஞ்
செய்யாதவர்களுக்குக் கண்களால் காணவுங்கூட நேரா
ததுமாகிய இந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய திவ்ய மங்கள
விக்ரஹத்தைக் கண்குளிரக் காண்கின்றார்களல்லவா?
அத்தகைய இவ்வுருவத்தை அஸமயத்தில் காணப்

பெற்ற நாம் பாக்யமற்றவர்களே. த்ரிவிக்ரமாவதாரஞ் செய்த மஹானுபாவனாகிய இந்த ஸ்ரீக்ருஷ்ணனையே அனுராகம் நிறைந்த எண்ணத்துடன் சிந்தித்துக் கொண்டு ஆநந்தபாஷ்பத்தினால் தடுக்கப்பட்ட கண்டமுடையவர்களாகிய பசு கறப்பது ஜலங்கொண்டுவருவது தயிர்கடைவது வீடுமெழுகுவது ஊசலாடுவது அழுகிற குழந்தைகளைத் தாலாட்டுவது ஜலம் தெளிப்பது வீடு விளக்குவது முதலிய கார்யங்களைச் செய்யும் பொழுதெல்லாம் இவனைப் பாடிக்கொண்டிருந்து பொழுது போக்குகிற கோபஸ்த்ரீகள் பாக்யவதிக ளென்பதில் ஸந்தேஹம் என்ன? மற்றும், கோகுலத்திலுள்ள பெண்மணிகள், இந்த ஸ்ரீக்ருஷ்ணன் காலையில் இடைச்சேரியினின்று, பசுக்களை மேய்க்கப்போகும் பொழுதும் மாலையில் பசுக்களை ஓட்டிக்கொண்டு திரும்பி வரும்பொழுதும் வேணுகானஞ் செய்வதைக் கேட்டு விரைந்தோடிவந்து புன்னகையமைந்த முகமுடையவனும் அருள் நிறைந்த கண்ணோக்கமுடையவனுமாகிய இவனை வழியில் காண்கிறார்களாகையால் மிகவும் புண்யவதிகள். (இவனை இங்ஙனம் கண்டனுபவிக்கப்பெற்ற அம்மாதரசிகளின் புண்யமஹிமையை என்னென்று சொல்ல முடியும்?)

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—பரத குலாலங்காரனே! ஸ்த்ரீகள் இங்ஙனம் சொல்லிக் கொண்டிருக்கையில், யோகேச்வரனும் (அற்புத சக்திகள் அமைந்தவனும்) தன்னைப் பற்றினவர்களின் மனவருத்தங்களைப் போக்குந் தன்மையனுமாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணபகவான் சத்ருவைக் கொல்ல மனங்கொண்டான். அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய தாய்தந்தையர்கள் ஸ்த்ரீகளின் வார்த்தைகளைக் கேட்டுப் பிள்ளைகளிடத்திலுள்ள ஸ்நேஹத்தினால் இவர்களுக்கு என்ன கெடுதி வருமோ என்னும் சோகம்

உண்டாகப் பெற்று வருந்தி அவர்களுடைய பலத்தை அறியாமல் பரிதபித்தார்கள். ஸ்ரீக்ருஷ்ணனும் சாணூரனும் கைச் சண்டையில் ஏற்பட்ட அந்தந்த விதிகளின்படி எங்ஙனம் சண்டை செய்தார்களோ, அங்ஙனமே பலராமன் முஷ்டிகன் ஆகிய இவ்விருவர்களும் சண்டை செய்தார்கள். சாணூரன இடிவிழுவதுபோல மிகவும் கடோரங்களாயிருக்கின்ற ஸ்ரீக்ருஷ்ணனுடைய முட்டி முழங்கால் முதலிய அங்கங்களின் அடிகளால் அங்கங்களெல்லாம் முரியப் பெற்று அடிக்கடி வாட்டம் அடைந்தான். பருந்தின் வேகம் போன்ற வேகமுடைய அந்தச் சாணூரன் உயரக்கிளம்பிக் கோபமுற்று இரண்டு கை விரல்களையும் முட்டியாக மடக்கிக்கொண்டு வாஸுதேவனுடைய மார்பில் அடித்தான். மஹாநுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் புஷ்பமாலைகளால் அடிக்கப்பட்ட யானைபோல அந்த அடிக்குச் சிறிதும் சலிக்காதிருந்தான். அன்றியும், அவன் சாணூரனை இரண்டு கைகளாலும் பிடித்துக்கொண்டு பலதடவைகள் சுழற்றி அவ்வளவில் உயிரையிழந்த அச்சாணூரனைப் பூமியில வீசி அறைந்தான். அவன் அதனால் தலைமயிர்களும் ஆபரணங்களும் பூமாலையும கலைப்பெற்று இந்த்ரத்வஜம்போல விழுந்தான். முஷ்டிகனும் அங்ஙனமே பலராமனை முட்டியால் அடிக்க அப்பலராமன் அவனைக் கையால் அறைந்தான். அங்ஙனம் அடிக்கப்பட்ட அம்முஷ்டிகன் வருந்தி நடுக்கமுற்று முகத்தினால் ரக்தத்தைக் கக்கிக்கொண்டு ப்ராணன்களை இழந்து பெருங்காற்றினால வேருடன் பிடுங்கப்பட்ட வ்ருக்ஷம்போல பூமியில் விழுந்தான். ராஜனே! அப்பால் கூடனென்னும் மல்லன் மேல்விழுந்துவர, யுத்தஞ் செய்பவர்களில் சிறந்த பலராமன் அவனை ஒரு பொருளாக நினைக்காமல் அவலீலையாக இடக்கை

முட்டியால் அடித்துக்கொன்றான். அங்ஙனமே சல னென்னும் மல்லன் ஸ்ரீக்ருஷ்ணனுடைய நுனிப்பாதத் தினால் தலையில் அடிக்கப்பட்டும், தோஸலனென்பவன் இருபிளவாகப் பிளக்கப்பட்டும் இருவரும் மாண்டு பூமி யில் விழுந்தார்கள். இங்ஙனம் சாணூரன் முஷ்டிகன் கூடன் சலன் தோஸலன் என்னும் இவ்வைந்து மல்லர் களும் மாண்டுபோகையில், மற்ற மல்லர்கள் அனைவரும் ப்ராணன்களைப் பாதுகாத்துக்கொள்ள விரும்பி ஓடிப் போனார்கள். அனந்தரம் ராமக்ருஷ்ணர்கள் நண்பர்க ளான கோபர்களை அழைத்து அவர்களுடன் கலந்து வாத்யங்கள் முழங்கிக் கொண்டிருக்கையில் அழகிய தண்டைகளுடன் நர்த்தனம் முதலியன செய்துகொண்டு விளையாடினார்கள். அப்பொழுது கம்ஸனைத்தவிர மற்ற ஜனங்கள் எல்லாரும் ராமக்ருஷ்ணர்கள் செய்த மல்ல யுத்தத்தைக் கண்டு மிகவும் ஸந்தோஷம் அடைந்தார் கள். அங்ஙனமே ஸாதுக்களான ப்ராஹ்மணஶ்ரேஷ்டர் களும் நல்லது நல்லதென்று மொழிந்தார்கள். இங்ஙனம் மல்லஶ்ரேஷ்டர்களான சாணூராதிகள் முடிந்துபோகை யில் கம்ஸன் வாத்யகோஷங்களை நிறுத்தி மேல்வருமாறு கூறினான்.

கம்ஸன் சொல்லுகிறான்:—கெட்ட நடத்தையுடைய வர்களாகிய இந்த வஸுதேவபுத்ரர்களைப் பட்டணத்தி னின்று துரத்திவிடுவீர்களாக. கோபர்களின் தனத் தைப் பறியுங்கள். துர்ப்புத்தியுடைய நந்தனைச் சிறையில் அடையுங்கள். மிகவும் துஷ்டனாகிய வஸுதேவனைச் சீக்ரம் வதியுங்கள். அங்ஙனமே நம் தந்தையாகிய உக்ர ஸேனனும் சத்ருபக்ஷத்தில் உட்பட்டவனாகையால் அவ னையும் அவனைச் சேர்ந்தவர்களையும் கொன்றுவிடுங்கள்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் கம்ஸன் பிதற் றிக்கொண்டிருக்கையில் நிர்விகாரனான ஸ்ரீக்ருஷ்ண பக

வான் மிகவும் கோபமுற்று லாகவத்தினால் உயரக் கிளம்பிப் பலத்தினால் விரைந்து கம்ஸன் உட்கார்ந்திருக்கின்ற உயர்ந்த மஞ்சத்தின்மேல் ஏறினான். மன உறுதியுடைய அக்கம்ஸன் தன் ம்ருத்யுவாகிய ஸ்ரீ க்ருஷ்ணன் தன்மேல் எதிர்த்து வருவதைக் கண்டு தத்காலத்திற்குத் தகுந்தபடி செய்யவேண்டியதை அறிந்தவனாகையால் ஆஸனத்தினின்று விரைவுடன் எழுந்து கத்தி கேடயங்களை எடுத்துக்கொண்டான். பிறகு பொறுக்க முடியாத வேகமுடையவனும் மஹாநுபாவனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன், கருடன் ஸர்ப்பத்தைப் பலாத்காரமாகப் பிடித்துக் கொள்வது போலக், கத்தியைக் கையில் பிடித்து வலம் இடம் ஆகாயம் இவற்றில் பருந்துபோல் ஸஞ்சரிக்கின்ற அக்கம்ஸனைப் பிடித்துக்கொண்டான். அப்பரம புருஷன கம்ஸனைத் தலைமயிர்களில் உறுதியாகப் பிடித்துக்கொண்டு வேகத்தில் கழன்ற கிரீடத்தையுடைய அக்கம்ஸனை உயர்ந்த மஞ்சத்தினின்று யுத்தரங்கத்தினிடையில் விழத்தள்ளி மையின் ஒளியுடையவனும ஜகத்திற்கெல்லாம் ஆதாரனும் ஸ்வதந்த்ரனும் ஷாட்குண்ய பூர்ணனுமாகிய தான் அவன்மேல் விழுந்தான். பிறகு ஜனங்கள பார்த்துக்கொண்டிருக்கையில் ஸிம்ஹம் யானையை இழுப்பதுபோல, ப்ராணன்களை இழந்த கம்ஸனை ஸ்ரீக்ருஷ்ணன் பிடித்திழுத்தான். மன்னவனே! அப்பொழுது ஜனங்கள் எல்லோரும் உரக்க ஆ ஆ என்று கோஷமிட்டார்கள். அந்தக் கம்ஸன் எப்பொழுதும் பயந்த மனமுடையவனாகிப் பருகுவது புசிப்பது உலாவுவது உறங்குவது மூச்சுவிடுவது முதலிய எல்லாக் காலங்களிலும் ஸர்வேஶ்வரனும் சக்ராயுதந் தரித்தவனுமாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணனையே எதிர்ப்பார்த்துக் கொண்டிருந்தானாகையால் பிறர்க்குக் கிடைக்க முடி



2408. ஸ்ரீக்ருஷ்ணன கம்ஸனைக் கொல்லுதல்.

யாத அவனுடைய ஸாரூப்யமாகிற முக்தியைப் பெற்றான். அனந்தரம் அந்தக் கம்ஸனுடைய ப்ராதாக்களாகிய கங்கன் ந்யக்ரோதன் முதலிய எண்மர் தங்கள் ப்ராதாவான கம்ஸன் விஷயத்தில் தாங்கள் நடத்தவேண்டிய கடமையை நடத்த முயன்று மிகவும் கோபமுற்று எதிர்த்து வந்தார்கள். அப்பொழுது மிகுந்த வேகமும் முயற்சியும் கொண்டிருக்கின்ற அவர்களைப் பலராமன் உழல்தடியை ஓங்கிச் சிங்கம் பசுக்களை அடிப்பது போல அடித்து முடித்தான். அப்போது ஆகாயத்தில் துந்துபி வாத்யங்கள் முழங்கின. ஸ்ரீ க்ருஷ்ணனுடையபரிவாரங்களாகிய ப்ரஹ்மருத்ராதிகள் புஷ்பங்களைப்பெய்து மிகவும் களித்து அவனைத் துதித்தார்கள். அப்ஸரமடந்தையர்கள் நர்த்தனஞ் செய்தார்கள். மஹாராஜனே! அந்தக் கம்ஸகங்காதிகளின் பார்யைகள் தங்கள் அன்பர்களாகிய கணவர்கள் மரணம் அடைந்தமையால் துக்கித்துத் தங்கள் தலைகளைப் புடைத்துக்கொண்டு கண்ணுங் கண்ணீருமாகி அவ்விடம் வந்தார்கள். அம்மாதரசிகள் வீரர்களின் படுக்கையாகிய யுத்த பூமியில் விழுந்து முடிந்திருக்கின்ற தங்கள் கணவர்களை எடுத்தணைத்துச் சோகித்து அடிக்கடி கண்ணீர்களைப்பெருக்கிக் கொண்டு இனிய குரலுடன் புலம்பினார்கள்.

ஸ்த்ரீகள் சொல்லுகிறார்கள்:—ஓ நாதா! நண்பனே! தர்மங்களை அறிந்தவனே! மன இரக்கத்திற்கிடமான அநாதர்களிடத்தில் வாத்ஸல்யமுடையவனே! நீ முடிகையில் உன் க்ருஹங்களும் ப்ரஜைகளும் நாங்களும் உன்னுடன் கூடவே முடிந்தோம். புருஷஸ்ரேஷ்டனே! ப்ரபுவாகிய உன்னைப் பிரிந்த இப்பட்டணம் எங்களைப்போல உத்ஸவங்களும் ஸுகங்களும் தொலையப் பெற்றிருக்கின்றது. நாதனே! நீ நிரபராதிகளான

பூதங்களுக்குப் பொறுக்க முடியாத த்ரோஹத்தைச் செய்தனையாகையால் இத்தசையை அடைந்தனை. பூதங்களுக்கு த்ரோஹஞ் செய்பவனை எவன்தான் ஸுகத்தை அடைவான்? எவனும் ஸுகத்தை அடையமாட்டான் துக்கத்தையே அடைவான். மற்றும், இந்த ஸ்ரீக்ருஷ்ணன் ஸமஸ்த பூதங்களுக்கும ஸ்ருஷ்டிகர்த்தாவான பரமபுருஷன். கடைசியில் ஜகத்தையெல்லாம் ஸம்ஹாரஞ் செய்பவனும் இவனே; இடையில் பாதுகாப்பவனும் இவனே. ஆகையால் இவனை அவமதிக்குந் தன்மையுடையவன் எங்கும் ஸுகமாக வளரமாட்டான்; துக்கத்தையே அடைவான்.

ஸ்ரீ சுகர் சொல்லுகிறார்:—உலகங்களுக் கெல்லாம் நன்மையை விளைப்பவனாகிய ஸ்ரீ கிருஷ்ணன் இங்ஙனம் சோகிக்கின்ற ராஜபார்யைகளை ஸமாதானப் படுத்தி மாண்டவர்களுக்கு நடத்தவேண்டிய தஹனாதி ஸம்ஸ்காரங்களை நடப்பித்தான். அப்பால் ராமக்ருஷ்ணர்கள் தாய் தந்தையர்களான தேவகீவஸுதேவர்களைச் சிறையினின்று விடுவித்து அவர்களுடைய பாதங்களில் விழுந்து நமஸ்காரஞ் செய்தார்கள். தேவகியும் வஸுதேவனும் அங்ஙனம் வந்தனஞ் செய்கின்ற பிள்ளைகளை ஜகதீச்வரர்களென்று தெரிந்துகொண்டும் மனத்தில் சங்கையின்றி ஆலிங்கனஞ் செய்து கொண்டார்கள். நாற்பத்து நாலாவது அத்யாயம் முற்றிற்று.



ணன் தாய்தந்தைகளை ஸமா தானப்படுத்தி உக்ரஸேனனுக்கு ராஜ்யாபிஷேகஞ்செய்து உபநயனஞ்செய்யப்பெற்று ஸாந்தீபனியிடம் வித்யாப்யாஸஞ்செய்து குருதக்ஷிணை கொடுத்து மீண்டுவருதல்,

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—புருஷோத்தமனாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் சிறந்த புருஷார்த்த ஸ்வரூபனாகிய தன்னுடைய உண்மையைத் தன் தாய் தந்தைகள் தெரிந்துகொண்டிருப்பதை அறிந்து அவர்களுக்கு அத்தெரிவு தொடர்ந்து வரலாகாதென்று நினைத்து ஜனங்களையெல்லாம் மதிமயங்கச் செய்வதாகிய தன் மாயையைப் பரப்பினான். பிறகு ஸ்ரீக்ருஷ்ணன் தமையனுடன் தாய் தந்தைகளிடம் சென்று விநயத்தினால் வணங்கி ஆதரவுடன் 'அம்மா! அண்ணா!' என்று மொழிந்து மனக்களிப்புறச் செய்துகொண்டு மேல்வருமாறு கூறினான்.

ஸ்ரீக்ருஷ்ணன் சொல்லுகிறான்:—அண்ணா! நீங்கள் எங்கள் விஷயத்தில் என்றும் ஆவலுற்றிருப்பினும் உங்கள் புதல்வர்களாகிய எங்கள் [1] பால்யம் பௌகண்டம் கைசோரம் முதலிய இளம்பருவங்களெல்லாம் உங்களுக்கெட்டாத ஏதோ ஒரு இடத்தில் கடந்துபோயின. பாக்ய மற்றவர்களாகையால் நாங்கள் இதுவரையில் உங்களருகாமையில் வாஸஞ் செய்து வளரப்பெற்றிலோம். இளம்பிள்ளைகள் தாய் தந்தைகளின் க்ருஹத்

1. பால்யம்-ஐந்து வயதுவரையில. அதற்குமேல் பத்துவயதுவரையில் பௌகண்டம். அதற்குமேல் பதினைந்துவயதுவரையில் கைசோரமென்றுணர்க. ஐந்துக்குமேல் ஒன்பதுவரையில் பௌகண்டம். அதற்குமேல் பதினாறுவரையில் கைசோரமென்று சிலர். இவ்விஷயம் பதினைந்தாவது அத்யாயத்தின் முதல் ச்லோகவ்யாக்யானத்தில முனிபாவப்ரகாசிகையில் காண்க.

தில் இருந்து அவர்களால் நாளொரு மேனியும் பொழு தொரு வண்ணமுமாக வளர்த்துச் சீராட்டப் பெற்று எத்தகைய ஸந்தோஷத்தை அடைவார்களோ, அத் தகைய ஸந்தோஷத்தை நாங்கள் அடையப்பெற்றி லோம். தர்மம் முதலிய ஸமஸ்த புருஷார்த்தங்களுக் கும் விளைநிலமாகிய தேஹத்தைப்படைத்து வளர்த்த வர்களான தாய் தந்தைகள் விஷயத்தில் பட்ட கடனை நூறுாண்டுகள் சுச்ரூஷை செய்யினும் தீர்த்துக்கொள்ள வல்லவனாகமாட்டான். எவன், தான் ஸமர்த்தனாயிருந் தும், அந்தத் தாய் தந்தைகளுக்குத் தேஹத்தினாலும் தனத்தினாலும் ஜீவனத்தைக் கல்பிக்காதுபோவானோ, அவன் லோகாந்தரம்போகையில் யமதூதர்கள் அவனைத் தன்மாம்ஸத்தைத் தானே புசிக்கச்செய்வார்கள்; இது நிச்சயம். ஸமர்த்தனாயிருப்பவன் வயது முதிர்ந்த தாய் தந்தைகளையும் பதிவ்ரதையான பார்யையையும் சிசுவான பிள்ளையையும் குருவையும சரணம் அடைந்த அந்தண னையும் தன் திறமைக்கு உரியபடி போஷியாது போவா னாயின் அவன் ஜீவித்துக்கொண்டிருப்பினும் மரணம் அடைந்தாற்போலவே. ஆகையால் கம்ஸனிடத்தினின்று பயந்த மனமுடையவர்களாகி உங்களை ஆராதித்துக் கொண்டு உங்களருகாமையில் இருக்க முடியாமல் மறைந் திருந்த எங்களுக்கு இந்த நாள்களெல்லாம் வீணாகவே கடந்தன. மாதாவே! நாங்கள் இத்தனைகாலம் பராதீனர் களும் பலவருத்தங்கள் நேரப்பெற்றுத் துக்கித்த மன முடையவர்களுமாகி உங்களுக்குச் சுச்ரூஷை செய்ய முடியாதிருந்தோமாகையால் எங்களுடைய அந்த அப ராதத்தைப் பொறுத்தருளவேணும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—தன்னைப் பற்றினவர்க ளுடைய மனவருத்தங்களைப் போக்கி விருப்பங்களை

நிறைவேற்றும்பொருட்டுத் தன் ஸங்கல்பத்தினால் மானிட உருவம் பூண்ட பரம புருஷனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் இங்ஙனம் மொழிந்த வசனத்தைக் கேட்டு மதிமயங்கின தேவகீ வஸுதேவர்கள் பிள்ளைகளாகிய அந்த ராம க்ருஷ்ணர்களை மடியில் ஏறிட்டுக் கட்டியணைத்துக் களிப்புற்றார்கள். ராஜனே! தாய்தந்தையர்களாகிய அந்தத் தேவகீ வஸுதேவர்கள் ஸ்ரீக்ருஷ்ணனுடைய மாயையினால் மதிமயங்கி ஸ்னேஹமாகிற பாசத்தினால் கட்டுண்டு கண்ணீர்த்தாரைகளால் புதல்வர்களை நனைத்துக் கண்ணீர்களால் கண்டம் தடைபடப்பெற்று ஒன்றும் பேச முடியாதிருந்தார்கள் ஷாட்குண்யபூர்ணனாகிய தேவகியின் புதல்வன் தாய் தந்தைகளை ஆச்வாஸப்படுத்திப் பாட்டனாராகிய உக்ரஸேனனை யாதவர்களுக்கு ப்ரபுவாக ஏற்படுத்தி அவனைக்குறித்து இங்ஙனம் மொழிந்தான்.

ஸ்ரீக்ருஷ்ணன் சொல்லுகிறான்:—மிகுந்த பாக்யமுடையவனே! மஹாமதீ! உன் ப்ரஜைகளாகிய எங்களைக் கட்டளையிட்டு ஆண்டுவருவாயாக. 'ஸமர்த்தனாகிய நீயே ஆளவேண்டும்' என்ன வேண்டாம். ஏனெனில், யாதவர்களுக்கு யயாதியின் சாபமாகையால் யாதவனாகிய நான ராஜஸிம்ஹாஸனத்தில் உட்காரலாகாது. (நீரும் யாதவரேயாயினும் என்னுடைய ஆஜ்ஞையினால் ஸிம்ஹாஸனத்தில் உட்கார்ந்து ஆண்டுவருவீராயின் உமக்குத் தோஷம் உண்டாகாது). 'திறமையில்லாத நான் எப்படி ஆள்வேனா?' என்று கழிக்கவேண்டாம். உம்முடைய ப்ருத்யனாகிய நான் உம்மைப் பணிந்து வருகையில் தேவச்ரேஷ்டர்களும் தலைவணங்கி உமக்குக் கப்பங் கொடுப்பார்கள். மற்ற மன்னவர்கள் உம்மைப் பூஜிப்பார்களென்பதைப்பற்றிச் சொல்லவேண்டுமோ?

ஸ்ரீ சுகர் சொல்லுகிறார்:—பிறகு ஸர்வஜ்ஞனாகிய ஸ்ரீக்ருஷ்ணபகவான் கம்ஸனிடத்தினின்று பயந்து திசைகளைப் பற்றியோடியிருந்த தன் பந்துக்களும் ஸம்பந்திகளுமாகிய யாதவர் வ்ருஷ்ணிகள் அந்தகர் மதுக்கள் தாசார்ஹர் குகுரர் முதலிய அனைவரையும் நல்வார்த்தைகளால் ஆஶ்வாஸப்படுத்தி வெகுமதித்துப் பரதேச வாஸத்தினால் இளைத்திருக்கின்ற அவர்களுக்கு வேண்டியவளவு பணத்தைக் கொடுத்து மிகவும் த்ருப்தியை விளைத்து அவரவர் க்ருஹங்களில் வஸிக்கும்படி ஏற்படுத்தினான். பிறகு அந்த யாதவாதிகள் ஸ்ரீக்ருஷ்ணராமர்களால் மனக்கவலைகளெல்லாம் தீர்ந்து மனோரதங்களெல்லாம் கைகூடப்பெற்றுப் பூர்ணகாமர்களாகி ஸ்ரீக்ருஷ்ண ராமர்களின் புஜங்களால் பாதுகாக்கப்பட்டுத் தங்கள் க்ருஹங்களில் களிப்புற்றிருந்தார்கள்; இரக்கம் புன்னகை இவைகளோடுகூடிய கண்ணோக்கம் அமைந்து மிகவும் அழகாகி என்றும் களிப்புற்று மலர்ந்து மனோஹரமாயிருக்கின்ற முகுந்தனுடைய முகாரவிந்தத்தைத் தினந்தோறும் பார்த்துக்கொண்டு மனமகிழ்ந்திருந்தார்கள். அப்பொழுது வயது சென்றவர்களும் முகுந்தனுடைய முகாரவிந்தத்தில் பெருகுகின்ற அம்ருதத்தைக் கண்களால் பானஞ்செய்துகொண்டு யௌவனவயது வரப்பெற்றுப் பலம் ஒளி இவை மிகப்பெற்றிருந்தார்கள். ராஜேந்த்ரனே! பிறகு மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணனும் பலராமனும் நந்தனிடம்சென்று அவனை அணைத்து இங்ஙனம் மொழிந்தார்கள்.

ஸ்ரீ க்ருஷ்ண ராமர்கள் சொல்லுகிறார்கள்:—தந்தையே! நீங்கள் மிகுந்த அன்புடன் எங்களைச் சீராட்டிவளர்த்து வந்தீர்கள். ஆனால் இது ஆச்சர்யமன்று தாய் தந்தைகளுக்குத் தங்கள் சரீரத்தைக் காட்டிலும் புதல்

வர்களிடத்தில் ப்ரீதி அதிகமாயிருக்குமல்லவா? பந்துக்களால் வளர்த்துக்காக்கமுடியாமல் துறக்கப்பட்ட குழந்தைகளை எவர்கள் எடுத்துத் தங்கள் குழந்தைக்களைப்போல் வளர்த்துப் பாதுகாக்கின்றார்களோ அவர்களே தாய்தந்தைகளாவார்கள். அப்பனே! நீங்கள் இடைச்சேரிக்குப் போவீர்களாக. நாங்களோவென்றால் இங்குள்ள பந்துக்களுக்கும் நண்பர்களுக்கும் ப்ரியஞ்செய்து எங்களிடத்தில் ஸ்னேஹத்தினால் எங்களை விட்டுப் பிரிந்திருக்கமுடியாமல் வருந்துகின்ற உங்களைப் பார்க்க வருகினேறோம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—தன் பக்தர்களைக் கைவிடாமல் பாதுகாக்குந்தன்மையனும் ஷாட்குண்யபூர்ணனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன இங்ஙனம் ஸபையில் இடையர்களோடு கூடிய நந்தனை நல்வார்த்தைகளால் ஸமாதானப்படுத்தி ஆடையாபரணம் வெண்கலம் முதலிய பாத்ரங்கள் இவை முதலிய பலபரிசுகளால் ஆதரவுடன் பூஜித்தான். இங்ஙனம் சொல்லி வெகுமதிக்கப்பட்ட நந்தன் ராமக்ருஷ்ணர்களை ஆலிங்கனஞ்செய்து ப்ரீதியினால் தழதழத்துக் கண்களை நீர்களால்நிரப்பிக்கொண்டு கோபர்களுடன கோகுலம் போய்ச் சேர்ந்தான். பிறகு வஸுதேவன் புரோஹிதரான கர்க்காசார்யரையும் மற்றும் ப்ராஹ்மணர்களையும் வரவழைத்து வைத்துக்கொண்டு ராமக்ருஷ்ணர் களிருவருக்கும் விதிப்படி உபநயனமெனனும் ஸம்ஸ்காரத்தை நன்றாக நடத்தினான். பிறகு நன்றாக அலங்கரித்துக்கொண்டிருக்கின்ற அந்தணர்களைப் பூஜித்துத் தக்ஷிணை கொடுத்துப் பொற்சங்கிலியும் மற்றும் பல அலங்காரங்களும் செய்யப்பெற்றுக் கன்றோடு கூடியவைகளும் வெண்பட்டு வஸ்த்ரத்தினால்

மாலேயிடப் பெற்றவைகளுமாகிய[1] கோக்களேயும் கொடுத்தான். கம்பீரமான மதியுடைய அவ்வஸுதேவன் ஸ்ரீ க்ருஷ்ணராமர்களின் அவதார மஹோத்ஸவத்தினன்று எத்தனை பசுக்களேக் கொடுக்கவேண்டுமென்று மனத்தினால் நினைத்திருந்தானே; கம்ஸன் அதர்மத்தினால் பறித்துக்கொண்டுபோன அத்தனை பசுக்களேயும் மனத்தில் மறவாது வைத்துக்கொண்டிருந்து ப்ராஹ்மணர்களுக்குக் கொடுத்தான். அப்பால் வ்ரதங்களே நன்றாக நடத்துந் திறமையுடைய அந்த ராமக்ருஷ்ணர்கள் உபநயன ஸம்ஸ்காரம் செய்யப்பெற்று யதுகுலத்திற்கு ஆசார்யராகிய கர்க்கரிடத்தினின்று ப்ரஹ்மசர்ய வ்ரதத்தைப் பெற்றார்கள். ஸமஸ்தவித்யைகளுக்கும் விளைநிலமும் ஸர்வஜ்ஞர்களுமாகிய அந்த ராமக்ருஷ்ணர்கள் ஸ்வதஸ்ஸித்தமான ஜ்ஞானத்தை மனுஷ்யசேஷ்டைகளால் மறைத்துக்கொண்டு ஒன்றுமறியாதவர்கள்போன்று குருகுல வாஸஞ்செய்யவிரும்பிக் காஸ்யபகோத்ரத்தில் பிறந்தவரும் அவந்திபுறத்தில் வஸிப்பவருமாகிய ஸாந்தீபனனென்னும் ஆசார்யரிடம் சென்றார்கள். பிறகு அந்த ராமக்ருஷ்ணர்கள் விதிப்படி அவரைக்கிட்டி ஜிதேந்த்ரியர்களாகிக் குருவினிடத்தில் நடத்தவேண்டிய நிர்த்துஷ்டமான நடத்தையைத் தங்களுடைய ஆசாரத்தினால் பிறர்க்குத் தெரிவிக்கமுயன்று மிகுந்த ஆதரவுடன் தேவதையைப்போல் குருவைப் பணிந்து வந்தார்கள். பரிசுத்தமான மனக்கருத்துடன் அவர்கள் செய்த பணிவிடைகளால் ப்ராஹ்மணஸ்ரேஷ்டராகிய அவ்வாசார்யர் ஸந்தோஷம் அடைந்து சிக்ஷை கல்பம் முதலிய ஆறு அங்கங்களோடும் உபநிஷத்துக்களோடுங் கூடிய வேதங்களே யெல்லாம் அந்தராமக்ருஷ்ணர்களுக்குச் சொன்

1. கோ-பசு.

ஞர். ரஹஸ்யமான மந்த்ரம் தேவதை இவைகளின் ஞானத்தோடு கூடிய தனுர்வேதத்தையும் மனுமுதலியவர்கள் இயற்றின தர்மசாஸ்த்ரங்களையும் மீமாம்ஸாந்யாயம் முதலியவற்றையும் தர்க்கவித்யையையும் ஸந்தி விக்ரஹம் முதலிய ஆறுவகையான ராஜநீதியையும் அவர்களுக்குச் சொன்னார். மன்னவனே! தேவதைகளில் சிறந்தவர்களும் ஸமஸ்த வித்யைகளுக்கும் ப்ரவர்த்தகர்களுமாகிய அந்த ராமக்ருஷ்ணர்கள் குரு உபதேசித்தவற்றை யெல்லாம் ஒருதரம் சொன்னமாத்ரத்தில் அப்படியே நன்றாகத்தெரிந்து கொண்டார்கள். மன்னவனே! அவர்கள் அறுபத்து நான்கு நாள்களில் அறுபத்துநான்கு வித்யைகளைக் கற்றார்கள். பிறகு குருதக்ஷிணைக்காக ஆசார்யனை வேண்டினார்கள். ராஜனே! ஸாந்தீபனரென்னும் அவ்வந்தணர் அறுபத்து நான்கு தினங்களில் அறுபத்து நான்கு வித்யைகளைக் கற்றமையாகிற அற்புதமான மஹிமையையும் மனிடவர்க்கு நேரக்கூடாத அவர்களுடைய சேஷ்டையையும் கண்டு அவர்கள் மஹாபுருஷர்களென்று நிச்சயித்துப் பத்னியுடன் ஆலோசித்து மஹத்தான ஸமுத்ரத்தில் ப்ரபாஸ தீர்த்தத்தில் மரணம் அடைந்த இளைஞனான தன்புதல்வனைக் கொண்டுவந்து கொடுக்கும்படி வேண்டினார். செத்தவனைத் திருப்பிக் கொண்டு வருவதுங்கூட எங்கேனும் உண்டா! இதென்ன ஆச்சர்யம்! அப்போது மஹாரதிகர்களாகிய அந்த ராமக்ருஷ்ணர்கள் அப்படியே ஆகட்டுமென்று அங்கீகரித்து அளவற்ற பராக்ரமமுடையவர்களாகையால் சிறிதும் அஞ்சாமல் ரதத்தின்மேல் ஏறிக்கொண்டு ப்ரபாஸதீர்த்தத்திற்குச்சென்று அங்கு ஸமுத்ரக்கரையை அடைந்து க்ஷணகாலம் உட்கார்ந்திருந்தார்கள். அப்பொழுது ஸமுத்ரராஜன் இவர்கள் ஸர்வேச்வரர்களென்று தெரிந்து

கொண்டு அவர்களைப் பூஜித்தான். ஸ்ரீக்ருஷ்ணன் அந்த ஸமுத்ரராஜனைப்பார்த்து 'நீ இந்தஸமுத்ரத்தில் ப்ராஹ்மணபுத்ரனைப் பெரிய அலையினால் அடித்துக் கொண்டு போய் மறைத்தனையல்லவா? அவன் எங்கள் குருவாகிய ஸாந்தீபனருடைய புதல்வன். அவனைச் சீக்ரம் கொண்டு வந்து கொடுப்பாயாக' என்றான். அதைக் கேட்ட ஸமுத்ரராஜனும் ஸ்ரீக்ருஷ்ணனை நோக்கித் 'தேவனே! இந்த ப்ராஹ்மண குமாரனை நான் கொண்டு போகவில்லை. ஸ்ரீக்ருஷ்ணா! பஞ்சஜனனென்னும் ஒரு அஸுரன் சங்கத்தின் உருவந்தரித்து என் ஜலத்திற்குள் ஸஞ்சரித்துக் கொண்டிருக்கிறான். அவ்வஸுரன் எனக்கு அடங்கினவனன்று; பெருங் கொடியன். சங்கினுருவந் தரித்த அவ்வஸுரனைச் சங்குகளினிடையில் இன்னவனென்று கண்டு பிடிக்கவுங்கூட முடியாது. அவனே கொண்டு போயிருக்கவேண்டும். நிச்சயம்' என்றான். ஸமர்த்தனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் அந்த ஸமுத்ரராஜனுடைய வசனத்தைக் கேட்டு விரைவுடன் ஸமுத்ரஜலத்திற்குள் இழிந்து அந்தப் பஞ்சஜனனைக் கொன்று அவனுடைய வயிற்றில் அப்பாலகனைக் காணாமல் அவனுடைய அங்கத்தினின்று உண்டான பாஞ்சஜன்யமென்னும் சங்கத்தை எடுத்துக்கொண்டு ரதத்தின்மேல் ஏறினான். பிறகு ஸ்ரீக்ருஷ்ணன் யமனுக்கு ப்ரியமான ஸம்யமனியெனனும் பட்டணத்திற்குச் சென்று பாஞ்சஜன்யத்தை ஊதினான். அப்பொழுது, சாஸ்த்ர மர்யாதைகளைக் கடக்கும் ப்ரஜைகளைத் தண்டிக்கு மதிகாரத்திலிருப்பவனாகிய யமன சங்கத்தின் த்வனியைக் கேட்டுவந்து பக்தியுடன் அவர்களைப் பூஜித்தான். அந்த யமன் ஸமஸ்த ப்ராணிகளுடைய ஹ்ருதயங்களையும் வாஸஸ்தானமாகவுடைய ஸ்ரீக்ருஷ்ணனை வணங்கி 'லீலைக்காக மானிட

உருவங் கொண்டவனே! விஷ்ணு! (எங்கும் நிறைந்திருப்பவனே!) உங்களுக்கு எங்களால் என்ன ஆகவேண்டும்? உங்கள் ப்ருத்யர்களாகிய எங்களை நியமிப்பாயாக' என்று மொழிந்தான் ஸ்ரீக்ருஷ்ணன் அதைக் கேட்டு 'எங்கள் குருபுத்ரனை அவன்கர்மங்களைப்பற்றி உன்ப்ருத்யர்கள் இவ்விடம் கொண்டுவந்தார்களல்லவா? மஹாராஜனே! அவனை என் கட்டளையை முன்னிட்டு எனக்குத் திருப்பிக்கொடுப்பாயாக' என்று யமனைக் குறித்து மொழிந்தான். அந்த யமதர்மராஜனும் அப்படியே ஆகட்டுமென்று கொண்டுவந்து கொடுக்க ஸ்ரீக்ருஷ்ணராமர்களும் அக்குருபுத்ரனைக் கொண்டுவந்து தன் குருவுக்கு ஸமர்ப்பித்து மீளவும் அவரை வேறுவரம் வேண்டும்படி தூண்டினார்கள். இங்ஙனம் மொழியப்பட்ட அவ்வந்தணர் 'குழந்தைகளே! நீங்கள் குருதக்ஷிணையை நன்றாக நடத்தினீர்கள். உங்களைப் போன்றவர்க்கு நான் குருவான பின்பு என்னுடையவிருப்பம் எதுதான் நிறைவேறாதிருக்கும். வீரர்களே! நீங்கள் உங்கள்க்ருஹத்திற்குப் போவீர்களாக. உங்கள்புகழ் உலகங்களையெல்லாம புனிதஞ் செய்து நிரப்புமாக' என்று மொழிந்தார். அப்பனே! இங்ஙனம் குருவால் அநுமதி கொடுக்கப்பட்ட அந்த ராமக்ருஷ்ணர்கள் வாயுவேக முடையதும் மேககர்ஜனையோ டொத்த கம்பீரமான த்வனியுடையதுமாகிய ரதத்தின்மேல் ஏறிக்கொண்டு க்ருஹத்திற்கு வந்து சேர்ந்தார்கள். வெகுநாளாக அவர்களைக் காணுதிருந்த மதுராபுரத்து ஜனங்கள் அப்பொழுது அந்த ராமக்ருஷ்ணர்களைக் கண்டு கெட்டுப்போன பணம் கைபுகப் பெற்றவர்கள்போல மிகவும் ஸந்தோஷம் அடைந்தார்கள். நாற்பத்தைந்தாவது அத்யாயம்

ஸ்ரீக்ருஷ்ணன் உத்தவனைக் கோகுலத்திற்கு அனுப்பி நந்தகோப யசோதைகளையும் கோபிகளையும் ஸமாதானப் படுத்துதல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மதுரையில் உத்தவனென்பவன் ஒருவன் உளன். அவன் வ்ருஷ்ணிகளில் சிறந்தவன்; ஸ்ரீக்ருஷ்ணனுக்கு ப்ரியமுள்ள நண்பனும் மந்த்ரியுமாயிருப்பவன்; ப்ருஹஸ்பதிக்கு நேரே சிஷ்யன்; இயற்கையாகவே புத்தியுடையவர்களில் சிறந்தவன்; மிகவும் புகழத்தகுந்தவன; ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் மாறாத பக்தியுடையவன். தன்னைச் சரணம் அடைந்தவர்களின் மனவருத்தங்களைப் போக்குந் தன்மையுள்ள ஸ்ரீக்ருஷ்ணன் அவனை ஒருகால் ரஹஸ்யத்தில் அழைத்துத் தன் கையினால் அவனது கையைப் பிடித்துக்கொண்டு இங்ஙனம் மொழிந்தான்.

ஸ்ரீக்ருஷ்ணன சொல்லுகிறான்:—நல்லியற்கையுடையவனே! உத்தவா! நீ கோகுலத்திற்குப் போய் எங்கள் தாய் தந்தைகளாகிய நந்தகோப யசோதைகளுக்கும் கோபிகைகளுக்கும் ப்ரீதியை விளைப்பாயாக. என்னைப் பிரிந்தமையால் உண்டான அவர்களுடைய மனவருத்தத்தை என்வார்த்தைகளால் போக்குவாயாக. கோபிகைகள் என்னிடத்திலேயே நிலைநின்ற மனமுடையவர்கள்; என்னையே ப்ராணனாகவுடையவர்கள்; எனக்காகத் தேஹபோஷணத்தைத் துறந்தவர்கள்; மன இரக்கமுடையவனும் மிகுந்த அன்பனும் அந்தராத்மாவுமாகிய என்னையே எப்பொழுதும் மனத்தினால் சரணம அடைந்திருப்பவர்கள். எவர்கள் எனக்காக லோகதர்மங்களையெல்லாம் துறந்திருப்பார்களோ, அவர்களை நான போஷிப்பது வழக்கமாகையால் நீ கோகுலத்திற்குச் சென்று என்னுடைய வார்த்தைகளால் கோபிகைகளின் மனவருத்தத்தைப் போக்குவாயாக. உத்தவனே! அந்தக்

கோபிகைகள் ப்ரீதிக்கிடமானவைகளெல்லாவற்றிலும் மிகவும் ப்ரீதிக்கிடமாகிய நான் தூரத்தில் இருப்பினும் என்னையே நினைத்துக்கொண்டு என்னைப் பிரிந்திருக்கையால் என்னைக் கண்டனுபவிக்க வேணுமென்னும் பேராவலுற்று அதனால் தழுதழுத்து மெய்மறந்து மோஹித்திருப்பார்கள். நான் கோகுலத்தினின்று புறப்பட்டு வரும்பொழுது 'சீக்கிரத்தில் திரும்பி வருகிறேன்' என்று சொல்லியனுப்பின வார்த்தைகளை நம்பி என்னுடையவர்களான கோபிகைகள் என்னிடத்தில மனத்தை நிலைநிறுத்தி விரஹதாபத்தினால் தஹிக்கப்பட்டவர்களாகவே மிகவும் வருத்தத்துடன் பெருமபாலும் ப்ராணன்களைத் தரித்துக்கொண்டிருக்கிறார்கள். ஆகையால் அவர்களை அவஶ்யம் ஸமாதானப்படுத்தவேண்டும்.

ஶ்ரீசுகர் சொல்லுகிறார்:— ராஜனே! இங்ஙனம் சொல்லப்பட்ட உத்தவன ஆதரவுடன் தன்ப்ரபுவான ஶ்ரீக்ருஷ்ணனுடைய வார்த்தையை எடுத்துக்கொண்டு ரதத்தில் ஏறி நந்தகோகுலம் போனான. அவ்வுத்தவன் ஸூர்யன் அஸ்தமிக்கும் ஸமயத்தில ஸம்ருத்திகளெல்லாம அமைந்த நந்தகோகுலம போய்ச் சேர்ந்தான். அப்பொழுது பசுக்கள் நுழைந்து கொண்டிருந்தன வாகையால் அவற்றின குளப்படிகளால கிளம்பின தூட்களில் ரதம மறையப்பெற்றுஒருவர்க்கும் தெரியாமல் நந்தகோபனிடம சேர்ந்தான. ஆதலால் அவன் வந்தது கோபிகைகளுக்குத தெரியவில்லை. அப்பொழுது கோகுலத்தில் மதித்த எருதுகள் யௌவனமுள்ள பசுவுடன ஸம்போகிப்பதற்காக ஒன்றோடொன்று சண்டையிட்டுக்கொண்டிருந்தன. பசுக்கள் பாலின மிகுதியால் பளுவுள்ள மடிகளுடன கூடிக் கன்றுகளைக் குறித்து ஓடிக்கொண்டிருந்தன. பெருத்த பசுக்களும் கன்றுகளும் இங்குமங்கும் கிளம்பிக் குதித்து விளையாடிக்கொண்டிருந்தன. அத

ால் அந்தக் கோகுலம் மிகவும் அழகாயிருந்தது. பசுக்களைக் கறக்கும் சப்தங்களுடன் 'கன்றைவிடு, விடவேண்டாம். பாத்ரம் கொண்டுவா. கொண்டுபோ' என்னும் இவை முதலிய பல சப்தங்களும் வேணுகானத்வனிகளும் அக்கோகுலத்தை விளங்கச்செய்தன. கோபிகைகளும் கோபர்களும் நன்றாக அலங்கரித்து ஸ்ரீக்ருஷ்ணராமர்களின் பரிசுத்தமான செயல்களைப் பாடிக்கொண்டிருந்தார்கள். அக்னி ஸூர்யன் அதிதி பசு ப்ராஹ்மணன் பித்ருக்கள் தேவதை இவர்களின் பூஜை நடக்கப்பெற்ற கோபர்களின் வாஸஸ்தானங்களாலும் தீபம் தூபம் பூமாலை இவைகளாலும் கோகுலம் மிகவும் விளக்கமுற்று அழகாயிருந்தது. அங்கு எல்லாப் புறங்களிலும் வனங்கள் புஷ்பித்திருந்தன, பக்ஷிகளும் வண்டுகளும் சப்தித்துக்கொண்டிருந்தன. ஹம்ஸம் நீர்க்கோழி முதலிய பறவைகள் நிறைந்திருந்தன. தாமரையோடைகள் அளவற்றிருந்தன. அவற்றால் அக்கோகுலம் அலங்காரமுற்றிருந்தது. நந்தகோபன் ஸ்ரீக்ருஷ்ணனுடைய [1] அனுசரனும் அன்பனுமாகிய அவ்வுத்தவன் வந்திருப்பதைக் கேட்டு வந்து ப்ரீதியுடன் அணைத்துக்கொண்டு வாஸுதேவனென்னும் புத்தியுடன் அவனைப் பூஜித்தான். பிறகு அவ்வுத்தவனுக்கு அறுசுவைகளும் அமைந்து மிகவும் சிறந்த அன்னம் அளிக்க அவனும் அதைப் புசித்துப் படுக்கையில் ஸுகமாக உட்கார்ந்திருக்கையில் கால்பிடிப்பது முதலிய உபசாரங்களால் வழிநடந்து வந்த ஶ்ரமங்களெல்லாம் தீரும்படி செய்துகொண்டே மேல் வருமாறு வினவினான்.

நந்தகோபன் சொல்லுகிறான்:—மிகுந்த பாக்யமுடையவனே! எங்கள் நண்பனாகிய வஸுதேவன் சிறையி

1. அனுசரன்-ப்ருத்யன்; வேலைக்காரன்.

னின்று விடுபட்டு நண்பர்களால் சூழப்பட்டுக் குழந்தை முதலியவர்களோடு க்ஷேமமாயிருக்கின்றானா? தர்மத்தையே அனுஷ்டிக்குந் தன்மையரும் ஸாதுக்களுமாகிய யாதவர்களை எப்பொழுதும் த்வேஷித்துக் கொண்டிருந்த பாபிஷ்டனாகிய கம்ஸன் தன்னைச் சேர்ந்தவர்களுடன் தன்னுடைய பாபகர்மத்தினாலேயே மாண்டான். இது நமக்குப் பெரிய ஆநந்தம். ஸ்ரீக்ருஷ்ணன் என்னையும் தாயையும் ஸ்னேஹிதர்களையும் நண்பர்களையும் கோபர்களையும் தன்னையே நாதனாகவுடைய கோகுலத்தையும் பசுக்களையும் ப்ருந்தாவனத்தையும கோவர்த்தனகிரியையும் நினைக்கிறானா? ஸ்ரீக்ருஷ்ணன் தன் ஜனங்களைப் பார்க்கவருவானா? வருவானாயின, அழகிய மூக்கும் அழகிய புன்னகையோடு கூடின கண்களும் அமைந்த அவனது முகத்தைக் காண்பேன. காட்டுத்தீ காற்றுமழை வ்ருஷாஸுரன் அகாஸுரன் இவற்றினின்றும் கடக்க முடியாத மற்றும் பலவகை ம்ருத்யுக்களினின்றும் நாங்கள் மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணனால் பாதுகாக்கப்பட்டோம். ஓ உத்தவனே! ஸ்ரீக்ருஷ்ணனுடைய வீரச்செயல்களையும் லீலைகள் அமைந்த கடைக்கண்ணோக்கத்தையும் சிரிப்பையும் பேச்சையும் நினைக்கின்ற எங்களுக்கு வ்யாபாரங்களெல்லாம் நழுவுகின்றன. ஸ்ரீக்ருஷ்ணனுடைய அடிவைப்புக்களால அலங்கரிக்கப்பட்ட நதிகளையும் பர்வதங்களையும் வனப்ரதேசங்களையும் அவன் விளையாடின மற்றும் பல இடங்களையும் பார்த்துக்கொண்டிருக்கின்ற எங்கள் மனம் க்ருஷ்ணனைத்தவிர மற்ற எதையும் நினையாமல் அவனிடத்திலேயே நாடுகின்றது. ராமக்ருஷ்ணர்களிருவரையும் தேவதைகளின்பெரிய ப்ரயோஜனத்தை நிறைவேற்றும்பொருட்டு இவ்வுலகத்தில் அவதரித்த தேவஸ்ரேஷ்டர்களென்று நினைக்கின்றேன். கர்க்கரும் அங்ஙனமே மொழிந்தார். பதினாயிரம் யானை

பலமுடைய கம்ஸனையும் மல்லர்களையும் குவலயாபீட மென்னும் யானையையும் ஸிம்ஹம் பசுக்களைக் கொல்லுவதுபோல அவலீலையாகக் கொன்றார்கள். ஸ்ரீக்ருஷ்ணன மூன்று பனைமாத்தளவுடையதும் இரும்புபோல மிக்க உறுதியுடையதுமாகிய தனுஸ்ஸை, யானை கரும்பந்தடியை முறிப்பதுபோல முறித்தான்; ஒற்றைக்கையினால் கோவர்த்தனகிரியை ஏழுநாள் தரித்துக்கொண்டிருந்தான. தேவாஸுரர்களை வென்ற மஹாபலிஷ்டர்களான ப்ரலம்பன் தேனுகன் அரிஷ்டன் த்ருணாவர்த்தன் பகன் முதலிய அஸுரர்களை இவன் இவ்விடத்தில் இருக்கும் பொழுது அவலீலையாகக் கொன்றான். ஆகையால் அவர்கள் ஸங்கர்ஷணனும் நாராயணனுமாகிய தேவ ஸ்ரேஷ்டர்களே யென்பதில் ஸந்தேஹம் உண்டோ?

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஸ்ரீ க்ருஷ்ணனிடத்தில் மிகுந்த அனுராகம் அமைந்த மதியுடைய நந்தகோபன் இங்ஙனம் நினைத்துநினைத்துக் கண்ணீர்கள் கண்டத்தில் தடைபடப்பெற்றுப் ப்ரீதியின்மிகுதியால் தழுதழுத்து ஒன்றும் பேசாமல் வெறுமனேயிருந்தான். அப்பொழுது யசோதையும் தன்பர்த்தாவினால் வர்ணிக்கப்பட்ட புதல்வனுடைய சரித்ரங்களைக் கேட்டுக்கொண்டிருந்து ஸ்னேஹத்தினால் ஸ்தனங்களில் பால் பெருகப்பெற்றுக் கண்ணீர் பெருக்கினாள். இங்ஙனம் நந்தகோப யசோதைகளுக்கு ஸ்ரீக்ருஷ்ணபகவானிடத்தில் அனுராகம் அளவற்றிருப்பதைக்கண்டு உத்தவன ஸந்தோஷமுற்று நந்தகோபனைப் பார்த்து மொழிந்தான்

உத்தவன் சொல்லுகிறான்:—வெகுமதி யளிக்குந் தன்மையனே! பர்த்தாவும் பார்யையுமாகிய நீங்களிருவரும் தேவதைகளுக்கும பூஜிக்கத்தகுந்தவர்கள். ஸகல ஜகத்திற்கும குருவாகிய ஸ்ரீமந்நாராயணனிடத்தில் இங்ஙனம் அனுராகம் நிறைந்த மதி உண்டாகப்பெற்றீர்க

ளல்லவா? (ஹிதம் செய்கையாலும் நியாமகனுகையாலும் பிறப்பித்தவனுகையாலும் ஜகத்திற்கெல்லாம் தந்தையாகிய பரமபுருஷனிடத்தில் அனுராகம் அளவற்றிருக்கப்பெறுவானுயின், அம்மனிதன் அதைக்காட்டிலும் தன்னுடைய நன்மைக்காகச் செய்யவேண்டிய கார்யம் என்ன இருக்கின்றது? அவன் க்ருதக்ருத்யனே. அவன் தேவதைகளுக்கும் புகழத்தகுந்தவனென்பதில் ஸந்தேஹம் என்ன?) இந்த ராமக்ருஷ்ணர்கள் ஜகத்திற்குக் காரணமான ப்ருக்ருதி முதலிய தத்த்வங்களையும் படைத்த காரணபுருஷர்கள்; சேதனு சேதனங்களைச் சரீரமாகவுடையவர்கள்; புராணபுருஷர்கள். இவர்கள் தேவமனுஷ்யாதி ரூபங்களாகிப் பலவாரு யிருக்கின்ற பூதங்களுக்குள் ப்ரவேசித்து நியமித்துக்கொண்டு சப்தாதிவிஷயங்களைப்பற்றின அறிவை விளைக்கின்றூர்கள். இவர்களே தன்னைப்பற்றின விலக்ஷணஜ்ஞானத்தையும் விளைக்கின்றூர்கள். க்ஷணகாலமாயினும் வேறு விஷயங்களில் செல்லாமல் பரிசுத்தமான மனத்தை எவனிடத்தில் வைத்துக் கர்மவாஸனையை அழித்து ஜ்ஞானம் நிறைந்து அப்ராக்ருதமான திவ்யமங்களவிக்ரஹத்தைப் பெற்றுப் பராங்கதியைப் பெறுவானே; அத்தகையனும் ஸாதுக்களைப் பாதுகாக்கையாகிற காரணத்தைப் பற்றித் தன்ஸங்கல்பத்தினுல் மானிட உருவங்கொண்டவனும் சேதனுசேதனரூபமான ஜகத்திற்கெல்லாம் அந்தராத்மாவும் காரணனும் மஹானுபாவனுமாகிய ஸ்ரீமந்நாராயணனிடத்தில் நீங்கள் அளவற்ற அனுராகம் உண்டாகப்பெற்றிருக்கின்றீர்களாகையால் நீங்கள் செய்யவேண்டிய கார்யம் என்ன மிகுந்திருக்கின்றது? எதுவுமில்லை. நீங்களே க்ருதக்ருத்யர்கள். தன்னைப் பற்றினவர்களைக் கைவிடாமல் பாதுகாக்குந் தன்மையனுகிய ஸ்ரீக்ருஷ்ணன் அல்பகாலத்திற்குள்ளாகவே

இந்தக் கோகுலத்திற்கு வரப்போகிருன். தன்பக்தர்களைப் பாதுகாக்குந் தன்மையுள்ள அந்த ஸ்ரீக்ருஷ்ணன் இங்கு வந்து தாய்தந்தைகளாகிய உங்கள் ப்ரியத்தை நிறைவேற்றப் போகிருன். ஸமஸ்தமான யாதவர்களுக்கும் மற்றுமுள்ள தன் பத்னிகளுக்கும் ப்ரதிகூலனுகிய கம்ஸனை அரங்கத்தினிடையில் கொன்று மஹானுபாவனுகிய ஸ்ரீக்ருஷ்ணன் உங்களைக் குறித்து யாது மொழிந்தானே, அதை அவன் இவ்விடம் வந்து உண்மையாகவே நடத்தப்போகிருன். மிகுந்த பாக்ய முடையவர்களே! நீங்கள் வருத்தப்படவேண்டாம். ஸமீபத்திலேயே நீங்கள் ஸ்ரீக்ருஷ்ணனைக் காண்பீர்கள். மற்றும், அந்தப் பகவான மதுரையில்மாத்ரமே இருக்கிருனென்பதில்லை. இவ்விடத்திலுங்கூட இருக்கின்றுன். ஆனுல் அவன் எல்லோர்க்கும் ஏன புலப்படவில்லையென்னில், அரணிக்கட்டையில அக்னி மறைந்திருப்பதுபோல ப்ராணிகளின் ஹ்ருதயத்திற்குள் மறைந்திருக்கின்றுன். கடைவது முதலிய உபாயத்தினுல் அவ்வக்னி புலப்படுவது போலப் பகவானும் பக்தியுடையவர்களுக்குப் புலப்படுவான், மற்றவர்களுக்குப் புலப்படமாட்டான். 'ஸ்ரீக்ருஷ்ணன் வரப்போகிரு னென்கிருய், அது எங்களுக்குத் தோற்றவில்லை. ஏனென்ருல், எங்களைக்காட்டிலும் மிகவும் அன்பிற்கிடமான வஸுதேவாதிகளைத் துறந்து எங்களைப் பார்ப்பதற்காக எங்ஙனம் வருவான்' என்று நீங்கள் சங்கிக்கவேண்டாம். இந்த ஸ்ரீக்ருஷ்ணனுக்கு மிகவும் அன்பிற்கிடமானவன் எவனுமே இல்லை. ப்ரீதிக்கிடமாகாதவனும் எவனும் கிடையாது. இவன் எதையும் என்னுடையதென்று அபிமானிக்குந் தன்மையனல்லன். இவன் எல்லார்க்கும் ஸமனுயிருப்பவன். இவன் ஒருவனை மேற்பட்டவனென்ருவது, ஒருவனைக் கீழ்ப்பட்டவனென்

ருவது, ஒருவனைத் தனக்கு ஸமான னென்றாவது நினைக்கமாட்டான். அவனுக்குத் தாயாவது தந்தையாவது பார்யையாவது பிள்ளை முதலிய மற்ற பந்துக்களாவது தன்னுடையவனாவது பிறனாவது கிடையாது. இவர்களெல்லோரும் தேஹத்தைப் பற்றினவர்களல்லவோ? அவனுக்குத் தேஹமே கிடையாது. புண்யபாப கர்மங்களைப் பற்றியல்லவோ தேவமனுஷ்யாதி தேஹங்களெல்லாம் உண்டாகின்றன. அவனுக்கு அத்தகைய புண்யபாபகர்மமே கிடையாது. இவ்வுலகத்தில் ஜீவாத்மாக்களுக்கு நேரும் பிறவிபோன்ற பிறவி அவனுக்குக் கிடையாது. அவன பிறவி அவதாரமே. பிறவி செயல் முதலியவையற்றவனாயினும் விளையாட்டிற்காகவும் ஸத்புருஷர்களைப் பாதுகாக்கையாகிற பெரியப்ரயோஜனத்திற்காகவும் அவன இவ்வுலகத்தில் மேன்மையும் தாழ்மையும் நிரந்தரமுமாகிய தேவர் மனுஷ்யர் திர்யக்கு என்னும் யோனிகளில் அவதரிக்கின்றான். ஜீவாத்மாக்களைப் போலப் புண்யபாபகர்மங்களால் பிறப்பவனல்லன். ஆகையால் அவனுக்குத் தாய்தந்தை முதலியவர்கள் எவருமே கிடையாது. ஜீவனைப்போல ஸத்த்வம் ரஜஸ்ஸு தமஸ்ஸு என்னும் ப்ராக்ருதகுணங்களுக்கு உட்படாதவனாயினும் ஸத்த்வாதிகுணங்களைத் தன்விளையாட்டிற்குக் கருவியாக ஏற்றுக்கொண்டு அவற்றிற்குத் தானுட்படாமல் அவற்றை அடக்கியாள்கின்றான். ஜீவாத்மாக்களோ வென்றால் அவற்றில் போக்யங்களென்னும் புத்தி உண்டாகப்பெற்று அவற்றை அடக்கியாள முடியாமல் தொடாகின்றார்கள். அவன அந்தக்குணங்களைக் கருவியாகக் கொண்டு படைப்பதும் காப்பதும் அழிப்பதுமாகி விளையாடிக்கொண்டிருப்பினும் அவற்றால் பரிபவிக்கப் படாமலே விளக்கமுற்றிருக்கின்றான். அவன் பிறவி முத

லிய விகாரங்களற்றவன். சுழலமிடுகின்ற கண்ணுக்குப் பூமியும் சுழல்வதுபோலத் தோற்றுகின்றதல்லவா? அங்ஙனமே ஜீவன் தான் கர்த்தாவாயினும் ஆத்மாவல்லாததும் கர்த்தாவல்லாததுமாகிய தேஹத்தை ஆத்மாவாகவும் கர்த்தாவாகவும் நினைக்கின்றான். அஜ்ஞானத்தினால் அவனுக்குத் தேஹமே அங்ஙனம் தோற்றுகிறது. பரமபுருஷன் அத்தகையனல்லன். மற்றும், சுழலுங் கண்ணுக்குப் பூமியும் சுழல்வதுபோலத் தோற்றுகிறாப்போல இந்த ஸ்ரீக்ருஷ்ணன் ஜீவாத்மாக்களைக்காட்டிலும் விலக்ஷணனாயினும் அவனுடைய உண்மையை அறியாதவர்களுக்குப் புண்யபாபகர்மங்களைச் செய்கின்ற ஸாதாரண ஜீவன்போலத் தோற்றுகிறான். ஜ்ஞானம் முதலிய கல்யாண குணங்களையுடையவனும் தன்னைப் பற்றினவர்களுடைய ஸம்ஸாரபந்தத்தைப் போக்குந் தன்மையனுமாகிய இந்த ஸ்ரீக்ருஷ்ணன் உங்களுக்குத்தான் புதல்வனென்பதில்லை. எல்லார்க்கும் புதல்வனே; புதல்வன்மாத்ரமேயல்லன்; தந்தையும் தாயும் ஸ்வாமியுமாயிருப்பவன். ஏனென்றால், இவன் எல்லார்க்கும் அந்தராத்மாவாயிருப்பவனல்லவா? ஆகையால் தாய்தந்தை புதல்வன் முதலிய அனைவர்க்கும் அந்தராத்மாவாயிருந்து அந்தந்த ஸுகங்களைக் கொடுப்பவன் அவனே. காணப்படுவது கேட்கப்படுவது கழிந்தது இருப்பது வரப்போகிறது அசைவது அசையாதது பெரியது சிறியது ஆகிய எந்த வஸ்துவும் அச்சுதனைத் தவிர்ந்து வேறுபட்டிருப்பது கிடையாது. எல்லாவஸ்துக்களும் அவனே. அவன் மூன்று லோகங்களிலும் உள்ளே புகுந்து நியமித்துத் தரித்துக்கொண்டிருக்கிறான். ஆயினும் அவன் அவற்றின் தோஷங்கள் தன்மேல் தீண்டப்பெறாமல் பரிசுத்தனாயிருக்குந் தன்மையன்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார் :—ராஜனே! இங்ஙனம் ஸ்ரீக்ருஷ்ணனுடைய அனுசரனாகிய உத்தவனும் நந்தனும் பேசிக்கொண்டிருக்கையில் அவ்விரவு கடந்தது. இரவின் கடைசிஜாமமாகிய அப்பொழுது கோபிகைகள் எழுந்து விளக்குகளை ஏற்றி வாசல் முதலிய இடங்களை மெழுகிக் கோலமிட்டுப் புஷ்பம் கந்தம் முதலியவற்றால் [1] அர்ச்சித்துத் தயிர் கடைந்தார்கள். கடையும்பொழுது மத்தில் சுற்றப்பட்ட கயிற்றை இழுக்கின்ற புஜங்களில் அசைகின்ற வளைகளின் வரிசைகளையுடையவர்களும் நிதம்பங்களும ஸ்தனங்களில் அணிந்த ஹாரங்களும் சலிக்கவும் குண்டலங்களால் கபோலங்கள் திகழவும் பெற்றுச் சிவந்த குங்குமம் பூசப்பெற்ற முகமுடையவர்களுமாகிய அந்தக் கோபிகைகள் ஆபரணங்களில் இழைக்கப்பட்ட ரத்னங்கள் விளக்கொளிகளால் ஜ்வலிக்கப்பெற்று மிகவும் விளங்கினார்கள். தாமரைக்கண்ணனாகிய ஸ்ரீக்ருஷ்ணனை உரக்கப்பாடுகின்ற அந்தக் கோபிகைகளின்குரல், தயிர் கடைகிற சப்தத்துடன் கலந்து தேவலோகமெல்லாம் நிறைந்தது. அந்த த்வனியால் திசைகளின் அமங்களமெல்லாம் துரத்தப்பட்டது. பிறகு ஸூர்யன் உதிக்கையில் கோபிகைகள் இடைச்சேரியின் ஓரத்தில் ஸ்வர்ணாலங்காரஞ்செய்யப்பெற்ற ரதம்விட்டிருப்பதைக்கண்டு 'இது யாருடையது' என்று கோபத்துடன் ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்டார்கள். 'முன்பு கம்ஸனுடைய ப்ரயோஜனத்தை நிறைவேற்றும்பொருட்டுத் தாமரைக்கண்ணனாகிய ஸ்ரீக்ருஷ்ணனை மதுரைக்கு அழைத்துக்கொண்டுபோன அவ்வக்ரூரன் வந்திருக்கிறானா என்ன? (முன்புதான் கம்ஸனைக் கொல்லுவதற்காக ஸ்ரீக்ருஷ்ணனை அழைத்துக்கொண்டுபோக வந்தான். இப்பொழுது

1. அர்ச்சித்து – பூஜித்து.

ஏதுக்காக வந்தான்?) மரணம் அடைந்த தன்ப்ரபுவாகிய கம்ஸனுக்கு நம்மைக்கொண்டு மேல்நடக்க வேண்டிய ப்ரேத கார்யங்களை நடத்தப்பார்க்கிறானோ என்ன? (நமது மாம்ஸங்களால் பிண்டங்கள் செய்து அவனுக்குக் கொடுக்கப்போகிறானோ என்ன?)' என்று இங்ஙனம் கோபிகைகள் ஒருவரோடொருவர் பேசிக்கொண்டிருக்கையில், உத்தவன் ஸ்நானம் முதலிய தினக்கடன்களை முடித்துக்கொண்டு அவ்வழியே வந்தான். நாற்பத்தாறுவது அத்யாயம் முற்றிற்று.

---

{ கோபிகைகளுக்கும் உத்தவனுக்கும் நடந்த ஸம்வாதத்தையும், அவர்களுக்கு ஸ்ரீக்ருஷ்ணனிடத்திலுள்ள ப்ரேமாதிசயத்தையும் வர்ணித்தல். }

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—நீண்ட புஜதண்டங்களுடையவனும் அப்போதலர்ந்த செந்தாமரையிதழ் போன்ற கண்களுடையவனும் பொன்னிறமான ஆடை உடுத்திருப்பவனும் தாமரைமலர்மாலை அணிந்தவனும் தாமரைமலர்போல் திகழ்கின்ற முகமுடையவனும் நிர்மலமாய் விளங்குகின்ற குண்டலங்களுடையவனும் ஸ்ரீக்ருஷ்ணனுடைய பக்தனுமாகிய அவ்வுத்தவனைக் கண்டு பரிசுத்தமான புன்னகையுடைய கோபிகைகள் அனைவரும் 'அழகிய காட்சியுடையவனும் ஸ்ரீக்ருஷ்ணனுடைய வேஷம்போன்ற வேஷமுடையவனுமாகிய இப்புருஷன் யாவன்? எங்கிருந்து வந்தான்? யாருடையவன்?' என்று மொழிந்துகொண்டு ஸ்ரீக்ருஷ்ணனுடைய பாதாரவிந்தங்களையே பணியுந்தன்மையனான அவ்வுத்தவனை ஆவலுடன் சூழ்ந்துகொண்டார்கள். அந்தக் கோபிகைகள் வெட்கத்தோடு கூடின மந்தஹாஸத்தினாலும் கண்ணோக்கத்தினாலும் இனிய உரையினாலும் அர்க்யம் முதலிய மற்றும் பல உபசாரங்களாலும் அவ்

வுத்தவனை நன்றாக அர்ச்சித்து ஏகாந்தத்தில் ஆஸனம் அளித்து ஸுகமாக உட்காரச்செய்து ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு வல்லபனான ஸ்ரீக்ருஷ்ணனிடத்தினின்று ஸமாசாரங் கொண்டுவந்தவனென்று தெரிந்துகொண்டு நமஸ்காரஞ் செய்து வணக்கத்துடன் மேல்வருமாறு வினவினார்கள்.

கோபிகைகள் சொல்லுகிறார்கள்:—நீ யாதவர்களுக்கு ப்ரபுவாகிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய ப்ருத்யனென்றும் அவனிடத்தினின்று ஸமாசாரங் கொண்டு வந்தவனென்றும் நாங்கள் தெரிந்துகொண்டோம். ப்ரபுவாகிய ஸ்ரீக்ருஷ்ணன் தாய் தந்தைகளான யசோதா நந்தர்களுக்கு ப்ரியஞ் செய்ய விரும்பி உன்னை இவ்விடம் அனுப்பினான். இல்லாத பக்ஷத்தில் அவாப்தஸமஸ்தகாமனாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணனுக்கு நினைக்கத்தகுந்த வஸ்துவொன்று இந்தக் கோகுலத்தில் நினைக்கத்தகுந்த வஸ்துவொன்று இருப்பதாக எங்களுக்குத் தெரியவில்லை. தாய் தந்தை முதலிய பந்துக்களிடத்தில் உண்டாகும் ஸ்னேஹமாகிற பாசத்தை எத்தகைய முனிவனாலுங்கூடத் துறக்க முடியாதல்லவா? (ஆகையால் அவன் தாய்தந்தைகளை நல்வார்த்தை சொல்லும்பொருட்டே உன்னை அனுப்பியிருக்கவேண்டுமன்றி வேறில்லை). பந்துக்களைத் தவிர மற்றவரிடத்தில் உண்டாகும் ஸ்னேஹம் ப்ரயோஜனத்தைப் பற்றினது. அந்த ப்ரயோஜனம் கைகூடும்வரையில் மாத்ரமே ஸ்னேஹித்திருப்பதுபோலப் பாவிப்பார்கள். பரபுருஷர்களைப் புணருந்தன்மையுள்ள பெண்களிடத்தில் புருஷர்களின் ஸ்னேஹம்போலவும், தேன் நிறைந்த புஷ்பங்களில் வண்டுகள் செய்யும் ஸ்னேஹம்போலவும், ப்ரயோஜனத்தைப் பற்றி வரும் ஸ்னேஹம் உண்மையன்று. பணமில்லாதவனை விலைமாதர்களும், ரக்ஷிக்குந் திறமையற்ற மன்னவனை ப்ரஜைகளும், வித்யையைக்

கற்ற சிஷ்யர்கள் ஆசார்யனையும், தக்ஷிணை கொடுத்த யஜமானனை ருத்விக்குக்களும், பழங்கள் மாறின வ்ருக்ஷத்தைப் பக்ஷிகளும், போஜனமளித்தவனுடைய க்ருஹத்தை அதைப் புசித்த அதிதிகளும், நெருப்புபற்றி யெரிந்த அரண்யத்தை ம்ருகங்களும், அன்புடன் தொடர்கின்ற மாதைப் புணர்ச்சிகூடப்பெற்ற கள்ளக்கணவனும் துறக்கின்றார்களல்லவா? ஆகையால் ப்ரயோஜனத்தைப்பற்றி வரும் ஸ்னேஹம் ப்ரயோஜனம் கைகூடும் வரையில் மாத்ரமே இருக்குமன்றி அதற்குமேல் தொடராது.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— ஸ்ரீக்ருஷ்ணனுடைய தூதனாகிய உத்தவன் கோகுலத்திற்குப் போயிருக்கையில், கோபிகைகள் ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் ஆழ்ந்த வாக்கு காயம் மனம் என்கிற மூன்று கரணங்களுடையவர்களாகி மஹானுபாவனாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன்[1] கைசோர பால்யங்களில் நடத்தின செயல்களை அடிக்கடி நினைத்து வெட்கத்தைத் துறந்து கண்ணீர் பெருக்கிக்கொண்டு உலகரீதிகளெல்லாம் நழுவப்பெற்று இங்ஙனம் வினவினார்கள். அவர்களில் ஒரு கோபிகை ஸ்ரீக்ருஷ்ணனுடைய கலவியை நினைத்துக்கொண்டே ஒரு[2] மதுகரத்தைக் கண்டு அதை ஸ்ரீக்ருஷ்ணன் அனுப்பின தூதனாகப் பாவித்து மொழிந்தாள். (மதுகரத்தைக் குறித்துச் சொல்லுவதுபோல ஸ்ரீக்ருஷ்ணனுடைய தூதனாகிய உத்தவனையே உத்தேசித்து மொழிந்தாள்).

கோபிகை சொல்லுகிறாள்:— ஓ மதுகரமே! துஷ்டனாகிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய பந்துவே! சக்களத்தியின் கொங்கைகளில் உறைந்த பூமாலையின் குங்குமங்கள் படியப்பெற்ற மோவாய்மயிர்களால் என்பாதத்தை ஸ்பர்சிக்க வேண்டாம். (என்னை நல்லவார்த்தை சொல்ல

1. கைசோரம்-குழந்தைப் பருவம். 2. மதுகரம்—வண்டு.

வேண்டாம். நமஸ்காரஞ் செய்யவேண்டாம்). யாதவர்களுக்கு ப்ரபுவாகிய ஸ்ரீக்ருஷ்ணன் எங்கள் சக்களத்திகளை நல்வார்த்தை சொல்லி அவர்களுடைய அனுக்ரஹத்தையே பெறுவானாக. எங்களை நல்வார்த்தை சொல்லி எங்கள் அனுக்ரஹம் பெறவேண்டிய நிலைமையில் அவன் இல்லை. ஏனென்றால், அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய ஸ்னேஹம் பெரியோர்களின் ஸபையில் நிந்திக்கத்தக்க நிலைமையில் அல்லவோ இருக்கின்றது. முன்பு தான் ப்ரேமத்துடன் அனுபவித்த மடந்தையர்களைத் துறந்து வேறுமடந்தையர்களைத் தொடர்கின்ற அம்மஹானுபாவனுக்குத் தேன்பருகின புஷ்பங்களைத் துறந்து வேறு புஷ்பங்களைத் தேடுந்தன்மையுடைய நீ தூதாக வந்தமை யுக்தமாகவே இருக்கின்றது. தாபத்ரயத்தையும் போக்கி மதிமயங்கச்செய்யவல்லதும் தனக்கு அஸாதாரணமாயிருப்பதுமாகிய தன வாயம்ருதத்தை எங்களுக்கு ஒருகால் பருகும்படி கொடுத்து நீ தேனைப் பருகினபின்பு புஷ்பங்களைத் துறப்பதுபோல அப்பொழுதே எங்களைத் துறந்தான. நீ அவனைப் போன்றவன், அவன் உன்னைப்போன்றவன. ஸ்வாமியும் ப்ருத்யனுமாகிய உங்கள தன்மை மிகவும் அமைந்திருக்கின்றது? ஆ! செய்தநன்றி யறியாத அன்னவனுடைய பாதாரவிந்தத்தை ஸ்ரீமஹாலக்ஷ்மி எங்ஙனம பணிகின்றாள்? ஆம்; எனக்குத் தெரிந்தது:-உத்தமச்லோகனுகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய பொய்வார்த்தைகளால் மனம் பறியுண்டு அவன்கபடத்தை அறியாமல் அவனபாதாரவிந்தங்களைப் பணிந்துகொண்டிருக்கின்றாளன்றி வேறில்லை; இதென்ன வருத்தம்! நாங்களோ வென்றால் அந்த ஸ்ரீமஹாலக்ஷ்மியைப்போல ஒன்றுந் தெரியாத மூடைகளன்று. (ஜங்காரஞ் செய்கின்ற அம்மதுகரத்தைப் பார்

த்து 'நம்மை அருள் புரிவிக்கும் பொருட்டு ஸ்ரீக்ருஷ்ண னைப்பாடுகிறது' என்று நினைத்துச் சொல்லுகிறாள்.) வண்டே! க்ருஹமில்லாமல் இவ்வனத்தில் திரிந்துகொண்டிருக்கின்ற எங்கள் முன்பு பழகினவனான யதுபதியைப் பற்றி எதுக்காகப் பாடுகின்றனை? அதனால் உனக்கு ஒரு இஷ்டமும ஸித்திக்காது. ஸ்ரீக்ருஷ்ணனுக்கு அன்பர்களும் அவனுடைய ஆலிங்கனத்தினால் கொங்கைகளின நோய் தணியப்பெற்றவர்களுமாகிய பட்டணத்து மடந்தையர்களின் முன்பே சென்று அவனுடைய செய்தியைப் பாடுவாயாக. ஸ்ரீக்ருஷ்ணனுக்கு இனியராகிய அம்மடந்தையர்கள் உனபாட்டைக்கேட்டு உனனிஷ்டத்தை நிறைவேற்றுவார்கள். 'ஆமாம்; நீ சொல்லுவது வாஸ்தவமே. பட்டணத்து மடந்தையர்கள் அவனுக்கு வசப்பட்டு அவனுடைய ஆலிங்கனத்தினால் தங் கொங்கை நோய் தீரப்பெறுவாராகளாயின், அவர்கள் எனனிஷ்டத்தை நிறைவேற்றுவார்கள். அவர்கள் அவனுக்குக் கிடைப்பதே அரிதாயிருக்க மற்ற செய்தியைப் பற்றி விசாரமென்ன?' எனகிறாயோ? சொல்லுகிறேன கேள். அழகானகள்ளச்சிரிப்பும் புருவநெரிப்புமுடைய மஹானுபாவனாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணனுக்கு ஸ்வர்க்கத்திலாவது பூமியிலாவது பாதாளத்திலாவது எந்த ஸ்த்ரீகள் தான் கிடைக்கமுடியாதவர்கள்? அவனுடைய புன்னகைக்கும் புருவநெரிப்புக்கும தோற்று ஸ்ரீமஹாலக்ஷ்மியுங் கூட அவனுடைய பாதாரவிந்தங்களின் பராகத்தைப் பணிகின்றாள். நாங்கள் யாவர்? யாவருமல்லோம். அவனுக்கு உட்பட்டவர்களில் சேர்ந்தவரல்லோம், உத்தமஸ்லோகனான அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய செய்தியை வெளியிடுகிற சப்தங்களை அவன் குணங்களுக்குத் தோற்று மனம் வாடி நிற்பவர்களிடங் கொண்டுபோய்ப் பாடவேண்டு

மன்றி எங்கள் முன்பு பாடுவதில் உபயோகமில்லை. நாங்கள் அத்தகையர்களல்லோம். (தன் தலைக்கு அருகாமையில் வந்து ஸஞ்சரிக்கின்ற அம்மதுகரத்தைப் பார்த்துக் 'காதண்டையில் ரஹஸ்யஞ் சொல்ல வந்து உலாவுகிறது' என்று நினைத்துச் சொல்லுகிறாள்.) என் சிரத்தில் வைத்த உன் பாதத்தை வாங்குவாயாக. முகுந்தனிடத்தினின்று கற்றுக்கொண்டுவந்த உன் செயல்களாலும் இனிய உரைகளாலும் இங்கு ஒரு ப்ரயோஜனமும் உனக்குக் கைகூடாது. நல்வார்த்தை சொல்லுவதில் ஸமர்த்தனாகிய நீ சொல்லப்போகிறதெல்லாம் எனக்குத் தெரியும். ஆகையால் நீ ஒன்றும் சொல்லவேண்டியதில்லை. முகுந்தனைப்போலவே நீயும் நம்பத்தகுந்தவனல்லை. 'அவன் என்ன அபராதம் செய்தான்' என்கிறாயோ; சொல்லுகிறேன் கேள். குழந்தைகளையும் கணவர்களையும் தர்மங்களால் ஸாதிக்கக்கூடிய மற்றுமுள்ள ஸ்வர்க்காதிலோகங்களையும் துறந்து வந்த எங்களை உதறிவிட்டுப் போனானே. இதைவிட வேறு அபராதம் என்ன வேண்டும்! ஆகையால் இவன், செய்த நன்றியை அறிந்தவனல்லன்; க்ருதக்னன். ஆதலால் இவனுடன் ஸந்தி பண்ணிக்கொண்டு எங்களுக்கு ஆகவேண்டியது என்ன இருக்கிறது? க்ருதக்னனோடு ஸந்திசெய்யலாகாதல்லவா? செய்தாலும் இஷ்டம் கைகூடாதல்லவா? மற்றும் இவன் வேடனைப்போல் வஞ்சனைசெய்து நிரபராதியான வாலியைக் கொன்றான். ஆகையால் இவன் வேடனுக்குள்ள கொடுமையன இரக்கமில்லாமை முதலிய குணங்களெல்லாம் அமைந்தவன். இவனை வேடனோடொத்தவனென்றுங்கூடச் சொல்லலாகாது. வேடனிடத்தில் இல்லாத கெட்ட குணங்கூட இவனிடத்தில் இருக்கின்றது. வேடன் மாம்ஸத்தை விரும்பி ம்ருகங்களை வதிக்கின்றான். இவன்

அப்படியன்று. வீணைக் கொடுமையைக் காட்டுகிருன். மற்றும், இவன் ஸ்த்ரீயால் வெல்லப்பட்டவன். காமவிகாரத்திஞல் வருந்தித் தன்னிடம் வந்த சூர்ப்பணகியின் காதுமூக்குகளை அறுத்து அவளை விரூபமாக்கினுன். மற்றும், இவன் வாயஸம்போல் பலிசக்ரவர்த்தி செய்த பலியைப் பெற்றுக்கொண்டு அவனைப் பாசங்களால் கட்டினுன். ஆகையால் கரியனுகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணனேடு ஸ்னேஹம் செய்தது போதும். 'ஆனுல் அவனை ஏன் நித்யம் பாடுகிறீர்கள்?' என்கிருயோ? ஆயினும் அந்தக் கரியனுடைய கதையாகிற பொருள் துறக்கமுடியாததாயிருக்கின்றது. இவ்வுலகத்தில் பல ஜனங்கள் அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய விளையாட்டு நடத்தையாகிற கர்ணும்ருதத்தின் திவலையை ஒருகால் பானஞ்செய்து அதனுல் ராகம் த்வேஷம் முதலிய த்வந்த்வதர்மங்கள் கழியப்பெற்று அசேதனம் போன்று,வருந்துகின்ற குடும்பத்தை அப்பொழுதே துறந்து மனை இரக்கத்திற்கிடமாகிய பறவைகள் போன்று ஸந்யாஸிகளைப்போல் ப்ராணன்கள் தங்குவதற்குவேண்டிய ஆஹாரத்தைமாத்ரம் புசித்து அவன கதையைப் பாடிக்கொண்டிருக்கிருர்கள். மான்பேடுகள் வேடனுடைய பாட்டை உண்மையானகானமென்று ப்ரமிப்பது போல, நாங்கள் குடிலனுகிய அந்த ஸ்ரீ க்ருஷ்ணனுடைய வார்த்தையை மெய்யென்று நம்பி அவனுடைய நகக்ஷதங்களால் காமவேதனையுடையவர்களாகி ஒருகால் அவனுடைய நட்பைக் கண்டோம். தூதனே! வேறுகதையைப் பேசுவாயாக. அவன கதை வேண்டியதில்லை. (கொஞ்சதூரம்போய்த் திரும்பி வருகின்ற அம்மதுகரத்தைப் பார்த்து மீளவும் சொல்லுகிருள்:) எங்களன்பனுகிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய நண்பனே! மீளவும் அந்த ஸ்ரீக்ருஷ்ணனுல் அனுப்பப்பட்டு வந்

தனையா என்ன? ஆனால், ஓ மதுகரமே! நீ எனக்குப் பூஜிக்கத்தகுந்தவன். நீ எதையேனும் விரும்புவாயாயின் அதை வேண்டுவாயாக. ஸ்ரீக்ருஷ்ணனுடைய கலவியை எவ்விதத்திலும் துறக்கமுடியாது. நாங்களோ இங்கு இருக்கின்றோம். அவனோ வெகு தூரத்தில் இருக்கின்றான். எங்களை எப்படி நீ அவனிடம் கொண்டுபோய்ச் சேர்க்கப் போகின்றனை. ஸ்ரீமஹாலக்ஷ்மி மார்பில் இடங் கொடுக்கப்பெற்று எப்பொழுதும் அவனோடு கூடவே இருக்கின்றாளல்லவா? ஆகையால் அவனை ஒரு நொடிப் பொழுதாயினும் துறந்திருக்கமுடியாது. ஸ்ரீக்ருஷ்ணன் இப்பொழுது மதுரைப்புரியில் இருக்கின்றானோ? நல்லியற்கை யுடையவனே! அவன் தாய் தந்தைகளையும் க்ருஹத்தையும் பந்துக்களையும் மற்ற இடையர்களையும் நினைக்கிறானோ? தன் பணிக்காரிகளான எங்கள் வார்த்தையை எப்பொழுதாயினும் எடுக்கிறானோ? அகில்போல் நல்ல மணமுடைய தன்புஜத்தை எங்கள்சிரத்தில் எப்பொழுது வைக்கப்போகிறான்?

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—பிறகு உத்தவன், கோபிகைகள் ஸ்ரீக்ருஷ்ணனைக் காணவேண்டுமென்று பேராவலுற்றிருப்பதைக் கண்டு அன்பனாகிய ஸ்ரீக்ருஷ்ணன சொல்லியனுப்பின ஸமாசாரங்களால அவர்களை ஸமாதானப் படுத்த முயன்று மேல்வருமாறு கூறினான்.

உத்தவன சொல்லுகிறான்:—நீங்கள் ப்ரயோஜனம் கைகூடப்பெற்றவர்கள்; நிச்சயம், நீங்கள் ஸமஸ்தலோகங்களாலும் பூஜிக்கப்பட்டவர்கள். ஏனென்றால் ஷாட்குண்யபூர்ணனாகிய ஸ்ரீவாஸுதேவனிடத்தில் உங்கள் மனம் இங்ஙனம் ஊன்றியிருக்கின்றதல்லவா? தானம் வ்ரதம் தவம ஹோமம் ஜபம் வேதாத்யயனம் இந்த்ரிய நிக்ரஹம் இவைகளாலும் மற்றும் பலவகை நன்னடத்தை

களாலுமல்லவோ ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் பக்தி ஸாதிக்க வேண்டும். இவ்வளவு செய்யினும் பக்தியைச் சாதிக்க முடிகிறதில்லை. மேலான பக்தி வரவேண்டுமென்றால் அது முனிவர்களுக்குங்கூடக் கிடைப்பதரிது. இப்படியிருக்க, நீங்கள் உத்தமஶ்லோகனை பகவானிடத்தில் அத்தகைய மேலான பக்தியை அனாயாஸமாக நடத்திக் கொண்டிருக்கிறீர்கள். இது உங்களுக்குப் பெரிய பாக்யத்தினால் நேர்ப்பட்டதேயன்றி வேறன்று. உங்கள் பக்தியைப்பற்றி எனக்கு மிகவும் ஆநந்தமாயிருக்கின்றது. நீங்கள் பிள்ளைகளையும் கணவர்களையும் தேஹங்களையும் பந்துக்களையும் வீடுவாசல்களையும் துறந்து ஸ்ரீக்ருஷ்ணனென்னும் பெயருடைய பரமபுருஷனைப் பாக்யமுடைமையால் பற்றினீர்கள். ஆகையால் நீங்கள் ப்ரயோஜனம் கைகூடப்பெற்றவர்கள்; உலகங்களால் பூஜிக்கப்பட்டவர்கள்; மிகுந்த மகிமையுடையவர்களே! உங்கள் பாக்யம் அளவற்றது. நீங்கள் இந்த்ரியங்களால் விளையும் அறிவுகளுக்கு விஷயமாகாத பரமபுருஷனிடத்தில் மூன்று கரணங்களாலும் பக்தியைச் செய்தீர்கள். இதற்குக் காரணம் நீங்கள் பிரிந்திருக்கையே. (நீங்கள் அவனோடு கலந்திருப்பீர்களாயின் உங்களுக்கு இத்தகைய பக்தி உண்டாகாது.) உங்கள் பக்தியால் அந்த ஸ்ரீக்ருஷ்ணனை எனக்கு நினைவூட்டிப் பெரிய அனுக்ரஹம் செய்தீர்கள். மங்கள ஸ்வபாவமுடையவர்களே! உங்கள் அன்பனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் சொல்லியனுப்பின ஸமாசாரத்தைச் சொல்லுகிறேன்; கேட்பீர்களாக. அது உங்களுக்கு மிகவும் ஸுகத்தை விளைக்கும். ப்ரபுவாகிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய ரஹஸ்யத்தை வெளியிடுபவனாகிய நான் அந்த ஸமாசாரத்தைச் சொல்லுவதற்காகவன்றோ இவ்விடம் வந்தேன்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான் :—நான் ஸமஸ்தபூதங்களுக்கும் அந்தராத்மாவாகையால் உங்களுக்கு எப்பொழுதும் என்னோடு பிரிவு கிடையாது. ஆத்மாவைப் பிரிந்து சரீரம் தனியே இருப்பதுண்டோ? ஆகாயம் வாயு அக்னி ஜலம் பூமி என்னும் மஹாபூதங்கள் தங்கள் கார்யமாகிய தேவ மனுஷ்யாதி சரீரங்களில் தொடர்ந்திருப்பதுபோல, நானும் ப்ராணிகளின் மனம் ப்ராணன் புத்தி இந்த்ரியம் சப்தாதிவிஷயம் ஆகிய இவற்றிற்கு ஆதாரமாயிருப்பவன். நான் மஹத்துமுதல் பூமிவரையிலுள்ள அசேதன வர்க்கத்தைச் சரீரமாகக்கொண்டு ஸமஸ்தப்ரபஞ்சரூபமாய் விரிந்திருக்கின்றேன். அதனாலும் உங்களுக்கு என்னோடு பிரிவு கிடையாது. உபாதான காரணத்தைவிட்டு அதன்கார்யம் தனியே பிரிந்திருக்குமோ? நானே தன்னுடைய ஸங்கல்பத்தின் மஹிமையால் தன்னிடத்திலேயே தன்னைப் பஞ்சபூதங்கள் இந்த்ரியங்கள் சப்தாதிவிஷயங்கள் இவையாகப் படைப்பதும் அழிப்பதும் காப்பதுமாயிருக்கின்றேன். நான் ஜகத்தைப்படைக்கும்பொழுது என்னைத் தவிர வேறொரு ஆதாரத்தையாவது வேறொரு உபகரணத்தையாவது வேறொரு நிமித்தகாரணத்தையாவது எதிர்பார்க்கிறதில்லை. ஸ்ருஷ்டியை நடத்துவதுபோல ஸ்திதி ஸம்ஹாரங்களையும் நானே நடத்துகின்றேன். ஆகையால் ஸர்வகாலத்திலும் ஸர்வகாரணனும் ஸர்வஸ்வரூபனுமாகிய என்னோடு உங்களுக்குப் பிரிவே கிடையாது. ஆத்மா, தேஹாதிகளைக்காட்டிலும் விலக்ஷணன்; இயற்கையில் ப்ராக்ருதமான ஸத்வாதிகுணங்களற்றவன்; ஆயினும் கர்மத்தினால் ஸத்வாதிகுணங்களின் ஸம்பந்தமுடையவனாயிருக்கின்றான்; இயற்கையில் பரிசுத்தன்; ஜ்ஞானஸ்வரூபன்; ப்ரக்ருதியின் பரிணாமமான மனத்தின் வ்யா

பாரங்களாகிய ஸுஷுப்தி ஸ்வப்னம் ஜாகரம் இவைக ளால் தீண்டப்பெற்று 'நான் தேவன், நான் மனுஷ்யன்' என்றும் 'நான் தூங்குகிறேன், நான் விழித்துக்கொண் டிருக்கிறேன்' என்றும் நினைத்துக்கொள்கிறான்; பிறக் கும் அஜ்ஞானமே தோற்றுகிறான். ஸ்வப்னங்காண்கிறவன் விழித்துக்கொண்டபின்பு ஸ்வப்னத்தில் கண்ட வஸ்துக் கள் அப்பொழுது புலப்படாமற்போயினும் ஸ்வப்னத் தில் இன்னின்ன வஸ்துக்களை அனுபவித்தோமென்று நினைப்பதுபோல, முன்பு அனுபவித்த வஸ்துக்களையும் அவற்றைப்போன்ற வேறு வஸ்துக்களையும் ஸ்வப்னத்தில் கண்ட வஸ்துக்களைப்போல அவை துர்லபங்களாயினும் அதை அறியாமல் எந்த மனத்தினால் தூண்டப்பட்டு நினைக்கிறானோ, அத்தகைய மனத்தையும் இந்த்ரியங்களை யும் சோம்பலின்றி அந்த விஷயங்களினின்று அடக்க வேண்டும். சப்தாதிவிஷயங்களை நினைப்பானாயின் அவற் றில் பற்றும் அதனால் காமமும் உண்டாகி மேன்மேலும் ஸம்ஸாரத்தையே வளர்த்துக் கொள்வான். மனமே மேன்மேலும் தேஹஸம்பந்தத்திற்குக் காரணமாயிருக் கின்றது. ஆகையால் அதை அடக்குவானாயின் மனம் பரி சுத்தமாகப்பெற்று அதனால் என்னை உள்ளபடி அறி வான். பெரியோர்களிடத்தில் உபதேசம் பெறுதல் வே தார்த்தங்களை உணர்தல் வேதங்களில் விதிக்கப்பட்ட வர்ணாஸ்ரம தர்மங்களை அனுஷ்டித்தல் கர்மயோகம் ஆத்மாவின் உண்மையை அறிகையாகிற ஜ்ஞானயோ கம் தானம் தவம் இந்த்ரிய நிக்ரஹம் ஆகிய இவற்றை யெல்லாம் பண்டிதர்கள் அனுஷ்டிப்பதற்கு ப்ரயோஜ னம் மன அடக்கமே. பண்டிதர்கள் மனத்தை அடக்குவ தற்காகவே இவற்றையெல்லாம் அனுஷ்டிக்கின்றார்கள். நதிகள் ஸமுத்ரத்தில் போய் முடிவதுபோல, இவை

யெல்லாம் மன அடக்கத்தில் போய் முடிகின்றன. நதிகள் ஸமுத்ரம்வரையில் போவது மாத்ரமே செய்யவேண்டும். பிறகு ஸமுத்ரத்தைப் பெறுவது ஸுலபமே யல்லவா? அங்ஙனமே மனத்தை வேறு விஷயங்களினின்றும் இழுத்து என்னிடத்தில் நியமிக்கவேண்டும். பிறகு என்னுடையப்ராப்தி அனாயாஸமாகக் கிடைக்கும். 'நீ சொன்னபடி உன்னோடு எங்களுக்குப் பிரிவில்லை. ஆயினும் மஹாநந்தத்தை விளைப்பதாகிய உன்னுருவத்தை எங்களுக்கு நீ ஏன் காட்டுகிறதில்லை' என்கிறீர்களோ? சொல்லுகிறேன், கேளுங்கள். அனபர்களே! நான் உங்கள் கண்களுக்குப் புலப்படாமல் தூரத்தில் இருக்கிறேனென்பது உங்களுக்கு என்னினைவு மாறுதிருக்கைக்காகவே. அதனால் உங்கள்மனம் என்னிடத்திலேயே ஊன்றியிருக்கும். ஆகையால் நான கண்ணுக்குப் புலப்படாமல் தூரத்திலிருக்கிறேனென்பதைப்பற்றி வருந்த வேண்டாம். அன்பிற்கிடமான காதலன் தூரத்தில் இருப்பானாயின், ஸ்த்ரீகளின் மனம் அவனிடத்தில் எப்படி நிலைநின்றிருக்குமோ, அவ்வளவன் ஸமீபத்திலிருந்து கண்ணுக்குப் புலப்பட்டுக்கொண்டிருப்பானாயின அவர்கள்மனம் அவனிடத்தில் அப்படி நிலை நின்றிராது. நீங்கள் வேறு வ்யாபாரங்களையெல்லாம் துறந்து மனத்தை முழுவதும் என்னிடத்தில் நிலைநிறுத்தி எப்பொழுதும் என்னையே த்யானித்துக் கொண்டிருப்பீர்களாயின, சீக்ரத்தில் என்னை அடைவீர்கள். மங்களஸ்பாவமுடையவர்களே! நான் ராஸக்ரீடை நடத்தும்பொழுது கோகுலத்தில் எவரெவர்கள் கணவன் முதலியவர்களால் தடுக்கப்பட்டுக் கோகுலத்திலேயே இருந்தார்களோ, அவர்கள் அனைவரும் என்னுடன் கலந்து ராஸக்ரீடையின் ஸுகம் அனுபவிக்கப் பெறாமல் என்வீரச்செயல்களைச் சிந்தித்துக்கொண்

டிருந்து என்னையே அடைந்தார்கள். (ஆகையால் நான் சொல்லுவது உண்மையே. நீங்கள் தூரத்திலிருப்பதைப்பற்றி வருந்தவேண்டாம்).

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—கோபிகைகள் இங்ஙனம் ஸ்ரீக்ருஷ்ணனுடைய கட்டளையைக் கேட்டு அவனுடைய வார்த்தையைக் கேட்டதனால் நினைவு வரப்பெற்று மனக்களிப்புடன் உத்தவனைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தார்கள்.

கோபிகைகள் சொல்லுகிறார்கள்:—யாதவர்களுக்குச் சத்ருவாகி அவர்களுக்குத் துயரத்தை விளைத்துக் கொண்டிருந்த கம்ஸன் தெய்வாதீனமாய் முடிந்துபோனானல்லவா? இது நமக்குப் பெரிய ஆநந்தம். ஸ்ரீக்ருஷ்ணன் இப்பொழுது விருப்பங்களெல்லாம் நிறைவேறப்பெற்ற நண்பர்களுடன் கூடி க்ஷேமமாயிருக்கிறானல்லவா? இதுவும் நமக்குப் பெரிய ஆநந்தமே. நல்லியற்கையுடையவனே! ஸ்ரீக்ருஷ்ணன் ஸ்னேஹம் நிறைந்திருப்பதும் வெட்கம் புன்னகை இவைகளோடு கூடியதும் கம்பீரமுமாகிய பட்டணத்து மடந்தையர்களின் கண்ணோக்கத்தினால் வெகுமதி செய்யப்பெற்று அவர்களுக்கு உட்பட்டு எங்களிடத்திற் செய்யும் ப்ரீதியை அவர்களிடத்திற் செய்கின்றானா? 'ஸ்வதந்த்ரனாகிய பரமபுருஷன் அவர்களுக்கு எப்படி உட்படுவான்?' என்று சங்கிக்கவேண்டாம். ப்ரீதிவிசேஷங்களின் ரஸமறிந்தவனும் பட்டணத்து மடந்தையர்களுக்கு அன்பனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் அப்பட்டணத்து மடந்தையர்களின் இனிய உரைகளாலும் விலாஸங்களாலும் இழுக்கப்பட்டு எங்ஙனம் அவர்களுக்கு உட்படாதிருப்பான்? ஸாதோ! பட்டணத்து மடந்தையர்களுடன் கலந்து ஓலக்கமாயிருக்கும்பொழுது இடையில் க்ராமத்துஜனங்களைப்பற்றி வேடிக்கையாகட்

பேசுந்தருணத்திலாவது அந்த ஸ்ரீக்ருஷ்ணன் எங்களை நினைக்கிறானா? (எங்களை முக்யமாக நினைக்க இடமில்லை; வெம்பளப்பிலாவது பராக்கிலாவது எங்களை நினைக்கிறானா?) ஆம்பல் குறுக்கத்தி முதலிய புஷ்பங்களாலும் சந்த்ரகிரணங்களாலும் அழகாயிருக்கின்ற ப்ருந்தாவனத்தில் பாதங்களில் அணிந்த சிலம்புகள் ஒலிக்கப் பெற்ற ராஸக்ரீடையின் ஓலக்கத்தில் அன்பர்களான எங்களால் புகழப்பட்ட இனியகதைகளுடையவனாகி எங்களுடன் அப்பொழுது விளையாடினானே, அந்த ராத்ரிகளை எப்பொழுதாயினும் ஸ்ரீக்ருஷ்ணன் ஒருகால் நினைக்கிறானா? உத்தவனே! ஸ்ரீக்ருஷ்ணன் தன்னைப்பிரிந்தமையால் விளைந்த சோகத்தினால் தபிக்கப்பட்டு வருந்துகின்ற எங்களை இந்த்ரன் மேகங்களைக்கொண்டு மழை பெய்வித்து வனத்தைப் பிழைப்பிப்பதுபோலத் தனகரஸ்பர்சம முதலியவற்றால் எங்களைப் பிழைப்பிக்க முயன்று இவ்விடம் வருவானா? ராஜ்யம் கைகூடப்பெற்றுச் சத்ருக்களை வதித்து ராஜகன்னிகைகளை மணம் புரிந்து மனக்களிப்புற்று நண்பர்கள் அனைவராலும் சூழப்பட்டிருப்பவன் இங்கு எந்தக்காரணத்தைப்பற்றி வரப்போகிறான்? (வேறு சிலர் உண்மையைச் சொல்லுகிறார்கள்). ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு வல்லபனும் இயற்கையாகவே அவாப்தஸமஸ்தகாமனும் ஸ்வதந்த்ரனும் மஹானுபாவனுமாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணனுக்குக் காட்டில் வாஸஞ் செய்கின்ற எங்களாலாவது பட்டணத்தில் வாஸஞ் செய்கிற மற்ற மடந்தையர்களாலாவது என்ன ப்ரயோஜனம் ஆகவேண்டும்? (வேறு சிலர் சொல்லுகிறார்கள்). பரபுருஷர்களைப் புணர்ந்து களிக்குந்தன்மையுடைய பிங்களையென்னும் வேஸ்யையுங்கூட 'ஆசையில்லாமையே மேலான ஸுகம்' என்று சொல்லுகிறாள். அதை அறிந்தும் எங்

களுக்கு ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் ஆசையைத் துறக்க முடியவில்லை. (வேறு சிலர் இது யுக்தந்தானென்கிறார்கள்). உத்தமச்லோகனாகிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய வார்த்தையைத் துறக்க எவன்தான் வல்லனாவான்? அந்த ஸ்ரீக்ருஷ்ணன் வேண்டாமென்று விரும்பாதிருப்பினும் ஸ்ரீமஹாலக்ஷ்மி அவனுடைய மார்பினின்று ஒருகாலும் நழுவமுடியாதிருக்கின்றாளல்லவா? அப்படிப்பட்ட அந்தப் பரமபுருஷனுடைய வார்த்தையை எவனும் துறக்க முடியாது. ப்ரபூ! உத்தவனே! நதி பர்வதம வனப்ரதேசங்கள் பசுக்கள் இதோ செவிப்படுகின்ற வேணுநாதங்கள் ஆகிய இவையெல்லாம் பலராமனோடுகூடின ஸ்ரீக்ருஷ்ணனால் அனுபவிக்கப்பட்டவை. இவையெல்லாம் அழகுக்கு விளைநிலமாயிருக்கின்ற அடிவைப்புக்களால நந்தகோபனுடைய குமாரனாகிய ஸ்ரீக்ருஷ்ணனை அடிக்கடி நினைவு மூட்டுகின்றன. ஆகையால் நாங்கள் அவனை மறக்க முடியாதிருக்கின்றோம். அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய அழகிய நடையாலும கம்பீரமான புன்னகையினாலும் விலாஸங்கள் அமைந்த கண்ணோக்கங்களாலும் தேன்போன்ற இனிய உரையினாலும் இழுக்கப்பட்ட மதியுடைய நாங்கள் அவனை எப்படி மறபபோம? (நாங்கள் அவனை மறப்போமாயின இப்படி வருந்தமாட்டோம். எங்களுக்கு அவனை மறக்கவே முடியவில்லை). (அந்த ஸ்ரீக்ருஷ்ணனைப் புத்தியால் நினைத்து அவனையே பார்த்திருக்கின்றார்கள்). எங்கள் நாதனே! ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு நாதனே! (அந்த ஸ்ரீமஹாலக்ஷ்மி இரக்கமே ஒருவடிவம் கொண்டாற்போல் விருப்பவளல்லவா? அவளுடன் கூடி நீ உலகங்களையெல்லாம் பாதுகாக்கின்றாயென்று வேதாந்தங்கள் முறையிடுகின்றன வல்லவா) அவளோ உன்னை விட்டு எப்பொழுதும் பிரியாதிருக்

கின்றுள். எங்கள் வருத்தமறிந்த அம்மாதரார் மணியுங் கூட எங்களை மறந்தாள்போலும்). அவளுடன்கூடிய உனக்கு எங்களைக் காப்பதல்லவோ கடமை? ஆயினும் நான் சிலரைத் தண்டித்துக்கொண்டிருப்பது உங்களுக்குப் புலப்படவில்லையா? என்கிறாயோ? கோகுலத்திற்கு நாதனே! நீ எப்பொழுதும் கோகுலத்திற்கு அனுக்ரஹதையே செய்யுந் தன்மையனல்லவா? நீ எங்களைப பல ஆபத்துக்களினின்றும் பாதுகாத்தாயல்லவா? அப்படிப்பட்ட நீ இப்பொழுது உத்தரிப்பாயாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— அந்தக்கோபிகைகள் ஸ்ரீக்ருஷ்ணன் சொல்லியனுப்பின வார்த்தைகளைக் கேட்டு அவனைப் பிரிந்தமையாலுண்டான வருத்தம்தீரப்பெற்று அவன ஸர்வாந்தராத்மாவென்பதை அறிந்து உத்தவனைப்பூஜித்தார்கள். அந்த உத்தவன் கோபிகைகளின சோகங்களைப் போக்கிக்கொண்டு சில மாதங்கள கோகுலத்தில் வஸித்திருந்தான. அவன ஸ்ரீக்ருஷ்ணனுடைய கதைகளைப்பாடிக் கோகுலத்தை யெல்லாம களிப்புறச் செய்துகொண்டிருந்தான. அவ்வுத்தவன எத்தனை நாள் கோகுலத்தில் வாஸஞ் செய்தானே, அந்த நாட்களெல்லாம் ஸ்ரீக்ருஷ்ணனுடைய ப்ரஸங்கம் நடந்துகொண்டிருந்தமையால அவர்களுக்கு ஒருக்ஷணம்போல் கடந்தன. தனனைப்பற்றினவாகளுடைய மனவருத்தங்களைப் போக்குந்தன்மையனாகிய ஸ்ரீ க்ருஷ்ணனுடைய தாஸனான அவவுததவன் புஷ்பித்தவ்ருக்ஷங்கள் அடர்ந்திருக்கின்ற நிசைகளையும் வனங்களையும் மலைச் சாரல்களையும் பார்த்து ஆங்காங்கு ஸ்ரீக்ருஷ்ணனுடைய விளையாடல்களைப்பற்றி வினவுதல் முதலியவைகளால் அவர்களுக்கு ஸ்ரீக்ருஷ்ணனை நினைவுமூட்டிக்கொண்டு மனக்களிப்புற்றிருந்தான். அவ்வுத்தவன் கோபிகைகளுக்கு ஸ்ரீக்ரு

ஷ்ணனிடத்தில் உண்டான ப்ரீதியின்மிகுதியால் நேர்ந்த [1] இவை முதலிய மனத்தழுதழுப்பைக் கண்டு ஸந்தோஷம் அடைந்து அவர்களைநமஸ்கரித்து இங்ஙனம் மொ றான்.

உத்தவன் சொல்லுகிறான் :—இந்தக் கோபிகைகள் தான் ஸபலமான ஜன்மமுடையவர்கள். (இந்தக்கோபிகைகளின் ஜன்மமே பயன்பெற்ற ஜன்மமன்றி மற்றவர்களுடைய ஜன்மம் ஜன்மமேயன்று.) ஏனென்றால், ஸர்வாந்தராத்மாவான பரமபுருஷனிடத்தில் இவர்களுக்கு இப்படிப்பட்ட மாறாத மனோபாவம் உண்டாயிருக்கின்றதல்லவா? ஸம்ஸாரத்தினின்று பயந்து விடுபடவேண்டுமென்று விரும்பிப் பகவானுடைய திவ்யமங்கள விக்ரஹத்தை த்யானஞ்செய்கிற முனிவர்களும் பக்தர்களல்லாத எங்களைப்போன்ற ஸாதாரண ஜனங்களும் இந்த மனோபாவத்தை ஆசைப்படுகிறார்களல்லவா? அளவற்ற மஹிமையுடைய பரமபுருஷனுடைய கதைகளில் அநுராகம் உண்டாகப்பெற்றவனுக்கு மூன்று வகையான ப்ராஹ்மண ஜன்மங்களாலாவது நான்முகனுடைய ஜன்மங்களாலாவது ஸாதிக்கவேண்டிய ப்ரயோஜனம் என்ன இருக்கின்றது? (பகவானுடைய கதைகளில் ப்ரீதி உண்டாகப்பெறுகையே எல்லா உபாயங்களாலும் ஸாதிக்க வேண்டிய மேலான புருஷார்த்தமாகையால் அது கைகூடப்பெற்றவனுக்கு எதைச்செய்து என்ன ஆகவேண்டும்? ஒன்றும் ஆகவேண்டியதில்லை). இவர்கள் ஸ்த்ரீகள்; காட்டில் திரிகிறவர்கள்; கணவனைத் துறந்து பரபுருஷனைப் புணர்ந்து களிக்குந்தன்மையாகிற வ்யபிசாரமுடையவர்கள். இத்தகைய இவ்விடைப் பெண்கள் எங்கே? பரமாத்மாவான ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் மாறாத

1. இவை-கீழ்ச் சொல்லப்பட்டவை.

மனோபாவம் உண்டாகப்பெறுகை எங்கே? இது ஒரு காலும் சேரக்கூடியதன்று. ஆயினும், சிறந்த மருந்தை எவன் உபயோகப்படுத்தினும் அது ஆரோக்யத்தைக் கொடுப்பதுபோல ஸர்வேஶ்வரன் தன்னுடைய உண்மையை அறியாமல் ஏதோ ஒருபாவத்தினால் தன்னைப் பணிகிறவர்களுக்கும் தானே நன்மைமையை விளைக்கின்றான். ராஸக்ரீடையில் ஸ்ரீக்ருஷ்ணனுடைய புஜதண்டங்களால் கண்டங்களில் அணைக்கப்பெற்று அதனால் விருப்பங்களெல்லாம் நிறைவேறப்பெற்ற கோபிகைகளின் இடையில் அந்த ஸ்ரீக்ருஷ்ணன் பாடி அவர்களைக் களிப்புறச் செய்தானல்லவா? இந்த அனுக்ரஹம் அவனுடையமார்பில் வஸிக்கிற மிகுந்த அன்புடைய ஸ்ரீமஹாலக்ஷ்மிக்காவது, தாமரைமலரின் வாஸனைபோன்ற வாஸனையும் ஒளிபோன்ற ஒளியுமுடைய ஸ்வர்க்கலோகத்து மடந்தையர்களான அப்ஸரஸ்த்ரீகளுக்காவது நேரவில்லை. மற்ற மடந்தையர்களுக்கு அவ்வனுக்ரஹம் நேரவில்லையென்பதைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? ப்ருந்தாவனத்தில் இந்தக்கோபிகைகளுடைய பாதாரவிந்தங்களின் பராகங்கள் படியப்பெற்ற புதர் கொடி செடி இவற்றுள் ஏதேனுமொன்றாயிருப்பேனாக. (இந்த ப்ருந்தாவனத்தில் உள்ள செடிகொடி முதலியவற்றில் ஏதேனுமொன்றாயிருந்து இந்தக்கோபிகைகளின் பாததூளி படப்பெறுவேனாயின், அதுவே எனக்கு மேலான புருஷார்த்தம்.) ஏனென்றால் இந்தக்கோபிகைகள் துறக்கமுடியாத பந்துக்களையும் தர்மத்தையும துறந்து வேதங்களாலும் தேடத்தக்கதாகிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய பதவியைப் பெற்றார்களல்லவா? மற்றும், இந்தக்கோபிகைகள் ஸ்ரீமஹாலக்ஷ்மியால் பூஜிக்கப்பட்டதும் விருப்பங்களெல்லாம் நிறைவேறப்பெற்ற நான்முகன் முதலியவர்களாலும் மற்றுமுள்ள யோகீஶ்வரர்களாலும் தங்கள் மனத்தில் ஆரா

திக்கப்பட்டதுமாகிய ஸ்ரீக்ருஷ்ணபகவானுடைய பாதாரவிந்தங்களை ராஸகோஷ்டியில் தங்கள் ஸ்தனங்களின் மேல் வைத்து அணைத்துச் சரீரதாபத்தையும் மனஸ்தாபத்தையும் துறந்தார்கள். நந்தகோகுலத்திலுள்ள மடந்தையர்களின் பாததூளியை அடிக்கடி நமஸ்கரிக்கின்றேன். இவர்கள் ஸ்ரீக்ருஷ்ணனுடைய கதைகளை எடுத்துப்பாடுமபாட்டு மூன்று லோகங்களையும் புனிதஞ் செய்கின்றது. (ஆகையால் இவர்களுடைய பாததூளியைப் பணிந்து நானும் புனிதனாவேனாக).

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—பிறகு அவ்வுத்தவன் கோபிகைகளும் யசோதை நந்தன் இவர்களும விடை கொடுக்கும்படி வேண்டிப் பெற்று மற்றுமுள்ள கோபர்களிடத்திலும் போய்வருகிறேனென்று விடைபெற்றுக் கொண்டு போவதற்காக ரதத்தில் ஏறிக்கொண்டான். நந்தன் முதலியவர்கள் பலவகை உபஹாரங்களைக் கைகளில் ஏந்திக்கொண்டு கோகுலத்தினின்று புறப்பட்டு அவ்வுத்தவனைத் தொடர்ந்து சென்று கண்ணுங் கண்ணீருமாய் அனுராகத்துடன் இங்ஙனம்மொழிந்தார்கள்.

நந்தாதிகள் சொல்லுகிறார்கள்:—எங்கள் மனத்தின் [1] வ்ருத்திகள் ஸ்ரீக்ருஷ்ணனுடைய பாதாரவிந்தங்களையே பற்றியிருக்குமாக. எங்கள வாக்கெல்லாம் அவனுடைய நாமங்களைச் சொல்லுவதிலேயே உபயோகப்பட்டிருக்குமாக. எங்கள் தேஹங்கள் அவனுடையநமஸ்காரம முதலிய நற்செயல்களில் ஆழ்ந்திருக்குமாக. ஈஶ்வரனுடைய ஸங்கல்பத்தினால் தூண்டப்பட்டுப்புண்யபாபகர்மங்களால் எங்கேனும் ஜன்மமரணாதி ஸம்ஸாரத்தில் சுழன்றுகொண்டிருக்கிற எங்களுக்குத் தானம் முதலிய நன்னடத்தைகள் எவையேனும் உளவாயின

1. வ்ருத்திகள்—வ்யாபாரங்கள்.

அவற்றால் எங்களுக்கு ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் அனுராகம் வளர்ந்து வருமாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ராஜனே! இங்ஙனம் கோபர்களால் ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் பக்தியைக்காட்டி வெகுமதிக்கப்பட்ட அவ்வுத்தவன ஸ்ரீக்ருஷ்ணனால் ஆதரவுடன் பாதுகாக்கப்பட்டு வருகின்ற மதுரைப்புரிக்குத் திரும்பிவந்தான். அப்பால் அவன ஸ்ரீக்ருஷ்ணனுக்கு நமஸ்காரஞ் செய்து ஸந்தோஷத்துடன கோபர்களுக்கு உண்டாயிருக்கின்ற பக்தியின் மிகுதியை மொழிந்து ஸ்ரீக்ருஷ்ணனுக்கும் பலராமனுக்கும் ராஜாவாகிய உக்ரஸேனனுக்கும் நந்தாதிகள கொடுத்தனுப்பின உபஹாரங்களைக் கொடுத்தான. நாற்பத்தேழாவது அத்யாயம் முற்றிற்று.

ஸ்ரீக்ருஷ்ணன் த்ரிவக்ரையின் க்ருஹத்திற்கு, அக்ரூரனுடைய மாளிகைக்கும்போய் அவர்களை அனுக்ரஹித்து அக்ரூரனை ஹஸ்தினாபுரத்திற்கு அனுப்புதல்.



ஸ்ரீசுகர சொல்லுகிறார்:—அனந்தரம் ஸர்வாந்தராத்மாவும் எல்லாவற்றையும் ஒரேஸமயத்தில ஸாக்ஷாத்கரிப்பவனுமாகிய பகவான த்ரிவக்ரையெனனும ஸைரந்த்ரி அக்ரூரன இவர்களுக்குத் தான் வருகிறேனென்று சொன்னதையும அவர்களுடைய அபிப்ராயத்தையும் ஆராய்ந்து காமவிகாரத்தினால் தபிக்கப்பட்ட ஸைரந்த்ரிக்கு ப்ரியஞ் செய்ய விரும்பி அவளுடைய க்ருஹத்திற்குச் சென்றான. அங்கு வீட்டிற்கு வேண்டிய உபகரணங்கள பலவும விலையுயர்ந்து நிறைக்கப்பட்டிருந்தன. காமபோகத்திற்கு வேண்டிய கருவிகள் பலவும் ஸம்ருத்தமாயிருந்தன. மற்றும். அந்தக்ருஹம் முத்துமாலைகளாலும் த்வஜங்களாலும் மேற்கட்டுகள படுக்கைகள் ஆஸ

ணங்கள் இவைகளாலும் நல்லமணமுள்ள தூபங்களாலும் அத்தகைய தீபங்களாலும் அத்தகைய பூமாலைகளாலும் கந்தங்களாலும் பலவர்ணங்களால் எழுதப்பட்டு மிகவும் அழகாயிருப்பவைகளும் காமசாஸ்த்ரத்தில் நிரூபிக்கப்பட்டவைகளுமாகிய ரதிபந்தம் முதலிய பலவகைச் சித்ரங்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. ஸ்ரீக்ருஷ்ணன் இத்தகையதான தன்மாளிகையைக் குறித்து வருவதைக் கண்டு அந்த ஸைரந்த்ரி மிகவும் பரபரப்புற்று அப்பொழுதே ஆஸனத்தினின்று எழுந்து ஸகிகளுடன் அச்யுதனை உரியபடி எதிர்கொண்டு சிறந்த ஆஸனம் முதலிய உபசாரங்களால் பூஜித்தாள். பிறகு உத்தவன் அந்த ஸைரந்த்ரியால் நன்குப் பூஜிக்கப்பட்டு அவள் தனக்காகக் கொடுத்த ஆஸனத்தைத் ஸ்பர்சித்து வெறுந்தரையிலேயே உட்கார்ந்தான். ஸ்ரீக்ருஷ்ணனோ வெனில் காமக்கலவியில் ஆழ்ந்த மனமுடைய உலகத்தவர்களின் நடத்தையை அனுஸரித்துப் புதியதும் விலையுயர்ந்ததுமாகிய படுக்கையின்மேல் ஏறி உட்கார்ந்தான். அந்த ஸைரந்த்ரி எண்ணெய் தேய்த்து அரைப்பு முதலியன பூசி ஸ்நானஞ் செய்து வெண்பட்டாடை உடுத்து ஆபரணங்களை அணிந்து பூமாலைகள் சூட்டிச் சந்தனம் குங்குமம் முதலிய கந்தங்கள் பூசித் தாம்பூலசர்வணஞ்செய்து அம்ருதம்போன்ற மேலான மத்யபானஞ் செய்து மற்றும் பலவகைகளாலும் தன் தேஹத்தை அலங்கரித்துக்கொண்டு வெட்கம் நிறைந்த மந்தஹாஸம் அமைந்த விலாஸங்களோடு கூடின கண்ணோக்கங்களோடு கூடி ஸ்ரீக்ருஷ்ணனிடம் சென்றாள். புதிய கலவியாகையால் வெட்கமுற்றுச் சங்கித்து நிற்கின்ற அப்பெண்மணியை அழைத்து வளையினால் அலங்கரிக்கப்பட்ட கையில் பிடித்துப் படுக்கையின்மேல் உட்

காரவைத்துக்கொண்டு சந்தனங் கொடுத்தமையாகிற சிறிது புண்யஞ்செய்த அப்பெண்மணியுடன் க்ரீடித்தான் அந்த ஸைரந்த்ரி ஸ்ரீக்ருஷ்ணனுடைய பாதாரவிந்தங்களை மோந்து காமவேதனையால் தபிக்கப்பட்ட கொங்கைகளிலும் கண்களிலும் அப்பாதங்களை வைத்துக்கொண்டு அவற்றின் நோய்களெல்லாம் தீரப்பெற்று அன்பனும் ஆநந்தமே ஒருவடிவங்கொண்டாற்போலிருப்பவனுமாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணனைப் புஜங்களால் மார்பில் அமைத்தணைத்து நெடுநாளாகத் தொடர்ந்து வந்த மன்மததாபத்தைத் துறந்தாள். அம்மடந்தை மோக்ஷங் கொடுப்பவனும் யோகிகளுக்குங்கூட அடையமுடியாதவனும் ஸர்வேஶ்வரனுமாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணனைச் சந்தனங் கொடுத்தமாத்ரத்தினால் பெற்றனுபவித்துப் பாக்யமற்றவளாகையால் இங்ஙனம் வேண்டினாள். (மோக்ஷங் கொடுப்பவன் கைபுகுந்திருப்பினும் அற்பத்தை வேண்டினாளே; இதென்ன வருத்தம்?)

ஸைரந்த்ரி சொல்லுகிறாள்:—தாமரைக் கண்ணனே! உன்னுடைய கலவியைத் துறக்கமுடியாதிருக்கின்றேனே. மிகுந்த அன்பனே! என்னுடன் சிலநாள் இங்கு க்ரீடித்துக்கொண்டிருப்பாயாக. நீ இங்கேயே என் க்ருஹத்தில் வஸித்திருப்பாயாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் வேண்டுகிற அந்த ஸைரந்த்ரியை இனிய உரை முதலியவற்றால் வெகுமதித்துக் காமக்கலவியாகிற வரத்தைக் கொடுத்து (உனனிஷ்டப்படி நடத்த மறுபடியும் வருகிறேனென்று மொழிந்து) வெகுமதியளிக்குந் தன்மையனும் ஸர்வேஶ்வரனுமாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன் உத்தவனுடன் அவளுடைய க்ருஹத்தினின்று புறப்பட்டு ஸமஸ்தஸம்பத்துக்களும் நிறைந்த தன்க்ருஹத்திற்குப் போனான். நீயே

என்னைக் காக்கவேண்டுமென்று அவனையே சரணம் அடைகையாகிற ப்ரபத்தியைத் தவிர மற்ற எந்த உபாயங்களாலும் ஆராதிக்கமுடியாதவனும் ஸர்வேஸ்வரனுன ப்ரஹ்மதேவனுக்கும் ஈஸ்வரனுமாகிய பகவானைச் சந்தனங் கொடுத்தமாத்ரத்தினுல் அருள்புரியும்படி ஆராதித்து மனத்தினுல் அறியக்கூடிய சப்தாதிவிஷயஸுகத்தை வேண்டினுளாகையால் இந்த ஸைரந்த்ரி அறிவில்லாதவள்; கெடுமதியினள்; பாக்யமற்றவள் அப்பால் ஸமர்த்தனுகிய ஸ்ரீக்ருஷ்ணன் பலராமனேடும் உத்தவனேடும் கூடி அக்ரூரனைக்கொண்டு ஒருகார்யஞ் செய்ய விரும்பியும் அவனுடைய மனேரதத்தை நிறைவேற்ற விரும்பியும் அவனுடைய மாளிகைக்குப் போனுன். அவ்வக்ரூரன மனுஷ்யர்களில சிறப்புடையவர்களைககாட்டிலும ஸ்ரேஷ்டர்களும் தன்பந்துக்களுமாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன பலராமன உத்தவன இவர்களைத் தூரத்திலேயே கண்டு எழுந்தெதிர்கொண்டு மிகவும் ஸந்தோஷம் அடைந்து ஆலிங்கனஞ் செய்து அபிநந்தித்தான. அவ்வக்ரூரன் ஸ்ரீக்ருஷ்ணராம உத்தவர்கள் மூவரையும் நமஸ்கரித்துத் தானும் அவர்களால் நமஸ்காரஞ் செயயபபெற்று அவர்களுககு ஆஸனம் அளித்து அதில் உட்கார்ந்திருக்கின்ற அவர்களை விதிபபடி பூஜித்தான. மன்னவனே! அவர்களுடையபாதஙகளை அலம்பினஜலத்தைச் சிரத்தில் ப்ரோக்ஷித்துக்கொண்டு அர்க்யம முதலியவற்றுலும் திவ்யமான ஆடைகளாலும் திவ்யமான சந்தனம் குங்குமம் முதலிய கந்தங்களாலும் பூமாலைகளாலும சிறந்த ஆபரணங்களாலும் பூஜித்துப் பாதங்களை மடியில் இட்டுச் சிரஸ்ஸினுல் நமஸ்கரித்துத் துடைத்துப் பிடித்துக்கொண்டே விநயத்தினுல் வணங்கி ஸ்ரீக்ருஷ்ண ராமர்களைக் குறித்து இங்ஙனம் மொழிந்தான்.

அக்ரூரன் சொல்லுகிறான்:—பாபிஷ்டனாகிய கம்ஸன் தன்னைச் சேர்ந்தவர்களுடன் உங்களால் கொல்லப்பட்டான். இது பெரிய ஸந்தோஷம். நீங்கள் இந்த யாதவகுலத்தை மஹாத்தான வருத்தத்தினின்று உத்தரித்து நனகு வளர்த்தீர்கள். நீங்கள் புருஷோத்தமர்கள்; ஜகத்திற்கெல்லாம் காரணமாயிருப்பவர்கள். இந்த ஜகத்தெல்லாம் நீங்களே. உங்களைத் தவிர மேன்மையுடைய வஸ்து மற்றொன்றும் இல்லை. நீங்கள் ஜகத்திலுள்ள ஒவ்வொருவஸ்துவிலும் உட்புகுந்து நியமித்துக்கொண்டிருக்கிறீர்களாகையால் உங்களைக் காட்டிலும் வேறுபட்ட வஸ்து எதுவுமே இல்லை. (ஜகத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களுக்கு நீங்களே காரணபூதர்களாகையால் உங்கள் ஸங்கல்பத்தின்படி கம்ஸாதிகளைக் கொன்றதும் தனகுலத்தை வாழ்வித்ததும் யுக்தமே). ஸ்வரூபத்திலும் குணங்களிலும் அளவற்றிருக்கையால பரஹ்மமென்று பெயர பெற்றவனே! நீ உன் சக்திபோல் உன்னைவிட்டுப் பிரியாதிருக்கின்ற ப்ரக்ருதி புருஷகாலங்களைச சரீரமாகக் கொண்டு உபாதான காரணமாகவும் ப்ரக்ருதி புருஷர்களுக்கு நியாமகனாகி நிமித்த காரணமாகவும இருநது நாமரூபங்களுக்கு இடமாகிச் சேதனுசேதனரூபமுமான இநத ப்ரபஞ்சத்தையெல்லாம் படைத்து அதற்குள அந்தராத்மாவாய்ப் புகுநது நியமித்துக்கொண்டிருக்கின்றனை யாகையால் தேவமனுஷ்யாதி நாமங்களுக்கெல்லாம் நீயே முக்யப்பொருளாகி ஒருவனாயினும் பலவாகத் தோற்றுகின்றனை. வேதங்களும் வேதங்களில் ப்ரஸித்தர்களான வாமதேவாதிமஹர்ஷிகளும் உன்னை இங்ஙனமே ஸாக்ஷாத்கரிக்கின்றனர். பூமி முதலிய மஹாபூதங்கள் தங்களை உபாதானகாரணமாகவுடைய ஜங்கமஸ்தாவர

மான வஸ்துக்களில் பலவாறு தோற்றுவதுபோல, நீ ஸ்ருஷ்டிக்கு முன்பு நாமரூபங்களுக் கிடமில்லாத ப்ரக்ருதி புருஷகாலங்களைச் சரீரமாகவுடையவனாகி ஒருவனாயிருப்பினும் அத்தகைய ஜங்கமஸ்தாவரரூபமான ஸமஸ்த வஸ்துக்களிலும் அவற்றிற்குக் காரணமான மஹாபூதங்களிலும் பலவாறு தோற்றுகின்றனை. நீ இந்த ப்ரபஞ்சத்திற் கெல்லாம் அந்தராத்மாவா யிருக்கின்றனை. ஒருஜீவனே க்ரமத்தில் தேவ மனுஷ்யாதி அனேக சரீரங்களைப் பெற்று வெவ்வேறாகத் தோற்றுவதுபோலவும், ஸௌபரி முதலியவர் ஒரேதடவையில் அனேகசரீரங்களை யெற்றுக்கொண்டு பலவாறு தோற்றுவதுபோலவும், நீ ஸமஸ்த சேதனாசேதனங்களுக்கும் அந்தராத்மாவாகி அவ்வுருவங்களால் பலவாறு தோற்றுகின்றனை. ஆனால் ஜீவாத்மாவைப்போல் நீ கர்மத்திற்கு உட்பட்டவனல்லை. உன சக்திகளைப்போல் உன்னைவிட்டுப் பிரியாதவைகளான ரஜஸ்ஸு தமஸ்ஸு ஸத்வம் என்னும் ப்ரக்ருதியின் குணங்களால் ஜகத்தைப் படைப்பதும் அழிப்பதும் காப்பதுமாயிருக்கின்றனை. (ரஜோகுணம் தலையெடுத்த நான்முகனென்னும் ஜீவனுக்கு அந்தர்யாமியாயிருந்து ஸ்ருஷ்டிக்கின்றனை. தமோகுணம் தலையெடுத்த ருத்ரனென்னும் ஜீவனுக்கு அந்தர்யாமியாயிருந்து ஸம்ஹரிக்கின்றனை. ஸத்வகுணத்தை நடத்துகிற நீ நேரே அவதரித்து ரக்ஷிக்கின்றனை). ஆயினும் அந்த ரஜஸ்ஸு முதலிய ப்ராக்ருதகுணங்களாலும் அவற்றின் மூலமாய் வந்த ஸ்ருஷ்டி முதலிய வ்யாபாரங்களாலும் நீ தீண்டப்படுகிறதில்லை. (நீ ஸத்வாதி குணங்களுக்கு உட்பட்டவனுமல்லை. நீ நடத்துகிற ஸ்ருஷ்டி முதலிய வ்யாபாரங்கள் புண்யபாபகர்மங்களைப்பற்றி வந்தவைகளல்லாமையால் ஸுகதுக்காதிகளை அனுபவிக்கச் செய்யவல்ல

கர்மபந்தம் உனக்குக் கிடையாது. நீ ஜ்ஞானஸ்வரூபன். அந்த ஸ்வரூபம் என்றும் மறையாமல் தோன்றப்பெற்ற வன். ஆகையால் நீ இயற்கையாகவே ஸமஸ்ததோஷங்களும் தீண்டப்பெறாதவன்; ஸமஸ்த கல்யாணகுண ஸ்வரூபன். ஆகையால் உனக்குக் கர்மபந்தம் உண்டாவதற்கு ப்ரஸக்தியே இல்லை. நீ தேவமனுஷ்யாதி தேஹங்களை உபபோகத்திற்காக ஏற்றுக்கொள்ளுகிறதில்லை. ஆகையால் ஜீவாத்மாக்களுக்கு அந்தராத்மாவாயிருக்கிற உனக்கு ஜனன ஜரா மரணாதிரூபமான ஸம்ஸாரம் நேரே கிடையாது. உனசரீரமாகிய ஜீவாத்மாவுக்கே அது உள்ளது. 'நரஸிம்ஹன வெளுத்திருக்கிறான்' என்றால், அந்த வெண்மை தேஹத்தைச் சேருமேயன்றி ஆத்மாவைச் சேராதல்லவா? அங்ஙனமே ஸம்ஸாரம் உனசரீரமாகிய ஜீவாத்மாவைச் சேர்ந்ததேயன்றி உனக்குக் கிடையாது. ஜீவன புண்யபாபகர்மங்களின் பயனான ஸுகதுக்காதிகளை அனுபவிக்கும் பொருட்டுத் தேவமனுஷ்யாதி சரீரங்களைப் பெறுகிறானாகையால் அவனுக்கு ஸம்ஸாரம உண்டு. நீ தேவமனுஷ்யாதி உருவங்களை விளையாட்டிற்காக ஏற்றுக கொள்கின்றனையாகையால உனக்கு ஸம்ஸாரம்கிடையாது. ஸம்ஸாரமில்லாமையால் அதற்குக் காரணமான காமபந்தமும் கிடையாது. பந்தமில்லாமையால் மோக்ஷமும கிடையாது. கட்டுண்டவனல்லவோ விடுபடவேண்டும்? ஆகையால் ஸம்ஸாரபந்த மோக்ஷங்களிரண்டும் உனக்குக் கிடையாது. நீ ராமக்ருஷ்ணாதிரூபனாய்ச் சரீரங்களை அங்கீகரிக்கினும் அவ்வுருவங்கள உன ஸங்கல்பத்தினால் ஏற்பட்டவைகளேயன்றிப் புண்ய பாபகர்மங்களால் ஏற்பட்டவைகளன்று. 'ஆனால் எல்லாரும் என்னை ஏன் அப்படி அறிகிறதில்லை?' எனனில், நாங்கள் ஜீவாத்ம பரமாத்மாக்களின்

உண்மையைப் பற்றின விவேகமற்றவர்களாகையால் உன்னுடைய உருவங்களும் ஜீவனுடைய உருவங்களோபோடொத்தவைகளே யென்று ப்ரமிக்கிறோம். 'நான் ராமக்ருஷ்ணாதி உருவங்களை ஏற்றுக்கொள்வதற்கு ப்ரயோஜனமென்?' என்னில், நீ உபதேசித்த பழையதான வேதங்களால் நிரூபிக்கப்பட்ட தர்மமார்க்கம் அனர்த்தத்தை விளைவிப்பவைகளும் விபரீதங்களுமான பாஷண்டமார்க்கங்களால் பாதிக்கப்பட்டு அழியும்பொழுதெல்லாம் நீ சுத்தஸத்வமயமான திருவுருவங்களைக் கொண்டு அவதரிக்கின்றனை. திறமைகள் அமைந்தவனே! அந்தனம் ராமாதி உருவங்களைக் கொண்டு அவதரித்த நீ இப்பொழுது ஆஸுரப்ரக்ருதிகளான கம்ஸாதி மன்னவர்களின பற்பல அக்ஷௌஹிணி ஸைன்யங்களை வதித்துப் பூமியின பாரத்தை நீக்கும்பொருட்டும் இந்த யாதவகுலத்திற்குப்புகழை நிரம்ப விளைக்கும்பொருட்டும் வஸுதேவனுடைய க்ருஹத்தில் தனனுடைய அம்சமாகிய பலராமனுடன அவதரித்தனை. ஸ்ரீக்ருஷ்ணா! நீ ப்ரஹ்மருத்ராதிஸமஸ்த தேவதைகளையும் பித்ருக்களையும் பூதங்களையும் மன்னவர்களையும் சரீரமாகவுடையவன். மற்றும், உனபாதங்களை அலம்பின ஜலம் மூன்று லோகங்களையும் புனிதஞ் செய்கின்றது. நீ ஜகத்திற்கெல்லாம் குரு. இந்த்ரியங்களால் விளையும் அறிவுகளுக்கு விஷயமாகாதவனே! இத்தகைய நீ எழுந்தருளினையாகையால் எங்கள் க்ருஹம் மிகுந்த பாக்யமுடையதாயிற்று. பண்டிதனாயிருப்பானுயின, எவன்தான உன்னை யொழிய மற்றவனைச் சரணம் அடைவான்? உன்னைத் துறந்து மற்றொருவனைச் சரணம் அடைகிறவன மூர்க்கனே. நீ பக்தர்களிடத்தில் மிகுதியும் அன்புடையவன்; உண்மையே பேசுந்தன்மையன: யாத்ருச்சிகம் முதலியவற்றையும்

ஸங்க்ருதங்களாக நினைவிட்டு ப்ராணிகளைப் பாது காப்பவன்; ஹிதத்தையே நடத்துபவன். நீ கம்ஸாதிகளை வதித்ததும் அவர்களுடைய நன்மைக்காகவேயன்றி வேறில்லை. உன்னுடைய முகமலர்த்தியையே பயனாக விரும்பி வர்ணாச்ரமங்களுக்குரிய தர்மங்களை அனுஷ்டித்துக்கொண்டு ப்ரீதியுடன் உன்னைப் பணியும் புருஷனுக்கு நீ அவன்வேண்டும் விருப்பங்களையெல்லாம் கொடுக்கின்றனை. விருப்பங்களைக் கொடுப்பது உனக்கு ஒருபொருளன்று. மஹாநந்தஸ்வரூபனும் பரமபுருஷார்த்தஸ்வரூபனும் வளர்தல் குறைதல் முதலிய விகாரங்களற்றவனுமாகிய தன்னையுங்கூட நீ அவனுக்குக்கொடுக்கின்றனை (மோக்ஷங் கொடுக்கின்றனை). ஜனார்த்தனா! (ஸர்வாந்தராத்மாவே!) ப்ரஹ்மதேவன் முதலிய தேவஸ்ரேஷ்டர்களாலும் யோகீஸ்வரர்களான ஸனகாதிகளாலும் அறியமுடியாத உண்மையுடைய நீ இம்மனுஷ்யலோகத்தில் ஒன்றுமறியாத மூடர்களான எங்களுக்கு இந்த க்ருஹத்தில் புலப்பட்டனையே; இது எங்களபாக்யமேயல்லவா? உனமாயையினால் பிள்ளை பெண்டிர் பணம் நண்பர் க்ருஹம் தேஹம் முதலியவற்றிலுண்டான மோஹமாகிற பாசத்தைச் சீக்ரத்தில் அறுப்பாயாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இங்ஙனம் பக்தனாகிய அக்ரூரனால் புகழ்ந்து துதிக்கப்பட்ட மஹானுபாவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் அக்ரூரனை வாக்குகளால் மதிமயங்கச் செய்பவனைபோன்று புன்னகையுடன் மேல்வருமாறு மொழிந்தான்.

ஸ்ரீக்ருஷ்ணன் சொல்லுகிறான்:—நீர் எங்களுக்கு என்றும் ஹிதஞ்செய்பவர்; தந்தையின் உடன்பிறந்தவர் (சிற்றப்பன்); கம்ஸனைப்போலன்றிப் புகழத்தகுந்தபந்துவுமாயிருக்கின்றீர். நாங்களோவென்றால் உம்மால் பாது

காக்கத் தகுந்தவர்களும் போஷிக்கத் தகுந்தவர்களும் தயைசெய்யத் தகுந்தவர்களுமாயிருக்கின்றோம். நாங்கள் உம்முடைய[1] பிள்ளைகளல்லவா! ஆகையால் உமக்கு நாங்கள் பூஜிக்கத்தகுந்தவர்களல்லோம். நீரே எங்களுக்குப் பூஜிக்கத்தகுந்தவர். உம்மைப்போன்ற பாகவதர்கள் மிகவும் மேன்மைக்கிடமானவர்கள்; நன்மையை விரும்பும் மனுஷ்யர்கள் அனைவராலும் நன்கு பணியத் தகுந்தவர்கள். இந்த்ராதி தேவதைகளன்றோ பணியத் தகுந்தவர்களென்னில், அவர்கள் கேவலம் தங்கள் ப்ரயோஜனத்தையே முக்யமாக எதிர்பார்ப்பவர்களன்றிப் பரோபகாரஞ்செய்யுந்தன்மையரல்லர். உம்மைப்போன்ற பாகவதர்களோவென்றால் தங்கள்ப்ரயோஜனத்தை எதிர்பாராமல் பரோபகாரஞ்செய்யுந் தன்மையர்கள். ஆகையால் நீங்களே பணியத் தகுந்தவர்களன்றி இந்த்ராதிதேவதைகள் பணியத்தகுந்தவர்களல்லர். கங்கை முதலிய புண்யதீர்த்தங்களாவது மண்ணிலே இவைகளால் இயற்றப்பட்ட தேவப்ரதிமைகளாவது உங்களைப்போல் பணிகிறவர்களைப் புனிதஞ்செய்யமாட்டா. ஏனென்றால், அவை நெடுநாள் பணிவிடை கொண்டபின்புதான் புனிதஞ்செய்யும். பரோபகாரஞ்செய்யுந்தன்மையுள்ள உம்மைப்போன்ற பாகவதர்களோவென்றால் கண்டமாத்ரத்திலேயே புனிதஞ் செய்கின்றார்கள். இத்தகைய நீர் எங்கள் நன்மையை விரும்பும் பெரியோர்களுக்குள் மிகவும் மேன்மையுடையவர். ஆகையால் நீர் எங்களுக்கு நன்மையைச்செய்யவிரும்பிப் பாண்டவர்களுடைய ஸுகதுக்கங்களை விசாரித்துக்கொண்டு வரும்பொருட்டு ஹாஸ்தினபுரம்போய்வருவீராக. தந்தையாகிய பாண்டு ஸ்வர்க்கஞ் செல்லுகையில் பாலர்களாகிய அவனுடைய பிள்

1. பிள்ளைகள்போன்றவர்களல்லவா.

யிருக்கின்ற த்ருதராஷ்ட்ரனையும், விதுரனையும், குந்தியையும், பாஹ்லிகனையும், அவன் பிள்ளையாகிய ஸோமதத்தனையும், க்ருபாசார்யரையும், த்ரோணாசார்யரையும், கர்ணன் துர்யோதனன் அச்வத்தாமா இவர்களையும், பாண்டவர்களையும், மற்றுமுள்ள நண்பர்களையும் கண்டான். அவ்வக்ரூரன் உரியபடி பந்துக்களைக் கிட்டி அவர்களால் க்ஷேமம் விசாரிக்கப்பெற்றுத் தானும் அவர்களை க்ஷேமம் வினவினான். துஷ்டர்களான பிள்ளைகளுடையவனும் மனோதைர்யம் அற்பமாயிருக்கப் பெற்றவனும் அர்ப்பபுத்திகளான கர்ணாதிகளின் அபிப்ராயத்தை அனுஸரிக்குந் தன்மையனுமாகிய ராஜனான த்ருதராஷ்ட்ரனுடைய நடத்தையை ஆராயும்பொருட்டு அவ்விடத்தில் சிலமாதங்கள் வஸித்திருந்தான். யுதிஷ்டிராதிகளிடத்தில் ப்ரஜைகளுக்கு ப்ரீதி உண்டாயிருப்பதையும் அவர்களுடைய தேஜஸ்ஸு ஓஜஸ்ஸு பலம் வீர்யம் வணக்கம் முதலிய குணங்களையும் பொறுக்க முடியாதிருக்கின்ற த்ருதராஷ்ட்ரன் பிள்ளைகளான துர்யோதனாதிகள் செய்த விஷங்கொடுத்தது முதலிய கொடுஞ்செயல்களும் இன்னம் அவர்கள் செய்ய நினைத்திருப்பதும் ஆகிய எல்லாவற்றையும் ப்ருதையும் விதுரனும் அக்ரூரனுக்குச் சொன்னார்கள். ப்ருதை முன்னமே தன் ப்ராதாவான அக்ரூரன் வந்திருப்பதைக் கண்டு அவனிடம் சென்று பிறந்த அகத்தை நினைத்துக் கொண்டு கண்ணும் கண்ணீருமாய் அந்த அக்ரூரனைக் குறித்து இங்ஙனம் மொழிந்தாள்.

ப்ருதை சொல்லுகிறாள்:—நல்லியற்கையுடையவனே! எம் தாய்தந்தைகளும் ப்ராதாக்களும் பகினிகளும் ப்ராத்ரு புத்ரர்களும் குலஸ்த்ரீகளும் ஸகிகளும் எங்களை நினைக்கின்றார்களா? எங்கள் ப்ராதாவாகிய வஸு-

தேவனுக்குப் பிள்ளையாகப்பிறந்தவனும் சரணம் அடையத்தகுந்தவனும் ஷாட்குண்யபூர்ணனும் பக்தர்களுடைய தோஷங்களைப் [1] பச்சையாகக் கொள்ளுந்தன்மையனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணனும் தாமரைக்கண்ணனாகிய பலராமனும் அத்தையின் பிள்ளைகளான யுதிஷ்டிராதிகளை நினைக்கிறார்களா? செந்நாய்களினிடையில் அகப்பட்டமான் பேடைபோல் சத்ருக்களின் இடையில் அகப்பட்டு வருந்துகின்ற என்னையும் தந்தையற்றவர்களான என்பிள்ளைகளையும் அந்த ராமக்ருஷ்ணர்கள் வந்து நல்வார்த்தைகளால் ஸமாதானப்படுத்துவார்களா? இங்ஙனம் கூறி அக்ரூரனைப் பார்த்து மொழிந்து ஸ்ரீக்ருஷ்ணனை நினைத்துப் புத்தியில் தோற்றுகிற அந்தப் பகவானை வேண்டுகிறாள்). க்ருஷ்ணா! எல்லாம் அறிந்தவனே! அறிஞர்களில் உனக்கு மேற்பட்டவர்கள் உண்டோ? அனைவர்க்கும் அந்தராத்மாவாயிருப்பவனே! எங்கள் வருத்தம் உனக்குத் தெரியவில்லையா? ஜகத்தைப் பாதுகாக்கும்பொருட்டு இப்பூமியில் அவதரித்தவனே! குழந்தைகளுடன் வருத்தமுற்று உன்னையே சரணம் அடைகின்ற என்னைப் பாதுகாப்பாயாக. ம்ருத்யுரூபமான ஸம்ஸாரத்தினின்று பயப்படுகின்ற ப்ராஹ்மருத்ராதிகளுக்கும் உன்பாதாரவிந்தமே மோக்ஷங்கொடுக்கின்றது. நீயே ஸர்வேச்வரன். ஆகையால் ப்ராணிகளின் விருப்பங்களை நிறைவேற்றிக்கொடுப்பது உன்பாதாரவிந்தங்களேயன்றி மற்றொன்றும் அன்று. (ப்ராஹ்மாதிகளும் எங்களைப்போல உன்னைச் சரணம் அடையவேண்டியவர்களேயன்றிச் சரணம் அடையத்தகுந்தவர்களல்லர்). ராகம் த்வேஷம் முதலிய தோஷங்களற்றவனும் அளவற்ற ஸ்வரூப ரூப குணாதிகளையுடையவனும் அனைத்திற்கும் அந்தராத்மா

1. பச்சை-உபஹாரம்.

வாயிருந்து நியமித்துக்கொண்டிருப்பவனும் யோகேச்வரனும் யோகஸ்வரூபனும் ஸர்வவித பந்துவும் இஹபர போகஸாதனங்களையும் மோக்ஷஸாதனத்தையும் கொடுப்பவனுமாகிய உனக்கு நமஸ்காரம். இத்தகையனாகிய உன்னை நான் சரணம் அடைந்தேன்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ராஜனே! உன் கொள்ளுப்பாட்டியாராகிய ப்ருதையென்னுங் குந்தி இங்ஙனம் ஜகதீச்வரனான ஸ்ரீக்ருஷ்ணனையும் மற்றுமுள்ள பந்துக்களையும் நினைத்து வருந்திக் கண்ணீர் பெருக்கினாள். அவளோடொத்த ஸுகதுக்கங்களையுடைய அக்ரூரனும் ஸுகதுக்கங்களிரண்டையும் ஸமமாகப் பாவிக்கும் ஞானியும் பெரும்புகழுடையவனுமாகிய விதுரனும் அவளுடைய பிள்ளைகளின் பிறவிக்குக் காரணமான யமன் வாயு முதலிய தேவதைகளின் மஹிமையைச் சொல்லி உனக்கு ஒரு குறையும் இல்லையென்று ஸமாதானப்படுத்தினார்கள். அக்ரூரன் மதுரைக்குத் திரும்பிப்போய்ப் பிள்ளைகளிடத்தில் பெருவிருப்பமுடையவனும் ப்ராதாவின் பிள்ளைகளான யுதிஷ்டிராதிகளிடத்தில் விஷமபுத்தியனும் (ஸரியான புத்தியில்லாதவனும்) ஆகிய த்ருதராஷ்ட்ரனிடம் சென்று பந்துக்களான க்ருஷ்ணாதிகள் சொல்லியனுப்பின ஸமாசாரத்தை நண்பர்களின் நடுவில் இங்ஙனம் மொழிந்தான்.

அக்ரூரன் சொல்லுகிறான்:—விசித்ரவீர்யனுடைய பிள்ளையாகிய த்ருதராஷ்ட்ரனே! கௌரவர்களின் புகழை வளரச்செய்பவனே! உன் ப்ராதாவான பாண்டு ஸ்வர்க்கம் அடைந்தபின்பு இப்பொழுது நீ ராஜஸிம்ஹாஸனத்தில் வீற்றிருக்கின்றனை. தர்மந்தவறாமல் பூமியைப் பாதுகாப்பவனும் பக்ஷபாதமில்லாமை முதலிய நல்லியற்கையால் ப்ரஜைகளைக் களிப்புறச் செய்பவனும் தன்னைச்

அந்த ப்ராணன்களும (தேஹமும்) பணங்களும் பிள்ளை பெண்டிர் முதலியவர்களும் அங்ஙனம் போஷித்தவன் அவற்றால் பெறவிரும்பின போகங்களை அனுபவிக்காமலே மரணம் அடைகையில் அவனைத் துறக்கின்றன. (போகங்களை அனுபவிக்க விரும்பித் தன் தேஹத்தைப் போஷித்துப் பணம் ஸம்பாதிக்க முயன்று க்ரமமான வழியில் பணங்கிடைக்காமையால் அதர்மமார்க்கத்தில் இழிந்து பணத்தைச் சம்பாதித்து அதை வளர்த்துப் பெண்டிர் பிள்ளை முதலியவர்களைப் போஷித்துக்கொண்டு வருகையில், அவன் தான் பணம் ஸம்பாதிப்பதற்காகச் செய்த பாபகர்மங்களால் ஆயுள் க்ஷீணிக்கப்பெற்று விரும்பின போகங்களை அனுபவிக்கப்பெறாமலே மரணம் அடைகின்றான்). தானே தனக்கு அனர்த்தங்களை விளைத்துக் கொள்வதில் ஸமர்த்தனாகிய அம்மனிதன் மரணம் அடைந்தபின்பு தான் போஷித்து வந்த ப்ராணன் முதலியவைகளால் துறக்கப்பட்டுத் தான் செய்த பாபகர்மங்களை எடுத்துக்கொண்டு தானே விருப்பம் நிறைவேறப்பெறாமலே தன்னுடைய வர்ணாஸ்ரமங்களுக்கு ஏற்பட்ட தர்மங்களில் விமுகனாயிருந்தானாகையால் அந்ததாமிஸ்ரமென்னும் நரகத்தை அடைகின்றான். ப்ரபூ! ராஜனே! உண்மை இதுவாகையால் தேஹம் தேஹத்தைத் தொடர்ந்தவை முதலிய இவ்வுலகமெல்லாம் ஸ்வப்னத்தில் காண்கிற வஸ்துக்களைப்போலவும் ஆச்சர்யமான மனோரதத்தில் அனுபவிக்கிற வஸ்துக்களைப்போலவும் நச்வரங்களென்று நிச்சயித்துத் தன் புத்தியினால் தன்னை அடக்கிக்கொண்டு எல்லாவற்றிலும் ஸமபுத்தியனாகி ராகம் த்வேஷம் முதலியவைகளற்றிருப்பாயாக.

த்ருதராஷ்ட்ரன் சொல்லுகிறான்:—தானபதீ (தானஞ் செய்யுந்தன்மையனே!) மஹோதாரனே! மூடனை

யுங்கூட ஜ்ஞானோபதேசத்தினால் பிழைப்பிக்க வேண்டுமென்று விரும்புகிற உன்னுடைய ஔதார்யம் மற்ற எவர்க்கும் உண்டாகாது. நீ மங்களகரமான வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டிருக்கையில் எவ்வளவு கேட்கினும் எனக்குச் சிறிதும் த்ருப்தி உண்டாகவில்லை. மரணம் அடையுந் தன்மையுள்ளவன் அம்ருதத்தைப் புசித்து எங்ஙனம் த்ருப்தி அடைய மாட்டானோ, அங்ஙனமே நானும் உன்வார்த்தைகளால் த்ருப்தி அடையாதிருக்கின்றேன். நல்லியற்கையுடையவனே! உனக்கு இனிதும் அரிதுமாயிருக்கின்றது. ஆயினும் அது பிள்ளைகளிடத்தி லுண்டான அனுராகத்தினால் வைஷம்யமுடைத்தும் நிலையற்றதுமாகிய என் மனத்தில் மின்னல் போல் நிலைபெறாமல் உடனே மறைகின்றது. பூமியின் பாரத்தை நீக்கும்பொருட்டு யதுகுலத்தில் அவதரித்த ஸர்வேஶ்வரனுடைய லீலைகளை எவன்தான் வேறுவிதமாக மாற்றவல்லனாவான்? (என்பிள்ளைகளைக் கொன்று முடிக்க விரும்புகிற பகவானுடைய ஸங்கல்பத்திற்குத் தகுந்தபடி என்புத்தி அவன்மாயையால் மயங்கி எவ்வளவு இழுத்துப்பார்க்கினும் திரும்பிவாராமல் கோணவழியிலேயே நடக்கின்றது). எவன் பிறரால் வருந்தியும் அறிய முடியாத நிலைமையுடைய தன்மாயையினால் இப்ரபஞ்சத்தையெல்லாம் படைத்து ப்ரஹ்மதேவன் முதல் பூச்சி புழுவரையிலுள்ள எல்லாச்சரீரங்களிலும் ஜீவாத்மாக்களுக்கு அந்தராத்மாவாய்ப் புகுந்து அந்த ப்ரஹ்மாதிகளுக்குச் சப்தாதி விஷயங்களைப் பங்கிட்டுக் கொடுக்கிறானோ, அத்தகைய ஸர்வேஶ்வரனுடைய லீலாவிபூதியாகிய ஸம்ஸாரசக்ரத்தின்கதி ஒருவராலும் அறியமுடியாது. அப்பரமபுருஷனுக்கு நமஸ்காரம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—யாதவனாகிய அந்த அக்ரூரன் இவ்வண்ணம் த்ருதராஷ்ட்ர மன்னவனுடைய அபிப்ராயத்தை அறிந்துகொண்டு நண்பர்களாகிய பாண்டவர்களால் தனது அனுமதி கொடுக்கப்பெற்று யாதவர்களின் பட்டணமாகிய மதுராபுரிக்குத் திரும்பிவந்தான். கேளாய் பரீக்ஷித்தே! பாண்டவர்கள் விஷயத்தில் த்ருதராஷ்ட்ரன் என்னென்ன நடத்தினனோ, தான் எதைத் தெரிந்து கொண்டு வரப்போனானோ, அதையெல்லாம் அந்த அக்ரூரன் ஸ்ரீக்ருஷ்ணராமர்களுக்குத் தெரிவித்தான்.

நாற்பத்தொன்பதாவது அத்யாயம் முற்றிற்று.

தசமஸ்கந்தத்தில் பூர்வார்த்தமும் முற்றுப்பெற்றது.

ஸ்ரீக்ருஷ்ணார்ப்பணம்.